1619. பவித்திரகுமரன்.
1200. மன்னுடைவேலினாய்.
1219. இந்திரன்றன்னைநோக்கி.
1226. உழுவையன்னாற்கு.
1229. கடந்தான்காலிற்கழலானே.
1258. வாக்கமையுருவின்மிக்கான்.
1264. இறைவனுமெதிர்கொண்டு.
1266. உருமிற்றோன்றி.
1271. குறையரவு.
1509. நீண்டுவந்து.
1570. கண்டவன்கவ்வனிநோக்க.
1573. பாவைபோன்று.
1625. குன்றனான்சிந்திக்கின்றான்.
1659. கன்னிப்பிணையினிலைகலங்கி.
1661. திருந்துசோலைக்கருங்குயிலே.
1693. வரையுடைமார்பன்.
1841. குஞ்சரம்......இசைத்தன.
1889. பருகுடைங்கழல்.
1981. கட்டிலேறிய.
1997. நன்குரங்கு.
2382. தேனெய்மார்பகம். [டென்ன.
2423. மலர்வீடுபெற்றன வின்ெறு
2426. ஆவியம்புகை.
2453. கரும்பேதேனே......மானே.
2540. இடைகுழைந்துநின்றார்.
2541. கனி......ஒத்தார்.
2542. நுகிலிகைப்பாவையொத்தார்.
2552. பொய்ந்நங்கைமார்கள்.
2554. முலைமுத.........நம்பி.
2558. முரல்.........சேர்ப்ப.
2602. இல்லை.........ஈந்தாள்.
2606. திருவன்னாள்.
2608. எங்கோபணியென்று.
2630. விளக்கிட்டன்னவள்.
2631. கயனெடுந்தடங்கண்ணி.
2639. பொற்குடம்...முன்னினார்.
2651. பாவையன்னாள்.
2655. கட்டியங்காரனுக.
2707. வீசிநைகொடியனாரும்.
2719. கடிமலர்.........ஒத்தாள்.
2720. இனந்திரியேறுபோல.
2730. தளிர்கவரிவீச.......ஒத்தான்.
2746. கோற்கடன்மன்னன்.
2781. ஆர்கண்ணேநோக்குமே.
2842. அடங்கலர்க்கீந்த.
2917. பூவலர்கொடியனார்.
3078. தேங்கொள்பங்கயப்பகை.

தொல்காப்பியவுரை முதலியவற்றில் இவரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள மேற்கோள்களமைந்த நூற்பெயர்கள் முதலியவற்றுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு :—

க. அகத்தியம்.
உ. அகநானூறு=நெடுந்தொகை.
௩. அணியியல்.
௪. அவிநயம்.
ரு. அறநெறிச்சாரம்.
௬. ஆசாரக்கோவை.
எ. இராமாயண வெண்பா.
அ. இறையனாரகப்பொருள்.
௯. உதயணன்கதை.
௰. ஏலாதி.
௧௧. ஐங்குறுநூறு.
௧௨. ஐந்திணையெழுபது.
௧௩. ஐந்திணையைம்பது.
௧௪. ஔவையார் பாடல்.
௧ரு. கடகண்டு.
௧௬. கலித்தொகை.
௧எ. களவழிநாற்பது.
௧அ. காக்கைபாடினியம்.
௧௯. கார்நாற்பது.
௨௰. காரைக்காற்பேயார்பாடல்.
௨௧. குணநாற்பது.
௨௨. குறிஞ்சிப்பாட்டு.
௨௩. குறுந்தொகை.
௨௪. கூத்தநூல்.
௨ரு. கைந்நிலை.
௨௬. கொன்றைவேந்தன்.
௨எ. சிலப்பதிகாரம்.
௨அ. சிறுகாக்கைபாடினியம்.

உக. சிறுகுரீஇயுரை.
௩௦. சிறுபஞ்சமூலம்
௩க. சிறுபாணாற்றுப்படை.
௩உ. சினேந்திரமாலை.
௩௩. சீவகசிந்தாமணி.
௩ச. சூளாமணி.
௩ரு. தகடூர்யாத்திரை.
௩சு. தந்திரவாக்கியம்.
௩எ. திணைமாலைநூற்றைம்பது.
௩அ. திணைமொழியைம்பது.
௩கூ. திரிகடுகம்.
ச௦. திருக்குறள்.
சக. திருக்கோவையார்.
சஉ. திருப்பாட்டு.
ச௩. திருமுருகாற்றுப்படை.
சச. திருவாசகம்.
சரு. திருவாய்மொழி.
சசு. திருவுலாப்புறம்.
சஎ. தொல்காப்பியம்.
சஅ. நற்றிணைநானூறு.
சகூ. நாடகநூல்.
ரு௦. நாலடியார்.
ருக. நெடுநல்வாடை.
ருஉ. பட்டினப்பாலை.
ரு௩. பதிற்றுப்பத்து.
ருச. பரிபாடல்.
ருரு. பல்காப்பியம்
ருசு. பல்காயம்.
ருஎ. பழமொழி.
ருஅ. பன்னிருபடலம்.
ருகூ. பாரதவெண்பா.
சு௦. புறநானூறு.
சுக. புறப்பொருள்வெண்பாமாலை.
சுஉ. பூதத்தாரலைவயடக்கு.
சு௩. பூதபுராணம்.
சுச. பெரும்பாணாற்றுப்படை.
சுரு. பெரும்பொருள்விளக்கம்.
சுசு. பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதி.
சுஎ. பொருநராற்றுப்படை.
சுஅ. மணிமேகலை.
சுகூ. மதுரைக்காஞ்சி.
எ௦. மலைபடுகடாம்.
எக. மாபுராணம்.
எஉ. முத்தொள்ளாயிரம்.
எ௩. முதுமொழிக்காஞ்சி.
எச. முல்லைப்பாட்டு.
எரு. மூதுரை.
எசு. மோதிரப்பாட்டு.
எஎ. யாப்பருங்கலம்.
எஅ. யாழ்நூல்.
எகூ. வசைக்கடம்.
அ௦. வஞ்சைக்கூத்து.
அக. வினையாபதி.
அஉ. விளக்கத்தார்கூத்து.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் வேதம், வேதாங்கம் முதலிய பல நூல்களிலிருந்தும் அவற்றின் உரைகளிலிருந்தும் பற்பல அரியவிஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி நன்கு விளக்கிப்போகின்றமையாலும் பிறவாற்றாலும் இவரை வடமொழியிற் பலவகையான கலைகளிலும் மிக்க பயிற்சியுள்ளவரென்று சொல்லுதற்கிடமுண்டு.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக்கூறப்பட்டிருத்தலின், அவர்களுக்கு இவர் காலத்தினாற் பிற்பட்டவரென்று தெரிகின்றது.*

---

* இவர் கி. பி. 14-ஆவது நூற்றாண்டுக்கு முற்பட்டவரல்லரென்று பிரம்மஸ்ரீ T. S. குப்புஸாமி சாஸ்திரிகள் எழுதியிருக்கிறார்கள்; (தமிழகம், தொகுதி-I, பக்கம் கக-ஆவதைப் பார்க்க.)

இவர், பழைய செய்யுட்களையேனும், அவற்றின் கருத்தையேனும் உரைநடையாக எழுதுவதுண்டு; அவற்றுட் சில வருமாறு:—

3. அருஞ்சுரத்தின் மரம்போல அடைந்தார்க்களித்தல் அவற்றியல்பு. (புறநா. கககூ; நாலடி. உ0உ)

192. அடுத்தது காட்டும் பளிங்கை. (திருக்குறள். எ0கூ.)
205. நன்மையுந் தீமையுங்கருதி. ( „ ருகக.)
214. இடித்துக் கூறல் அமைச்சர்க்கியல்பு. ( „ கூஅ.)
252. அரசன் உவாத்தியாயன் தாய் தந்தை தம்முன். (ஆசார. கஎ.)
272. இருதலைக் கொள்ளியிடத்து எறும்புபோல். (திருவா. நீத்தல். க.)
547. சங்குசுட்டாலும் நிறங்கெடாதது. (மூதுரை, ச.)
799. குடிப்பிறந்து பழிநாணுவார்க்கு. (1998.) (திருக்குறள். எகூச.)
1592. சென்ற விடத்தாற் செல்ல விடாதே. ( „ சஉஉ.)
1631. இருதலைப் புள்ளின் ஓருயிரேம் (கலி. அக.)
1731. ஆடவர் குறுகாவருங் கடிவரைப்பு. (நெடுநல். கஎ.)
1813. இடிக்குந் துணையார்சொற் கொள்ளாதே. (திருக்குறள். சஎ.)
2353. தேவாசுரம் இராமாயணம் மாபாரதம். (கலிங்க. களம்பாடினது, க.)
2384. மெய்புகுவன்ன முயக்கம். (அகநானூறு. ௩0ச.)
2802. மார்பிற்கோதை. (புறநானூறு. சஅ.)

அமிழ்தினுமினிய தமிழ்மடல்வரல்செய் அருந்தவத்தின் பெரும்பயனாக அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமைபெருமைகள் விரிவஞ்சி இவ்வளவோடே நிறுத்தப்பெற்றன.

---

# இக்காப்பியத்தலைவனாகிய
# சீவகன் சரித்திரச் சுருக்கம்.

## [க.—நாமகளிலம்பகம்.]

இப்பரதகண்டத்தில் ஏமாங்கதநாட்டில், இராசமாபுரத்திற் குருகுலத் திலே உதித்துச் செங்கோல்செலுத்திய சச்சந்தனென்னுமரசன், தன்மாம னும் விதையதேயத்தரசனுமாகிய ஸ்ரீதத்தன்மகள் விசயையை மணந்து அவ ளது பேரழகுபற்றியெழுந்த வேட்கைமிகுதியால் அவளுடன் இடைவிடாமல் இருப்பக் கருதி, நிமித்திகன்முதலிய மந்திரிமார் கூறிய உறுதிமொழி யைக் கொள்ளானாகி, கட்டியங்காரனென்னும் மந்திரியொருவனை யழைத்து அவனைநோக்கி "நீ இந்நாட்டைக் காத்துவருதி" எனவிதித்து அந்தப்புரம் புகுந்து தானெண்ணியவண்ணம் இன்புற்றிருந்தான்.

அவன் அப்படியிருக்கையில், விசயை கருப்பமுற்று ஒருநாளிரவில் மூன்றுகனாக்கண்டு அவற்றின்பயன்களை அரசனாலுணர்ந்து அவற்றுள் ஒன் றால் வருத்தமுற்று அவன் தேற்றத் தேறியிருந்தனள்.

அப்பொழுது கட்டியங்காரன் அரசனைக்கொன்று இராச்சியமுழுவதை யும் தானேயாளக்கருதி, அறிவுடையோர்சொற்கேளானாகி, தன் மைத்துன னாகிய மதனனோடுயோசித்து, பின்பு அரசனிருக்கும் அந்தப்புரத்தைச் சேனை களோடும் வளைந்துகொண்டான். அதனை வாயில்காப்பாளனாலறிந்த அரசன், மனங்கலங்கிப் புலம்பிய விசயையைத் தேற்றி, அவளை முன்னமே தான் செய்வித்த மயிற்பொறிமேலேற்றி, மகப்பேற்றைக் கருதி ஆகாயவழியே வேறிடஞ்செல்ல விடுத்துத் தான் புறம்போந்து, கட்டியங்காரனோடும் அவன் படைவீரரோடும் போர்செய்து பின்பு அவனால் மாய்ந்தனன். அப்பாற் கட்டி யங்காரன் வெற்றிமுரசறைவித்து எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டனன்.

ஆகாயவழியேசெல்லும் விசயை அம்முரசொலிகேட்டுக் கலங்கித் தான் ஊர்ந்துசெல்லும் மயிற்பொறியை முறுக்கிநடத்தமாட்டாமல் மூர்ச்சித்தமை யால், அப்பொறி அப்பாற் செல்லாமல் அந்நகரத்தைச்சார்ந்த ஒரு மயா னத்திடையே மெல்லவீழ்ந்தது. உடனே அவள் அவ்விடத்துச் சுபகாலத்தில் ஓராண்மகவைப்பெற்று ஒருவாறுகவலையொழிந்து, அக்குழந்தைக்குப் பா லூட்டி, அரசனிறந்ததற்கிரங்கி, அப்பிள்ளையைநோக்கி, "வேந்தே! அரசன் பலபல சிறப்புச்செய்யப் பிறக்கும் நீ பாவியேன்காண இங்ஙனம்பிறப்பது தகு தியோ? உலகுடையாய்! நீ கிடக்கின்ற இடம் பகைவனிடமாயிருக்கின்றது; நினதுபாயல் சுடுகாடாயுள்ளது; யாரும் உசாவுதற்கு ஒருதுணையுமில் லாத் தமியேனா யிருக்கிறேன்; நின்னைக் கொண்டுபோகக்கருதின், இக்கா

லமோ போகவொண்ணாத இருளாயுள்ளது; மேல் நீ வளருமாறும் அறியேன். சிந்தாமணியே! நீ ஒன்றுமுரையாமற் கிடவாநின்றாய்; என் வருத்தத்தை நீக்கப்பிறந்த நீ என்னிடத்துப் பிறந்த துன்பக்கடலை யான் நீந்துந் தெப்பமாகாதபொழுது என்னைக் காப்பவர்யாவர்? உரைக்கின்றிலை" என்று கூறித் தனியேயிருந்து வருந்திப் புலம்பும்பொழுது, அம் மயானத்துள்ள தெய்வமொன்று மனமிரங்கி அவள்தோழியாகிய சண்பகமாலை வடிவங்கொண்டு அவள் முன்னேவந்து துயரந்திரும்படி அவளுக்கு இனிய வார்த்தைகள் கூறி, அவளிடத்திருந்த (சச்சந்தன் பெயரெழுதப்பட்டுள்ள) மோதிரத்தைக் குழந்தைக்குச் சேர்த்தி அக்குழந்தையை ஒருபடுக்கைமீது கிடத்தி அவளை நோக்கி, "இனி இப்பிள்ளையை எடுத்துப்போவதற்கு ஒருவன் வருவான்; ஆதலால், யாம் ஒளித்திருத்தல் நலம்" என்றுகூற, உடனே அவள் விலகிச் சென்று மறைந்து நின்றனள்.

அவள் அப்படிநிற்கையில், மரித்த தன்குழந்தையைப் புதைத்தற்கு அங்கேவந்த கந்துக்கடனென்னும் வணிகனொருவன் யாருமின்றித் தனியே கிடந்த அக்குழந்தையைக்கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைந்து அதன் கையிலிருந்த மோதிரத்தால் இராசவம்சத்துக் குழந்தையென்றறிந்து, பிறரறிந்துகொள்ளாதபடி அம்மோதிரத்தை மறைத்துக்கொண்டவனாகி அக்குழந்தையை அன்போடெடுப்ப அது தும்மிற்று. அப்பொழுது தெய்வம் "சீவ" என்று வாழ்த்தியது. பின்பு கந்துக்கடன் அக்குழந்தையை எடுத்துக்கொண்டு விரைந்து சென்று இராசமாபுரத்துள்ள தன்வீட்டினுள்ளே புகுந்து தன்மனைவியாகிய சுநந்தையைநோக்கி, "நின்மகன் சாதலினின்றுந் தப்பினான்" என்று கூறிக் கொடுப்ப, அவள் தொழுதுவாங்கிப் பெருமகிழ்ச்சியடைந்து வளர்த்துவரும் நாளில், முன்னம் தெய்வம் சீவவென்று வாழ்த்தினமைபற்றி, அறிவுடையோர் அப்பிள்ளைக்குச் சீவகனென்று நாமகரணஞ் செய்தனர். பின்பு சுநந்தை நந்தட்டனென்னும் ஒருபுத்திரனைப் பெற்றாள். இதுநிற்க.

மயானத்திருந்த விசயை தோழியாகவந்த தெய்வத்தோடும் தண்டகாரணியம்புகுந்து, தவவேடம் பூண்டு மகனுக்கு ஆக்கம் உண்டாகுகவென்று நோற்றனள். தெய்வம், "இராசமாபுரத்திற்சென்று நின்புதல்வன்செய்தியை அறிந்துவருவேன்" என்றுகூறி விசயையிடத்து விடைபெற்றுப் போய்த் தானுறையும் புறங்காட்டைச்சேர்ந்திருந்தது. சீவகன் *தோழர்களோடும், தம்பிமாராகிய †நபுலவிபுலர்களோடும், நந்தட்டனோடும் இனிது வளர்ந்து உரியபருவத்தில் வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று, கந்துக்கடன்

---

* சச்சந்தனிறந்தபின்பு, அவன் சுற்றத்தைக் கட்டியங்காரன் அழிப்பது தெரிந்து, சச்சந்தன்றேழர் தம்புதல்வர்களைக் கந்துக்கடனிடத்தே ஒப்பித்து வளர்த்துவரும்வண்ணம் வேண்டிக்கொள்ள, கந்துக்கடன் அவர்களைச் சீவகனோடுசேர்த்து அன்போடு வளர்த்துவருவானாயினான். அதனால், அப்பிள்ளைகள் சீவகனுக்குத் தோழராயினர்.

† நபுலவிபுலர்- சச்சந்தனுடைய காமக்கிழத்தியர்புத்திரர்.

கட்டளைப்படி அச்சணந்தியாசிரியரிடத்து வில்வித்தை முதலியவற்றை எளி திலே பயின்று சிலகாலத்துள் சகல வித்தியாபாரங்கதனாயினான்.

ஆசிரியர், சீவகனது புத்தியின்திறமும் கல்விமுதிர்ச்சியுங்கண்டு அள வில்லாத ஆச்சரியமும் மகிழ்ச்சியுமுடையராய், முதலில்அவனுக்குத் தருமோப தேசஞ்செய்து பின்பு அவனைத் தனியிடத்திற்கு அழைத்துச் சென்று தாம் ஓராசனத்திருந்து அவனைநோக்கி, "இந்நகரத்தரசனாயிருந்த சச்சந்தனென் பவன் பூர்வ கருப்பிணியாகிய தன்மனைவி விசயையை மயிற்பொறிமேற் போக்கிப் பின்பு கட்டியங்காரனென்னும் மந்திரியாற் கொல்லப்பட்டான். அவ்விசயை மயானமடைந்து ஒருபிள்ளையைப் பெற்றாள். அப் பிள்ளையைக் கந்துக்கடனெடுத்துவந்து தன்மனைவியாகிய சுநந்தைகையிற் கொடுப்ப, அவள் அன்போடு வளர்த்து வருவாளாயினாள்" என்று ஒருகதைமுகத்தாலே, ன்னான் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியதுபோலக் கூற, அதுகேட்ட சீவ ன், "அப்பிள்ளை யாவன்?" என்றுவினவ, ஆசிரியர் "நீதான்" என்றவுடன் சீவகன் பதைபதைத்து மூர்ச்சித்து, அவர்தேற்றத்தேறிக் கட்டியங்காரனைக் கொல்லுதற்குச் சந்நத்தனாயெழுந்தான். ஆசிரியர் அவனைநோக்கி, "மைந்த! இது காலமன்று; இன்னும் ஒருவருடம் சென்றபின்னர், நீ எண்ணியது செய்க; இப்பொழுது உன்னை வெளிப்படுத்தாதொழிக; இதுயான்வேண்டு வது" என்றுசொல்ல, சீவகன்ஆசிரியர்கட்டளையை மறுத்தற்கஞ்சி அங்ஙனமே செய்வதாக ஒப்புக்கொண்டான்.

பின்பு ஆசிரியர் தம்வரலாறு கூறுவாராய், அவனைநோக்கி "யான் முன் னம் வெள்ளிமலையிலுள்ள வாரணவாசி என்னும் நகரத்தரசன்; உலோகமா பாலனென்னும் பெயருடையேன்; தவஞ்செய்தற்கெண்ணி, மகனுக்கு அர சளித்துத் தவவேடம்புனைந்து நோன்புபுரிகையிற் பூர்வசன்மபாவத்தால் எனக்கு யானைத்தீயென்னும் நோய் உண்டாகியது; அதனால், மிகவும்வருந்தி ஒருவாற்றானுந் தீரப்பெறாதிலேனாய் இங்குவந்து நின்னைக்கண்டவுடன் அந் நோய் தீரப்பெற்றேனாதலின் நின்பாற் பெருவிருப்புற்று நினக்குக் கல்வி யறிவுறுத்தற்கே ஈண்டிருந்தேன். என் எண்ணம் முற்றியது. இனித் தவஞ் செய்தற்குச்செல்ல எண்ணுகின்றேன்; விடைகொடு" என்ன, சீவகன் அவ ரைப் பிரிதற்குச் சிறிதும் கருத்திலனாயினும் அவர் தவஞ்செய்யப்போதலை மறுத்தற்கஞ்சி உடன்பட, அவர் * இருபத்துநான்காந் தீர்த்தங்கரராகிய ஸ்ரீவர்த்தமானருடைய சமவசரணமடைந்து நோன்பியற்றி முத்தியடைந் தார். சீவகன் இராசமாபுரத்தே யிருந்தனன்.

---

* தீர்த்தங்கரர் இருபத்துநால்வர்; அவர்கள்பெயர்வருமாறு:—(க) விரு ஷபர், (உ) அஜிதர், (ங) சம்பவர், (ச) அபிநந்தனர், (ரு) சுமதி, (சு) பத்ம ப்ரபை, (எ) சுபார்ச்வர், (அ) சந்திரப்ரபை, (கூ) புஷ்பதந்தர், (க0) சீதளர், (கக) சிரேயாம்சர், (கஉ) வாசுபூஜ்யர், (கங) விமலர், (கச) அநந்தர், (கரு) தருமர், (கசு) சாந்தி, (கஎ) குந்து, (கஅ) அரர், (ககூ) மல்லி, (உ0) முனிஸுவ்ரதர், (உக) நமி, (உஉ) நேமி, (உங) பார்ச்வர், (உச) ஸ்ரீவர்த்தமானர்.

## [உ.—கோவிந்தையாரிலம்பகம்.]

சிலநாட்சென்றபின் ஒருநாள் அரசனுடையபசுக்கள் சமீபத்திலுள்ளஒரு மலையையடைந்து மேய்கையில், அம்மலையிலுள்ளவேடர் அவற்றைக் கவர்ந்து கொண்டுசெல்ல, அப்பசுக்களைப் புரக்குமிடையர் அவ்வேடர்களை ஒன்றுஞ்செய்யமாட்டாமல் மறுகிச் சுழன்று விரைந்தோடிச் சென்று கட்டியங்காரனிடத்து முறையிட்டார். உடனே அவன் அவ்வேடரைவென்று நிரை மீட்டுவரும்படி தன்புதல்வர் நூற்றுவருக்கும் தன்மைத்துனன் மதனனுக்குங் கட்டளையிட, அவர் படையுடனேசென்று பொருது, அவ்வேடராற்றோல்வியுற்று மீண்டார். இடையர் மீட்டும்வந்து அச்செய்தியைக் கட்டியங்காரனுக்கறிவிப்ப அவன் வாளாருவிந்தனன். அதனை அவ்விடையர்தலைவனாகிய நந்தகோன் தெரிந்து வருத்தமடைந்து, "இந் நிரையை மீட்டுவரும் மைந்தற்குப் பேரழகுள்ள என்கன்னியாகிய கோவிந்தையைத்தருவேன்" என்று வீதிதோறும் முரசறைவித்தான். அதுகேட்டும் வேடருக்கஞ்சிப் பலரும் சும்மாவிருந்தனர். அதனையுணர்ந்த சீவகன்,குளுரைத்துப்போர்க்கோலங்கொண்டுசென்று யுத்தஞ்செய்து, அவ்வேடர் ஐம்பத்தாறுயிரவரும் தனக்கு ஒருவாற்றானும் பகைவரன்மையின் அவர்களைக் கொல்லாமல் அச்சுறுத்தி நிரைமீட்டுவந்து, நந்தகோன் வேண்டுகோளின்படி அவன்மகளைத் தான் அப்பொழுது மணஞ்செய்தல் தன்குலத்திற்குப் பொருந்ாதென்றெண்ணி, நன்தோழனாகிய பதுமுகனுக்கு மணஞ்செய்வித்தனன்.

## [௩.—காந்தருவதத்தையாரிலம்பகம்.]

அப்பால் வெள்ளிமலையிலுள்ள வித்தியாதரராசனாகிய கலுழவேகனென்பவன் தன்மகள் காந்தருவதத்தைக்கு இராசமாபுரத்தில் மணநிகழுமென்பதைச் சோதிடராலறிந்து அங்ஙனம் செய்விக்கத்துணிந்து அவ்விராசமாபுரத்து வணிகனாகிய ஸ்ரீதத்தனென்பான் ஒருதீவிற்சென்று பெரும்பொருளீட்டி நகரடையவெண்ணிப் பரிசனங்களோடும் மரக்கலமூர்ந்து கடலிற் செல்வதைத் தெரிந்து, அவனை அழைத்துவரும்படி தன்னிடத்துள்ள தரனென்னும் வித்தியாதரனொருவனை யனுப்பினன். அத்தரன் போந்து சனங்களுடன் கப்பல்முழுகியதுபோலத் தன்வித்தைவலிமையால் ஸ்ரீதத்தனுக்குத் தோற்றுவிப்ப, ஸ்ரீதத்தன் அக்கப்பலினின்றும் முறிந்துவிழுந்த ஒருமரத்துண்டத்தைத்தழுவி மெல்லமெல்லச்சென்று கரையையடைந்து வருந்தியிருந்தனன்.

அப்பொழுது, தரன் வழிச்செல்வான்போன்று அவனைச்சந்தித்துத் தேற்றி அவனை அழைத்துக்கொண்டு கலுழவேகனிடஞ்செல்ல, கலுழவேகன் ஸ்ரீதத்தனுக்கு மிக்க உபசாரங்கள்செய்து அளவளாவியிருந்து, பின்னர்க் காந்தருவதத்தையின் வரலாறுகளைக்கூறி, அவளை வீணாபதியென்னுந் தோழியுடன் அவனிடமொப்பித்துப் பலபொருள்களுமுதவி, அவனை நோக்கி, "இசையின் இவளைவெல்வான் யாவனோ அவனுக்கு இவளை மணம்புரிவி" என்று சொல்லி விடுப்ப, ஸ்ரீதத்தன் அவளோடும் புறப்பட்டு விமானமூர்ந்து

போந்து பரிசனங்களுடன் முழுகிப்போனதாகத் தான் முன்னங்கருதிய கப்பலைத் தரன்காட்டக்கண்டு உவப்புற்று, அதிலுள்ள தனக்கினியவர் அனைவ ரும்தன்னோச்சூழ இராசமாபுரஞ்சார்ந்து தன்மனையை அடைந்து தன்மனை வியாகிய பதுமைக்கு நிகழ்ந்தவற்றைக்கூறிக் காந்தருவதத்தையைக் கன்னி மாடத்தேயிருத்தி, கட்டியங்காரனைக்கண்டு அவனுடன்பாடுபெற்று ஒருமண்ட பஞ்செய்வித்து, "இக் காந்தருவதத்தையை வீணையில்வெல்வோரே இவளை மணஞ்செய்தற்குரியர்" என்றுபிரசித்தஞ்செய்தனன். அஃதுணர்ந்த பலதேயத் தாரும் அவ்விடத்தே வந்துகூடினார்கள். பின்பு ஸ்ரீதத்தன் காந்தருவதத் தையை அழைத்துவந்து, அம்மண்டபத்தேயிருத்தி, அவளை யாழ்வாசிக்கச் செய்தான். அதுகேட்ட பலரும் ஆச்சரியமுற்றனர். முதல் மூன்றுவருணத் தாருள்ளே இசையில்வல்ல ஒவ்வொருவரும் தனித்தனியேவந்து பாடியும் யாழ்வாசித்தும் அவளைவெல்லும்வல்லமை இல்லாராய்த் தோல்வியுற்றனர். இப்படி ஆறுதினங்கள் சென்றன.

பின்பு இச்செய்தியையுணர்ந்த சீவகன் தன்கல்வியைத் தோற்றுவிப்பான் ஆண்டுச்செல்லக்கருதித் தன்தோழனாகிய புத்திசேனனாற் கந்துக்கடனுக்குத் தெரிவித்தான். கந்துக்கடன் அநங்கமாலையென்னும் பரத்தைநிமித்தம் சீவக னிடத்துக் கட்டியங்காரனுக்கு மிக்க சினமுண்டாயிருத்தலை யாகமாலையென் பவளால் அப்பொழுது அறிந்துகொண்டமையால், "படையமைத்து அவ்வி டஞ்செல்க" என்று சொல்லி விடுப்ப, சீவகன் அப்படியேபோந்து, அம்மண் டபமடைந்து, தான் இசையில்வல்லனாதலைப் பலர்க்கும் புலப்படுத்திக் காந் தருவதத்தையை வென்றனன். உடனே அவள் அவனுக்கு மாலையிட்டனள்.

அதுகண்டு அழுக்காறுற்ற கட்டியங்காரன் மனம்புழுங்கி, அங்குவந்திருக் கும் அரசர்களைநோக்கிப் பொறாமைவிளைத்தற்குரிய சிலவார்த்தைகள்கூறி, "அரசர்களே! இச் சீவகனைவென்றோனே இக் காந்தருவதத்தையை மணஞ் செய்தற்குரியன்" என்று கூற, அரசர் ஒருங்கு திரண்டுவந்து சீவகனோடு போர்செய்து தோல்வியுற்றனர். பின்பு சீவகன் காந்தருவதத்தையைத் தன் மனைக்கு அழைத்துச்சென்று சுபமுகூர்த்தத்திலே அவளை விதிப்படி மணம் புரிந்து அவளோடும் வாழ்ந்திருந்தனன்.

## [௪.—குணமாலையாரிலம்பகம்.]

இப்படிச் சிலநாளாயபின், இளவேனிற்காலம்வந்தது. அப்பொழுது நகர்ப்புறச்சோலையில் விளையாடுதற்குச்சென்ற இராசமாபுரத்தினருட் சுர மஞ்சரியும் குணமாலையும் *சுண்ணங்காரணமாகத் தம்முள் மாறுபட்டுத் தம்சுண்ணங்களுள் நல்லதை அறிஞரால் அறிந்துவரும்படி தம் தோழியரிரு வரையனுப்ப, அவர் அவ்வாறே அறிஞர் பலர்க்கும் அவற்றைக்காட்டினர். கண்ட அவர், "இவற்றைச் சீவகனுக்குக் காட்டும்" என்றனர். அம் மகளிர் அவன்மாட்டுச்சென்று அவற்றைக்காட்ட, அவன் குணமாலைசுண்

---

* சுண்ணம் - வாசனைப்பொடி.

ணத்தை நல்லதென்றான். அவர் மீண்டுசென்று, அச்செய்தியைத் தம் தலை
வியர்க்கறிவித்தனர். அதனைச் சுரமஞ்சரிகேட்டு அவலமுற்று, "எனது சுண்
ணத்தை யிகழ்ந்தசீவகன் பின்னர் வலிந்துவந்து என்னைவிரும்பும்படி யான்
நோற்பேன்" என்றுகுறிப்பாலுணர்த்திக் கன்னிமாடஞ்சென்று மற்றை ஆட
வரொருவரையுங் கருதாளாய்ச் சீவகனையே கருதி நோன்பியற்றியிருந்தனள்.

அவள் அப்படியிருக்க, அப் புறநகர்ச்சோலையிலே பிராமணருடைய
சோற்றுக்குவியலை நாயொன்றுதீண்ட அதனை அப்பிராமணர் தடியால் மோத
தினர். அது பயந்து ஒருகுளத்தில்விழுந்து நீந்தி வருந்துந்தருணத்தில், அத
னைச் சீவகன்கண்டு மிகவிரங்கிப் பஞ்சநமஸ்காரமென்னும் மந்திரத்தை அதன்
செவியில் உபதேசித்தான். உடனே அந்நாய் அவ்வுபதேசத்தால் தன்னுடம்பை
ஒழித்துத் தேவனாகி விண்ணிற் சென்றது. யாவருங்கண்டு வியப்புற்றனர்.

பின்பு அத்தேவன் சுதஞ்சணனென்னும் பெயருடையவனாய் மீண்டு
வந்து சீவகனை வணங்கிநிற்ப, சீவகன், "நீயார்?" என்றனன். சுதஞ்சணன்
"ஈங்குநின்றும் நின்னருளாற்சென்று இயக்கர்தலைவனாகிச் சந்தவெண்மலை
யிற் சந்திரோதயமென்னும் நகரில் இருப்பேனாயினேன்; என் பெயர் சுதஞ்
சணனென்பது; நினக்குப் பணிபுரியுங் கருத்துடையேன்" என்று சொல்ல,
சீவகன், "எனக்குப் பகைவரால் துன்பம்வரும்பொழுது வந்து உதவி
செய்க; இப்பொழுது நின்னிடஞ்சென்று உறைக" என்றுவிடுப்ப, சுதஞ்
சணன் விசும்பாறாகச்சென்று தன்னகரமடைந்தான்.

அவன் சென்றபின்பு, சோலையிலிருந்தோர் யாவரும் தத்தம் ஊர்திகளி
லேறி, நகரிக்குச் செல்லுகையில், அசனிவேகமென்னும் பட்டத்துயானை
செருக்குற்றுச் சங்கிலிபிணித்த கட்டுத்தறியை முறித்துப் பாகனுக்கடங்காமற்
குணமாலைக்கெதிரே சென்று சினந்துநின்று அவளைக் கொல்லத்தொடங்கி
யது. அதனைச் சீவகன்கண்டு, கட்டியங்காரன் பகைப்பானென்று கருதா
மல் அந்தயானையின் செருக்கையடக்கி, அதனை அப்பாற்செலுத்திக் குணமாலை
யைக் காத்தனன். முன்னரே சீவகன்மாட்டு விருப்புற்றிருந்த குணமாலை
அவனை நேரிற்கண்டமையால் அவனிடத்தே அதிமோகமுடையவளாய்த் தன்
மனையையடைந்து, தோழிமுதலாயினோர் மிக உபசரிக்கவும், உணவுமுத
லியவற்றை வேண்டாளாய்ச் சோர்ந்துற்றுச் சீவகனிடம் தூதுசென்றுவந்த
தன்கிளியால், அவன் தன்னைவிரும்பியதுதெரிந்து ஒருவாறு துயரந்தீரப்
பெற்றிருந்தனள். அதனை அவளுடைய தாயாகிய வினயமாலையறிந்து,
தன்கணவனாகிய குபேரமித்திரனுக்குத் தெரிவித்தனள். அவன் சீவகனுக்குக்
குணமாலையைக் கொடுத்தலில் மிக்க மகிழ்ச்சியுடையவனாய்த் தன்கருத்தை
மொழிந்து சிலமுதியோரைக் கந்துக்கடனிடத்துத் தூதுவிடுத்தான். அம்
முதியோர் அவனிடம்போய்ப்பேச, அவனுடன்பட்ட பின் விவாகத்திற்குரிய
வை ஈட்டப்பட்டன. அதன்பின்பு சீவகன் குணமாலையை மணம்புரிந்து
அவளைப்பிரியாது மகிழ்ச்சியுற்றிருந்தான்.

சீவகன் இப்படியிருக்கையில், முன்னர் அவனுக்குத் தோல்வியுற்ற யானை நாணிக் கவளமுதலியன கொள்ளாமற் கோபத்தோடு நிற்றலைக் கட்டியங்காரனறிந்து, "இதற்குக் காரணம் என்ன?" என்று வினவினான். பாகன் சீவகனால் நிகழ்ந்ததைக்கூற, உடனே அவன் சினந்து, மதனனையும் சிலவீரரையும் நோக்கி, "நீவிர்சென்று சீவகனாகிய செட்டிமகனை விரைவிற் கொணர்க" என்று ஆஞ்ஞாபிக்க, அவர்கள் சென்று சீவகனிருக்குமிடத்தை வளைந்துகொண்டார்கள். அதனை உள்ளேயிருந்தசீவகன் அறிந்து கோபங்கொண்டு யுத்தசன்னத்தனாய்ப் புறம்போந்தும், "இன்னும் ஒருவருடம்வரை கட்டியங்காரனிடத்துக் கோபங் கொள்ளாதிருப்பேன்" என்று முன்னொரு ஆசிரியராணைக்கிசையத் தான்கூறியதைநினைந்து கோபந்தணிந்து நின்றவளவிலே, கந்துக்கடனும்சுநந்தையும்வந்து, "மைந்த! அரசனுக்கு அடங்கியொழுகுதல் ஆண்மை" என்றனர். அதனாலும் சீவகன் தன்வீரத்தை வெளிப்படுத்தானாகி மதனன்முதலியோர் சூழ்ந்துவரச் செல்லும்பொழுது, அக்கொடுமையைக்கண்ட ஊரவர்யாவரும் பதைப்புற்று வருந்திப்புலம்பியழுதனர். அச்செய்தியைத் தோழரும் தம்பிமாருங்கேட்டுச்சினந்து மதனன்முதலியோரை வெல்லுதற்குரிய உபாயத்தை நாடிக்கொண்டு நின்றனர். காந்தருவதத்தை கேட்டு, தன்கணவனைச்சிறைமீட்கக் கருதித் தன்தெய்வங்களை நினைப்ப, உடனே அத்தெய்வங்கள் போந்து அவனைச் சூழ்ந்துகொண்டன. அவற்றைத் தெரிந்த சீவகன், "இனிச் செய்வதென்னை?" என்று ஆலோசித்து, காந்தருவதத்தை தன்சிறைத்துயரநீக்க முயன்றதற்குநாணித் தன் உயிர்த்தோழனாகிய சுதஞ்சணனை நினைத்தான். நினைத்தவுடன் அச் சுதஞ்சணனுக்கு இடக்கண் ஆடியது; ஆடினஅளவிலே அவன், "இதனால் எனக்குத் தீங்குவருமோ?" என்று நோக்காது முதலிலே சீவகனை நினைந்தான். நினைந்து அவனுற்ற துன்பத்தைத் தனது ஞானத்தாலறிந்து விரைந்துவந்து புகமுடிவுவந்ததுபோலத் தோற்றும்படி அவ்விடத்துக் காற்றும் மழையும் மிக்குவரச்செய்து ஒருவருக்கும் தோற்றாமற் சீவகனை எடுத்து மார்போடணைத்து ஏந்திச்சென்று தன்னகரமடைந்து, அவன் பெருமையையும் அவன் தனக்குச்செய்த பேருதவியையும் தன்தேவியர்க்கு விளக்கக்கூறி, அவனை மகிழ்வித்து அவனோடும் அவ்விடத்தேஉறைந்தனன்.

இங்கே மதனன் சீவகனைக் காணாது திகைத்து, "கட்டியங்காரனிடத்து என்னசொல்லுவோம்!" என்றெண்ணி ஆங்குள்ளானொருவனைவாளாற்பிளந்து உருத்தெரியாமற் புரட்டிவிட்டுக் கட்டியங்காரனிடம் சென்று, "நின்கட்டளைப்படியே சீவகனைப் பிடித்துவருகையில் மழையுங் காற்றும் அதிகரித்தமையால் ஈண்டுக் கொணர்தற்குத் தடையுற்று அவ்விடத்தேயே அவனைக் கொன்றுவிட்டேன்" என்றான். கட்டியங்காரன் பெரிதும் வியப்புற்று, "சீவகனைக்கொல்லுதல் மிகவுமரிது; அவனைக் கொன்றநீ இவற்றைப் பெறுவாயாக" என்று மதனனுக்குப் பல சிறப்புக்களும் செய்து அவனை மகிழ்வித்தான்.

## [ரு.—பதுமையாரிலம்பகம்.]

அங்கே சுதஞ்சணன் பலதேயங்களையும் ஆங்காங்குள்ள மலைகள் ஆறுகள் முதலியவற்றையுங் காணுதற்குச் சீவகன் விருப்புற்றிருப்பதைத் தெரிந்து அவற்றின் வழிமுதலியவற்றைக் கூறி, பின்னர்க் காமனும் விரும்புஞ்சாரத்தைக்கொடுப்பதும் விடமுதலியவற்றைக் கெடுப்பதும் வேண்டியவுருவைத் தருவதுமாகிய மூன்று மந்திரங்களை அவனுக்கு மொழிந்து, அவனையேந்திக்கொண்டு தன்மலையினின்றுமிழிந்திப் பூமியில்விடுப்ப, சீவகன் அவன் முன்னர்க் கூறிய வழியேபோய் மிருகங்களையும் பறவைகளையும் கொன்றுதின்று திரியுங் கொடியவேடனொருவனைக் கண்டு அவனை நல்வழிப்படுத்த நினைந்து அவனுக்கு உறுதிமொழியுரைத்தனன்.

உரைத்துவிட்டுஅப்பாற்சென்று காட்டுத்தீயால் வளைக்கப்பட்டுநின்ற யானைத்திரளின் வருத்தத்தைநீக்கினன்; நீக்கி அரணபாதமென்னும் அசலமடைந்து ஆங்குள்ள அருகக்கடவுளையும் சாரணரையும் வழிபட்டேத்தி அப்பாற் பல்லவதேயத்துள்ள சந்திராபமென்னும் நகரைநண்ணி அந்நகரத்தரசனாகிய தனபதியின்மகன் உலோகபாலனோடு நட்புற்று அவன்சகோதரியாகிய பதுமையென்பவள் சோலையிற்சென்று பூக்கொய்து விளையாடுகையிற் பாம்புகடித்தமையால் அவளுக்குண்டான விடவேகத்தைப் போக்கி அவளை மணம்புரிந்து அவளோடும் அவ்விடத்தே இரண்டுமாதங்கள்தங்கி இன்புற்றிருந்து பின்பு வேறிடஞ்செல்ல விருப்புற்று ஒருநாளிரவினடுவில் ஒருவரோடும் சொல்லாது வேற்றுருக்கொண்டு அந்நகரினின்றும் நீங்கி அப்புறஞ் செல்வானாயினன்.

பின்பு பதுமை சீவகன் தன்னைநீங்கியது தெரிந்து தன்பக்கலிலிருந்து அவனோடு கூடியிருக்கையில் இன்பம்விளைவித்த ஒவ்வொருபொருளையுங்கண்டு பலவாறு புலம்பித் தன் தோழிமாருள் அறிவுடையாளொருத்தி தேற்ற ஒருவாறு தேறியிருந்தனள். அஃதுணர்ந்த தனபதி மிகவுங்கவலையுற்றுச் சீவகனைநாடிக் கொணரும்வண்ணம் சிலரையனுப்ப, அவர் சீவகனைப் பலவிடத்துந்தேடியலைந்து பின்பு கண்டு, "நின்னைப் போன்றொருகுமரனைக் கண்டதுண்டாயிற்கூறுக" என்ன, சீவகன் அவரைநோக்கி, "அவனை ஒன்பதாந்திங்களிலே காண்பீர்; அதற்குமுன்னர்க் காணீர்; யான்கூறியது பொய்யுரையன்று; இச்செய்தியை நும்மரசனுக்குக் கூறுமின்" என்று விடுப்ப, அவர்போந்து அச்செய்தியைத் தனபதிக்குத் தெரிவித்தார். அவன் ஒருவாறு வருத்தமொழிந்திருந்தான். சீவகன் அப்பாற் சென்றான்.

## [சா.—கேமசரியாரிலம்பகம்.]

அப்படிச்சென்ற சீவகன் பலவிடங்களையுங்கடந்து சித்திரகூடமென்னுந் தவப்பள்ளியைச்சார்ந்து அதிலிருந்த தாபதர்களோடும் அளவளாவி அவர்களைத் திருத்திப் பின்னர்த் தக்கநாட்டிலுள்ள கேமமாபுரத்தை யடைந்தான்.

முன்பு, அங்கரத்துள்ள வேதவணிகனாகிய சுபத்திரனென்பவன், தனக்குக் கேமசரியென்ற ஒருபுத்திரி பிறந்தபொழுது அவளுக்குச் சாதகங்கணித்தற்குப் போந்த கணிதரைநோக்கி, "இவளுக்குக் கணவன்யாவன்?" என்ன, அவர், "நின்மகளுக்குக் கணவனல்லாதார் ஆடவராகத் தோன்றாராதலின், இவள் எவனைக்கண்டு நாணுகின்றாளோ அவனே அவளுக்குக் கணவனாவான்" என்றனர். அதுகேட்டவணிகன் அது தொடங்கி நாடோறும் வருவார் பலரையும் தன்மனைக்கழைத்துச் சென்று உபசரித்து விருந்தூட்டி ஒருவரையுங்கண்டு அவள் நாணாமைதெரிந்து, "இவளுக்குக் கணவனாவான் வருங்காலம் உளதோ!" என்று கவலையுற்றிருந்தான்.

அப்படியிருந்த சுபத்திரன் சீவகனைச்சந்தித்து அவன்வடிவழகுகண்டு மகிழ்ச்சியுற்று அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச்சென்றான். சென்றபொழுது கேமசரி சீவகனைக்கண்டு நாணமடைந்து பின்னர் மோகமுற்று வருந்தினாள். அதனையறிந்த சுபத்திரன் சீவகனுக்கு அவளை மணம்புரிவிக்க, அவன் அவளோடும் அவ்விடத்தே இரண்டு திங்கள் தங்கியிருந்து பின்பு வேறிடஞ் செல்லக்கருதி அவளிடத்துச் சொல்லாது பிரிந்து சென்று எதிர்ப்பட்டானொருவனுக்குத் தருமோபதேசஞ்செய்து தன் அணிகலன்களை அவனுக்களித்து அப்பாற்செல்வானாயினன்.

கேமசரி சீவகனைக்காணாது திகைத்துப் பிரிவாற்றாது பலவாறு புலம்பித் தன் நற்றாயாகிய நிப்புதியென்பவள் தேற்ற, ஒருவாறு துயரந்தீர்ந்திருந்தனள்.

## [எ.—கனகமாலையாரிலம்பகம்.]

பின்பு சீவகன் சிலவிடங்களைக் கடந்துசென்று மத்திமதேயத்துள்ள ஏமமாபுரமென்னும் நகரிக்குச் சமீபமாகிய ஒருபூஞ்சோலையையடைந்து, ஆங்குள்ள அழகான ஒருபொய்கையைக்கண்டு, அதன்வளங்களைநோக்கிக் காந்தருவதத்தையையும், குணமாலையையுநினைந்து பலவாறுபுலம்பி மிகுந்தவருத்தமடைந்து அப்பாற்செல்லாது அவ்விடத்தேயிருந்தான். அப்பொழுது அந்நகரத்தரசனாகிய தடமித்தன்புதல்வன் விசயனென்பவன் அச்சோலையையடைந்து சீவகனைக்கண்டு, "இவன்இவ்விடத்தானல்லன்" என்றெண்ணி, தேயமுதலியவற்றை வினவ, சீவகனுந் தானின்னானென்று புலப்படாவண்ணம் அவற்றைக்கூறி, அவ்விடத்துப் பலமுறைமுயன்றும் அவ்விசயன் எய்து வீழ்த்தமாட்டாத மாங்கனியொன்றைத் தான் ஓரம்பாலெய்து அவ்வம்புடன் அம்மாங்கனி தன்கையில் வரப்பெற்றுத் தான் வில்வித்தையில் வல்லனாதலை வெளிப்படுத்த அதனை அவ்விசயனறிந்து மகிழ்ந்து சீவகனை உடன்கொண்டு சென்று தன்தந்தையாகிய தடமித்தனுக்கறிவித்தான். அவன் சீவகனைக் கண்டு உவப்புற்று, விசயன்முதலிய தன் புத்திரர்ஐவர்க்கும் வில்வித்தைமுதலியன கற்பிக்கும்படி அவனை நியோகிப்ப, அவன் அவற்றை அவர்களுக்குக் கற்பித்துவருகையில், அவர்கள் அவ்வித்தைகளில் மிகவும்வல்லுநராயினர். அதனை அரசனறிந்து அளவில்லாத மகிழ்ச்சியுற்று, அவனைத் தன்னிடத்தே

வைத்துக்கொள்ளக்கருதித் தன்புத்திரி கனகமாலையை அவனுக்கு மணம்பு விக்க, அவன் அவளோடுகூடி அவ்விடத்தே யிருந்தான்.

சீவகன் அங்ஙனமிருக்க, நந்தட்டன் அவன் இன்னவிடத்திலுள்ள னென்பதை அறியானாகி நாடெங்குந்தேடியும் அவனைக்காணாது வருந்திக் கா தருவதத்தையை வினவி, அவள் செய்த வித்தைமகிமையாற் சீவகன் ஏமமா புரத்திற் கனகமாலையோடிருத்தலை நேரிற்கண்டு மகிழ்ச்சியடைந்து காந்தரு தத்தையைவணங்கி, "அடியேன் சீவகனை யடையும்படி அருள்புரிவாய்" என்று வேண்ட, காந்தருவதத்தை தன்வித்தைவிசேடத்தால் நந்தட்டனைச் சீவகனிரு க்குமிடத்தை யடையச்செய்தாள். அப்படியடைந்த நந்தட்டனைச் சீவகன்கண்டு ஆநந்தமுற்றுத் தழுவி, எல்லாச்செய்திகளையும் வினவி, அவனை மகிழ்வித்து அவனோடும் அந்நகரத்திருந்தான்.

அச்செய்தியையறியாத தோழன்மார் கவலைமிக்குக் காந்தருவதத்தையை அடைந்து சீவகன் ஏமமாபுரத்தே இருத்தலையும், நந்தட்டன் அவனிடம் தடைந்ததையும் அவளாற் றெரிந்துகொண்டு தாமும் சீவகனிடஞ் செல்லக் கருதி அவளுக்குத்தெரிவித்து விடைபெற்றுப் பலவீரர்களோடும் புறப்பட்டு ஏமமாபுரஞ் செல்வாராகி, விசயை தவஞ்செய்துகொண்டிருக்கும் தவப்பள் ளியையடைந்தனர். அப்பொழுது விசயை அவர்களை நோக்கி, "நீங்கள் எங் குள்ளீர்? எங்குச் செல்கின்றீர்" என்று வினவ, தம்வரலாறு சொல்லுவ யிற் சீவகன்வரலாறுஞ் சொல்லும்படி நேர, அதனைக் கூறுகின்ற தேவத த்தன், "கட்டியங்காரன் கட்டளையால் மதனன்முதலியோர் சீவகனைக் கொல் லக் கொலைக்களங் குறுகதும் ஒருதெய்வம் வந்துகாத்தது" என்றுசொல்ல வெண்ணி, "சீவகனைக்கொல்ல" என்றவளவில் விசயை பதைபதைத்து மூர் ச்சித்துப் பின்பு எழுந்து சீவகன் வரலாறுகளை வெளிப்படச்சொல்லிக் கண் ணீர் விட்டுப் பிரலாபித்தழுகையில், தோழர் தம்முள் ஒருவரையொருவர் நோக்கி மகிழ்ந்து அவளைச் சீவகன் நற்றாயென்றும், சீவகனை இராசகுமாா னென்றும் விளங்க அறிந்தவர்களாகிச் சீவகன் இறவாதிருத்தலை அவளுக்குணர்த்த, விசயை, "என்மீதுவைத்த காதலாலே என் இறை இறந்தபின்பு யான் மிகுந்ததுன்பமடைந்தேன்; இச்செய்தியை என் ஐயனுக்கு உணர்த்தி அவனை என்னிடத்து அழைத்துவாருங்கள்" என்றுசொல்ல, தோழர்வணங்கி, "தாயே ஒருமதிக்குள்ளே நும்பாற் சீவகனை அழைத்துவருவேம்; நீவிர் கவலைப்பட வேண்டாம்" என்றுசொல்லி விடைபெற்று ஏமமாபுரத்தைச் சார்ந்த ஒரு சோ லையையடைந்து அங்கிருந்துகொண்டு அந்நகரத்தில் நந்தட்டனோடு சீவகனி ருத்தலை ஒற்றராலறிந்து அவனைக் காணுமாறு எங்ஙனமென்று ஆலோசித்து யுத்தஞ் செய்யவந்தவர்களைப் போலவே கோலங்கொண்டு அந்நகரைவளைந்து அரசன் பசுக்களைக் கவர்ந்தனர்.

அதனையறிந்து சினந்த அரசன்கட்டளையாற் பெரும்படைசூழத் தேர் மீதேறிப் போர்செய்தற்கு நந்தட்டனோடு வந்த சீவகனைக்கண்டு பதுமுகன் "அடியேம் நின்திருவடிநிழலிலே உறையவேண்டிச் சச்சந்தன் மகனாகிய

ன்னைக் காணவந்தேம்" என்று எழுதியெய்த அம்புசென்று சீவகன்தேர்
்து மாறிவிழ்ந்தவளவிலே சீவகன், 'இக்கணையை இவ்வாறு விழும்படி எய்
வன் பதுமுகனே' என்றறிந்து போர்செய்யாதபடி தன்படையை விலக்கி
ற்ப, தோழர்சென்று அவனைவணங்கிப் பேரானந்தமுற்று அவனோடு நகரஞ்
சன்று அரசனைப் பணிந்தனர். அரசன், "இவர்கள் யார்?" என்று வினவி,
வகன், "என் உயிர்த்தோழர்" என்றான். பின்பு சீவகன் தனியேயிருந்து
ழரைநோக்கி, "என்னிலைமையை எங்குணர்ந்தீர்?" என்ன, அவர், "சச்சந்
தேவியாகிய விசயையைத் தண்டகாரணியத்துக்கண்டு தெரிந்து கொண்
ம்" என்றார். உடனே சீவகன் கண்ணீர்சொரிய, உரோமஞ்சிலிர்ப்ப,
மகாபாவியாகிய என்னைப்பெற்ற அடிகளும் உளரோ! உளரோ!" என்று
ன்முறைவினவி, அவரிருக்கின்றதிசை எங்கேயெங்கேயென்று கேட்டு,
த்திசையைநோக்கி விரையவணங்கி அங்கேசெல்லுங் கருத்துடையவனாகி
டைபெறுதற்பொருட்டுத் தடமித்தன்பாற் சென்றான்.

உடனே அவனும் தோழராற் சீவகன் வரலாறனைத்துந் தெரிந்து மகிழ்ந்து
டைகொடுக்க, சீவகன் கனகமாலையை அவ்விடத்தே வைத்துவிட்டு எல்லா
ரொடும் புறப்பட்டு வழிக்கொண்டு சென்றான்.

## [அ.—விமலையாரிலம்பகம்.]

சென்ற சீவகன் தோழரோடும் தண்டகாரணியமடைந்து தன்வரவு
நாக்கிக் கொண்டிருந்த விசயமாதேவியைத் தரிசித்து வணங்கிப் பேரானந்த
மற்றான். விசயையும் சீவகனை எடுத்துத்தழுவிப் பெரிதும் பாராட்டி அன்
றுவாளாயினள். இங்ஙனம் ஆறுதினங்கள் சென்றன. பின்பு விசயை, தோழ
ர் சிலரை வேறேயழைத்துச் சில உபாயங்களைக்கூறிப் பின்பு சீவகனை
ாக்கி, "நின்மாமனாகிய கோவிந்தனைக் கண்டு, அவனேவலாற் பகையை
வெல்லக்கடவை" என்ன, சீவகன், "உமதுகட்டளைப்படியே செய்வேன்"
ன்றுகூறி, ஆங்கிருந்த சில தவமகளிரோடும் விசயையைமுன்னதாகத் தன்
மாமன்நகரிற்கனுப்பிவிட்டுத் தான்குதிரையேறி எல்லாரோடும் ஏமாங்கதநாட்
டைச்சார்ந்து இராசமாபுரத்தின் அருகேயுள்ள ஒரு சோலையிற்றங்கி உண்டுறங்
கியபின், மற்றைநாட்காலையில் தோழரை அவ்விடத்தே வைத்துவிட்டுத் தான்
மகளிர் விரும்புதற்குரிய ஒருவடிவங்கொண்டு, அந்நகரத்து வீதியிற்சென்றான்.

அப்பொழுது, தான் விளையாடிய பந்தினொன்று எழும்பிச்சென்று
சீவகன்முன்னே விழ அதனை எடுத்தற்கு வந்த விமலையென்பவள், அவனைக்
கண்டு வேட்கையதிகரிக்கப்பெற்று நெஞ்சங்கலங்கி நாணமகன்று வருந்துவா
ளாயினள். சீவகனும், அவள் பேரழகை நோக்கி அதிகமோகங்கொண்டு அப்
பாற்செல்லமாட்டாமல் அவள் தந்தையாகிய சாகரதத்தனுடைய கடையிலே
வருந்தியிருந்தான்.

சாகரதத்தன் தன்னிடத்துப் பலநாளாக விலையாகாமலிருந்த சரக்கை
யெல்லாம் அப்பொழுதுவிற்று மிகவும்மகிழ்ச்சியடைந்து சீவகனைச்சந்தித்து

அவனைநோக்கி, "நம்பனே ! என்மனைவியாகிய கமலைபெற்ற விமலைக்கு சாதகஞ்செய்யவந்த சோதிடரைநோக்கி, 'என்பண்டம் விலையாகாமைக்கு காரணம்யாது ?' என்று வினவினேன்; அச்சோதிடருள் ஒருவன், 'நின்மகள் விமலைக்குரிய கணவன் நின்கடையில்வந்து தங்குவான் ; அப்பொழுது எல்லாம் விலையாகும்' என்றான். அப்படியே நீவந்து தங்கியவுடன் எல்லாப்பண்டமும் விலையாயின; ஆதலால், நீயே விமலைகணவன்" என்று கூறிச் சுமுகூர்த்தத்திலே அவனுக்கு விமலையை மணஞ்செய்வித்தான். சீவகன் அவளோடும் அவ்விடத்தே இரண்டுதினங்கள் தங்கி மற்றைநாட் காலையில் எழுந்து சோலையிலுள்ள தோழரையடைந்தனன்.

## [கூ.—சுரமஞ்சரியாரிலம்பகம்.]

அப்பொழுது தோழர், சீவகனது மணக்கோலங்கண்டு மகிழ்ந்து, "மணஞ்செய்ததையலின் பெயர் கூறுக" என்ன, சீவகன் "விமலை" என்றான். கேட்டதோழர் மிகவியப்புற்று; "இவனேகாமன்" என்று கூறினர். அப்பொழுது அங்ஙனங் கூறக்கேட்ட புத்திசேனன், சீவகனைநோக்கி, "இவர்களைப்போல யானும் நின்னை வியப்பேனல்லேன் ; இந்நகரத்தின்கண்ணே ஒருமடந்தை சுரமஞ்சரியென்றுள்ளாள் ; அவள், 'ஆடவர் தன்மனைக்கு அருகேசெல்லினும் உயிரை விடுவேனெனக் கோபியாநிற்பள் ; அவளை மயங்கச்செய்து இன்புறுவையாயின் நின்னைக் காமதிலகனென்பேன்" என்றுசொல்ல, சீவகன் புத்திசேனனைநோக்கி, "நீ கூறிய அவளைக்கொணர்ந்து நாளையே காமன்கோட்டத்தில் மகிழ்விப்பேன் ; நீ காமன்வடிவத்தைச் சார்ந்து மறைந்திரு" என்றுசொல்லி உடனே அவ்விடம்விட்டுச் சுரமஞ்சரியிடத்து மிகுந்த காதலுடையவனாய் ஒரு வயோதிகப் பிராமணவடிவங்கொண்டு தீண்டுன்றி மிகவும் மெலிவை புலப்படுத்திக்கொண்டு கண்டோரிரங்க நடந்துசென்று அவளது கன்னிமாடத்தின் வாயில்முன் போயினன்.

அப்பொழுது சீவகன் தன்முதுமையைக்கண்டு அச்சுறுத்தற்கஞ்சி அவ்வாயில்காக்கு மகளிரைநோக்கி, "பசியால் மிக வருந்துகின்றேன்" என்றான். அம்மகளிர் விரைந்து சுரமஞ்சரியை அடைந்து, "ஊதப்பறக்குந்தன்மையனாகவும் மிகுந்த பசியாளனாகவும் ஒரு விருத்தப்பிராமணன் நம் மனைவாயிலில் நிற்கின்றான் ; அவனிடத்து யாம் செய்வதறிந்திலேம் ; விரைந்து கூறுதி" என்ன, சுரமஞ்சரி, "அம்முப்புடையானைப்பார்ப்பின் விரதம் குன்றுவதன்று" என்றெண்ணி மாடத்தினின்றுமிறங்கி வந்து, அம்முதியோனைநோக்கி, "நீர்வந்தது என்னகாரியத்தைக்கருதி ?" என்றுவினவினள். அவன் "குமரியாட" என்றான். அவள், "அதனாற் பயனென்ன ?" என்று வினவ, முதியோன், "இம்மூப்புப்போம்" என்றான். சுரமஞ்சரிகேட்டு நகைத்து "இவர் பித்தர்போலும் ; இதுநிற்க ; இவர்பசியைத்தீர்ப்பது பேரறம்" என்றெண்ணி, அம்முதியோனைத் தன்மாடத்தே அழைத்துச்சென்று ஸ்நானஞ்செய்வித்துப் பொற்கலத்தைப் பரப்பி அறுசுவையடிசிலூட்டி முகவாசமீந்து

டிவின்மீதுள்ள பஞ்சணையிலே படுக்கச்செய்ய, அம்முதியோன் சிறிது ரம் உறங்குவான்போற்கிடந்து பின்னர் ஒருகீதத்தைப் பாடினான். கேட்ட ளிர் விம்மிதமுற்றனிர். சுரமஞ்சரி நாணிநகைத்துக் கேட்டுக்கொண்டு ரனள்.

அங்ஙனம்நின்ற சுரமஞ்சரி, "இப்பாட்டுச் சீவகன்பாட்டை ஒத்துளது" ன்று தோழியர்வியந்து சொல்லக்கேட்டு, "நாளைச்சென்று காமனைவழி ட்டு, 'இப்பாட்டையுடைய சீவகனை விரைவிற்றருக' என்று வேண்டிக் கொள்வேன்" என்றுகூறி, மற்றைநாளில் தன்னுயிர்த்தோழியுடனே அவ் வதியனையும் அழைத்துக்கொண்டு சகடமூர்ந்து, ஆடவர்காணாமற் காமன் காட்டத்தை அடைந்து, தான்பரவுகின்றது கேளாதபடி கூடவந்த அந்த னை ஆங்குள்ள ஓரறையில் வைத்துவிட்டுச் சென்று காமனைவணங்கி, மலிமார்பனே! எனக்குச் சீவகனை விரைவிற்றரின் மகரக்கொடியும், பும், கருப்புச்சிலையும், தேரும், ஊரும் தருவேன்" என்றுவேண்ட, ஒளித் ந்த புத்திசேனன், "சீவகனை நீ பெற்றாய்; இனி விரைவிற்செல்" றுசொல்ல, அதனை அவள் காமத்தெய்வம் வாய்விட்டுக் கூறியதாகவே ண்ணிப் பின்னும் பரவி மீண்டுவந்து, அறையிடத்தே உரிய வடிவுகொண்டு ற சீவகனை நெஞ்சுதுணுக்கெனக்கண்டு நாணி நைந்துநிற்ப, சீவகன் க்க காதலுடையனுகிச் சுரமஞ்சரியைத்தழுவி, "நின்னை நாளைமணஞ்செய் ன்" என்றுவிடுப்ப, அவள் தன்மனையையடைந்தனள்.

தோழர் அச்செய்தியைப் புத்திசேனனாற் றெரிந்துகொண்டு சீவகனைக் மதிலகன்' என்று புகழ்ந்தனர். நிகழ்ந்த அச்செய்தியைச் சுரமஞ் ரியின்தாயாகிய சுமதியும் தந்தையாகிய குபேரதத்தனுங்கேட்டு மகிழ்ந்து ற்றத்திற்கெல்லாமறிவித்துச் சீவகனுக்குச் சுரமஞ்சரியை மணஞ்செய்வித் னர். சீவகன் அவளோடும் அன்று அவ்விடத்தே தங்கியிருந்து, மற்றைநா ளெழுந்து தோழர்சூழத் தன்மனையை அடைந்து, தன் குதிரைமுதலியவற் றைநோக்கி தன்னையேநினைந்து அழுது புலம்பி உருகிக்கொண்டிருந்த ந்தையையும் கந்துக்கடனையுங்கண்டு வணங்கி அவர்கள் வருத்தத்தைப் பாக்கி மற்றையோரை மகிழ்வித்துக் காந்தருவதத்தையைக்கண்டு குண மாலையைத் தேற்றி மேல்முடியுங் காரியங்களைக் கந்துக்கடனுக்குக்கூறி விடைபெற்றுக் குதிரைகொள்ளும்வாணிகன்போல வேடம்பூண்டு தோழர் சூழ ஏமாங்கதநாட்டைக்கடந்துசென்றான்.

## [௧௦.—மண்மகளிலம்பகம்.]

அங்ஙனஞ்சென்ற சீவகன் விதையநாட்டையடைந்து நகரத்தார் எதிர் கொண்டுவிரும்பச் சென்று தன்மாமனாகிய கோவிந்தராசனை வணங்கினான். கோவிந்தராசன் மகிழ்ந்து விருந்துசெய்வித்துச் சீவகனுக்கு மேல் நடத்த வேண்டுவனவற்றை யெண்ணித் தன்மகனாகிய ஸ்ரீதத்தனுக்குச் சுபகாலத் திலே அரசளித்து எல்லாரோடுமிருக்கையில், தன்னை இராசமாபுரத்துக்கு

வரும்படிவேண்டித் தன் கருத்தறிதற்பொருட்டு வணக்கமுடையவன்போ தனக்குக் கட்டியங்காரனனுப்பிய வஞ்சகவோலையை விரிசிகனென்பவ படிப்பவறிந்து, "கட்டியங்காரனைக் கொல்லுதற்குரிய உபாயம் இதுவே வேறொன்றுமில்லை" என்று சீவகன்கூறக் கேட்டு, நால்வகைச் சேனை டும் புறப்பட்டு இராசமாபுரத்தின் பக்கத்தே வந்து தங்கினான். அப்பொழு கட்டியங்காரனுக்குத் துர்நிமித்தங்கள் நிகழ்ந்தன.

அவைநிகழ்ந்தபின், கோவிந்தன் கட்டியங்காரனைக் கபடமாக வருவிக் எண்ணித் திரிபன்றியந்திரமொன்று செய்வித்து, "இவ்யந்திரப்பன்றியை எய்துவீழ்த்தியவனே என்மகள் இலக்கணைக்குக் கணவனாவான்" என்றியம்பி சித்தஞ்செய்தான். அதுதெரிந்த கட்டியங்காரனும், பலதேயத்தரசரும் அவ் விடத்தே வந்துகூடி அந்தயந்திரத்தைநோக்கி வியப்புற்றனர். பின்பு இல கணையை விரும்பிய அரசிளங்குமரர் தனித்தனியேவந்து வில்லைவளைத் அம்புதொடுத்து அப்பன்றியை எய்துவீழ்த்தமாட்டாதவராகி மெலிவுடை னர். அப்பொழுது சீவகன் யானைமேற்கொண்டு வெளிப்பட, அவனை இ தானென்று கருதியிருந்த கட்டியங்காரன் கண்டு தனுக்குற்றுப் புலியை கண்ட மான்போலே அஞ்சிக் கலக்கமுற்றான். சீவகன் யானையினின் றிறங்கி அவ்யந்திரத்திலுள்ள சக்கரத்தின்மேல் ஏறிநின்று வில்லைவளைத் அம்புதொடுத்து அப்பன்றியை வீழ்த்தினன்.

அப்பொழுது கோவிந்தன் கட்டியங்காரனுக்கும் மற்றையோருக்கு சீவகனை இன்னானென்று விளங்கக் கூறினன். அதன்பின்பு ஆகாயத்திட தே ஓரியக்கன்றோன்றி, "சீவகனாகியசிங்கம் கட்டியங்காரனாகிய கரியினை ரை விழுங்கும்" என்று கூறக்கேட்டுக் கட்டியங்காரன் மிகச்சினந்து சீ கனைநோக்கி, "நினக்கு ஒருபொழுதும் அஞ்சுவேனல்லேன்; எனது ஆ றலை நின்தந்தையறிவன்; நீ அறியாய்; நின்னையும் என்னைக் கபடமாக வரு வித்துக் கொல்லத்துணிந்த நின்மாமனையும் வெல்லும் விருப்புடையேன் போர்செய்தற்கு எழுக" என்றுசொல்லித் தன்மக்கள் நூற்றுவரோடும் ம றை அரசர்களோடுங்கூடி யுத்தசன்னத்தனாகி, சீவகனும் தோழரோடும் தம் மாரோடும் மற்றையரசரோடும் புறப்பட, அவ்விருதிறத்தார் சேனையும் எ ர்த்துநின்று போர்செய்தன; சீவகன்படைவீரராற் கட்டியங்காரன்படைவி ரித் சிலர் மாய்வுற்றனர்; சிலர் தோற்றோடினர். பின்பு சீவகன் கட்டிய காரன் புதல்வர் நூற்றுவரையும், பதுமவியூகம்வகுத்து அதனுள்ளேயிருந் அவனையுங் கொன்றுவிளங்கினான். எல்லாரும் புகழ்ந்தனர். விசயைகேட் மகிழ்ந்தனள்.

## [கக.—பூமகளிலம்பகம்.]

பின்பு சீவகன் இராசமாபுரமடைந்து மாளிகைபுகுந்து, தன்னைக் கண்டு நடுங்கிய கட்டியங்காரன் பரிசனங்களுக்கு அபயமளித்து வேண்டும்பொ ருள்களும் விருத்தியுமுதவி அவர்விருப்பின்படி உரியவிடங்களுக்குப் போகச் செய்து பின்பு எல்லாவிடங்களையும் கண்ணுற்று முத்திரைவைத்துக் காவ

டு, யுத்தவீரர்களை இளைப்பாறச்செய்து மகிழ்வித்து, வேத்தவைசார்ந்து காலத்திலே சிங்காதனத்தில் வீற்றிருந்து மணிமுடிசூடி, கட்டியங்கார ல துன்பமுற்ற யாவரையும் இன்பமுறுவித்து நீதிநெறியை நடாத்தி அரசி றுவானாயினன்.

## [கஉ.—இலக்கணையாரிலம்பகம்.]

பின்பு அவன் தன்னருகிலுள்ளாரை நோக்கி, "பதுமைமுதலிய தேவி ர அழைத்துவருவீர்" என்ன, அவர் உடனே ஆங்காங்குச் சென்று அவர் அழைத்துவந்தார். வந்தமங்கையர் சீவகனைத் தொழுதுவணங்கி, அவ அங்கீகரிக்கப்பட்டுப் பெருமகிழ்ச்சியோடிருந்தனர்.

அப்பால் கோவிந்தராசன் இலக்கணையைச் சீவகனுக்கு மணஞ்செய்விக் கருதிக் கணிதர்களால் விவாகமுகூர்த்தம் வரையறைசெய்து முரசறை நகரையலங்கரிப்பித்து, குறித்த முகூர்த்தத்தில் விதிப்படி சீவகனுக்கு க்கணையை மணஞ்செய்வித்தான். பின்பு சீவகன் எல்லாருங்கண்டு மகி படி நகர்வலமாகப் பவனிவந்து ஆலயமடைந்து அருகக்கடவுளை வலஞ் ந்து ஏத்தித் தொழுது அக்கடவுளுக்கு நூறு ஊர்கள் முதலியவற்றைச் ப்பித்துத் தன்மாளிகையடைந்து சிங்காதனத்திருந்து செங்கோல் செலு அரசுபுரிவானாயினன்.

அங்ஙனம் அரசுபுரிகின்ற சீவகன் தன்னை வருந்திவளர்த்த கந்துக்கட க்கு அதற்குமுன்னில்லாத அரசுரிமையையும் சுநந்தைக்குத் தேவிபட்டத் தயும் கொடுத்தான்; நந்தட்டனை இளவரசாக்கினான்; நபுலவிபுலர்க்குக் குலமன்னர்மகளிரை மணஞ்செய்வித்து நாடுகளையும் நல்கினான்; தன் தாழர்க்கு அரசையும், ஏறுதிமோதிரம் முதலியவற்றையும் ஈந்தான்; தன் மித்தம் வருந்திய பிறர்க்கு அமைச்சரைக்கொண்டு நிதியையும் நாட்டையும் காடுப்பித்தான்; தன்னை வருந்திவளர்த்த செவிலித்தாயர்க்கு நாடோறும் யிரம்பொன் இறை தண்டுதற்குரிய ஐந்துகிராமங்களைக்கொடுத்தான்; மாம கிய கோவிந்தனுக்குக் கட்டியங்காரனுடைய பொருள்களையெல்லாம் உதவி ன்; தனக்குப் பேருதவிபுரிந்த சுதஞ்சணனுக்குக் கோயில்சமைப்பித்து வன்வடிவைப் பொன்னாலியற்றி ஒருரையும் நிலைபெறுத்தி அவன் சரிதத் த ஒருநாடகமாகச்செய்து நடத்தினான். இனிப் பெறுதார் யாரென்று சிந் த்து, இளமைப்பருவத்தே தான் விளையாடிக்கொண்டிருந்த ஓர் ஆலமரத் துக்கு மாலையணிந்து பீடஞ்சேர்த்தி, அதற்குப் புண்ணியஞ்சேரும்படி, சுக்கள்மேய்ந்து அதன்நிழலில் உறங்கும்வண்ணம் ஐந்நூறை அதற்கு இறை லியாகவிட்டான். இன்னும் இவ்வாறு செய்யவேண்டுவனவெல்லாம் செய்து முடித்துத் தேவிமாரெண்மரோடுங் கூடி மகிழ்வுற்றுச் செங்கோல் செலுத்தி வருநாளில் உலகம் செழிப்புற்றது; யாவரும் இன்புற்றனர்; எல்லாவுயிர்க ளும் மகிழ்வடைந்தன.

## [கங.—முத்தியிலம்பகம்.]

அப்படிநிகழும்பொழுது, ஒருநாள் விசயை தவப்பள்ளியினின்றும் க்குத் துணையாகப்போந்த தவமகளிர்க்குக் கைம்மாறில்லையேயென்றெண் அருகக்கடவுளுக்குக் கோயில்சமைப்பித்துப் பூசைசெய்து அப்பூசை பயனையெல்லாம் அவர்களுக்குக் கொடுத்தனள்; முன்பு சண்பகமாலையே வந்து தன்னிடரைத்தீர்த்துத் தன்னைத் தாபதப்பள்ளியிலே சேர்த்துப் காத்த தெய்வத்திற்கு அதுதங்கும் புறங்காட்டிலே கோயில்சமைப்பித்த தன்னை யெடுத்துப்போந்த மயிற்பொறியைத் தான் எப்பொழுதும் கா படி தானுறையுமாடத்தே எழுதுவித்தாள்; சீவகன் பிறந்தவிடம் டாகக் கிடவாதபடி சாலையாக்கி அவ்விடத்து ஐந்நூற்றைந்து பிள்ளைகளு நாடோறும் பாலும் அன்னமும் உண்பிக்கும்படி செய்வித்தாள்; சுநந்தை உபசாரமொழிகூறி மேம்பாடுறுவித்தாள்; தன்னைவணங்கிய காந்தரு தைமுதலிய எண்மரையும் எடுத்துத்தழுவி, "உலகாளுஞ்சிறுவரைப் கடவீர்" என்று பணித்தாள்.

இங்ஙனம் தான் செய்யவேண்டியவற்றைச் செய்துமுடித்துப் பின் சீவகனையழைத்து அருகேயிருத்தி அவனுக்குத் தருமோபதேசஞ்செய்து துறக்கவெண்ணியதைத் தெரிவித்து உடன்பாடுபெற்றுச் சிவிகையேறிச் தையோடும், துறக்கவிரும்பிய மற்றைமகளிரோடும் சுமீபத்துள்ள ஒரு பள்ளியைச்சார்ந்து, ஆங்குத் தவஞ்செய்துகொண்டிருக்கும் பம்மையென் னைத்தொழுது, "அடிகளே! எம்மையெல்லாம் பிறவிக்கடலினின்றும் க யேற்றுவீர்" என்று பிரார்த்தித்து, அவள்கூறிய அறமொழிகேட்டுத் தீ பெற்று விதிப்படிதுறந்து அவ்விடத்தே தவஞ்செய்துகொண்டிருந்தாள்.

அவள் அவ்வாறிருக்க, ஒருநாள் சீவகன், அத் தவப்பள்ளியை சார்ந்து விசயை சுநந்தை இருவரையுந் தரிசித்துவந்து தேவிமாரெண் ரோடும் நீர்விளையாட்டை நிகழ்த்தி இளவேனில்முதலிய ஒவ்வொருபருவத் லும் அவர்களோடும் இன்பம் நுகர்ந்து செல்லாநிற்கையில், தேவியரெண்மரு கருப்பமுற்றுத் தனித்தனியே ஒவ்வொரு புத்திரரைப் பெற்றார். காந்தரு தத்தை, குணமாலை, பதுமை, கேமசரி, கனகமாலை, விமலை, சுரமஞ்ச இலக்கணை யென்னும் தேவியர்புதல்வரெண்மருக்கும் முறையே சச்சந்த சுதஞ்சணன், தரணி, கந்துக்கடன், விசயன், தத்தன், பரதன், கோவிந் னென்று பெயர்களிடப்பட்டன. அப்புதல்வர் வளர்வுற்று, ஐந்தாவது பி யத்தில் வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று, முறையே கலைகள்கற்றுப் படை கலம் பயின்று ஊர்திகளூர்ந்து மேன்மையடைந்தார். அப்பொழுது சீவ னுக்கு நாற்பத்தைந்தாவது பிராயஞ்சென்றது.

பின்னர் ஒருநாள் மல்லிகைமாலையென்பவள்வந்து சீவகனை வணங்கி "அரசே! சோலை நிறையப்பூத்து அழகெய்தியது; அதனைக் கண்டருள்க" என்ன, சீவகன் தேவியர்சூழ அச்சோலையையடைந்து எல்லாவளங்களையு

ன் கண்டு தேவியர்க்குக்காட்டி ஒருபலாமரத்தின் நிழலையடைந்து ஒருபக்
திருந்தான். அப்பொழுது அவ்விடத்தே ஓராண்குரங்கு தன்னோடுபிணங்
தன்காதன்மந்தியை மகிழ்விக்கும்பொருட்டுப் பலாப்பழமொன்றையெ
துக் கீறிச் சுளைகளை அதற்குக்கொடாநிற்கையில், அச் சோலைகாப்பானு
ஒருவன்வந்து அக் கனியைக்கவர்ந்து அக்கடுவனையும் மந்தியையும் ஓட்
த் தான் உண்டு மகிழ்ந்தான். அதனை ஆங்கிருந்த சீவகன்கண்டு செல்வத்
மிகவும் அருவருப்புற்று, "கைப்பழமிழந்தமந்தி அரசையிழந்த கட்டியங்
லையொத்தது; இச் சிலதன், அக் கட்டியங்காரனைத் துரந்து அரசை
பற்றிய என்னையொத்தனன். வலியான் கவர்ந்து நுகர்தற்குரிய இச்செல்
ால் அடையும்பயனென்னை?" என்றெண்ணித் துறக்குஞ்சிந்தையனாகித்
மாளிகையடைந்து ஸ்நானஞ்செய்து அறுசுவையடிசிலுண்டு முகவாசங்
ண்டு தேவிமார்களோடும் கோயிலைச்சார்ந்து அருகக்கடவுளைவணங்கித்
த்த வலமாகவந்தான்.

வந்தவன் அவ்விடத்து அசோகமரத்தின் கீழே பளிக்குக்கல்மேலே
ணரிருவர் இருப்பக்கண்டு அவரைத் தரிசித்து வணங்கி வாழ்த்தி அவரை
க்கி, "அடிகளே! பிறப்பினையொழிக்கும் வழியறியாதேன் பலபிறப்புக்க
ளும் செய்துகொண்ட தீவினைகெடும்படி தவஞ்செய்து ஞானத்தையடை
மாறு அருளுமின்" என்று பிரார்த்திக்க, அவருள் இரத்தினப்பிரபையென்
ர், "அரசனே! கேட்பாய்" என்று, தவத்தாற் பெறுகின்ற மக்கள்யாக்
கையையும், அந்தயாக்கை நூறியாண்டும் நிலைபெற்றிராது கருப்பமுத
க அழிகின்ற அழிவையும், நரககதி விலங்குகதி மக்கட்கதி தேவகதி
என்கின்ற நாற்கதித்துன்பத்தையும், துணியப்படும் பொருளையும், அப்
பொருளைத் துணியுந்துணிவையும், சீலத்தையும், தானத்தையும், அச்சீலத்தா
ம் தானத்தாலும் பெறப்படும் பயன்களையும், வீட்டிலக்கணத்தையும் விள
விரித்துக்கூறினார். யாவற்றையும் சீவகன் விரும்பிக்கேட்டு, "சுவாமீ!
டியேனுடைய முற்பிறப்பையும், அப் பிறப்பிற்செய்த பாவத்தையும் அரு
ச்செய்க" என்ன, அவர் கூறுவாராயினர்:—

"தாதகியென்பதொருநாட்டிற் பூமிமாதிலகமென்னும் நகரில் அரசன் பவ
ணமாதேவனென்பான்; அவன்மனைவி சயமதியென்பாள்; அவர் புத்திரன்
சோதரனென்பான். அவனுக்குத் தந்தைதாயர் இலக்கணமமைந்த மகளி
ர் மணஞ்செய்விக்க, அவ்வசோதரன் அம்மனைவிகளோடும் இன்புற்றொழுகு
நாட்களிலே, ஒருநாள் அவன் அம்மனைவியரோடு நீர்விளையாடுதற்கு ஒரு
தடாகத்தை அணுகியபொழுது, அவன்மனைவியர் ஆங்குள்ள தாமரைமல
ரில் ஒளித்திருக்கும் அன்னக்குஞ்சுகளைக்கண்டு, 'இவற்றைப் பிடிப்பித்துத்
தருக' என்று அவனைவேண்ட, அசோதரன் தன்னருகேநின்ற ஏவலாளனொ
ருவனைக்கொண்டு அவற்றுளொன்றைப் பிடிப்பித்து அம்மாதர்களுக்குக்கொடு
த்தனன். அவர்கள் அதற்குப் பாலூட்டித் தமதுமார்போடணைத்துப் பாதுகா
த்துவந்தார். இதனை ஒருநாள் பவணமாதேவன் கண்டு நடுநடுங்கி அசோத

ரனுல் விளைந்தமை தெரிந்து சினந்து அவனை வருவித்து நேரேயிருத்
பலவரம்போதித்து, 'மைந்தனே! பறவைகளையும், மிருகங்களையும் தம்
யினின்றும் பிரித்துக் காவல்செய்து வைத்தோர், மறுமையில் தாமும்
கிளையினின்றும் நீங்கிப் பிறரால் காவல்செய்யப்படுவர்' என்றுகூற, அதே
ரன்கேட்டு மிகவும் அஞ்சி, அவ்வன்னப்பார்ப்பைத் தன்மனைவியரிடத்தில
றும் விடுவித்து, அன்று பிடித்ததடாகத்தே போகவிட்டுத் தந்தையைப்ப
ந்து, 'அடியேன் துறந்து தவஞ்செய்வல்' என்ன, அரசன், 'மைந்தனே
உலகைக்காத்துப் பின்புதுறவினையடைதி' என்று வற்புறுத்திக்கூற, அதுக்
அவன் மனங்கொள்ளானுகித் தந்தையை உடன்படுவித்து விடைபெற்
துறவிற்சென்றான். அவ்வசோதரன் நீயே" என்று கூறி மேற்செய்தி கூறி
சாரணர், "அங்ஙனம் துறவிற்சென்றநீ தவஞ்செய்து மறுமையில் ஸகஸ்
மென்னும் கற்பத்து இந்திரனுகி அரசுபுரிந்து இங்கே அவதரித்தாய்;
பார்ப்பைக் கிளையினின்றும் பிரித்துச் சிறைவைத்தமையால் நீயும்
யினின்றும் பிரிந்து சிறைகொள்ளப் பட்டாய்" என்று கூறக்கேட்டு அ
பதைபதைத்துத் துறக்குஞ்சிந்தையனுகிச் சீவகன் அவரைவணங்கித்
தான். அப்பொழுது அச்சாரணரிருவரும் எழுந்து விசும்பாறுகத் தாம்
த்தவிடஞ்சென்றார்.

உடனே சீவகன் தேவிமாரோடும் தன்மாளிகையடைந்து தன் கருத்
யாவருமறியக்கூறி நந்தட்டனையழைத்து, "நீ இவ்வுலகாள்வாய்; நான்
பேன்" என்ன, அவன், "இவ்வற்ப வாழ்வைவேண்டேன்; நின்திரு
யை வழிபட்டுவாழும் வாழ்வன்றே அடியேன் வேண்டுவது" என்று
பின்பு தன் புதல்வன் சச்சந்தனையழைத்து அவனுக்கு இராசதருமங்கள்
வற்றையுங்கூறி மணிமுடிசூட்டி அவனை அரசாக்கி, தம்பிமார்புதல்வருக்கு
தோழர் புதல்வருக்கும் உரிய சிறப்புக்களியற்றி, தான் துறத்தல்கேட்டுப்
வாற்றுது, "யாமும் நின்னோடு துறப்போம்" என்றுகூறிய தேவிமாரெண்ம
யும் விசயையபாற் சேர்த்துத் துறப்பித்து, தன்பிரிவையென்னவித் தேயத்
ரும், நகரத்தாரும், மற்றையாரும் விம்மிவிம்மிப் பிரலாபித்தழவும் த
ஒருவரையும் நோக்கானுகித் தேவர்கள் தாங்கிச்செல்லுஞ் சிவிகையூர்ந்து ச
சரணமடைந்து ஸ்ரீவர்த்தமானரைத் தரிசித்துச் சுதன்மரென்னும் கணதர
விதிப்படியே துறந்து விபுலகிரியில் தவஞ்செய்து கருமக்ஷயம்பண்ணி யாவரு
குந் தருமோபதேசஞ்செய்து எல்லாவுலகத்திற்கும் உச்சியிலுள்ளதென்றுகூற
படும் ஸித்தக்ஷேத்திரத்தையடைந்து வீடுபெற்றான்.

பின்பு அவன்மேனி அக்கினியிந்திரனுற் கற்பூரவிநாசம்போலே மறை
ந்தபின்பு, எல்லாவுலகத்தாருங்கூடிப் பஞ்சகல்யாணத்துள் ஒன்றாகிய ப
நிர்வாணமென்னும் கல்யாணத்தை விதிப்படி செய்தார்கள்.

தேவிமாரெண்மரும் தவஞ்செய்து மறுமையில் இந்திரராகி இன்ப
றனர். நந்தட்டனும், தோழரும் தவஞ்செய்து மறுமையில் தேவராகி
சுவர்க்கம்பெற்றனர்.

சீவகன்சரித்திரச்சுருக்கம்முற்றிற்று.

---

### ஸ்ரீபுராணத்தில், உ௪-ஆம் தீர்த்தங்கரராகிய

## ஸ்ரீவர்த்தமானர் புராணத்துள்ள

# சீவகசரித்திரம்.

மற்றொருநாள், சிரேணிகமகாராஜன், ஸமவசரணமடைந்து, அசோகவனத்துள் அசோகவிருக்ஷமூலத்து ருஜுவிபுலமதிஞானஸஹிதராகித் தியானாரூடராகியிருந்த ஜீவந்தரமுனிகளைக் கண்டு அத்தியந்தம் (க) விஸ்மிதனாகி ஸுதர்மகணதரரை அடைந்து, "பகவானே ! (உ) ஈதிருசலக்ஷணஸஹிதராகிய இந்தத்தபோதனர் யார் ?" என்றுவினவ, அவரும் அருளிச்செய்வார்:

"ஜம்பூத்வீப பரதக்ஷேத்திர ஹேமாங்கத (ங) விஷய ராஜமஹாபுரத்து ராஜா, ஸத்தியந்தரன்; தேவி, விஜயையென்பாள். இவன் மந்திரி, காஷ்டாங்காரிகன்; புரோகிதன், ருத்திரதத்தனென்பான். ராஜா விஜயாதேவியுடன் அனவரதம் போகாபிலாஷியாகையினால், மந்திரிபக்கலே ராஜ்யகாரிய நிர்வாஹத்தினை நியோகித்து இஷ்டவிஷய காமபோகங்களை அநுபவித்துச் செல்லாநின்ற நாளகத்து ஒருநாள், விஜயை, ஓர் அசோகவிருக்ஷத்தினைப் (ச) பரசுவினாற் சேதிக்க வீழ்ந்தபின், அதன்மூலத்தே ஒரு பாலாசோகம் அஷ்டமாலாலங்கிருதமாகித் தோற்றவும் ஸ்வப்னங்கண்டு இராஜாவுக்கு ஸ்வப்னத்தை நிவேதிப்ப, இராஜாவும் சொல்லுவான்:—'எட்டுக்கல்யாணத்தை உடையன்றி எனக்குப் பின் ஸகலபுவன ராஜ்ய யோக்யனாயினனொரு புத்திரனைப் பெறுதி" என்றனன். அதன்பின், சுவர்க்கவாஸியாயினனொருதேவன் ஸ்வஜீவிதாந்தத்து அவதரித்து விஜயாதேவி கருப்பத்தை யடைந்தனன். அந்நகரத்துக் கந்தோத்கடனென்பான் ஒரு வைசியன், மனோகரோத்தியானத்து எழுந்தருளியிருந்த சீலகுப்தரென்னுந் தபோதனரை நமஸ்கரித்து, 'பகவானே ! எனக்கு இதற்குமுன் ஆயுஷ்யஹீனராகிய புத்திரரேஜனித்தனர் ; இனிஆயுஷ்மானாகிய புத்திரன் உளனாகுவனோ ?' என்றுவினவ, முனிவரரும் (ரு) அவதிஞானத்தாற்பார்த்து, 'இதன்மேல், ஆயுஷ்யமான்களாயினர் பலபுத்திரரையும்பெறுவை ; அதற்கு உபாயமும் ; பிறந்து மிருதனாகிய புத்திரனை ஸ்மசானபூமியுள் ஸம்ஸ்கரித்தற்காகச் சென்றவிடத்து அங்கே ஒருபிள்ளையைப்பெறுவை. அவனும் ஸகலபுவனராஜாவாகித் தபப்பிரபாவத்தால் முக்தியடைகுவன்', என்று அவர் அருளிச்செய்யக் கேட்டுப்போயினான். ஒரு

---

(க) விஸ்மிதம் - ஆச்சரியம்.

(உ) ஈதிருசலக்ஷணஸஹிதர் - இத்தன்மையதாகிய இலக்கணத்தோடு கூடியவர்.

(ங) விஷயம் - நாடு.

(ச) பரசு - கோடாலி.

(ரு) அவதிஞானம் - முற்பிறப்பை யறியுமறிவு.

(க) யக்ஷிதேவதை (உ) சரமதேகதரனொருவன் விசயாதேவிக்குப் புத்திரனாகுமென நினைத்து அவளுக்கு உபகாரஞ்செய்வேனென்று ராஜகிருகத்தில் ஒரு கருடயந்திரத்திலே ஸந்நிஹிதமாய்நின்றனள். மற்றொருநாள், (ங) பிரபாதசமயத்து, ருத்திரதத்தன், ராஜகிருகமடைந்து அலங்காரவல்லியாகிய தேவியைக் கண்டு, 'தேவி! ஸ்வாமியெங்கே யெழுந்தருளியிருக்கின்றனர்?' என்றுகேட்ப, அவளும், 'இப்போது பள்ளிகொண்டருளுகின்றனராதலின் காணமுடியாது' என்றுசொல்லக்கேட்டு, அவ்வசனம் துர்நிமித்தமென்று நிச்சயித்து, மீண்டுபோகிக் காஷ்டாங்காரிகனையடைந்து இரகஸ்யமாகச் சொல்லுவான்: 'உனக்குச் சகலபுவனராஜ்யமுண்டாகுமாதலின், அரசனை லோகாந்தரமடைவிப்பாயாக' என்றுசொல்லக் கேட்ட காஷ்டாங்காரிகன் தனதுகரங்களால் (ச) சிரவணங்களைப் புதைத்து, 'முன்பு (ரு) காஷ்டபாரவாகியாகிய எனக்கு ராஜ்யபாரம்பிரஸாதித்த ஸ்வாமிக்கு (சா) கிருதக்ன துஷ்கருமத்தைச் செய்கவென்று சொல்லிப்பிழைசெய்தனையே' என, புரோகிதனும், 'தத்புத்திரனாலே உனக்குமரணம் அவசியம் (எ) பாவியாகுமாதலின் உனக்கு உறுவதுசெய்வாயாக' என்றுசொல்லிப்போயினன். பின் ருத்திரதத்தனும் மூன்றுநாள், அஸாத்திய வியாதிபீடிதனாகி மரணமடைந்து நரகம்புக்கனன். அதற்பின், காஷ்டாங்காரிகன் தனதுமரணபயத்தால் ராஜாவுக்கு மரணத்தைப்பண்ணுவேனென நிச்சயித்துப் பகுவித சம்மானங்களால் இரண்டாயிரம் ராஜாக்களை ஸ்வவசமாக்கி அவர்களோடுங்கூட ராஜபவனத்தை வளைய, ராஜாவும் அதனைக்கேட்டுத் தேவியைக் கருடயந்திரத்தின்மேற்போக விட்டு யுத்தஸன்னத்தனாகிப்புறப்பட்டு யுத்தம்பண்ணப் (அ)பராஜயமெய்திய காஷ்டாங்காரிகன், காராங்காரகனென்னுந் தன் புத்திரனொடுங் கூடவந்து யுத்தம்பண்ணி ராஜாவை லோகாந்தரமடைவித்து இராஜ்யத்தை அடைந்தனன். விஜயமாதேவியும் கருடயந்திரத்தின்மேற் போகி யக்ஷியின்பிரபாவத்தினாற் சர்ப்பாதையின்றியே ஸ்மசானப்பிரதேசமடைந்து ஸர்வாங்கோபாங்கஸுந்தரனாகிச் சந்திராதித்தரை அதிசயிக்குங் காந்திதீப்தியினையுடையனாகிய புத்திரனைப் பயந்தபின்,யக்ஷிதேவதை அந்நியத்துவாதி ஸம்ஸாரஸ்வபாவவர்ணனாரூபகமாக, 'சரமதேகியாகிய நின்புத்திரன் ஸகலபுவனராஜ்யந் தாங்கித் தன் பிரபாவத்தால் முத்திபதமடைகுவன்' என்று தேவிக்குச்சொல்லித் [illegible] காலயோக்கியமாகிய தேவியதுதுக்கங்களை நீக்கியிருந்தபின், கந்தோத்கடசெட்டி மிருதனாகியபுத்திரனைக் கொடுவந்து தத்பிரதேசத்தேவைத்துத் தத்ஸமீபத்தே பிள்ளையது ஸ்வரத்தினைக்கேட்டு, 'ஜீவ' என்னும் ஆசிர்வாதஞ்சொல்லி

---

(க) யக்ஷிதேவதை - அருகனுக்குப் பணிசெய்வதொரு தெய்வம்.

(உ) சரமதேகதரன் - முடிவான தேகத்தைத் தரித்தவன்.

(ங) பிரபாதசமயம் - காலை.

(ச) சிரவணம் - காது.

(ரு) காஷ்டபாரவாகி - விறகுக்கட்டைச்சுமப்பவன்.

(சா) கிருதக்ன துஷ்கருமம் - இத்தன்மையதாய தீத்தொழில்.

(எ) பாவி - வரப்போவது.

(அ) பராஜயம் - தோல்வி.

பிள்ளையையெடுப்ப, தேவியும் அதனைக்கண்டு மிகவும் சந்தோஷித்த பின்னை, பிள்ளையை அப்பிரகாசமாகக் கொண்டுபோகி, ஸுநந்தை யென்னுந் தன்பாரியையைக் குறுகி, 'ஸஜீவனாகிய பிள்ளையைப் பரீக்ஷியாது தந்தனே' என்று (க) கிருத்திரிமகோபத்தாற் கொடுப்ப, அவளும் ஆனந்தத்துடன் வாங்கிவளர்ப்ப, வளர்கின்றபிள்ளைக்குச் சீவகனென்னும் நாமகிரணம்பண்ணியதற்பின், ஸுநந்தை நந்தாட்டியனென்னும் புத்திரனைப் பெற்றனள். விசயமாதேவியும் யக்ஷிதேவியுடன் கூடத் கருடயந்திரத்தாற்போகி ஒரு தாபஸாச்ரமத்தே வஸித்தனள். ஸத்தியந்தரமகாராஜனுக்குத் தேவிமார் பாமரதியும், அநங்கபதாகையுமென்பார் இருவருளர். அவர்கட்குப் புத்திரர் மதுரனும் வகுளனு மென்பார். அந்நகரத்து விசயனென்னும் சேனாபதிக்கும் ஜயவதியென்னும்பாரியைக்கும் புத்திரன் தேவஸேனன்; சாகரஸேனனென்னும் புரோகிதனுக்கும் ஸ்ரீமதிக்கும் புத்திரன் புத்திஷேணன். தனபாலசிரேஷ்டிக்கும் ஸ்ரீதேவிக்கும் புத்திரன் வரதத்தன். மதிஸாகரமந்திரிக்கும் அநுபமைக்கும் புத்திரன் மதுமுகன். (உ) ஸ்ராவகதருமஸகிதராகிய மதுராதிகள் அறுவரும் ஜீவந்தரனுடன் வளர்ந்து மித்திரராகிச் செல்கின்றநாளகத்து ஒருநாள், நகரபாஹ்யோத்தியானத்து மித்திரருடன் (ங)வனக்கிரீடைபண்ணுகின்ற குமாரனைக்குறுகிப் (ச) பஸ்மகவியாதி பீடிதனாகித் தாபஸவேஷதாரியாயினான் ஒருவன், 'குமாரனே! ஸமீபமாக இவ்விடத்து நகரமுண்டோ?' என்றனன். குமாரனும், முறுவல்கொண்ட முகத்தனாகி, 'பாலராகிய எங்களைக் கண்டால் நகரம் (ரு) ஆஸந்நமேயென்பது (சு) அநுபதேசமாகவே பிரஸித்தமாக இருப்ப, இவ்வண்ணங்கேட்கின்றீர்; மோகவியாகுலசித்தத்தினீர்போலும்' என்று குமாரன்சொன்ன (எ) பரிணத வசனங்களைக்கேட்டு, இராஜ்யார்ஹமாகிய சரீரகதசுபலக்ஷணாதிகளைக் கண்டு இவன் இராசகுமாரனெனநிச்சயித்து (அ) க்ஷுத்பீடாபரவசனாகிய தாபஸன் போஜனார்த்தியாயினன். குமாரனும் அதனை (கூ) ஸம்வதித்து அவனுடனேபோகி ஸ்வபவநமடைந்து போஜனஸமயத்துக் குமாரன் ஸ்வஹஸ்தத்தால் தாபஸனுக்கு ஆஹாரங்கொடுப்பத் ததாஹாரபுக்திக்ஷணத்திலே ரோகபீடையெல்லாம் போயின. அதற்பின், கந்தோத்கடஸமீபமடைந்து, 'மஹாவியாதிவிநாசகாரணனாகி மஹோபகாரியாகிய குமாரனுக்கு யான் சாஸ்திராப்பியாஸம் பண்ணப் பெறுவேனாகவேண்டும்' என்றுசொல்ல, கந்தோத்கடனும், 'சஸ்திரகுருவாயினாற்கு நமஸ்காராதி விநயங்கள் செய்யவேண்டுமே; நீர் அந்யலிங்கிகளாகின்றீராதலின், அது ஸம்பவிப்பதன்றுபோலும்' என்றுசொல்ல, தாபஸனும்சொல்லுவான்: 'ஸிஹ்மம

(க) கிருத்திரிமம்-இயற்கையல்லாதது.
(உ) ஸ்ராவகதருமம்-இல்லறமுடைமை.
(ங) வனக்கிரீடை-பொழில்விளையாட்டு.
(ச) பஸ்மகவியாதி-பெரும்பசியையுண்டுபண்ணும் யானைத்தீயென்னும் நோய்.
(ரு) ஆஸந்நம்- ஸமீபத்திலுள்ளது.
(சு) அநுபதேசம் - சொல்லாமை.
(எ) பரிணதவசனம் - பக்குவமான மொழி.
(அ) க்ஷுத்பீடை - பசித்துன்பம்.
(கூ) ஸம்வதித்து -ஒத்துச்சொல்லி.

172. (க) வலஞ்சுழி-நந்தியாவட்டமலர். (உ) "புனர்சுழி யலைத்துப் பொருந்திய கொப்பூழ்" பெருங்: உ: கரு, சுஅ.

173. (ச) இந்திரரெனப்பாடங் கொண்டு தேவரென்று பொருள் கொள்வர் வேறுரையாசிரியர்; "இந்திர ரமிழ்த மியைவ தாயினும்" (புறநா. கஅஉ); "இந்திரகுமரரின் யாங்காண் குவமோ" சிலப். கூ: களங.

174. (க) வெருட்டி - வெருட்டுந் துடைகள். (உகூ) குறங்குசெறி-ஓராபரணம்; "குறங்கு செறி திரள்குறங்கினிற்செறித்து" (சிலப். சு: அகூ); "கிழன்மணிமகரவாய் செறித்து" ஆனைக்காப். அகிலாண்ட. ருங.

176. (ங) தேனெய்: "தேனெய் பாலொடுகலந்தன" சூளா. கல்யாண. ருச.

178. (க) அகவிதழ் - உள்ளிதழ்.

179. (உரை) தம்பால்வந்து மீளும் பெரியோர்களுடன் ஏழடியளவு செல்வோர், ஸப்த பயத்தினின்று நீங்கி, ஸப்த பரமஸ்தானத்தைப் பெறுவர் ... துசைன நூற்கொள்கை; "எழுடியூக்கிடைம்துசெலா" என்பர் பின்னும்; 1384.

180. (ங) கண்விடுத்தல், சிற்பிகளாற்செய்யப்படும் ஒருவகைக்கிரியை.

181. (க) "யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா, பொருளறிவாரா வாயினுந் தந்தையர்க், கருள்வந்தனவாற் புதல்வர் தம்மழலை" புறநா. ௯௨.

183. (உ-ங) "தெய்வத்தாமரைத் திருமகள்" (பெருங். க: ஙச, ருகூ.) ஹிமவான், மஹாஹிமவான், நிஷதம், நீலி, ருக்மி, சிகரியென மலைகள் ஆறு உள்வென்பதும் அவற்றில் முறையே பத்மை, மஹாபத்மை, திங்கச்சை, கேசரி, புண்டரீகை, மஹாபுண்டரீகை யென ஆறுபொய்கைகளுள்ளனவென்பதும், அப்பொய்கைகளில் முறையே ஸ்ரீ, ஹ்ரீ, த்ருதி, கீர்த்தி, புத்தி, லக்ஷ்மியென ஆறு தெய்வமங்கையர் தோற்றினரென்பது ஜைனநூல்வழக்கு; இதனை, 1001, 2863-ஆம் கவிகளாலுமுணர்க.

184. (க) இங்கே, 'தாயர்தவ்வையர்' என்றதுபோல, "தாயர் தவ்வையர்" (மிதிலைக்காட்சி. ருக) என்றார் கம்பரும். (உ) அடிபரவ - அடிபோற்ற; "தன்னே சில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே, யன்னேதேனே யாரமுதேயென் றடிபோற்ற" (கம்ப. மிதிலைக்காட்சி. ஙo.) (ங) சலஞ்சலம்-ஆயிரம் வலம்புரிச்சங்குகளாற் சூழப்படுவதொருசங்கு (சூடாமணி. ங: எங.) (உரை) ஐவகைத் தாயர் இன்னரென்பதை, 363- ஆம் கவியின் உரையாலுணர்க.

187. (உரை) ஔவியாக்கம்: தொல்காப்பியத்தில் ஓரியலின்பெயர்; இதற்குப்பொருள், சொற்களையமைத்துக் கோடலென்பது. கோவிந்தன் - விசையையின் சகோதரன். தந்தையும் தாயும் - விசையையின் தந்தையும் தாயும். விசையையின் தந்தை சச்சந்தனுக்குமாமன். மைத்துன முறைமை- விவாகஞ் செய்து கொள்ளுதற்குரிய முறைமை; 1048 - ஆம் பாடலைப்பார்க்க. "நெய்த்தலைப் பாலுக் காங்கு நெடுவரை யுலகின் வந்த, மைத்துன குமரன் றன்னை மடமொழி மாலைசூட்ட" (சூளா. சுயம். உஎரு.) பெரும்பொருள், பெரும்பொருள்விளக்கமென்னும் நூலாக இருத்தல்கூடுமோவென்று ஊகிக்கப்படுகின்றது.

189. (ங) "துணைபுணர் அன்னத் தூநிறத் தூவி" (நெடுநல். கஙஉ) என்பதும் அதனுரையும், 'அன்பின் அன்னம் மொத்தும்' என்பதை வலியுறுத்தும். (ச) ஆமான்-காட்டுப்பசு; அது நக்குதல் முதலில் இன்பத்தைத்தந்து பின்னர் உயிரைக்கும்; "ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்

154. (உ) காய்த்து - வெவ்விதாக்கி; "கை காய்த்திய" (பதிற். அ௨:௯.) (உரை) காவன்மகளிர் - பகைவர்மனையோராய்ப் பிடித்துவரப்பட்டமகளிர்; கொல்லப்படாராதலின், இவர்களைக் கொண்டுகோயிற்காரியங்களைச் செய்வித்தல் மரபு; இதனைப் பட்டினப்பாலை, உ௪௬-ஆம் அடிமுதலியவற்றுளும் அவற்றின் உரையாலும் உணர்க.

155. (௩) உரிமை-மனைவி; 272.

156. (க) "நெஞ்சுணக்கூறு" (நற். உ௦௪); "நெஞ்சுண மயங்கியிட்டார்" (சூளா. கலியாண. உ௮௭); "நெஞ்சுணத்தேற்றி" பெருங். உ: ௬, ௩௧.

157. (க) அழல்-விடம். "அழல்வாய் நாகம்" (சிலப். ௫: ௧உ௪); "அழற்கனுகம்" மணி. உ௩: ௬௬.

157-9. சீற்றத்தனென்றதனால் திறலும், அமிர்தன்னவனென்றதனால் அளியும், கடிமார்பனென்றதனால் அழகும், கலிமாற்றியென்றதனாற்கொடையும், தேர்த்தொகைமாற்றினனென்றதனால் வீரமும், கலைக்கிடனுயென்றதனாற் கல்வியும், ஒப்பநிழற்றலாலென்றதனால் முறைசெய்தலுங்கூறினார்.

157 - 160. பாகவதம், ௪-ஆம் கந்தம், ௪ : ௪௩ - ௬.

158. (க) கலி-வறுமை. துன்கலை. (௪) கடி - வரைவு; 'கன்னுடியன்ன கடிமார்பன்' என்பதன்பொருளைப் பார்க்க; 2327.

160. (உரை) உவமையும் உருபும் விரித்தல்: தருமனைப்போல்வான், வருணனைப்போல்வானெனவிரித்தல். (உ) வாமன்-அருகக்கடவுள்; "வாமன்கோயில்" என்பர்; 2738. இச்செய்யுளைப் பலபடப்புனைவணிக்கு உதாரணமாகக் காட்டினர், திருத்தணிகைச் சரவணப் பெருமாளையர்; அவருடைய அணியதிகாரம்பார்க்க.

164. (உரை) ஐவகையை 2437 - ஆம் செய்யுளின் விசேட வுரையாலுணர்க. இவையித்திலே-இவற்றிலே; இற்று, சாரியை. குழன்ற - குழந்தபெற்ற. இக்கவி முதல், 179-ஆம் கவியளவும் விசயையின் கேசாதிபாதவருணனை; தெய்வமகளிரைப் பாதாதிகேசாந்தமாகவும் மானிடமகளிரைக் கேசாதிபாதாந்தமாகவும் வருணித்தல்மரபு; வேறுபட்டுவருதலுமுண்டு.

167. (க) அரிய-இரேகைகளையுடையன. கருமணி - திருமால். (௩) கற்புடையமங்கையர் பிறர்க்கு மயக்கத்தையுண்டுபண்ணுர்; தம்மை நினைத்த பிறர்நெஞ்சையும் சுடுவாரென்பர்; இதனை, "நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப், பிறர்நெஞ்சு சுடூஉம் பெற்றியுமில்லை" (மணி. உஉ: ௬௬-௬௭) என்பதனாலும், "நீதிலா வடமீன்" (சிலப். மங்கல.) என்பதன் உரையாலும் விளங்கும். இதுபற்றியே, 'கன்னியாதலின்மாலுறப்ப வென்றார்' என்று பொருள்கூறினர்; இதிலுள்ள, 'கருமணியம், பாலகத்துப்பதித்தன்ன' என்பதற்குச் செய்திருக்கும் பொருளை, இந்நூல், 1325-ஆம் செய்யுள் வலியுறுத்தும்.

169. (க) "மரக்கண்ணோ மண்ணாள்வார்கண்" (முத். ௯௦.) (உரை) கோட்புகாதகன்னிக்கமுகு- குலைவைக்கத்தொடங்காத இளங்கமுகு. சிந்தூராகரம்: "செங்கேழாகரங் கடுக்குமஞ்ஞேரணிமுடி" கூவப். தாருகன் உ௦௦.

170. (க) மகரம் - ஒருவகைத்தேளணி; முத்துவடங்களைத் தன்வாயிற்பெற்றிருப்பது; 231,351-ஆம் பாடல்களைப்பார்க்க.

171. (௩) பிறைவடம்-சந்திரஹாரம். (கூர்ம. வயிரவன். உ௬.) (உரை) வீற்றுத்தெய்வம் - வேறொன்றற்கில்லாத அழகைச்செய்வதொருதெய்வம்; 411, 606-ஆம் பாடல்களையும் அவற்றினுரைகளையும்பார்க்க.

172. (க)வலஞ்சுழி-நந்தியாவட்ட மலர். (உ) "புனர்சுழி யலைத்துப் பொருந்திய கொப்பூழ்" பெருங்: உ: கரு, சுஅ.

173. (ச) இந்திரரெனப்பாடங் கொண்டு தேவரென்று பொருள் கொள்வர் வேறுரையாசிரியர்; "இந் திர ரமிழ்த மியைவ தாயினும்" (புறநா. கஅஉ); "இந்திரகுமரரின் யாங் காண் குவமோ" சிலப். கூ: களரு.

174. (க) வெருட்டி - வெருட்டுந் துடைகள். (உரை) குறங்குசெறி-ஓரா பரணம்; "குறங்கு செறிதிரள்குறங்கி னிற்செறித்து" (சிலப். சு : அகூ); "நிழன்மணிமகரவாய் செறித்து" ஆனைக்காப். அகிலாண்ட. ருரு.

176. (ங) தேனெய் : "தேனெய் பாலொடுகலந்தன" சூளா. கல்யாண. ருச.

178. (க) அகவிதழ் - உள்ளிதழ்.

179. (உரை) தம்பால்வந்து மீளும் பெரியோர்களுடன் ஏழடியளவு செல் வோர், ஸப்த பயத்தினின்று நீங்கி, ஸப்த பரமஸ்தானத்தைப் பெறுவ ரென்பதுசைனநூற்கொள்கை; "எழு மேழடியூக்கிநடந்துசெலா" என்பர் பின்னும் ; 1384.

180. (ங) கண்விடுத்தல், சிற்பிக ளாற்செய்யப்படும் ஒருவகைக்கிரியை.

181. (க) "யாழொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா, பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க், கருள்வந் தனவாற் புதல்வர் தம்மழலை" புறநா. கூஉ.

183. (உ-ங) "தெய்வத்தாமரைத் திருமகள்" (பெருங். க : நுச, கசசு.) ஹிமவான், மஹாஹிமவான், நிஷதம், நீலி, ருக்மி, சிகரியென மலைகள் ஆறு உண்டென்பதும் அவற்றில் முறையே பத்மை,மஹாபத் மை, திங்கச்சை, கேசரி, புண்டரீகை, மஹாபுண்டரீகை யென ஆறுபொய் கைகளுள்ளனவென்பதும், அப்பொய் கைகளில் முறையே ஸ்ரீ, ஹ்ரீ, த்ருதி, கீர்த்தி, புத்தி, லக்ஷ்மியென ஆறு தெய்வமங்கையர் தோற்றினு ரென்ப தும் சைனநூல்வழக்கு ; இதனை, 1001,2863-ஆம் கவிகளாலுமுணர்க.

184.(க)இங்கே, 'தாயர்தவ்வையர்' என்றதுபோல, "தாயர் தவ்வையர்" (மிதிலைக்காட்சி. ருக) என்றார் கம் பரும். (உ) அடிபரவ - அடிபோ ற்ற ; "தன்னேரில்லா மங்கையர் செ ங்கைத் தளிர்மானே, யன்னேதேனே யாரமுதேயென்றடிபோற்ற" (கம்ப. மிதிலைக்காட்சி. ருய.) (ங) சலஞ்சலம்- ஆயிரம் வலம்புரிச்சங்குகளாற் சூழப் படுவதொருசங்கு (சூடாமணி. ங: எரு.) (உரை)ஐவகைத் தாயர் இன்ன ரென்பதை, 363- ஆம் கவியின் உரை யாலுணர்க.

187. (உரை)கிளவியாக்கம் : தொ ல்காப்பியத்தில் ஓரியலின்பெயர்; இத ற்குப்பொருள், சொற்களையமைத்துக் கோடலென்பது. கோவிந்தன் - விச யையின் சகோதரன். தந்தையும் தா யும் - விசயையின் தந்தையும் தாயும். விசயையின் தந்தை சச்சந்தனுக்குமா மன். மைத்துன முறைமை- விவாகஞ் செய்து கொள்ளுதற்குரிய முறை மை ; 1048 - ஆம் பாடலைப்பார்க்க. "நெய்த்தலைப் பாலுக் காங்கு நெடுவ ரை யுலகின் வந்த, மைத்துன குமரன் றன்னை மடமொழி மாலைசூட்டி" (சூளா. சுயம். உஎரு.) பெரும்போ ருள்,பெரும்பொருள்விளக்கமென்னும் நூலாக இருத்தல்கூடுமோவென்று ஊகிக்கப்படுகின்றது.

189. (ங) "துணைபுணர் ரன்னத் தூநிறத் தூவி" (நெடுநல். கஙஉ) என்பதும் அதனுரையும், 'அன்பினு லன்ன மொத்தும்' என்பதை வலியு றுத்தும். (ச) ஆமான்-காட்டுப்பசு; அது நக்குதல் முதலில் இன்பத் தைத்தந்து பின்னர் உயிரைக்கொல்லும்; "ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்

கொண்டு'' (நாலடி. ருஎக), "நாவின் புறக்கிக் கொல்லுங் கவயமாபோல்'' (நீதிநெறி.எரு) என்பவற்றாலுணர்க.

190. (க) "தன்னமர் காதல்'' (பெருங். ௩: சு, ௩௧.) (௩-ச) "மட மங்கையர்....மட்டு நீக்கி மதுமகிழ்ந்து'' பட்டினப். ௧௦சு-அ.

191. "மாதர் தாமரைப் பூவதாக'' என்றதற்கேற்ப, "நாதிளந்தாமரைவாய்'' என்பர் பின்னும்; 218.

193. (உரை) அறுசுவை - கைப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கார்ப்பு, இனிப்பென்பன. ஆறுகாலமாவன - கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென்பன.

195. (உ) பூஞ்சிகை-பூவையணிந்த மயிர்முடி.

198. (உரை) கழிகண்ணோட்டம் - அளவிறந்த உவகை; ௫௩உ-ஆம் குறளின் விசேடவுரையில், 'அளவிறந்தவுவகையாவது, கழிகண்ணோட்டம்' என்பர், பரிமேலழகர்; பதிற்றுப்பத்து,உ௨-ஆம் செய்யுளாலும் இது விளங்கும்.

199. (உரை) அங்கமாகியவருணனை - நாட்டுவளம், நகரவளம், கோயிற்சிறப்பு, முதலியன. குரவர் - தாய்தந்தையர்.

200. (ச) வெளிறு - அறிவின்மை (குறள், ருoரு.) (௩) பெருஞ்சிறப்பு "அருமுடி யொழிய வெல்லாவணிகளு மவனுக் கீந்தான்'' (சூளா. சுயம். ௧௪௩) என்பதனாலும் விளங்கும்.

203. (ச) நுகம்-பாரம்: "எருவை பூண்ட வினைச்செந்நுகம்'' சிறுபாண். ௧௧௩.

204. (க) வலம்புரி - சங்கரேகை; "சங்க லேகையுஞ் சக்கர லேகையு, மங்கை யுள்ளன'' (சூளா. குமார. சரு) என்பதனாலுணர்க. மரவலி-அரசன். (௩) உலம் - உருண்டகல்.

206. (உரை) உலகியலாற்கூறல் - பொதுவாகக்கூறல்; 245-ஆம் கவியுரையைப் பார்க்க.

207. (க) "பெரும்பெயர் முருக,'' "பெரும்பெயரியவள்'' (முருகு.உசுக, உஎச.) (ச) "சிறுசொற் சொல்லிய சினங்கெழுவேந்தரை'' (புறநா.எஉ), "சிறிதுனென்ற போழ்திற் சிறுசொலாய் நிற்கும்'' (சூளா. அரசியற். ௩௧எ.) (உரை) திலோத்தமை - ஒரு தேவகணிகை; நான்குமுகமென்றது, இயற்கையாயுள்ள ஒரு முகத்தையன்றி வேறு நான்குமுகங்களை. அந்நான் குமுகமுண்டானகதை வருமாறு:— பிரமதேவர், முன்னொரு காலத்தில் காமமிகுதியால் தேவலோகஞ்சென்று ஆங்குள்ள தேவமகளிரை அடைதற்குமுயன்று, தம்மை அவர்கள் மதியாமையால், அவர்களையெளிதிற்பெற்று அநுபவித்தற்குரிய இந்திரபதவியையடைய நிச்சயித்துமீண்டுவந்து ஓரிடத்திலிருந்து மூன்றரைக்கோடிவருடம் குரூரமான தவஞ்செய்தார்; அதனையறிந்து, தன் பதவிக்குக் கேடுவருமோவென்று கவலையுற்ற இந்திரன், தேவகுருவின்பால் முறையிட்டு அவரது கட்டளையால் இவருடையதவத்தை யழித்தற்காகத் திலோத்தமையை உண்டுபண்ணியனுப்ப, அவள்வந்து முன்னின்று, வேட்கையை விளைவித்தற்குரிய ஆடல்பாடல்களைச்செய்தனள்; உடனே இவர்விழித்துப்பார்க்கத்தொடங்குகையில், அவள் வலப்புறத்தே சென்று அவற்றைச்செய்தனள்; இவர் திரும்பிப்பார்த்தாற் கூடவிருக்கும் முனிவர்கள் பழிப்பார்களேயென்று நினைத்துத் தாம்புரிந்துவந்த தவங்களுள் ஒருகோடிவருடத்தவத்தால் அந்தப்பக்கத்தே ஒருமுகத்தை யுண்டாக்கிக்கொண்டுபார்க்க, அவள் பின்புறத்தேசென்று அவற்றைச்செய்ய, இவர் மற்றொருகோடி வருடத்தவத்தால் அந்தப்பக்கத்தும் ஒருமுகத்தை உண்டாக்கிக்கொண்டுபார்க்க, உடனே அவள் இடப்பக்கத்தேசென்று அவற்றைச்செய்தனள்; இவர் வேறொரு

கோடி வருடத்தவத்தால் அந்தப்பக்கத்தும் ஒருமுகத்தையுண்டாக்கிக்கொண்டு பார்க்க, அவள் உடனே ஆகாயத்தேசென்று அவ்வாடல்பாடல்களைச்செய்ய இவர் எஞ்சிய அரைக்கோடிவருடத்தவத்தால் மேலேயும், ஒரு முகத்தையுண்டாக்கிக்கொண்டு பார்த்தபொழுது அவள்மறைந்துபோயினாள். அப்பால் இவர் காமபரவசராகி ஆகாயவழியேசெல்லும் தெய்வமங்கையர் பலரையும் வலிந்திழுத்துத் தன்புறத்தவரிராயினர்; அதனையறிந்த தேவர்களுடையவேண்டுகோளால் வந்த சகநாசிவமூர்த்தி, இவர் அத்தீச்செய்கையை நிகழ்த்தாதிருத்தற்பொருட்டு இவருடைய மேற்றலையைக் கிள்ளியெறிய, அப்பால் இவர் எல்லாராலும் அவமதித்துப்பழிக்கப்பட்டுத் தமதுபதவியையும் இழந்தாரென்பது. இது, தர்மபரீக்ஷையென்னும் சைனநூலில் மூன்றாம்படலத்திற்கூறப்பட்டிருக்கிறது.

208. (உரை) காந்தட்பூவை முருகவேளுக்கு அடையாளப்பூவென்பர் நச்சினார்க்கினியர் (ரநுகு.சக-ா.) கங்காதேவியை மணந்தது தெரிந்து ஊடிய உமாதேவியை மகிழ்வித்தற்பொருட்டுச் சிவபெருமான் உமாதேவியார்க்குத் தமதுதிருமேனியிற் பாதியைக் கொடுத்தருளினாரென்றுதர்மபரீக்ஷை தெரிவிக்கின்றது.

209. (உ) பானிறவண்ணன் - பலராமர். தொழுனை-யமுனை ; "தொழுனையன்றோன் கருதுழியொழுகிற்றன்றே" (கூர்ம. கண்ணன்பூமி. ஈச.) (ச) குருந்து-குருந்தமரம். கண்ணன் குருந்தொசித்தகதை :— ஒருநாள் யமுனை யாற்றிலே நீர் விளையாடிக் கொண்டிருந்த கோவியருடைய துகில்களையெல்லாம் விளையாட்டு நிமித்தம் கவர்ந்துகொண்டு கரையிலுள்ளகுருந்தமரத்திலேறிநின்ற கண்ணபிரான், தம்முடையமுன்னோராகிய பலராமர் அங்குவருதலையறிந்து, தமதுசெய்கையை அவர்காணின் தமக்குமிக்க பழியுண்டாகுமென்றுநினைந்து அக்குருந்தமரத்தைமுறித்து யமுனையாற்றில் வீழச்செய்து தாம்கவர்ந்ததுகில்களை நீரினின்ற அக்கோவியர் எளிதிற்பெறும் வண்ணஞ்செய்ததன்றித் தாமும்நீங்கி வேறிடஞ்சென்றாரென்று சைனர் கூறுவர் ; 'ஒசித்தது' என்பதற்கு ஒளித்துக் கொண்டதென்றும் அவர்களில் ஒருசாரார் பொருள்கூறுவதுண்டு.

210. புத்தன் இச்செய்கையால் இழிவுபடுத்தப்பட்டதை,நீலகேசியிற் புத்தவாதச்சருக்கத்தில், "திரிவேதனைகளுந் திரா துமக்குள வாதலன்றே, கரிவேதனையவர் காமுறுகாமங் கடிந்ததுதான்" ( கரி-பெட்டைக் கழுதை) என்னும் சகூ-ஆம்செய்யுளாலும், 'மூன்று வேதனைகளும் நமக்குஉண்மையினன்றே பெட்டைக்கழுதையைப்பெறாது வேதனைப்படுகின்ற கழுதைகளோடு சங்கமிப்பீராயினது' என்னும் அதனுரையாலும், ஷெ நூல் மொக்கலவாதச்சருக்கத்துள்ள, "கல்லாது நீயுங் கழுதைக்கருள் செய்தியென்றாள்" (கசo) என்பதனாலும் தெளிக.

213. (உரை) உருத்திரதத்தன் கூறிய யாக்கைநிலையாமை, 212-ஆம் செய்யுளிலுள்ள, 'அவலம்' என்பது.

214. (உ) "நின்சொலெல்லாங்கவர் பொருளைப் பாரித்திருந்த" பிரபு. பிரபு தேவர். சஈ.

215. (உரை) தேவரது - பிரமன் முதலியவர்களது.

216. திருவின் உலையா அமிர்து.

217. (க - உ) முடிமணி - சூடாமணி ; "சூளாமணியொடு பொன்னரிமாலை" (சிலப். ௬ : கoகூ - அ ; அடியார். மேற்); "சூடையின்மணி யொட்பது" (கம்ப. சூளாமணி. அஅ.) (உரை) தெய்வவுத்தி: "தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்து" ரநுகு. உஈ.

218. (உரை) அவதரிக்க - தங்க.

219. கனாமூன்றும் கடையாமத்திற் காணப்பட்டனவாதலாற் கடிதிற் பயக்குமாறுயினவென்றார்; இதனை, " படைத்தமுற் சாமத்தோ ராண்டிற் பலிக்கும் பகிரண்டாய்க், கிடைத்த பிற் சாமத்திற் றிங்களொட் டாவதிற் கிட்டுமென்ப, டிடைப்பட்ட சாமத்து மூன்றினிற் றிங்களுண் மூன்றென்ப ராற், கடைப்பட்ட சாமத்து நாட்பத்தி லேபலன் கைப்பெற்றதே" (உ) என்னுங் கனூநூற்செய்யுளாலுணர்க.

220. (உ)விண்-தேவர். வெல்கதிர்-அறவாழி; தருமசக்கரம். (ஹ) "கண் கழூஉச் செய்து" என்பதை இடக்கரடக்கலென்பர். (உரை) கற்புடைய மங்கையர் தெய்வத்தைத் தொழுதற்கு உரியரல்ல ராயினும் குலதெய்வத்தைக் கணவனுணர்த்த உணர்ந்துவணங்கலா மென்பது விதி.

221. (ச) " நங்காய் காளூன் பெருமா னன்னகர்" பெருங். உ: கO, எஉ.

222. (உரை) தேனினியல்பை 2382 - ஆம் பாடலும் அதனுரையும் நன்கு புலப்படுத்தும்.

223. (உரை) குலத்தாய்மை, 547, 2413 - ஆம் கவிகளிலுள்ள உவமைகளாலும் விளக்கப்பெற்றுள்ளது.

224. துன்பச்செய்தியைப் பொறுக்குமளவிற் பிறர்க்குக் கூறவேண்டு மென்பது இச்செய்யுளால் தெரிகின்றது; 2343-ஆம் பாடலும் இதனை விளக்கும்.

229. (ஹ) அகில் - அகிற்புகை.

231. (க) தோண்முத்தம் -தோளிலணியு மகரவாய்ப் பணியினின்றும் தாங்கு முத்தவடம்; 170, 351-ஆம் கவிகளைப்பார்க்க. (உரை) வயா-கருப்பந்தங்கியபின் வருத்தமுற்று நுகரப்படும் பொருள்கண்மேற் செல்லும் வேட்கை.

232. (ஹ) "ஓம்படை சாற்றற்பால துள்ளவர்க் காகுமன்றே" 1738. 'அதிவெறுமமைச்சன்சொன்னான்' என்பதற்குத்தன்னைப்பாதுகாத்தற்குரியஅறிவு சச்சந்தனுக்கு உண்டாயிற்றென்பதுபொருள்; அஃது உண்டானதற்குக்காரணம், விசயையின் கனக்காட்சியைக்கேட்டதே.

233. (ச) பொறி, நல்வினைக்கும் யந்திரத்திற்கும் பெயர். ஒருபொறி செய்விக்கவேண்டுமென்று சச்சந்தன் நிச்சயித்துக்கொண்டான்.

234. (உ) தமநூல் - தம்முடைய குலத்துக்குரியசிற்பநூல்; அவை, மய மத முதலியன.

238. (ஹ) பாடலின் -ஒருஸ்தானத்திலிருந்து மற்றொருஸ்தானத்திற்குச் சென்று அங்கே ஆலாபனஞ்செய்து அதிலிருந்து மற்றொருஸ்தானத்திற்கு மெல்லச்செல்லும் இசைப்பாட்டைப் போலே; 730 - ஆம்பாடலின் உரையைப்பார்க்க.

239. (க) பண் - பண்ணையுடைய யாழ் நரம்பு.

240. பயனில்லாதகூறுகலைக் கோதென்றல்மரபு; சக்கை; "கோதென்று கொள்ளாதாங்கூற்று" நாலடி. கOசு.

242. அழுங்க-அழிய; புறநா. கூஅ.

244. பெண் நின் இன்பம்.

247. (ஹ) மருளி-மயக்கம்; "மருளியாயம்" பெருங். க: ஹச, களO.

249. (உரை)உவமைகூறிமிடத்துக் கூறல்: "பகல் வெல்லுங்கூகையை" (குறள், சஅக) என்றாற்போல்வது.

250. 2344 - ஆம் கவியுரையைப் பார்க்க.

251. (ச) "தெரிகோல் ஞமன்ன் போல" புறநா. சு.

252. (உரை) "அரச னுவாத்தியான் முய்தந்தை தம்முன், னிகரில் குரவர்" ஆசார. கள.

253. (உரை)வரையாதவன்-மணம் புரியாதவன். தப்புதலாவது மணஞ் செய்யாமை.

255. மூ. மதுரை. ச - உரு பார்க்க.

256. (உ) குவளை - செங்குவளை.

257. (உ) தேற்றேன்-அறியேன் ; தன்வினை; "தேற்றாய் பெருமபொய் யே" புறநா. ருகூ.

261. கருவுற்றிருக்கும் விசயையை யும் கொல்லநினைந்தமையின், 'குலத் தொடுங் கோற லெண்ணி' என்றார்.

263. (ச) "வயிரக்குன்றிற் கொழு ஞ்சுடர் விளக்கிட்டாங்கு" சூளா. மந் திர. கஎ.

264. போற்றி -பாதுகாத்தருளுக; வணங்குந்தோறுங் கூறினமையின், போற்றி பலவாயிற்றென்பர்; (சிலப். உ௦: ௬௦-௬௬; அரும்பத.) "கொண்ட னர்நிரைபோற்றெனக்கூறினான்" 430.

266. (உரை) வாகனமேறுதவர், கவசம்பூணுதல்மரபன்றென்பர். வீரர் வாளைநோக்கி நெடுமொழி கூறலை, "கொற்புனைந்தியற்றிய கொலையமை கூர்வாள்" (பெருங். க: சகூ, அகூ) என்பது முதலியவற்றாலுணர்க.

267. (ச)விசயைவயிற்றிலடித்துக் கொண்டமையின், 'திருமகற்கவலஞ் செய்தாள்' என்றார்.

268. (ரு) மல்லர்களை அலைத்து.

270. (உரை) உறை:தானியங்களை அளக்குங்கால், ஐந்துகலத்தானியம் அளக்கப்பட்டவுடன் அவற்றை ஒன் றென்று எண்ணி, எடுத்துவைக்கும் ஒருபிடிக்குப்பெயராக வழங்கப்படு கின்றது; "உறையிடத்தேய்ந்திடு மிவ் வந்தி வானத் துடுக்குலமே" திரு வேங்கடத். ௬ச.

271. கடவுட்குரிய பூவில் வண்டு மொய்யாதென்பது, "சுரும்புமூசாச் சுடர்ப்பூங் காந்தட், பெருந்தண் கண்ணி" (முருகு. சக௬) என்பதனாலும் விளங்கும்.

272. (க) "உயிரெனப் படுவ தரி மை" (பெருங். க : ௬அ, உசுஎ.) (உரை) "இருதலைக் கொள்ளியி னுள் ளெறும் பொத்து நினைப்பிரிந்த, விரி தலையேனை விடுதிகண்டாய்" (திருவா. நீத்தல். க); "பெரிய நட்டார்க்கும் பகைவர்க்குஞ் சென்று, திரிவின்றித் தீர்ந்தார்போற் சொல்லியவருள், ஒரு வரோ டொன்றி யொருப்படா தாரே, யிருதலைக்கொள்ளியென்பார்" பழ.கூ.

273. (உரை) ஓம்ணமோ அரஹந் தாணமென்பது, பஞ்சநமஸ்காரமந்திர ங்களுளொன்று. இம்மந்திரம்வழித்து ணையாகுகவெனக் கூறப்படுவதுமுண் டு; "மொழிப்பொருட் டெய்வம் வழி த்துணை யாக" சிலப். க௦: க௦௦.

274. (உரை) நெருப்பிலிருந்து நீருண்டாயிற்றென்பர். மடங்கற்றீ - ஊழித்தீ.

275. (உரை) செண்டுவெளி : யா னைச்செண்டு,குதிரைச் செண்டென்று சில விளையாட்டுண்டு; கம்ப. நகர. சுஅ-ஆம் பாடலாலுணர்க ; இவற் றிற்குரிய இடம் செண்டுவெளி.

279. (க) வேன்மிடைந்த வேலி- வேற்படைவீரரின் சூழ்ச்சி. (உ) வாள் வலை-வாள்வீரரின்சூழ்ச்சி. (ச) வென்றோர்க்குரியது போர்க்களமென் பர்; "களங்கொள் யானைக் கடுமான் பொறைய"; "களங்கொளற் குரியோ ரின்றி" (புறநா. ௬௩, சுஉ), "கருங் கழலான் சொன்டான் களம்", "வென் று களங்கொண்ட வேல்வேந்தே" (பு-வே.அ: உசு; க: ௬எ) என்பவை விளக்கும்.

281. (உரை) கதிர்வட்டம்-சூரிய மண்டலம். மிகை-மீதூர்ந்தநடை.

284. (ச) மிறை-வளைவு; "மிறைக் களச்சந்தி" மணி. சு: சுக.

289. (ச) அவிதல் - குறைதல்; "திரைபாட விந்தமுந்நீர்" (பரி. ச: சு.) (உரை) முகநோக்கிவீழ்தல் வீரக் குறிப்பு; 2322-ஆம் கவியின் விசேட வுரை இங்கே அறியற்பாலது.

290. (௬) இக்ஷ்வாகுகுலம், ஹரி குலம், குருகுலம், நாதகுலம், உக்கிர

குலமென்னுங்குலங்கள்ஐந்தனுள், குரு குலத்திற்பிறந்தவன்சச்சந்தன்; 2324-ஆம் செய்யுளும் அதனுரையும் இதன் இறுதியடிப் பொருளை விளங்க அறிதற்கு இன்றியமையாதன.

291. (உரை) சுக்கிலத்தியானம் - பரிசுத்தமானதியானம்; அது பிரமத்வவிதர்க்கவிசாரம், ஏகத்வவிதர்க்கவிசாரம், சூக்ஷ்மக்கிரியாப்பிரதிபாதி, வ்யுபரதக்கிரியாநிவிர்த்தியென நால்வகைப்படும்; ௩௰அ-ஆம் திருக்குறளுரையிற் பரிமேலழகர் இப்பெயரை எழுதியிருக்கிறார். போர்செய்தற்குச்சென்ற சச்சந்தன் சிறிதுநேரம் போர்செய்து ஜீவஹிம்ஸையாகிய பாவத்துக்கஞ்சிச் சும்மாவிருந்து வைராக்கியம்வந்து உதவ அப்பாற்செய்த பாவனைவிசேடத்தால், மேலுலகம்பெற்றானென்று வடநூல்கள்கூறும்.

293. (உ) அரங்கி - அமுக்கி.

294. (௩) "ஈமவொள்ளழல்" புறநா. உ௩௧.

298. (உ) வளிமுகச் சுடரின்-காற்றின்முன்னுள்ள தீபம்போல.

302. (ச) "மகன்றி னன்னர்ப் புணர்ச்சி" (பரி. அ: சச.) (உரை) இறுகியென்பது, 299-ஆம் கவியிலுள்ளது; அன்புமிகுதியால், மூர்ச்சை முக்குமென்பதை, 389-ஆம் கவியுரையாலுமுணர்க.

305. இங்கே, 'குருசிறந்தபுதல்வன்' என்றதுபோல, "உரவோன் சிறுவன்" என்பர்மேலும்; 353.

308. (க) கணிகள் - சோதிடர்கள்.

310. (க) "பற்றுமன்னன்" பெருங். ௩: உ௫, ௧0௧.

311. 'நீயும் அடிகளருளிய பேரறமும்' என்றுசைனர் பொருள்கூறுவர்.

312. (க) அகங்கை புறங்கையாவதுபோலென்றது விரைவுகுறித்துநின்றது. (ச) கண்ணீர், சிலேடையுமாம்.

313. (க) "சிறுவன்றன்னைப் பயந்து" 386.

314. (ச) தெய்வம் - யக்ஷிதேவதை; யக்ஷர், வியந்தரலோகவாஸிகள் எண்மருள் ஒருவகையாரென்பர்.

315. (௩) எம்மனை - தாய்; "எம்மனை யிழந்தோன்" மணி. ௹: ௩உ.

316. பூ - இங்கே தாமரை மலர்; முருகக்கடவுள் தாமரைமலரிற்பிறந்தமை, பரிபாடலில்௫-ஆம்பாடலாலும் கந்தபுராணத்தாலும் அறியலாகும்.

317. "நன்மணி யீன்று முந்நீர்ச் சலஞ்சலம் புகுவதொத்தாள்" என்று இங்கேகூறியதுபோலவே, "வலம்புரியுலகம் விற்கு மாமணி யீன்ற தென்ன, விலங்கிழை சிறுவன் றன்னைப் பயந்து" என்பர் பின்னும்; 326. காஞ்சிப். அந்தருவேதி. ௯௬ - ஆம் பாடலின் பொருள் இங்கே அறியற்பாலது.

318. (௩) "காதலன் பொறியாப் புறுத்த தமனிய வள்ளத்து" (பெருங். க: ௪0, ௧௯௬ - உ.) (உரை) அறிந்து - சச்சந்தனுடைய மகனென்றறிந்து.

320. கந்துக்கடன், சக்கரவர்த்தி வணிகனென்று வடநூல்களிற் கூறப்படுவன்.

323. தும்மியவுடன், 'ஜீவ, நூறும் புகுக'என்றல் மரபு. ஜீவ, நந்த, வர்த்தஸ்வ என்று ஆசிகூறல் சைனமுனிவர்களுடைய வழக்க மென்பர். இப்பிள்ளைக்குச் சீவகனென்றபெயர்வந்ததற்குக்காரணம் இதுவே. தும்மியவுடன் சிவாயவென்றல் சைவர்வழக்கம்; "தும்மினுஞ் சிவாய போற் றெடுர்ந்து" திருவால. ௪௯: ௬0.

324. (௩) நுன், கன்னடபாஷையில் வழங்குகின்றது.

325. (உ) தேவருடம்பு பொன்னுடம்பெனப்படும்; ஐங்.

326. (உரை) சிறைகோடல்-கட்டியங்காரன் சிறைகொள்ளல்.

327. (ரு) "தீதறு நல்லுரை கேட்டனே" சிலப். கக: கஉ.

329. இக்கவியாற் கந்துக்கடனுடையவிட்டிற் பிறந்தநாட் கொண்டாட்டம் நடைபெற்றமை கூறப்பட்டது.

333. (ச) நினைவு - வருத்தம்; "நெஞ்சினுள்ளா ராதலா னினைத்தல் செய்யேன்" 1880.

336. (க) ஓசனை - யோசனை; "ஓசனை பலகடந்து; கம்ப. திருவவ. சo.

337. (க) "விளங்கிய பொய்கை... எய்துவிர் நீரே" (சிலப். கக: சுசு-கoரு); "தண்மலர்ப் பொய்கையுந் தாழ்ந்தன னோக்கி" (மணி. கக: ச); "தெய்விகத்தினில்வந்த, மனோதலம் பெரும் பொய்கைநீர் பருகி" பாரத. கச - ஆம்போர். சுஅ.

341. (உரை) செருக்கு-செழுமை; "செருக் கற்ற பஞ்சிமலர்" என்பர் பின்; 2339.

349. (உரை) ஊதல் - உண்ணல்; கலி. சுசு - ஆம்பாடல்பார்க்க.

352. (உரை) இரண்டன்மருங்கின் - இரண்டாம்வேற்றுமைக்கண்.

355. (க - உ) "குளச்செந்நெல் லொனத் கட்டி" (கூர்ம. சிராத்த. ௳.); "அல்லிப் படூஉம் புல்லா யினவே", "சிறுவெள்ளாம்ப லல்லி யுண்ணும்" (புறநா. உசஅ, உஅo.) ஆம்பலல்லி - இருபெயரொட்டு. அணில் - அணிற்பிள்ளை.

356. (க) "மாதுகுமயிலினல்லார்" என்பர்பின்; 463.

357. (ச) வம்மென - வாருமென்று; "வம் மெனக்கூஉய்" பொருந. கoக.

360. (உ) கட்டழலெவ்வம் - இணரெரி தோய்வன்ன இன்னா. (ச) பட்டது - உண்டான செயல்; "பன்னருமாலை யாற்குப் பட்டதை யெவன் கொல்" 1085.

362. (ரு) புண்ணியனென்பதற்கு இங்கே எழுதியபொருணயத்தைப் பார்க்கையில், "போரார் புரங்கள் புராண நாறும் புண்ணியனை" (திருநா. திருவாரூர், திருமணியை. கo), "நீலமணிமிடற் றொருவன்போல, மன்னுக பெரும நீயே" (புறநா. சுக) என்பவை ஞாபகத்திற்கு வருகின்றன. (ச) மதி - பிறை; "இருகோட் டொருமதி" (கக-ஆம் திருமுறை, எழுகூற்று.) மாமதியன்னான்: (364, 387, 454, 882); "இளம்பிறைபோல் வளர்மைந்தன்" (காஞ்சிப். பராசரேச. கரு.) (உரை) கண்ணன்சரிதம், உஉ - ஆம் தீர்த்தங்கரராகிய நேமீசுவரர் புராணத்துள்ளது.

363. (உரை) கைத்தாய் - கையிலேந்தி வளர்க்குந்தாய்.

364. (ரு) "சேட்டிளஞ் சிங்கமன்னாய்" 404. (உரை) ஒழிந்தோரென்றது, ஐஞ்ஞூற்றுநால்வரை. வாலசிகிற்சை - குழந்தைகளுக்குவரும் அரிஷ்டத்தினிக்கத்தைக் கூறுவதொரு நூலென்பர். தெய்வப்பகை - வாலக்கிரகங்களாகியபகை.

365. (உரை) கற்பகம் வேண்டக் கொடுத்தல், "உள்ளிய வுள்ளியாங் கீயு முயர்விற்றுங், கள்ளவிழ் பூஞ்சோலைக் கற்பகமும்" (வீர: உரை, மேற்) என்பதனாலும் அறியப்படும்.

366. (உரை) போதி: அநுப்பிரேக்ஷை பன்னிரண்டனுள் ஒன்றற்குப் போதி துர்லபமென்று பெயருண்மை யாலுமுணர்க. ரிஷபர், ஆதிதீர்த்தங்கரரென்றுங் கூறப்படுவர். பரதராசசக்கரவர்த்தியின் வரலாற்றை, 32-ஆம் கவிக்குறிப்பாலுணர்க.

369. (ச) நாமகளைச் செல்வியென்றார், "கேடில் விழுச்செல்வங் கல்வி", "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம்" (குறள். சoo, சகக) எனப்படுங் கல்விச்செல்வத்தைக் கொடுப்பவளாதலின்; நாலடி. உருக - ஆம் பாடலும் இக்கருத்தை வலியுறுத்தும்.

374. (உரை) நன்ஞானம், நற்காட்சி என்பனவற்றை முறையே

"பொருணின்ற பெற்றியைப் பொய்யின் றுணர்தல், மருளறு நன்ஞான மாண்பு", "எட்டு வகையுறுப்பிற் ருகியயன்றது, கட்டிய நற்காட்சி காண்" (அருங்கலச். ருள, கங) என்பவற்று லுணர்க. நல்லொழுக்கம்: அணுவிரதம், மஹாவிரதமென இருவகைப்படும்; அவற்றுள், முன்னையது இல்லறத்தார்க்கும் ஏனையது துறவறத்தார்க்குமுரியனவாமென்றும் ஒவ்வொன்றும்மிகப் பலவாமென்றும் கூறுவர்; இரத்தினத்திரயம் பரத்திரயமெனவும் வழங்கும்; "பரத்திர யங்கள் பணித்தபிரான்" (திருநாற். உச.) இவை திரியோகமருந்தெனவும் வழங்கும் -(நீல. தருமஉ.கo.) பவ்வியசீவன்- முத்தியில் விருப்பமுள்ள ஆன்மா.

376. (௩) நுகர்ச்சியிலுலகம், "பண்டுகண் டேயறி யாப்பொருள்" (திருநாற். உ) என வழங்கப்படும்.

377. (உ) ஆக்கத்திற்குக்காரணமானமையின் மக்கள்யாக்கை, 'அமிர்து' எனப்பட்டது.

378. (உரை) தரிசனமோகனீயப்பிரகிருதி, அநந்தானுபந்திக் குரோத முதலியவை; அகூஉ - ஆம் பக்கம் பார்க்க.

379. (உ) குழவிப் பருவமாகிய நாற்று; காளைப்பருவமாகிய கதிர்; பாகவதம், ௩: அ, ௩ரு-ஆம் பாடல் இக்கவியுடன் ஒப்புநோக்கற் பாலது.

380. (உரை) கலை: சிலேடை. பொன்னெயில் வட்டத்தினிலக்கணத்தை, திருநாற்றந்தாதி, கஅ-ஆம் பாடலாலுணர்க. பிரபுலிங்கலீலை, வசவண்ணர்கதி, கரு-ம் செய்யுளின் கற்பனை இங்கே அறிதற்பாலது. சாது - ஆசிரியன். இதன் ௩-ஆம்அடி, "தவமுந்தவமுடையார்க் காகும்" (குறள், உகூஉ) என்பதைத் தழுவியது.

381. இரத்தினத்திரயங்கள் முறையே இதில் நீலமுதலியனவாக உருவகிக்கப்பெற்றன.

382. (க) "நல்லறங்காக்க வென்றாள்" (386.) சரணம் - பாதுகாப்பு.

383. (உரை) தம்பிமார்-நபுலவிபுலரும் நந்தட்டனும். தோழன்மார் - ஐந்நூற்று நால்வர். இவர்கள், சீவகனுடன் கல்விபயின்றவர்கள்.

384. (உ - ௩) அசோகமரத்தின் கீழுள்ள பீடத்திலிருத்தல், சாரணபரமேஷ்டிகளுக்குரிய விதியென்பர்; சிலப். கo: உக - ரு; ஷை ஷை கசுo - சுங.

385. (௩) தேர்ந்து: "ஆம்புடை தெரிந்து வேந்தற்கறிவெனுமமைச்சன் சொன்னான்" என்றார் முன்னும்; 232.

389. (க) கண்ணன் கர்ணனுக்குப்பிறப்புணர்த்தியது, பாரதம், கண்ணன்றூதுச்சருக்கம், உகஅ - ஆம்பாடல் முதலியவற்றாலும், ஸ்ரீபுராணத்தில் உஉ-ஆம் புராணத்தாலும் அறியலாகும்.

392. (க) இளம்பிராயத்திற்பகையை வெல்லத் தொடங்கினமையின், சீவகனுக்குச் சிங்கக்குட்டி உவமமாயிற்று; (364, 404); பொருநராற்றுப்படையில், கங௬-ஆம் அடிமுதலியவை இங்கே அறியற்பாலன.

393. (உரை) தன்பகையைக்கொல்ல ஒருவன்சேறலைவிலக்குதற்குஅரசகுலத்திற்பிறந்தவர் அஞ்சுவர்; 'ஒருவருடம் பொறுத்திருத்தலைக்குருதக்ஷிணையாக எனக்குக்கொடு' என்று ஆசிரியன் சீவகனை இரந்தானென்றும், முற்பிறப்பில், அன்னக்குஞ்சைத் தாய் தந்தையினின்றும் பிரித்தநாள், கசு- ஆதலின், சீவகன், தாய் முதலியவர்களை, கசு - வருடம்பிரியும்படி நேர்ந்ததென்றும் வடநூல்கூறுகிறதென்பர்.

394. (க - உ): 2830 - 31; (நீல. தருமஉ. கஎ-டரை.) நெருப்பிற் பழுக்கக்காய்ந்த இரும்புண்ட நீர் அவ்விரும்புள் அடங்கியிருப்பதுபோல, இரத்தினத்திரயங்கள் சீவகனிடம் அடங்கியிருத்தலையறிந்து.

395.(உரை) வெள்ளிமலை-வித்தியாதரர்க்கு இருப்பிடமென்றுகூறப்படும் வெள்ளிமலை; அதில் தக்ஷிணஸ்ரேணி, உத்தரஸ்ரேணியென இரண்டுள்ளன; முதலாவதில் ருo - பட்டணங்களும், இரண்டாவதில் சுo - பட்டணங்களுமுள்ளனவாம்: மேருமந்தர புராணத்தாலறிக.

396. (உரை) யானைத்தீநோய்: 'வேழவெந்தீ' (401); 'தணியாப் பசி', 'விளிவில்வெம்பசி' என்று மணிமேகலையிற் கூறப்படும். மாடம் ஈடு (= திரள்) அகமெனப் பிரிக்க.

398. (ரு) 871.

399. இடைகழி-'ரேழி';"புழைவாயிற் போகிடைகழி" பட்டினப். கசச.

400. (ச) "ஆசைமாக்களொடடங் தணர்கொள்கென" (911); "உடற்குள் வந்தெழு மொள்ளழல் போன்று பின், கிடைத்தி லாப்பொருண் மேற்கிளர்ந் தோடியே, நடக்கு மாசையை நண்ணு முவப்பினு, லடக்கு மந்தணரே யறிவாளரால்" பாகவதம், அவை, சசு.

402. (உ)"நான்முகன்":நன்னூல் விருத்தியுரையில் "பூமலி யசோகின்", "முச்சக நிழற்றும்" என்னுங் கடவுள் வாழ்த்துக்களின் விசேடவுரைகள் இங்கே அறியற்பாலன. கருமங்கெட்ட பின்பு அருகனுக்கு உண்டாகும் அதிசயங்கள் பந்தனுள் சதுராநனத்துவம் ஒன்றென்பர்.

403. (க) அதகம்-அகதம்; எழுத்து நிலைமாறல்; "எரிதழல் விடத்தை, மலைமறை யதகமாற்றியாங்கு" (கல். "நிணமுயிருண்ட".)(உரை)பொன்றக் கெட்டது-முற்றக்கெட்டது.

405. (உ)'தந்தைநீயாகி' என்றான், ஞானபிதாவாதலின்.

406.(ச)மணிவண்ணன்-திருமால்.

409. (உ)வீரன்-ஸ்ரீவர்த்தமானர்; "வீரன்பிண்டியே" என்பர்பின்; 3012.சமவசரணம் அவருடையதாள் நிழலாகக்கூறப்படும்; "அறிவனடிக் கீழ்" 27.

410. (க) நம்பன்-சிவகன். நாகம்-பவணலோகம். (ச) வெம்புதல்-விரும்புதல்; "வெம்புஞ் சுடரிற் சுடருந்திருமூர்த்தி" 2.

411. (ரு) அகலிய - அகன்ற. (உரை) சீவகன் வீணையில் மிக்க பயிற்சியுள்ளவனென்பதை, "வீணைக்கிழவன்"(28),"வீணைவித்தகன்"(1002), "வீணைவேந்து" (2598) என்பனவற்றாலுணர்க.வீற்றுத்தெய்வம்: (சிலப். உ: சுசு-எo; அடியார்.) வீரமகள் - வீரலக்ஷ்மி. மாதங்கி - ஸங்கீதத்தின் அதிதேவதை; 550.

413. (ரு) கன்று உள்ளி- கன்றை நினைத்து.

415. (ரு) புள் - ஈண்டு ஆந்தை; 450-ஆம் கவியுரையைப்பார்க்க.

416. (ச) சுடுவில் - சுடுதலால்.

415-7. மிதிலையிலிருந்து புறப்பட்டபொழுது தசரதருக்கு ஒருகணி நிமித்தஞ்சொன்னதாகத் தெரிகிறது; கம்ப. பரசிராம. சு.

418. (க) மூசுதல் அருத.(உரை) முருகக்கடவுள், குறிஞ்சிநிலத்திற்குத் தெய்வம்.

419. (க) கோங்கமலர்கள், பொன்னிற முடையவை.

420. (ச) முள்குதல் - முயங்கல்; "செவ்வாய் பயந்ததேன் பருகிமுள் குஞ்சிலைவலாய்" 687, "கண்ணின் னெழுதிமுள்கு மொய்ம்பன்" (1413), "முள்கப் பூம்பட்டழித்து" (1986) என்பவற்றாலுணர்க. புது மலைவாளப்பிள்ளைகள் போருக்குச்செல்லுதல் மரபன்றென்பர்.

422. (ரு) பள்ளி -இங்கே இடைச்சேரி; "பள்ளி யாகுல மாக" 426.

425. (க) 'எம்மனைமார்' என்றது கன்றுகளை; அன்மை விளி. (மு) முல்லை. கஉ - சு.

426. (ச) சேற-தேன்; இதனடியாக வந்த பெயர் சேரையென்பது.

427. (ச) 'இறையணிகேட்க' என்றதனால், வாயிலோனுக்குச் சொன்னமை பெறப்பட்டது. (உரை) இங்கே 'புன்புலத்தைப் போய்' என்றதுபோல, 'காதத்தையோடி' என்பர் பின்; 510. (உரை) போகட்டார்-போட்டார், "வண்டுபோகட்டமலர் போன் மருண்மாலை, யுண்டு போகட்டவுயிர்க்கு" நள. சுயம். ககசு.

429. (௩) அரசர் கையிற் செங்கழுநீர்ப் பூவைப்பிடித்திருத்தல் மரபு; 1887, 2358.

431. 'மிலேச்சர்கள் வாயில் காப்பதுண்டென்று பழைய நூல்களால் தெரிகின்றது. நிகழ்ந்த செய்திகூறிய வாயிலோனைக்கோபித்தல் இராசதர்மமன்றென்பர்.

432. (௩) மீட்க என.

433. (ச) நெளி - நெளிய.

434. (உரை) 'முன்' என்றது, 5-ஆம் கவியின் உரையை. துத்தரிக்கொம்பு - ஒருவகை ஊதுகொம்பு; "கொம்பு துத்தரி கொட்டு முறைமையன்" கம்ப. கங்கை. ௩௦.

435. உரையிலுள்ள, 'வீட்டினர்' என்பது, அடுத்தசெய்யுளிலுள்ளது. கைவந்தவர் - மிகத்தேர்ந்தவர்.

437. இக்கவியின் பொருளோடு, 450 - ஆம் கவிப்பொருள் ஒற்றுமையுடையது.

438. (க) இடையர்க்கு முல்லைமாலை உரித்து.

444. (க) பண்ணி - ஆயத்தஞ்செய்து. (௩) கலி- முழக்கம்.

447. (உரை) 'ஓடிப் போங்கோள்' என்பது, 'ஓடிப்போங்கள்' என்பதன் மரூஉ; தொல். வினை. உகூ-ஆம் சூத்திரத்திற்குக் கல்லாடரெழுதிய விசேடவுரையாலும் இது துணியப்படும். நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி, ௫அ:—"புரப்பர்மத், தன்னுங்கோனூரரவிற் றுமோ தரன்பள்ளி, கொள்ளுங்கோ னூர்மருவுங் கோள்" என்பதனாலும் அறிக; இங்ஙனம் பின்வரும் சொற்களையும் இப்படியே அமைத்துக் கொள்க. சிழ்க்கையை, 120-ஆம் கவிக் குறிப்பாலுணர்க.

449. (க - உ) சூளா. அரசியற். கஙச; கம்ப. நாகபாச. உகூ௩.

450. (க) இப்படியேசிறியதலையை, முனித்தலை, புருத்தலையென்று வழங்குவர்.

451. "பெயலுழக் கணைசிதறி" (மதுரை. கஅ௩); "காலமாரியினம்பு தைப்பினும்" புறநா. கஅ௭.

453. (க) "மூன்று தலையிட்டமுப் பதிற் றெழுத்தின்" (தொல். புணரியல். க.) (உ) 'மெய்நூறு என்பதில், நூறு, பலவென்னும் பொருளில்வந்தது.

454. (உரை) 'மேல்' என்றது, காந்தருவதத்தையாரிலம்பகத்தை. அரசர்-கட்டியங்காரன்கட்டளையால் அழுக்காறுற்றுப்போர் செய்தற்கு வந்தவர்கள். பொன்னுற் பூண்ணவனுருவமாக்கியது முதலியவற்றை, 820-ஆம் பாடல் முதலியவற்றாலுணர்க.

455. (க) அற்றம்-அறிதல். (ச) நாணுற்றலந்தான்-கட்டியங்காரன்.

456. விராடபுரத்திலிருந்த பொழுது அருச்சுனன் நிரைமீட்டசெய்தி இக்கே அறியற்பாலது.

457. (௩) விடலை: ககூ-பிராயத்திற்கு மேல், ௩௦ - வரையுங்கூறப்படும் ஆண்பாற்பருவப்பெயர்; பன்னிருபாட்டியல், உகூஉ - ஆம் சூத்திரம் பார்க்க.

458. (க) சில்அரி-சிலவாகியபருக்கை

464. (உ) பயம் - பிரயோசனம்

466. (ச) சினவுநர்-கோபிப்பவர் பகைவர்.

470. (௩) மகளிர்க்குரிய குணம் நான்கனுள்ளே நாண் முதலாவது.

471. தேரினைவழிபடுதல் மரபு; கம்ப. தேரேறு. உச.

475. (ச)"சிறுகாலைப்பட்டபொறியும்" நாலடி. ௧௧௦.

476.(க)'கோலிழுக்குற்ற ஞான்று' என்றது, சச்சந்தனுடைய மரணகாலத்தை. (ரு) மால்வழி - சச்சந்தனுடைய சந்ததி.

481. (உ) பாதாலம் - பாதாளம்.

482. (உரை) நப்பின்னை: இவரை நீளாதேவியின் கூறென்பர்; இப்பெயர் பின்னை யெனவும் வழங்கும். நச்செள்ளை: பதிற்றுப்பத்தில், சு - ஆம்பத்துப்பாடியவர்; இப்பெயர், செள்ளையாரெனவும் செள்ளையெனவும் வழங்கும்.

484. (உரை) பதுமுகன் வணிகர் குலத்திற் பிறந்தவன்; 1791-ஆம்பாடலானுணர்க; சூட்டு, மகளிர்க்குரித்து; 624.

493. (உ) சங்கு - ஒருபேரெண்; புறநானூறு ௧௮ - ஆம் பாட்டினுரையையும் சூளாமணிசீகளி ௧௨ - ஆம் தொகுதி, ௧௧௫ - ஆம் பாடலையும் பார்க்க.

494. (உரை) அசம்பு: "அசம்பு பொன்"(533) என்பர். குளிர்தல்-தங்குதல்; "குளிருமரப்பலகை" "குளிர்சாகரதத்தனென் பான்" 1782, 1973.

495. (க) இம்மியரிசி மிகவும் சிறியது 43 - ஆம் பாடற் குறிப்பையும், "மாகமேல்" (கந்த. காசிபன்புலம்புறு. ௨௧)என்னும் பாடலையும்பார்க்க.

500.(சி) எனும்-என்னும்; சிறிதும்; 1688, 2014; "வழுவெனும்பாரேன்" சிலப். ௧௬ : ௬௬.

501. (உரை) கம்மகாரர் - பிறர் தொழில் செய்வோர்; 495.

505. (உரை) ஒருப்படுத்தி - ஒருமைப்படுத்தி; 2922 - உரை.

513. (ரு) "ஒடிமரம்பற்றி" மணி. ௧௬ : ௧௪.

515. (ரு)"செவ்வனமுரையென" மணி. ௧௬ : ௬௫.

516. (க) "ஊர்திரை யுதைப்ப" மணி. ௧௬ : ௧௪.

519 (க) மதவலி - மிக்கவலியையுடையான்.

523. (உ) தாழும் - விரும்பும்.

526. (உரை) இருட்சி-இருளுதல்.

527. (ரு) பூரித்து -. நிறைத்து.

531. (ச.) நள. சுயம், ௧௦௪; காஞ்சிப். கழுவாய். ௬௫ - பார்க்க.

532. (உரை) சந்திரமண்டலம் சூரியமண்டலத்திற்குக்கீழே யுள்ளதென்பது சோதிடநூலாருடைய கொள்கை.

535. (க) தானவர் - வித்யாதரர்; "சாமமார்க் திலங்கு மேனித் தானவனொருவன்," "விச்சா தரவேந்தன்" மேரு. சீஞ்சயந்தன். ௬, ௭.

537. (க) மாடிய மென்பதற்குத் தலைச்சிராவென்று பொருள்கூறுவர், சைனர்.

538. (ரு) 'எள்ளுப்போட இடமில்லை' என்பது ஒரு பழமொழி.

544. (உ) ஊழ் - விதி. (உரை) ஏற்றிழிவு - உயர்வு தாழ்வு.

547. (உ) "நமரங்காளுய்யேன்" (கூர்ம. கண்ணன்பூமி. ௧௬.)(உரை) அரசமுல்லை - அரசனுடைய இயல்பின் மிகுதி; காவன்முல்லை - அரசன் உலகத்தைக்காத்தலின் மிகுதி: (பு- வெ. வாகை. ௧௭, ௨௪) இவ்விரண்டுக்கும் அறிகுறியாகமுல்லைமாலைசூடுதல்மரபு.

558. (உரை) கைச்சுரிகை - கைக்கத்தி; கட்டிலினுடைய மேற்கால்களில் உட்டுளையமைத்து அவற்றிற் கத்தியைச்செருகி வைத்திருத்தல் மரபு. இதுபெரும்பாலும் அரசர்க்குரியவழக்கம்.

565. (ச) உறுதிச்சுற்றங்களுள் ஒன்றாதலின், படையைச் சுற்றமென்றார்.

571. (உ) "புயலன் றலர்சடையேற்றவன்" (திருச்சிற். ௨௪௦.) (உரை) தகைவு - தடை.

573. (ரு) "நீவிரநிருதர்" கம்ப. வாலிவதை. ௧௫௪.

585. இதன் இரண்டாமடிமுதலிய வற்றை, 593 - ஆம்செய்யுள்ஒத்துள் ளது.

587. (க) "செம்மற்கென்றவனொ ருப்பட" பெருங். ங: உஉ, ஙஎ.

588 (உ) நீலமணியின்தன்மை பாலால் ஆராய்ந்து கொள்ளப்படுமென் பது, 1325 - ஆம் செய்யுளாலும்விள ங்குகின்றது.

589. (க) "எய்யாமையதீர்ந்து" (மணி. உங: கoங.) (ச) நைடத. அன்னத்தைத்தூ து. க.

590. (உ) வான் நக்கிடும்.

591. (ங) சைனர் இரவிலுண்ணு ராதலின், 'வல்சி' என்பதற்குப் பகற் சோறென்றுபொருள்கூறினர்; 1939.

592. (உரை) குந்தாலி, கூந்தாலி யெனவும் வழங்கும்.

598. (ச) நேமி-திருமால்; "நேமி யோ குலிசியோஙகிழ் கணிச்சியோ" (கம்ப. பிணிவீட்டு எo.) (உரை) நாசி - வீட்டின் ஒருறுப்பு; "கட்டளை நாசியொடு கபோதங்காட்டி", "நாசி யுமுகடும்", "வித்தக நாசிவேண்டிடத் திரிஇ" (பெருங். க : சo, கச ; க : சஉ, ஙஎ ; உ : கூ, ருஎ.) " மாளிகைமேகந், தொடுகுடுமிநாசி தொறுந் தொடுத்தகொடி" (பெரிய. திருஞான. கஉ); "தத்தொளிய நாசிக டயங்குவன" காஞ்சிப். திருக் கண். உoஅ.

600. (உரை) சோதிடர் - சோதிட் கர்; "அந்தர வாழ்க்கையர் சோதிடர் தாங்களு மைவகையர், சந்திரர் சூரியர் கோளவர் நாளவ ரல்லவராய், மந்தர மாமலை தன்னை வலமுறை சூழ வருஞ், சிந்துபு நின்றசொல் லாதே விளங்குந் திறலவரும்" நீல. தரும வுரை. கூங.

601. (ச) வியம் - ஏவல்.

608. (க) எடுப்பி - எழுப்பி.

611. (க) செய்கழல்-செய்யப்பட்ட வீரக்கழல்; வெளிப்படை ; 778: 4. (உ) வட்டு - விளையாட்டிற்குரிய ஒரு வகையுருண்டை ; "வல்லாளுடிய மணிவட்டேய்ப்ப" 983.

613. (ச)"இடையு நடையு மொரு பிடியென்னவெழுதுவனே" சீகாழிக் கோவை, கசச.

614. (க) பிறந்தநாளில் மங்கலமாகிய வெள்ளணியணிதல் மரபாதலின், 'வெள்ளணியணிந்தருளான்று' என்பது, பிறந்தநாளைப் புலப்படுத்திநின்றது ; இதனை அக்கப்பொருளிலணக்கனித்தாலுமுணர்க; வெள்ளணியணிந்தோரை, "மங்கலவணியினர்" என்றார் முன் னும்; 603.

616. (க) ஒருவில் - எட்டுச்சாண்; இந்த அளவுப்பெயர் விகற்பத்தைச்சைன நூல்களிற் பரக்கக்காணலாம்.

620. (க) "வரைசெறிந்தனையசெம் பொன் மஞ்சங்கள் மலிரத்தோன்றி" சூளா. சுயம். உசo.

621. (க) யோகம் - நூல்; சைன நான்மரபு.

622. (உ) "தேறுவெள்ளி லோத் திரப்பூம் பொருக்கரைத்த சாந்தும்" (வநாயக. திருமண. கஉக); சோற்றுப் பொருக்கென்பதனாலும், பொருக்கின் பொருள் புலப்படும்.

623. (உரை) ஓமாலிகை - ஓமாலி காதிரவியமெனவழங்கும்; "பத்துத் துவரினு மைந்து விரையினு, முப்பத் திருவகையோமா லிகையினு, மூறின நன்னீ ருரைத்த நெய்வாச, நாறிருங் கூந்த னலம் பெற வாட்டி" (சிலப். கூ: எகூ - கூ); "ஒப்பு முறையமைந்த வோமாலிகையும்," "ஒண்வினைப்பெ லித்த வோமாலிகையும்" (பெருங். க சக, கஉஎ; உ: ரு,ஙஉ); "துவரினுட் விரையினுநு, மொளிமணி கழிஇட தொப்பவுவப்பொடுக்திமிர்ந்து" (நைடத. சுயம். கoக); "புழுகுசட்டங்... குக்குல்", "கூறியவோமாலிகை யென்னுன் கொடு...ஒற்றுடை புரிந் தார்" (விநாயக. திருமண. கஉo,

கஉக); "ஓமாலிகையுமுரிஞ்சி" திருத்தணிகை. வள்ளி. கஉஅ.

626. (உரை) சிச்சிலி-சித்திரிப்பறவை; மீன்கொத்துங்குருவி.

632. (ங) திருவிளை. ரு: அ.

633. (ச) முன்னினார் - முற்படச் சென்றார்.

642. (உரை) அறைபோய-ஓட்டையான, அறிவற்ற. "அறிவறைபோகிய பொறியறு நெஞ்சத்து" சிலப். உ௦: உரு.

647. (உரை) அவைப்பரிசாரம்: "அவைப் பரிசாரங்கடத்துளி போக்கி" பெருங். கக ஙஎ, ககக.

648 - 650. காஞ்சிமலர்த்தாது நீலநிறத்ததென்பதை, "மீனேற்றுக்கொடியோன்போன், மிஞிறார்க்குங் காஞ்சி" (கலி. உசு), "குயிற்கு ழாங்குடை காஞ்சியின்கோமளத் தாது, வெயிற்கு ழாமறைத் திருவிசும் பிருள்செய" (காஞ்சிப். திருக்கண். உக) என்பவற்றாலு முணர்க; இக்கவிகளின் பொருள், "குறுஞ்சினைப்புன்னை நறுந்தாதாடி" (பெருங். ங: சு, க) என்பது முதலிய அடிகளில் ஒருவகையாக அமைந்திருத்தல் காண்க.

648. (கூ) அலம்வந்து - சுழன்று.

652. (ங) குறள், ச௦உ.

657. (உரை) கின்னரமிதுனங்கள்-ஒன்றை யொன்று பிரியாதனவும் இசையறிவிற்சிறந்தனவுமான ஆணும் பெண்ணுமாகிய ஒருவகை இரட்டைப் பறவைகள்; "மன்னரஞ்சு மதுசூதன் வாயிற்குழலினோசை செவியைப் பற்றிவாங்க, நன்னரம்புடைய தும்புருவோடு நாரதனுந் தந்தம் வீணைமறந்து, கின்னரமிதுனங்களுந்தந்தங் கின்னரந் தொடுகின்றிலோ மென்றனரே" (பெரியாழ்வார். ங: சுரு); "கின்னரமிதுனங்கள்கிளர்ந்துதோன்றுமே" (சூளா. துறவு. சு௦); "மங்கையர் பாடல்கேட்டுக் கின்னர மயங்குமாதோ" (கம்ப. வரைக்காட்சி. ஙக); "பாடுகின்றன கின்னரமிதுனங்கள் பாராய்" (ஷை சித்திர. கஉ); "பண்டரு கிளவிக் கின்னர மிதுனம் பாற்சுவை மருட்டுபாட்டயரும்" (கூர்ம. சம்பு. ருச); "கின்னர மிதுனம் பாடலுக்குடைந்து" நைடத. சுயம். கூச.

658. சீரத்தைவீணையாகக் கூறுவர், இசை நூலார்; சிலப். ங: உசு - ஆம் அடியில், "மிடறும்" என்பதனுரையைப்பார்க்க.

660. (ங) போதர-வர.

665. (ச) ஏற்றை - ஏறு.

666. (ங) தும்பு-சிம்பு.

667. (உரை) கல்லேந்திநீக்கியதை 690-ஆம் பாடலாலுணர்க.

670. (ச) பட்டது - நிகழ்ந்தது.

671. (ங) திங்கள்விரவிய பெயரினன் - புத்திசேனன்; இது லக்ஷித லக்ஷணை யெனப்படும்; அஃதாவது ஒரு சொல், தனது பரியாய நாமமாகிய ஒன்றைக்குறிப்பிட அது தன் பொருளினால் ஒன்றைக் குறிப்பிடுதல்; 'எட்டினோ டிரண்டு-பத்து; பத்தி' என்றாற் போல்வது.

672-5. இவற்றின் விசேடவுரையிலுள்ளவை, சிலப்பதிகாரம், அரங்கேற்றுகாதையின்உரையால்விளங்கும்.

673. (ங) குருதி - சிவப்பு.

674. (ச) 'அநங்கன்' என்றார், அங்கமில்லாதவனாகிய சித்தனென்றுங் குறிப்புத்தோன்ற; "அருவாய்ப் போதலழகிதோ" (3021) என்பர் பின். இப்பொருள், சைனரில் கன்னபரம்பரையில் வழங்குகின்றது.

675. (உரை) கமலவர்த்தனை: கமலவட்டணை யெனவும் வழங்கும்; பரி. கசு: கக - ஆம் அடியின் உரையையும், மணி. 7: 43 - ஆம் அடியையும் பார்க்க.

676. (க) துவலை - துளி.

678. 'ஒருதாய்க்கு ஒருபிள்ளை' என்பது ஒருபழமொழி.

687. (க) கன்னி - அழிவின்மை.

696. (௩-௪) "தோடு பெய்தொரு காதினிற் குழைதூங்க" (தே. சுந்தர. பனையூர், ௧); "துளைபடு குழையி லொருகுழை யணிந்து" பாரத. நாடு கரந்து, ௨௬.

705. (௧) பூந்தவிசி னுச்சிமேனடந்து: நைடத. சுயம். ௧௦௮.

710. (௧) குட்டம்-ஆழம். (உரை) தரங்கித்து - அலைவீசி; "அகந்தரங்கித்து" அரங்கத்தந். ௨௧.

714. (௩-௪) சூளா. சுயம்.௬௪.

717. (௨) "பல் கேள்வித்துறை போகிய" மதுரை. ௭௬௦.

723. (௪) ஓர்த்து: சிலப். ௨௭: ௨௫௧.

725. (௧) கருவிவானம்: குறுந். ௪௨; புறநா. ௧௫௧, ௨௦௪.

730. (௩) யாழ்பண்ணி: நைடத. சுயம். ௬௪.

731. (உரை) "உட்கு நாணு மொருங்கு வந்தடைதர" பெருங் ௩: ௬, ௮௭; ௪: ௧௩, ௧௦௦.

737. (உரை) 'குன்று' என்றது, முன்கவியிலுள்ளதனை.

741. (௨) "ஒள்ளிய னொருமகன்" 2931. (௩) 'கள்ளாவா புலியைக் குத்து' என்பது ஒருபழமொழி.

743. (௨) "குழங்கன்மாலைவீழ" (கூர்ம. கன்னவை. ௭௧); "வண்டு முல் குழங்கன்மாலை" ஷி. கன்னன் மணம். ௧௨௬.

744. (௧-௨) கம்ப. மாரீசன்.௭௫.

745. இடைநைதல்: நைடதம், சுயம். ௧௬௫.

747. (உரை) ௪௬௭ - ஆம் குறளின் விசேடவுரையிற் பரிமேலழகரெழுதியிருப்பவை இங்கேயறியர்பாலன.

748. (உரை) யானை இசைக்கு வணங்கல்: பெருங். ௧: ௩௫, ௧௦௦-௧௦௧-ஆம் குறிப்புரையாலறியலாகும்.

749. (௪) தா - வருத்தம்.

758. (உரை) ஒன்பதுசுவைகளுள், ஒன்று அதிகரித்தபொழுது மற்றொன்று கெடுமாதலின், இங்கே 'வீரத்தாற்காமங்கெட்டது' என்றார்; இப்படியே ஒன்று மற்றொன்றைக் கெடுத்ததாகக்கம்பருங்கூறுவர்; கம்ப. பாசப். ௨௩.

776. ௭௦௮ - ஆம் குறள், இச் செய்யுளுடன் ஒப்பு நோக்கற்பாலது.

778. (உரை) பொற்றகடுகளைத் தம் வாயுள் இட்டுக்கொண்டு தலைவனை வாழ்த்துதல்முதலியவற்றை, 'லோகாபிலாரம்' என்பர் வடநூலார். பாடு குறித்து - இறத்தல்குறித்து; 2303-ஆம் பாட்டைப்பார்க்க.

779. (௪) இயமரம் - ஒருவகை வாத்தியம்; பதிற். ௫௦.

787. (௪) முடித்திலகம்-முடிமணி.

790. (௪) "காழமை குழிசிக்கதிர்த்தவாரத்து" பெருங். ௧: ௪௮, ௧௮.

800. (௧) குறுந். ௫௪.

809. (௧) "முற்றிய புளகச் சூழி முகம்புதைத் திலங்க வீழ்த்து" சூளா. கல்யாண. ௧௦௫.

812. (௨) கருமை - பெருமை; சிலப். ப். ௧௭௧, ௩௮௮.

815. (உரை) ஒருப்பட்டு-துணிந்து.

819. (௧) முழுமெய்: மார்பென றங் கூறப்படும்; சிலப். ப. ௧௨௩, ௧௫௧, ௧௭௨.

820. (மு) இங்ஙனம் பரிகாரம்செய்தல், ஶ்ராவகாசாரநூல்விதியென்பர்.

821. (௩) வலம்புரி - வலம்புரி வடிவமாக உலோகத்தாற் செய்யப் பெற்ற ஒரு பாத்திரம்; சங்கமன்றென்பர்; "ஆவே துன்னடி வாரப் புனல்" திருக்கலம்பகம், ௪௫.

833. (உரை) விரற்சாடு - விரற் புட்டில்; விரற்கவசம்; கலி. ௭ - ஆம் செய்யுளின் உரையைப் பார்க்க.

834. (௪) சுக்கிரன் களத்திரகாரகனாதலின், சுக்கிராஸ்தமனத்தில் விவாகம்செய்யலாகாதென்பது விதி.

838. (க) "படையமை சேக்கை", "இணைபடநிவந்த நீலமென்சேக்கை" கலி. கம, எஉ என்பவற்றின் உரைகளைப் பார்க்க.

852. (ச) சேடர் வரலாறு, பிரதாபருத்திரியத்திலுள்ளதென்பர். காஞ்சிப். திருக்கண். கஅசு-ஆம் பாடலைப் பார்க்க.

862. (ரு) சிலமென்பது யானையின் நல்ல இயல்பு; "சீலமில்லன சினக்களிறகற்றுமின்" (2392), "சீலவிகற்பந்தெரிந்தனனுரைத்தலும்" (பெருங். க : ருஉ, ருசு) என்பவை விளங்கச் செய்யும்.

863. (ரு) சூளா. நகர. கச.

876. (உரை) ஏறட்டுக்கொண்டு-மேற்போட்டுக்கொண்டு.

878. (உ) வென்றான் - பிரகிருதியின் ஒருவகையாகிய காதிகன்மங்களைவென்றவன்; இங்கே அருகன்.

879. (ச) சூதாட்டத்தை ஜயமென்பது வடமொழிவழக்காதலின், 'சூது' என்பதற்கு வெற்றியென்றனர்.

880. (க) இட்டிடை - சிற்றிடை; "இட்டி தாயினும்" குறள். சஎஅ.

891. (ரு) ஏவல் - சொல்லல்; 1547, 3036.

892. (ரு) வண்டும் தேனும் ஒரு குணத்தனவென்பதை, "என்றன தேனின மிரங்கு வண்டொடு, சென்றன" (3034) என்பதனாலுமுணர்க; மணி. கஅ: சரு; நைடத.நாடு. கஅ பார்க்க.

892 - 3. இக்கவிகளின் உரையிலும், "பல்காற்பறவை" (பெரும்பாண். கஅரு) என்பதனுரையிலும் காணப்படும் குறிப்புக்களால், இந்த இரண்டுநூல்களுக்கும் உரைசெய்வதன் முன்னரே நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்திற்கு உரைசெய்தனரென்று தெரிகிறது.

894. (ரு - ச): 3033; "அந்தரமருங்கின் வண்டு கைவிடாச், சுந்தரப்பொடியுஞ் சுட்டிச் சுண்ணமும்" பெருங். க: சஉ, எஉ - ரு.

897. (உரை) வெதிரேகம்-எதிர்மறை.

908. (உ) பொன்றுஞ்சாகம்: 14, 1922.

911. (உரை) பொன்னிலேபிறத்தல் - ஹிரணியகர்ப்பம்; அஃதாவது பொன்னாற்செய்யப்பெற்ற பசுவின் வாயினுள்ளே ஒருவன் புகுந்து பின்பு வெளிப்பட்டு, அப்பொன்னையெல்லாம் தானஞ்செய்துவிடுதல். இஃது அரசர்க்குரியவிதி.

912. (ரு) இதனால், இராசமாபுரத்தில் நேமிதீர்த்தங்கரருக்குக் கோயிலிருந்ததென்று தெரிகிறது.

916. (உ) நைடத. அன்னத்தைத் தூது. க.

924. (உரை) பரிகரிக்கின்ற - காக்கின்ற; இச்சொல், 'பரிக்ரஹிக்கின்ற' என்பதோவென்று கருதப்படுகின்றது.

928. (உரை) புலிங்கம்: நன்மயிலை; நன். வி. உயிரீற்றுப். உகு, மேற்.

930. (உரை) காரன்னமுன்மையை, "யவனர், ஓதிம விளக்கு" (பெரும்பாண். ருகசு - எ) என்பதனுரையானும், "காரனங்குலாய்ப் படிந்த காட்சியொப்ப" (காஞ்சிப். கமுவாய், கசு) என்பதனாலுமுணர்க.

933. (உரை) பஞ்சநமஸ்காரமந்திரங்கள் இன்னவென்பதை 14-ஆம் செய்யுளின் குறிப்பாலுணர்க.

940. (ரு) "மீளிமை மைந்தர் பதின்மரை" கூர்ம. கன்னான் சிவ தீக்கை. உ.

942. (உரை) தருமத்தை விடைவடிவமுடையதென்பர்; 3100-ஆம் கவியினுரையைப் பார்க்க.

948. (உரை) பரமாகமம் - இங்கே சினாகமம். உயிர்போகும் கதி பலவகை; வித்தருடைய உயிர்போம் கதி, அவிக்கிரககதி; அதற்குஸமயம், க; ஸம்ஸாரஜீவனுடைய உயிர்போம்

கதி விக்கிரககதி ; அது மூன்றுவகைப் படும்; அவற்றுள், முதலாவது பாணி முக்தாகதி ; அது (ட) என்பது போல் ஒருவளைவுடையது ; அதற்கு ஸமயம், உ; அது,தேவருக்கும் மனித ருக்குமுரியது ; இரண்டாவது இ லாங்கலகதி; அது, (ப) என்பதுபோல் இரண்டுவளைவுடையது ; அதற்கு ஸம யம், ங ; அது விலங்குகளுக்குரியது; மூன்றாவது கோமூத்திரகதி ; அது, மூன்றுவளைவுடையது ; அதற்கு ஸம யம், ச ; அது நரகருக்குரியது; இவ் விஷயம் தத்துவார்த்தசூத்திரமென் னும் நூலிற்கூறப்பட்டுள்ளதென்பர்.

951. (ச) ஓதி- ஞானம்; பெருங். உ: கக,கசுக-ச; கந்த.சுரம்புகு. உச.

952. நரகருயிரை இரும்புயிரென் றும் தேவருயிரைப் பொன்னுயிரென் றுங்கூறுவர் ; 3107 - ஆம் பாடல் முதலியவற்றைப்பார்க்க.

954. (உரை)தேவர்க்கும் நரகர்க்கு முள்ள சரீரம் வைக்ரிக சரீரம் ; அதற் குத் தடையும் ஆயுதச்சேதமுமில்லை ; இமையாமை, நிழலின்மை, மாலைவா டாமை, கால்நிலந்தோயாமை உண் டென்றும், மனிதர்க்கும் விலங்குகளு க்குமுள்ளசரீரம் ஔதாரிகசரீரமென் றும் அவற்றிற்கு ஆயுதச்சேதமுதலி யன உண்டென்றும் சொல்லுவர்.

956. (ங) வென்றவர் - பிரகிருதி களாகிய காதி, அகாதியென்னும் இரு வகைக்கன்மங்களையும் வென்ற வித் தர் ; "எண்வினையுமகற்றியின்பக் கட லாக்கித், தருமால்" (961) என்பத னலுமுணர்க.

958. (ச) கோளுடைக்கிழமை - ஞாயிறுமுதலியவை ; ஏழுகோளுக் கும் அவற்றிற்கும் மிக்கவுரிமையுண் டென்பர் ; கிழமையென்பதன்பொரு ளே அதனைப் புலப்படுத்தும்.

960. நாய் தேவனானமை: " தேவ னு நாயாகும் தீக்காட்சி யானும், தே வனு நற்காட்சி யால்" அருங்கல.நஅ.

961. (உரை) எண்வினை: ஞானாவ ரணீய முதலியன. திருமால் இரணி யனைக் கொன்றமை, அகளங்காஷ்ட கமென்னுநூலில் வந்துள்ளதென்பர்.

963. (க - உரை) 'மந்தரத்தின் நெறியில இமயத்திற் கேற்றினர், அது மலையரையனாதலின்': " மேருக் குன் றத் தாரு நீர்ச் சரவணத்து" (மணி. கஅ:கஉ.)''மன்னவன் படைச்செயன் மன்னன் செய்கையாப், பன்னுதல் போல்" பாகவத. கo : க, ருள.

966. (உ) உவறுநீர் - ஊறுநீர் : "உவறுநீருயரெக்கர்" (கலி. காஉகூ) ; " ஒண்செங்குருதி யுவறியூஉ டருந் துப்பு " அகநா. ங.

971. (ச)"வித்தகர்கொடுத்த பித்தி கைப்பிணையலும்"பெருங்.க:சஉ,எச.

973. யானைச்செயல் : சடகோப ரந்தாதி, சஅ.

974. (ச) பெருங். க : ஙங, சரு - ருo.

982. (க) இவர்ந்த - விரும்பிய.

984. (க-உ) கஞ்சனுக்கு நட்புள்ள தெய்வம் ஏழு;அவை பூதனை, கழுதை, குதிரை, மருதமரம், பனை, யானை, சகடமென்று கூறப்படும் ; கண்ணபி ரானைக் கொல்லவந்தது யானையாகிய தெய்வம்; அந்தயானையைக்கொல்லா மல் விட்டு விட்டமையின், கண்ண பிரான், கரிவாதனுயினனென்பர்; இச் சரிதம், ஸ்ரீ புராணத்தில்? 22-ஆம் தீர்த்தங்கரர் புராணத்துள்ளது.

990. (க - உ) நியாயங்களுள், கதம்பகோரக நியாயமென ஒன்றுண் டு ; அது, கடம்பின் அரும்புகளின் சேர்க்கையாலுண்டாயது போல்வதெ ன்பர் ; அது, கதம்பமுகுள நியாய மெனவும் வழங்கும்.

995. (உரை)படைக்கலவித்தை கற் பார், இலக்கத்தில் அம்பை எய்து கற்றல் : "இளம்பல் கோசர் விளங்கு படை கன்மா,றிகலின ரெறிந்தவகலிலை முருக்கு" புறநா. கசுகூ.

996. (உ) "கருதின்வே முள்ள மும்" கம்ப. தாடகை. ரு.

998. (ரு - ச) 'என்னில்காம மெரிப்பினுமேற் செலாப் பெண்மை யும் நாணும்' சிலப். சு: கoக-கo; அடியார். உரைநடை.

1002. (க - உ) பாரதம், வேத் திரகீய. ரு. (ச) "ஆறு விசும்பி னுகாய கங்கை" மணி. பதி. கஎ.

1009. பிற்கூலத்திற்கூகாதாகிய ஒப்பனைக்கு இக்கவியை மேற்கோள் காட்டினர் நச்சினு ர்க் கினி யர்; தொல். செய். சு. அo.

1015. ஆடையுடன் பிறத்தலும் மயிர் பிறந்தகாலத்திலிருந்தபடியே யிருத்தலும் இயக்கர்க்கு இயல்பென் பர்.

1021. (உ) சுவாகதம்: "சுவாகதங் கிலவென்று" திருவிளை.இரத வாதம். கரு.

1024. (உ) 1068 - உரை.

1025. (ரு) ஆவியா - ஆவித்து; கொட்டாவி விட்டு; 1651; கூர்ம. பிலக்க. ருஉ.

1027. (உரை) உயிரைக்காத்த வருத்தமென்றது, சீவகன் யானையை அடக்கியதை.

1031. (ரு) சீவகன் கற்குன்றேர் தின மை, "தொட்டெடுக்கலாவுலம் மொர் தோளி லேந்தி யாடினுன்" (690) என்பதனால் அறியலாகும்.

1035. (உரை) என்பிள்ளையென் றது, இளியை.

1038. (ரு) அவ்விருந்தாள்: "இந் நின்ற குருசில்" கம்ப. கிட்கப். கக.

1040. (ரு) "ஐயென விம்மி" மணி. உரு: கரு.

1041. (உரை) 'இவர் ஞமோரன் இவ் னூர் காண்கவென்றல் மரபு' என்ற தை, "மதிமலிபுரிசை" (கக-திரு) என் னும் திருமுகப்பாசுரத்தாலுமுணர்க.

1045. (உரை) இங்கே எழுத்துக் கியைப் பாராட்டினமை, "மொழிப் பொருட்டெய்வம் வழித்துணை யாகென" (சிலப். கo: கoo) என்பதை நினைப்பிக்கின்றது.

1048. (க) மைத்துனனென்றது மணஞ்செய்து கோடற்கு ஏற்றமுறை யை யுடையவனென்றபடி; 187 - ஆம் பாடலினுரையைப்பார்க்க.

1049. (உ ரை) 'கொண்டுய்யப் போமின்' என்றது, 981 - ஆம் கவியி லுள்ளது.

1063. (உ) முழ - முழவு.

1066. (உரை) ஆனத்தியின் இல க்கணத்தை, சிலப்பதிகாரம், கoரு- ஆம் பக்கத்திற் காண்க.

1078. (ச) மதஞ் செகித்தது - மதத்தை அடக்கியது.

1083. (உ) இங்குதல் - தங்கல்; 763, 2025; "ஆர்சூழ் குறட்டின் வேணிரத் திங்க" (புறநா. உஅரு); "இங்குகதிர் முத்தினொடு" தே. திரு ஞான. மாகறல், ச.

1085. (உரை) 'மக்கட்பிறள்' என் பது அவாய் நிலையால் வந்தது.

1086. (ரு) "தெரிகணை நோக்கி" கலி. ருக.

1087. (ச) சிவபெருமான் திரி புரதகனஞ்செய்தது கதாகோச மென்னும் புத்தகத்திற் கூறப்பெற் றுள்ளதென்பர்.

1089. (ச) "இழைத்துணர்ந் தீண்டிய கேள்வியவர்" (குறள், சகஎ.) (உரை) வெள்ளிவிலங்கு, கா லிற்கிடந்தகதை :— தன்னுடையமுற் பிறப்பில், ஒருமுனிவர் அன்னப்பற வை வடிவங் கொண்டிருந்தபொழுது அவர்காலைத் தாமரைநூலாற் கட்டிய பாவத்தால், மகததேசத்தரசன்குமா ரனுகிய இராசவாகனனென்பவன், மாளவதேசத் தரசனுடையகுமாரியா கிய அவந்திசுந்தரி யென்பவளோடு சேர்ந்திருக்கையில் வெள்ளிவிலங்கைப் பூண்டானென்பது. கந்தியாரென்ப வர் இங்கே தமிழ்ப்புலமைவாய்ந்த ஒரு

பெண்பாலார். இப்பெயர் ஆரியாங் கனைகளுக்குப் பொதுப்பெயராகவும் வழங்கும்.

1090. (க) "ஆரணயுவாத்தி" மணி. கஅ: எக.

1092. (ங) "திங்க ளரவுறின்" (கலி. கசO.) (ச) "விலாவித் தன்றூல் விழவணி நகர்" பெருங். க: சஎ, உசுங.

1098. (க) "இளம்படியார் பாரா ட்ட" சூளா. துறவு. 213.

1099. முற்றில்: கம்ப. நாட்டு. உக; திருவேங்கடத்தந்தாதி, கஎ.

1102. (க) சிகை - பெண்மயிர். செய்கம் - செய்வேம்.

1107. (க) வட்டிகைப்பலகை - சித்திரமெழுதும்பலகை; வர்த்திகை- எழுதுகோல்.

1110. (ச) நாகரிகன்-பலகலைவல் லோன்; நாகரிகம்-கண்ணோட்டமென் பர் (குறள், டுஅO. பரிமேல்); "நஞ் சுமுண்பர் நனிநாகரிகர்" நற். ருடுடு.

1112. (ங) "பெருநீர்க்கருங்கட றுளுப்பிட்டது போல்" பெருங். க: ஙஅ, உக.

1115. (க) கோவை - வளைத்து; "நெடுங்காழ்க் கண்டங் கோலி" முல்லை. சச.

1117. (க - உ) "காணம் பலவுங் கைந்நிறை கொடுப்ப" மணி. உங: சஅ.

1122. (உ) "கரிபுன் விளவி னிறையழிந்தாள்" பிரபு. பிரபுதே வர்வந்த. சடு.

1124. (உ) "செழுமதித்தக்கன்" தே. திருஞான. அம்பர்மாகாளம், "படியுளார்" டு.

1125. (ங) "அறவியமனத்தராகி" 2877. (உரை) நவபுண்ணியக்கிரமம் இன்னவென்பதை, 2826-ஆம் கவி யுரையாலுணர்க. பரவைதாதண்ட வன்னம் பட்டிவிப்பிடியிதிர்த்தலை, மாதுகரவிர்த்தியென்பர்; இச்செய் யுளின் ஒப்புமைப் பகுதியையும், 1632 - ஆம் கவியினுரையையும் பார்க்க.

1135. (க) வணக்கலாற்றார் - தாழ் வித்தற்குரிய வன்மையிலார்.

1142. (ச) மிலை - காவற்காடு; "அருமிளையுடுத்த வகழி" சிலப். கங: கஅங.

1146. (ச) "ஆழ்ச்சிசொல்லிய" புறநா. கூO.

1151. (ச) "கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா. சிவானந்த. ங); "கறவைதம் பதிவயிற், கன்றமர் விருப்பொடுமன்று நிறைபுகுதர" (கலி ககக); "ஆன் கணங், கன்று பயிர் குரல மன்று நிறை புகுதர" (குறிஞ்சி. உகஎ-அ); "தனிக்கன்றுள்ளிய புனிற்றாப்போல" பெருங். உ: கஅ, கO.

1157. (உ) "வேரொடுங் கிழ்ந்து வெளவி" (2727); "கிழ்ந்தறை போ கிய கிளைகு ராமென" கந்த. மார்க் கண்டேய. அசு.

1159. (ச) "சிந்தை நோய்கூர" மணி. கடு: எO.

1163. (ச) "வந்ததே, யாழ்கலத் தன்னகலும்" நாலடி, கஉ.

1165. கருணைமுதலிய குணவிசே டங்களால் நிகரில்லாதவனென்று கட் டியங்காரனாலும் பாராட்டப்பட்டிருத் தலின், இக்காப்பியத் தலைவனாகிய சீவகன் உத்தமநாயகனென்பதற்கு இக்கவி ஆதாரமாகவுள்ளது.

1172. (உ) "தகைக்குந ரி, லென்று" மணி. உங: ஙகூ.

1173. (க) உயரிய - உயர்த்தின்

1177. (உ) தாள்வரை, பாத சைலமென்று வடமொழியி வழங்கும்; "தாள்வரை யிழிந்துவந்து (சூளா. அரசியற். சச.) தாள்வரை, தாழ்வரை இவ்விரண்டும் வேறு வேறு சொற்கள்.

1185. (க) "வானம்பொய்யாது" மணி. உடு: கOஅ.

1195. (கருத்து) "கார்பெற்றபுல மேபோற் கவின்பெறும்" கலி. ௩அ.

1221. சாறு - இங்கே அருகனுக் குச்செய்யும் விழா.

1223. (உ-ச) சூரியனுக்குத் திலகம் உவமமாதல், "முன்னங் குடை போன் முடிநா யகமணிபோன், மன்னூர் திலகம்போல் வானிரவி - பொன் னகலந், தங்குங் கவுத்துவம்போ லுந் தித் தூமலர்போ லங்கனுலகளந் தாற் காம்" (தண்டி. உரை, மேற்) என்பத னாலும் விளங்கும்.

1229. கூந்தலைஉரிமைகூறுவதுஒரு வகைமரபு; புறநா. ௬௩, கசூ, குறுந். உ௫௫ - ஆம் பாடல்களையும் பார்க்க. (ச) "காலினேனெகினனே" 1412.

1230. (௩) 'வெறுவாய்க்கிலை கெட்டவன்' என்பது ஒருபழமொழி.

1232. (க) இதா: "அதிந்திலேனீதா" (பரி. அ); "பலிதாவென்றான் பக லோற்கி டென்றேன்"; (பொன்வண் ணத். ௩௩); இந்தா: "இந்தாவிஃ தோரிளங்குழவி" கந்த. வள்ளி, ௩௫.

1233. (க) ஊழ் - முறை.

1240. (உ) காதி-காதிகர்மங்கள்; 2713-ஆம் பாடலைப்பார்க்க. இத்தக்கர் மங்களைவென்றவன் அருகனென்பர்.

1241. (க) குற்ற - பறித்த. (ச) "ஓர்பாணிக்கிதம், பாடல் வேண்டு மென்று" பெரும். ௩: கச, உசரு-கூ.

1243. (உ) உலகம் நித்தியமென் றது தம்கொள்கையாதலின், மன்னு லகம் என்பதற்கு நிலையாதலையுடைய நிர்க்கமென்று பொருள் கூறுவர், னர். (ச) வினை - அஷ்டகர்மம்.

1246. (உரை) அங்கம் முதலியன, சனுகமங்கள். இவற்றின் விரிவை வ தப்புத்தகம், ஆகரு - ஆம் பக்கத் துள்ள கீழ்க்குறிப்பால் அறிக.

1247. (உரை) இங்கே சாரணரென்றது, ஆலயத்திற்குவந்திருந்த வைராகிய முனிவரையென்பர்.

1248. (க) விஷ்ணுவின்க்ருஹம் விண்ணகரமெனவும் இராஜக்ருகம் இராஜகரமெனவும் ஆனதுபோல, ஜினக்ருகமென்பது சினகரமென்று யிற்றுப்போலும்.

1250. (க) மகன்றில்: (302); "நீருறை மகன்றில்" (குறுந். ருஎ.) (உ) "பத்திரப் பாம்புரி யத்தகக் கலாஅய்" பெருங். ௩: ௩, கஎ.

1252. (௩. உரை) கரியபிள்ளை, கொடி - காக்கை. காக்கைவலமாதல் நல்லசகுனம்.

1256. (உரை) மெல்கி-குழைந்து.

1258. (க) "குடங்கையினொண்டு கொள்ளவுங் கூடும்" (சிலப். ௯௦: அரு); "கொண்டு நுண்டுளி தூவி" தணிகை. பிரமன். கரு.

1260. (௩) 'பதிவிரதையைக் கெடுக்கப் பிதினைந்துபோன்' என்பது ஒரு பழமொழி.

1267. (உ) கருப்புரக்கன்று: (மலைபடு. ருகசு-உரையைப்பார்க்க.) "எம் பிரான் குடங்கையான் வளர்த்த மாங் கன்றும்" காஞ்சிப். திருக்கண். கஎஎ.

1287. (உரை) 'சித்தாரூட்ச்சிந்து' என்றவிஷவைத்தியநூலொன்று தமிழில் அருகி வழங்குகின்றது.

1302. இச்செய்யுளின் பொருள், கந்த. வில்வலன் வதை. உஎ-ஆம் செய்யுள் முதலியவற்றில் ஒருவாறு அமைந்துள்ளது.

1305. (ச) கம்ப. கார்முக. கூஉ.

1311. (௩) "கட்டினிணக்கு மிழிசினன்" (புறநா. அ௨); 'நிணர்ந்து' என்றும், 'நிணர்க்கும்' என்றும் பிரதி பேதமுண்டு.

1320. (உரை) கொய்சகம்: "பட்டின் கொய்சகம்" சூளா. சுயம். அக.

1325. (௩) மாமை நிறம்: நற். கூ; ஐங்குறு. ௩௫.

1337. (க) 882-ஆம் கவியின் ஒப்புமைப்பகுதியைப்பார்க்க.

1338. (க) மாலைவகை : 2054, 2656, 2919; குறிஞ்சி. கoஅ; பரி. கக: அ0 - அ2; 2o: 2க - அ0 ; பெரிய. முருக. க.

1342-3. (உரை) 'உற்றார்க்குரியர் பொற்றொடிமகளிர்' திருச்சிற்.22டு-ஆம் பாடலுரை முதலியவற்றிற் காணப்படுகிறது.

1349. (க) "பறைந்த வம்பொற் கணைகழற் கால்" கூர்ம. மனுமரபு. 2க.

1357. (உரை) சமுதாயசோபை-எல்லாஞ்சேர்ந்த சேர்க்கையா லுண்டான அழகு.

1364 (உ)பாவை,பட்டாங்குகூறு தற்கண்வந்தது: பெருங். ஈ: எ, அச.

1367. (உரை) பிள்ளைகளுக்கு விளக்கம் காவலாக இடுதல், பிரபு. மாயையுற். ருo-ஆம் செய்யுளாலும் அறியலாகும்.

1374. (உ) "விருத்திகொடுத்துத் திருத்தகு செய்தொழில்" பெருங்.ச: ஈ, உச); "அரசொடு நட்டவ ராள்ப விருத்தி" வளையாபதி, உஎ.

1415. (க-உ) நாலடி. ஈஉக.

1419. (க) உண்டு- ஒருவகையாக வுண்டு; ஸ்யாதஸ்தி. (உ) இல்லை - ஒருவகையாக இல்லை;ஸ்யாந்நாஸ்தி.

1426. (ஈ) "மற்றுந் தொடர்ப்பா டெவன் கொல்" குறள், ஈசரு.

1427. (உரை) ஏகாந்தியாதல் : "ஏகாந்தநெறிபுக்கங்கின்மை கண்டவ னெத்த தன்றே" மேரு. நால்வரும். கட.

1432. (ஈ) முரியும் - கெடும்.

1435. (உ) "கலியுதிர்ந்து வீழ்ந் தற் றிளமை" நாலடி. கஎ.

1436. (ப) அநுங்கலச்செப்பு, உ-ஆம் பாடல் முதலியனவும், மேரு மந்தரபுராணம், முதலாவது சருக் கத்துள்ள "உரைதருபொருளின்" என்னும் பாடலும்இரத்தினத்திரயத் தை நன்கு விளக்குகின்றன; "அவ் வினைய மாறுமும்மூடமெண்மயமுஞ், செவ்விதினீக்கிச் சினங்கடிந்து - கவ் விய, எட்டுறுப்பினைய வியல்பினைக் காட்சியார், சுட்டறுப்பர் நாற்கதி யிற்றுன்பு" (அறநெறி. கக) என்ப தும் இங்கே அறியற்பாலது.

1449.(உ) வேதவாணிகன்: 'வேத வாணிகர்' பட்டின. 2oரு - எ ; ந.

1459. (உரை) 'நமோ அரஹந்தா ணம்' என்றதை மந்திரத்தியானமென் பர்.

1461. (உ) நோக்கு - அழகு; "நோயிகந்து நோக்கு விளங்க" மது ரை. கஅ.

1462. (க):1706;"செம்பொறியா கத்து", "பல் பொறிக்கொண்ட வேந் தெழிலகலம்" புறநா.கூஅ:ரு; ககூக: 2எ.

1463. (க) இறுவரை: "இறுவரை புரையுமாறிருகரை", "இறுவரை, யிழிதரும் பொன்மணி யருவி" (பரி. எ, கஅ); "இறுவரை வேங்கையி னொள்வீ"(கலி.சக); "இறுவரைவீழ் நரி னடுங்கி" (அகநா. ஈ22); இறு வரை - பெரியமலை.

1464. (உ) "கடிறு பலதிரி கான தரிடை" (பெரியாழ்வார்.க:2, க) என்பதிற் களிறு கடிறென எதுகை யில் வந்தாற் போலக் கௌிறு கெடி றென இங்கே வந்தது.

1471. (க) "நிலந்தினக்கிடந்தநிதி யமோடு" (மலைபடு. ருஎரு); "நிலந் தினக்கிடந்த நெடுநிதிச் செல்வம்" தணிகையாறு. 2ரு.

1472. (ச) உருக்குற்றாள் - உருகு தல்யடைந்தாள்.

1484. (க) வெறியன - மணத்தை யுடையன, வெறுவியன.

1486. (ச) கடாம் - கள்தானம்.

1487. (க) "மாடகறிகற்ற கூழை மௌவல்" 485.

1494. (ச) கடலளவாகிய ஆயுளை யுடையவராதலின் தேவர்கள், 'சாத

வும் பிறப்புமில்லாத் தன்மைபெற்ற வர்கள்' என்று கூறப்பட்டார்; உப சாரம்.

1501. (ச) நீங்கலுற்று - பிரியக் கருதி.

1503. (க) "முறுகித்தாழ்ந்து" காஞ்சிப். நகர. க.

1504. (க) "திருச்சே ரகலத்துப் பிரச்சோ தனன்" (பெருங். க: சஉ, கo); "திருத்துழி லகலப் புத்தேள்" காஞ்சிப். திருமண. ௩o.

1510. (ச) தக்கதுவோ-தக்கதோ.

1517. நன்: 324; "நனதானே" கந்த. மோன. ௬.

1525. (௩) நீடினள் - தாமதித்த ளள்.

1526. இக்கவியும் இதன் பொரு ளும் மிக இன்புறற்பாலன.

1529. (க) துற்ற - உண்ண.

1543. (உ) எனைவர்-எத்துணைவர். (௩-ச) 'மனைவியுமற் றொருத்திமக்க, ளொவ்வாதார் தாமில்லை யொப்பாரே நால்வரென வுரைத்தான் சான்றோனே' என் றம்பாடம்.

1547. (க) 'உவவு' என்பதற்குச் சதுர்த்தசியென்று பொருள்கூறி, சதுர்த்தசியிலும் அட்டமியிலும்பட்டி னியிருத்தலின் பயன்கள், முறையே, கச - ஆவதாகிய அயோகி குணஸ்தா னத்தை அடைதலும் எண்வினைகளைக் கெடுத்தலுமென்று சொல்லுவர்.

1550. (க) "வேற்றுவரென்று நில் லா" (2986.)(ச)"ஆற்றுணவேண்டுவ தில்" பழ. ௫௫.

1552. (உ) "பழுதெண்ணு மந்தி ரியின்" குறள் சுஙக.

1553. (உரை) விக்குள் - விக்கல்.

1558. (க) எருத்து - கழுத்து.

1560. (உ-௩) பரி. கள: கங-ச.

1561. (க) பழு - விலாவென்பு. (உரை) கைத்தளம், 1606 - ஆம் கவியுரையைப் பார்க்க. "அதள்புனை யரணம்" (சிலப். ௬௨ கஎo) என்பதற்குத் தோற்கைத்தளமென்று பொருளெழுதியிருக்கின்றனர். அது தேன்கூட்டிற்குஉவமையாதல், "கைத் தளம் போலத் தூங்கும் கமழ்பசுந் தேனிறால்", "கைத்தளமென்னப்பூத்த கருஞ்சினை வழையிற் றூங்கு,மொய்த் ததேனிறால்" (கூர்ம. சம்புத். கூச; ஷை பிலக்க. ௫o) என்பவற்றாலும் விளங்கும்.

1562. (க) ஆறை-பாறை. (க-உ): கூர்ம. சம்புத். உஅ.

1565. (உ) "சுள்ளிவேலியர்" தணிகை. நாடு. ௩௫.

1567. (உரை) உழுவலன்பொடு தோன்றிய மகளிரிடத்தல்லது சீவக னுக்கு வேட்கைநிகழாதென்று ஈண் டுக்கூறியது, "ஏகு நல்வழி யல்வழி யென்மன, மாகுமோவதற் காகிய கா ரணம், பாகு போன்மொழிப் பைந் தொடி கன்னியே, யாகும் வேறிதற் கையுற வில்லையே" (கம்ப. மிதிலை. கசஎ)என்பதனாலும் வலியுறுகின்றது.

1578. உறுகோள்: "குளங்கோடு மென்றிதுவு முறுகோளே" (கம்ப. சூர்ப்பநகை. கசo.)

1583. (௩) ஈருள் - ஈரல்.

1587.(ச)எங்கணும்-எவ்விடத்தாய்.

1590. (ச) கெடுத்து - இழந்து.

1596. (மு) "மாரியுந் திருவு மக ளிர் மனமுந், தக்குழி நில்லாது பட் டுழிப்படும்" பெருங்.க:௩௫,க௫௬-எ.

1597. (ச) 2627; "வெண்ணெ யின் குன்றந் தீயால் வெதும்புகின் றதனை யொத்தான்" சூளா. கல் யாண. கசுச.

1599. (உரை) 'பிறரிளமைபற்றி' என்பதைப் பிறரறிவின்மை பற்றியெ னத் திருத்திக்கொள்க; சிலப். கஉ: ௫க - ௩; அடியார். உரை யைப்பார்க்க.

1600. (உரை) 'மெலிந்து பின்னிற் கும்'' என்பது 1597-ஆம் கவியிலுள் ளது.

1601. (க) பரியாது - வருந்தாது.

1609. (க) "முதடியேருலக முன்னிய முனிவரும்" பெருங். க: ௩௮, உகரு.

1613. 'மகளிரைப்போலே ஐம்புலனுக்கும் வேண்டும்பொருள்களையுடைய' என்பது, "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" (குறள், ககOக) என்பதன்பொருளாகவுள்ளது.

1615. (௩) கண்கொள்ளும்-துயில் கொள்ளும்.

1622. (௨) "மதியேக் கறூட மாசறு திருமுகம்" சிறுபாண். கடுஎ.

1625. (க) "கவியினுவி தளிவிணும்...மடவோர்மருட்ட" பெருங். க: ௩௪, ௩. - ௪.

1628. (உரை) அலகம்பு : "அஞ்சம்பையு மையன்றன தசைம்பையு மளவா" கம்ப. கங்கை. ௩.

1631. (உரை) இருதலைப்புள்ளின் ஓருயிரேம் : "ஒருயிர்ப் புள்ளி னிருதலை யுள்ளொன்று, போ ரெதிர்ந்தற்று" (கலி. அரு); "இரு தலைப் புள்ளி னோருயிரம்மே" (அகநா. கஉ); 'யானென்புழி இருதலைப் புள்ளின் ஒருயிரேனுகிய யான்' திருச்சிற். சஉ, பேராசிரியருரை.

1632. (க - ௨) "நுண்ணிய நூல் பல கற்பினுமற்றுந்த,னுண்மையறிவே மிகும்" (குறள், ௩எ௩.) (௪) என்யாது ?

1639. (௪)அமைக: "ஆக வமைக வதுவேயவ்வரச நீதி"சூளா.அரசியர். உகக.

1640. (க) உற்று-கருதி; 1501.

1642. (௨) செய், உவமச்சொல் ; 2490.

1644. (க) ஓம்பி - தீர்த்து.

1646. (மு) தரோணுசாரியர்பெருமை, பாரதம், கடு-ஆம் போர். ௩௨-ஆம்செய்யுள் முதலியவற்றானறியலாகும்.

1648. "அழலி லீங்கா னனுகாஉ" (நன்னூல், பாயிரம்) என்பதை இக் கவி ஒத்துள்ளது.

1651. (௪) "தளவின் சிரல்வாய்ச் செம்முகை" (ஐங்குறு.௪௪௦.) (உரை) குருதிக்காந்தள் - செங்காந்தள் ; "குருதிக் காந்தண் மென்மலர்க் கரம் வைக்கும்" (கூர்ம. பிலக்க. கரு.)

1653. (உரை) தீவிது - இனியது.

1656. (௨) கூர்ம. சம்பு. அடு.

1661. (௩) என்றாய் - என்று கருதாய்.

1662. (௨) "ஆம்பலந் தீங்குழல்" சிலப். கஎ : "பாம்புகயிறு" என்ற செய்யுளிலுள்ளது.

1670. (௨) "மல்லிகை யொலியல் சூடினர்" (சூளா. துறவு. ௩௪) ; "ஒலியற் குழலார்" விநாயக. தேவர்கள். க௪.

1676. (உரை) 'பஞ்சகிருத்தியம்: நிவாரணம் (=தடை), சேதம் (=வெட்டுதல்,பிரத்யுத்தானம் (=எதிர்ப் பாணம்தொடுத்தல்), திராணம்(=ரக்ஷணம்), பிரகரணம்(=காலதேசத் தொழிலின் பார்வை)' என இந்த ஐந்துபெயர்களமைந்த சுலோகமொன்று மிகவும் பிழைபட்டுச் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது ; அதன் உருவம் சிறிதும் புலப்படவில்லை ; இவற்றின்பெயர் ஆகர்ஷணம், விகர்ஷணம், ஸங்கர்ஷணம், பிரகர்ஷணம், உத்கர்ஷணமென் றிருக்கவேண்டு மென்கின்றனர், வடமொழிப்புலவர்.

1677. (௩) "செருக்கொள்யானை மருப்பிடைத்திரிவும்" பெருங். ௩எ, ௩எ.

1680. (௪) வியத்தர் - வியக்கத் தக்கவர்.

1682. (உரை)'ஒன்று' என்பதன் விசேடப்பிரயோகம்: 1745; "முழுவது முணக்கிமெய்ம் முடிப்பதொன் றெனி,யொழுகுநஞ் சயின்றுயி ருலைப்ப

தோன்றுடல், பழுதற வரைகுளம் பாய்தலொன்றுசெய், திழுதைசெயிழி வினை யிரித்துமென்றெணி" விநாயக். கீர்த்திமகப். ௯0.

1686. (௩) மூவியல்: சிரோதயம், பூபதனம், தெரியுங்காலம்.

1700. (௧) "வண்டுதே சாந்தம்" (கலி. ௯௩); "மல்லிகையே வெண் சங்கா வண்டுதே" (நள. சுயம். ௬௬); "மருக்காவி வண்டுதே" காஞ்சிப். சித் தீச. ௧.

1708. (௪) வித்தைகளுள், மகா வித்தை - ௫00, க்ஷுல்லகவித்தை - ௭00, ஆகி வித்தை - ௧௨00ம். விஞ் சையர்க்குரியனவென்றும் மதிமுக மென்பது அவற்றுள் க்ஷுல்லகவித் தையைச்சார்ந்ததென்றும் சொல்லு வர். இந்தவித்தை ஆபோகினியென்று ஸ்ரீ புராணத்திற் கூறப்படுகின்றது.

1713. (௪) காமினி - கமனஞ் செய்தற்குக்கருவியாகவுள்ள மந்திரம்.

1722. (௧) சுரிகுஞ்சி - கடை சுழன்றகுஞ்சி; குறிஞ்சி. ௯0௭-௯௨; ந.

1724. (௩-௪) துவைதவனமென்ற வனத்தில் தங்கியிருந்த பொழுது இந்திரராசனென்னும் வித்தியாதர னுடைய பீலிகை கடிதற்குத் தனியேசெ ன்ற அருச்சுனன் மீண்டுவருதற்கு ஐந்துவருடம் சென்றன வென்பர்.

1725. (உரை) இருமுதுகுரவர் - தாய்தந்தையர்; சிலப். ௯௬: ௬௭; நைடத. அன்னத்தைக்கண். ௬௭.

1731. (௧) குடவரை - அத்தகிரி.

1736. (உரை) கட்டியங்காரன் மக்கள் நூற்றுவர் - தாளாங்காரகன் முதலியோர்.

1738. (௧) ஓம்படை-பாதுகாப்பு.

1741. (௪) "இலைப்புரை கிளைத் துப் பருவந்தவரிபோன்றார்" (காஞ் சிப். திருக்கண். ௯0௩); இலைப்புரை கிளைத்த லென்பது புரைகிளைத்த லெனவும் வழங்கும்; இ - வி. ௬. ௬௫௯-ஆவதன் உரையைப்பார்க்க.

1745. (௪) மலைமகள் - காந்தருவ தத்தை; "மலைமகடன்மைகண்டே" என்பர் பின்னும்; 1751.

1746. (௨) வெப்பர் - வெம்மை; "புத்தகற் கொண்ட புலிக்கண் வெப் பர்" (புறநா. ௨௬௬); இது வெவ்வ ரெனவும் வழங்கும் (பதிற். ௪௧.) (௪) இளிவருகிளவி - பொருந்தாதசொல்.

1747. (௩) "எல்லிருள் விடுப்ப வெழுந்தனன் யோகி" பெருங். ௩: ௨௫, ௧௬௫.

1752. (௧) பெரிதுநன்று - மிக நன்று.

1753. (௪) அன்றே - அப்போதே. (உரை) மூவகைப்பாவம் - செய்தல், செய்வித்தல், உடன்பாடென்பன; இவற்றை முறையே கிருதம், காரிதம், அநுமோதமென்பர் வடநூலார். 2781-ஆம் கவியுரையைப்பார்க்க.

1754 - 5. (உரை) குக்குடசர்ப்ப முண்டென்று, "நித்தியமாய" (நீல. சாங்கிய. ௪௭) என்பதனுரையாலுந் தெரிகின்றது.

1756. வணிகர் மூவகையரென்ப தும் அவர்களிலக்கணமும் பின்னுள்ள வெண்பாவால்விளங்கும்: 'இப்பர்கவிப் பர் பெருங்குடி வாணிகரென், றெப்பு டையமூவ ருரைக்குங்காற் - றப்பின், மிதியடியே ஞானமிசை நோக்கினர் கண்காணு, நிதியுடையராவர் நிலத்து' (சீவகசம்போதனை, ௬ - உலோகாதி காரம், ௪௨.) இஃது எதிர் நிரனிறை.

1760. (௪) இங்கே'எம்பி' முன்னி லைப் படர்க்கையாக வந்தாற்போல "எந்தைவல்ல தியாவர் வல்லாரெனு" (கம்ப. சடாயுகாண். ௪0) என்பதில் 'எந்தை' என்பதுவந்திருத்தல்காண்க.

1761. (௧) "நெய்த்தலைப் பால்கல ந்தனைய நேயத்தான்" (நெய் - தேன்) கம்ப. கலன்காண். ௩.

1769. (௪) வேய்ந்தரிக்கும் - சூழ் ந்துமேயும்.

1770. (௧) ஐப்பசி - அச்சுவதிநாள்.

1775. (க): புறநா. கஉச: க. (ச) சாத்து-வணிகர் திரள்; "குதிரையைக் கொண்டு குடநாடதனிற், சதிர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்" (திருவா. கீர்த்தி.); "சாத்தொடு போந்து" சிலப். கக: கசுo.

1777. (ச) "சங்குமுருடு மொலிப்ப" பெருங். ௩: கக, கசுரு.

1780. (க) ஆலி - ஆடி.

1782. (ச) சேயவள் - தூரியவள்.

1787. (உ) 'அடிகள்' என்பது பெண்பாலுக்கும் வருதலை, இந் நூல் 1792, 1884, 1909-ஆம் கவிகளாலு முணர்க; சிலப். கச: உச; பெருங். ௩: அ, ௪o.

1794. (க) யாண்டு-ஆண்டு ; வருடம்.

1798. (௩ - ச): பெருங். உ : க, கருo - ருௗ.

1808. (உரை) நீவாது - நீங்காது.

1813. (உரை) இன்னநாளிற்பிறந்த இன்னனென்றல் மலைநாட்டில் இக்காலத்தும் வழங்குகின்றது.

1834. (க) யானைப் பேச்சான மொழி: முல்லை. ௩ரு ; மலைபடு. ௩உரு - எ.

1836. (உரை) புலிமுகப்பு: (பரி. ௧o: சக-ருரு; பெருங். உ: க, கூஅ.) "உஞ்சேனைதன், புலி முகவாயில்", "கொடிப்புலி முகத்துவாயிற் கோட்டை" (உதயணகுமாரகாவ்யம், உஞ்சைக்காண்டம், எஉ, ௧oo.) இப்பெயர் இக்காலத்துச் சில இடங்களில் ஒலிமுகமென்று வழங்குகின்றது.

1837. (௩ - ச) 973 - ஆம் பாட்டின் ஒப்புமைப் பகுதியைப்பார்க்க.

1838. (௩) சிலப். கரு: ருக.

1843. (௩) தோணேக்கல்: பல்வரிக் கூத்திலுள் ஒன்றாகிய தோள்வீச்சென்பதுதோணேக்கமெனவழங்கும்; சிலப். அஅ-அகூ-ஆம்பக்கம் பார்க்க; "நரனிருந்து தோள்பார்க்க நான்கிடந்து புலம்புவதோ" சம்ப. சூர்ப்பநகை. ௧oகூ.

1844. (உ) வண்டர் - ஒவர்; "ஊழி வாழியென் றேவர் தோன்ற" (சிலப். உகூ: கஉச); "வண்டர், குழுக்க ளுங் குலை குலைந்திட", "நாணுள்ளத், தவிகை யோவரு மொருவழி யகன்றிட" திருவிளை. சக: சஅ, ருo.

1849. (ச) "விரவார் மணி நிரைக், கட்சியுட் காரியெழும்" பு - வெ. க: ௩.

1853. (௩) சேர்கும் - தங்கும்; "நிரையர்மா சேக்கு நெடுங்குன்ற நாட" நாலடி. ௩கக.

1864. அவரவர் தகுதிக்குத் தக்கபடி நடக்கவேண்டு மென்பது இதனால் அறியப்படுகின்றது.

1872. (உ) விருந்தா - புதிதாக ; "விருந்தா யடைகுறுவார் விண்" பு - வெ. ௩: கஉ.

1873. (௩) காப்பென்பது மஞ்சட்காப்பு, மாககாப்பு, எண்ணெய்க்காப்பு, மிளகுகாப்பென்று இக்காலத்தும் இருவகைவழக்கிலும் வழங்கும்; 'குரவர்க்குக் காப்புக்களைக் குறித்துப் போற்றி யென்றல் மரபு' (சிலப்.க௩: கரு - ஏ; அடியார்) என்பதும் இங்கே அறியற்பாலது.

1874. (௩-ச): மதுரை: உஉரு-அ௩.

1882. (ச) ஆத்து-பிணிக்கப்பட்டு; "ஆப்புறபாடமோ டருத்தக் கூறி", "ஆத்தவன்பின்", "ஆப்புற விரீஇய பிற்றை" பெருங். க: ௩எ, உஉ; உ: கசு, கூக; ச: ச, கூ௩.

1884. (க) " மக்களுக்கஃதோ " 2344.

1894. (க) ஆற்று - வலியில்லாத.

1897. (க) சேவகங்கொள-துயில் கொள.

1898. (உ, ச) பவழம், கவழம் : "பவழவரையன்ன திரடோள்", "கவழ மனை மேவு களியானை" (சூளா. துறவு. ககூக); "கவழக் களிப்பியன் மால் யானை சிற்றுளி, தவழத்தா னில்லா ததுபோல்" திணைமா. சஉ.

1902. (க) விலங்கின் சாதியுள், 'மகன்மா' என்று ஒன்றுண்டென்று நீல. சாங்கிய. சஎ-ஆம் செய்யுளுரையால் தெரிகின்றது.

1906. (உ) கோய்-பரணி; "கோய் வாயிற்கிழ்" சிறுபஞ்ச. கஎ. (ச) தன்னல் - கரகம்.

1907. (ரு) மரங்களுக்குயிருண்மை நீல. மொக்கல. கூஎ - ஆம் பாடல் முதலியவற்றால் விளங்கும்.

1912. (உ) 'வாளயா நெடியகண்ணுள்' என்பதும் அதனுரையும் "தாதுலராத கோதை" (திருவிளை. ருக: உரு) என்பதற்குரிய பொருளை விளக்கின.

1913. (ரு) "பருதிமார்பினில்" காஞ்சிப். காப்பு.

1921. (ரு) "சுற்றமொடு நுகர்தற் கினிதுநின் பெருங்கலி மகிழ்வே" பதிற். கஉ: உச - ரு.

1929. (ரு) எய்தும், 'சூளுறும்' (2126) என்பதுபோல இங்கே பன்மைத் தன்மை.

1939. சைனர் பகலிலேயே உண்பவராதலின், பகலுணு இக்கவியிற் கூறப்பட்டமை கூர்ந்து அறிதற்பாலது. இதனுலேதான் இந்நூல் 591 - ஆம் கவியிலுள்ள வல்சியென்பதற்குப் பகற்சோறென்று பொருளெழுதினர்.

1952 - 6. இவற்றிற்கூறிய பந்து விளையாட்டுவிகற்பங்கள், பெருங்கதையில், பந்தடி கண்டதென்னும் பகுதியால் விளங்க அறியலாகும்.

1963. (உரை) சாற்றுமாய் - சாற்றுவதாய்.

1966. (உ) ஈமம்-விறகு; புறநா. உருக.

1967. இக்கவி, "காவிவண்ணன்" (தக்கயாக. ரு௭க - உரை) என்பதற்கு மேற்கோள்.

1969. (ச) திருவி - செல்வி.

1975. (க) இடை - சமயம்; 'இடையின்றுகுறுகி" (புறநா.ருச); "தளரிடை யறியுந்தன்மையள் கொல்லோ" மணி. ச: கூஅ.

1981. (ச) "கூடியிருவருமொருவரெனவிதயங் கலந்ததற்பின்" பாரத. அருச்சுனன். தீர்த்த். ரு௦.

1982. (க) "நிலவிலங்கிய துகிலினை" (கம்ப. இலங்கையெரி. உகூ.) (உ) கன் புதையாது - மறையாமல்.

1985. (ச) "அனங்கனுக் கிலக்கமாகி யம்புகொண்டழுத்த வின்னார்" (188) என்றார்முன்.

1986. (க) தொழித்து - சிதறி; 2673; "சிதர்தொழித் றும்பியொடு மதர்வண்டு மருட்ட" பெருங். க: ருரு, உஅ.

1991. (க) மருதயாழ்: புறநா. கசகூ.

1998. (ச) அயாவுயிர்த்தொழிதல்-இளைப்புத்தீர்ந்துவிடுதல்; 2947; "பார்மக ளயாவுயிர்த் தடங்கிய பின்னர்" (சிலப். கரு: உக); "அழுதனளேங்கி யயாவுயிர்த்தெழுதலும்" மணி. உக: உகூ.

2002. (ச) புறநா. ககரு: கூ.

2010. (உ) நவிரறு - பீறுதலற்ற.

2024. (க) நானம் - வாசவெண்ணெய்; "நானவெண்ணெய் கதுப்புரைத்து" (2692); "வாசவெண்ணெயும் வண்டிமிர்சாந்தமும்" 864.

2026. (க) தழிய-தழுவிய; 2696; "வெங்கதிர்தழிவந், தார்லூண்டன" கம்ப. கரன்வதை. கூகூ.

2029. (ச) என்செய்கு-என்செய்வேன்.

2030. (உ) 'நின' என்னுமுதலிலேயே பெரும்பான்மை வழக்கம்.

2037. காண - கேட்க; "பேச்சைக்கண்டு" திருவால. கசு: உஅ.

2040. (ச) பிறைப்பூண் - பிறைவடிவமுள்ள ஆபரணம்.

2043. நூறும்புகுகவென்றல்மரபு.

2044. (ச) உற்ற - பொருந்திய; உண்ட.

2045. அடித்தியார்- தலைவியார்; "அடித்தி யெம்பெருமான்" பெருங். க: சஎ, உகூ.

2047. (ச) "தொட்டிமையுருவ நோக்கி" (1255) என்பதன் ஒப்புமைப் பகுதியைப் பார்க்க.

2050. (உ) அணைதூன்றி: (நைடத. கைக்கிளை. க.) (ங) கையற்று - செயலற்று.

2052. (உ) செருக்கிய -மயங்கிய; "சொல்வகை செருக்கி" பெருங். க: ௩௫, ககஉ.

2055. (க - உ) "திருக்கிளர் மாடஞ் சேர்ந்து வலங்கொண்டு" பெருங். ங: சூ, கூக.

2061. (ச) "என்றிண்ணிறை": கம்ப. மிதிலை: கசஎ.

2064. (உ) 2063: 4.

2065. (ங) தடறு - ஆயுதவுறை.

2070. (க) "அகலிரு விசும்பிற் றுவலை கற்ப" (நெடுநல். உ௰.) (க-உ) பூமாலைக்கு இந்திரவில் உவமை: "சிலைத்தார்மார்ப", "சிலைத்தாரகலம்" புறநா. க௰, கூக.

2073 (உ) "பவளத்தூண்களும்" சூளா. சுயம். உஉஉ.

2074. (க) "மணிவரைச்சாரன் மஞ்ஞை" பெருங். ங: கங, ௫௰.

2077. (க) "சிறுமுதுக்குறைவிக்குச் சிறுமையுஞ்செய்தேன்" (சிலப். கஎ: ௫அ.) (ச): சூளா. சுயம்வர. உஎ௫; கம்ப. கலன்காண். ௫.

2087. (ங) அலகம் - முறைமை; "அலகஞ்சுருக்கேல்" ஆத்திச்சூடி.

2089. (ச) "மதியமு ஞாயிறுங் கதிதிரிந்தோடிக், கடனிறவெம்பிறுடனின்றுங்கு" (பெருங். க. ௩உ, உஉ-௩) என்னும் அடிகளையும் அவற்றின் குறிப்புரையையும் பார்க்க.

2093. (ங) வேண்டுவது, தொகுத்தல்.

2097. (உரை) ஙாயனுரென்றது, கந்துக்கடனுடைய தந்தையை.

2103. (க) பூசலிட்டு - நொந்து.

2105. (ச) இறந்தார் - கடந்தார். கங்கைக்குத் தலைப்பில், 'கங்காகூடம்' என்று ஒரு சிறுமலையுண்டென்பர்.

2106. முல்லையுங் குறிஞ்சியுஞ்சேர்ந்த இடம் பாலையாதல், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங்கொள்ளும்" (சிலப். கக : ௬௪ - ௬) என்பதனாலுமறியப்படும்.

2107. (க) "சிறியவன்செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (கலி. க௰) என்பது இங்கே அறியற்பாலது. (உ) 'இன்கனித் தொண்டையங் துவர்வாயரங்கக்கூத்திகள்' என்றார் முன்னும்; 1557. (ங) கலைவலார் - பரத்தையர்; "எண்ணெண்கலையோ ரிருபெரு வீதியும்" (சிலப். கச : ககஎ); "எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற, பண்ணியன் மடந்தையர்" (சிலப் உஉ: க௩அ-கூ); "கலைகளின்றுணிவும்" (மணி. உ : உகூ); "யாழ்முதலாக... கலையுறவகுத்த காமக்கேள்வி" பெருங். க : ௩௫, அச - கூ.

2108. (ங) "துறைநனி கெழீஇக் கம்புளினும், தண்ணடை" புறநா. உகஎ : எ - அ.

2110. (உரை) காரியப்பெயர்-காரியஸ்தர்; "காரியப்பே ரார்தட்டிலும் தட்டுவாராமல்" (தனிப்பாடல்.) அமிர்து - நுகர்பொருள்.

2124. (க) தொழுவனர் - தொழுவார்.

2126. (ங) சூளுறும் - சூளுறுவேம்; இச்சொல் 'சூளறும்' எனவும் வழங்கும்; "சித்தநீயினை யென்னெஞ் சூளறும்" (தே. சுந்தர. திருப்புனவாயில், க, எ).

2136. (உ) மருமான் - உடன்பிறந்தாளுடைய மகன்.

2138. (க) பகைநரம்பு - யாழில் நின்ற நரம்பிற்கு ஆறுவது நரம்பும்

மூன்ருவதும் ; "நின்ற நரம்பிற் காறு மூன்றுஞ், சென்றுபெற நிற்பது கூட மாகும்" (சிலப். அ : ௩௩ - ௪ ; அடியார். மேற்). (௪) விலாவணை - அழுகை ; பிராகிருதம் ; பின்பு, அந் தப்புரவிலாவணை, கோயில்விலாவணை, நகரவிலாவணையென வருவனவற்ருனு மறிக.

2139. (உரை) ஏத்தாளிகள்-துதிப் போர்; இவர் ஓவரெனப்படுவர் ; 1844.

2149. (௩) உமிழ -தோற்றுவிக்க.

2153. (௨) உதயம் - உதயகிரி ; 'உதயமேன்னுமணிவரையுச்சி' இறை. ௬. ௩ - உரை.

2158. (௨) "வீணையோ டவைது றைபோகி" (பெருங். க: ௩௭,௧௭அ.) பண்ணூறுத்து - பண்ணி.

2163. (௪) நிச்சம் - நித்தம்.

2165. (௨) ஆலுங்கடல் - முழங் கும் கடல்; "மாறெழுந்தாலும்" புறநா. ௧௨அ: ௪.

2167. (௪) வெம்ப - கடுக.

2168. (௩) நிமித்தம் - புள்ளொ ழிந்தவை.

2177. (உரை) திரிபன்றியெய்தல் : 'அசுரமாவது, கொல்லேறுகோடல், திரி பன்றியெய்தல், வில்லேற்றுதல் முத லியனசெய்துகோடல்" தொல். ௧ள. ௬. க - ௩.

2178. (௨) செற்றி - நெருங்கி.

2190. (௩) தென்னன் - பாண்டி யன்.

2193. (௪) "மூவிரு நாள்கள் போய்" 2393.

2204. (க) இருதவில் அருதாண்: "வில்முறிந்துபோயிற்று", "நாண் அற் றது" 2191, 2192.

2208. (க) சூரியகாந்தமஃது: ஒருபெயரொட்டு.

2211. (க) 'வீருர் தோன்றலொடு' பெருங். ௩ : ௨௬, ௬௬.

2215. (க) பறந்தியல் தருக்கின : 'பறவையிரும்பிடி' பெருங். க : ௪அ, க௩௩.

2219. (உரை) சில என்னுப்பெயர் கள் - ஒருவகையான பேரெண்கள்.

2225. (௩) மறலும் - போர்செய் யும்; 908.

2230. (௨) " கூற்றெடுங் கொம் மை கொட்டிக் குனிக்கும்" நைடத. போர். 27.

2231. (௨) ஆக்கிய கயிறரிந்து : "வீங்குரோன் கயிறரீஇ" (மதுரை. ௩௭௬.) (உரை) கோடுங் கோடுஞ் சந் தித்து: 2254 (க).

2236. (௩) ஆசு - கவசம்.

2242. (௩) படர் - நினைவு.(உரை) வலிக்கும் நாய் - இழுக்கும் நாய்.

2243. (௪) அரைசு - அரசு ; எது கை. "அரைசெய்தி யிருந்தபயனெய் தினன்"; கம்ப. கையடை. ௬.

2247. (௪) செற்று - கோபித்து.

2250. (க) வெய்தா - விரைவாக.

2258. (க) கண்ணிமைத்தவர்க ளோடு வீரர் போர்செய்யார்; "குருதி யொள்வாள் சுடரெழ விதிர்ப்ப நோக் கி, யிமைத்தலும் வளவர் கோனை வெருவனீ யேகு கென்றான்" (நைடத. போர். ௭௩) என்பதனுலுணர்க.

2259. (க - ௨) நிராயுத பாணிக ளோடு போர்செய்தல் குற்றம்;"உடை யிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக் கார், படையிட்டார் பற்றேது மின்றி- நடையிட்டா, ரிவ்வகை யைவரையு மென்று மனுகாரே, செவ்வகைச்சேவ கர் சென்று" (சிறுபஞ்ச. ௪௧) என்ப தனுல் விளங்கும். (உரை) மற்போர் எருமைமறமென்பது, புறநா, ௮௦, ௨௭௪ - ஆம் பாடல்களின் பொருள் களால் விளங்கும்.

2261. (௪) விழு-வெற்றி ; விலங் கென்று எண்ணி ஒருவீரன் யானை யுடன் போர்செய்யவில்லை யென்பது, "தானுல் விலங்காற் றளித்தாற் பிறன்

வரைத்தால், யானை யெறித லிளிவர வால் - யானை, ஒருகையுடைய தெறி வலோ யானு, மிருகை சுமந்துவாழ் வேன்'' (தொல். புறத்திணை. சூ. ரு-ந. மேற்) என்பதனாலும் விளங்குகின் றது.

2262. (உரை) பற்றுவன - போதி யன.

2263. (க) எரிய - விளங்க.

2265. (உ) ஊழ் - முறை.

2275. (உரை) கோளகை - யானை யின் தந்தப்பூண்; 83 - ஆம் கவியின் குறிப்பாலும் விளங்கும்.

2276. (உரை) கோடு புய்க்கலாது நின்ற - கொம்பை வாங்கமாட்டாமல் நின்ற; "குத்திய மதயானை...கோடு புய்க்கல்லாதுழக்கு நாட கேள்'', "மறமிகு வேழந்தன் மாறுகொண் மைந்தினுற், புகர்நுதல் புண்செய்த புய்கோடுபோல'' (கலி. நஅ, ருந); "கோட்டினிற் குத்திக் குடர்புய்த் துறுத்து'' (மணி. கந: சஎ); "புய் ந்துகால் போகி'' (களவழி, நக.) புய்த்தல், புயத்தலெனவும் வழங்கும்; "புயக்க வொருமைந்தனைப் போவித் தார்'' கச்சி. வண்டு. உகந.

2280. (உ) பட்டின் அங்கண்.

2283. (க) வீழா - வீழ்த்து ; பிற வினை. (உரை) கண்மாயம்-கண்கட்டு வித்தை: "கண்டுங்கண்டிலே னென்ன கண்மாயமே'' திருவா. திருச்சதகம், சஉ.

2284. (உ) "முயற்கூடு தாக்க விருத்கூடுடையு முடிச்சிலம்பா''என் பர்.

2287. (உ - ச) "விழுநவி மாய்ந்த மரத்தின், வாண்மிசைக் கிடந்தவாண் மையோன் றிறத்தே'', "நெடுவேல் பாய்ந்த மார்பின், மடல்வன் போம் யுதயி விற்கு மோர்க்கே'' (புறநா. உஎ0, உகஎ); "எய்போற் கிடந்தா னென் னேறு'' (பு - வே. அ: உஉ.)

2289. (ந)வெள்வேல்: 2291: 1.

2294 (க) ஒலியல் - ஒலித்தல்.

2296. (க)கருவளி-பெருங்காற்று.

2302. கல்-வீரக்கல்; அஃதாவது, போரில் இறந்த வீரன்பொருட்டு அவ னுடைய உற்றார்முதலியோரால் அவ ன்பெயரும், பெருமையும் எழுதிநட் டுத் தெய்வமாகப்பாவித்து வழிபடப் பெற்ற கல்.

2303. (உ) தளிவம் - சின்னம்.

2305. (ந) தெற்றி - திண்ணை.

2308. (உ) தெழித்தல்-முழக்கல்.

2311. தாமரைமலரின் இதழ்வ கை இதிற் கூறப்பட்டிருத்தல்போலப், பின்குறிப்பிட்டுள்ள இடங்களிலும் ஒருவகையாகக் கூறப்பட்டிருத்தல் அறிதற் பாலது; பெரும்பாண். சOஉ-ரு; பரி. ப. களச: உ; பெருங். ந: ந, ருசு - கOக.

2314. (ச) நினைத்தல் செல்லார் - நினையார்; இமைத்தல் செல்லானென் பது இமையானென்னும் பொருளில் வந்திருத்தல் காண்க ; 2506.

2316. (க) கோல் - விளக்குத் தண்டு.

2324. (மு.) சச்சந்தனுக்குஉவமை கூறிய சூரியனைச் சீவகனுக்கும் கூறி யிருத்தல், தகப்பனே பிள்ளையாக வரு கின்றானென்னும் நூல்வழக்கைப்புலப் படுத்துகின்றது ; "செங்கெலாலாய... தந்தையறிபு'' (நாலடி. நசுஎ.) (ச) சீவகனுக்குச் சூரியனுவமை: 2336, 2371, 2523; பாரத. காண்டவ தகன. அ.

2326. (உரை) வீராபிஷேகம் - பகைவரைவென்ற வீரர்க்குச்செய்யப் படும் அபிஷேகம். இது விசயாபி ஷேகமெனவும் வழங்கும்; "திரும கள் மருவிய செங்கோல் வேந்தன்'' என்னும் மெய்க்கீர்த்தியில், 'திசை யுநிகழ வீராபிஷேகம்பண்ணி' எனவும், "திருமாதர் புவியெனும் பெரு மாதர்'' என்னும் மெய்க்கீர்த்தியில், 'விசயாபிஷேகஞ் செய்து' எனவும்

வருதல்காண்க. இவை சிலாசாதனத் திற் கண்டவை.

2327. (க) 'கண்ணடியன்னகடி மார்பன்' என்பதும், "ஆடியுட் பா வை யன்னாள்" (தஞ்சை. ௩௮௬) என்பதும் பொருள் நயத்தால் தம் முள் ஒத்துவிளங்குதல் காண்க. (௪) ஆடு - வெற்றி.

2332. (௪) அம்பு - வளை.

2343. (௪) பைம்பொன்முடிசூழ்: "தேர்மன்னர் முடிகள்சூழ" 2371.

2343-4. (உரை) ௨௨௪-ஆம் செய் யுளின் விசேடக் குறிப்பைப் பார்க்க.

2351. (க) பெண்ணைத்திருடாமங் ள்: "தஞ்சவராத்தாமமல்கி" 2370.

2353. (க-உரை) 'எண்கொண்ட ஞாட்பு' என்னும் மூலமும், இதற்கு, 'தேவாசுரம்,இராமாயணம்மாபாரதம் என்கின்ற போர்' என்றெழுதிய உரை யும் "உயிர்த்தொகையுண்ட வொன் பதிற் றிரட்டியென், றியாண்டு மதியு நாளுங் கடிகையு, மீண்டுநீர் ஞாலங் கூட்டி யெண்கொள்" (சிலப். ௨௯: அ-௧0) என்பதனாலும், 'தேவாசுரயுத் தம் பதினெட்டாண்டிலும் இராமரா வண யுத்தம் பதினெட்டுமாதத்திலும் துரியோதனபாண்டவர்யுத்தம்பதினெ ட்டுநாளிலும் செங்குட்டுவனும் கன கவிசயருஞ் செய்தயுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்று எண் ண' என்னும் அதன்அரும்பதவுரையா லும், "தேவாசுர ராமாயண மாபாரத முளவென், றோவாவுரை யோயும்படி யுளதப்பொரு களமே" (களம்பாடி யது, க) என்னுங் கலிங்கத்துப் பரணியாலும் அழகுற்றுப் பொருட் டொடர்புபெற்று விளங்குதல் காண்க.

2355. (க.) 'விழுப்புண்- முகத்தி லும் மார்பிலும்பட்டபுண்' என்பர் பரிமேலழகர்; (குறள், எ௭௬.)விழுப் புண் காற்றைப்புறப்பட விடுதலாலு ண்டாகுமொலி:"மலர்மார்பின், வென் வேன் முகந்தபுண் வெய்துயிர்ப்ப" (பு - வே. ௪:௨.) மகளிர்க்குக் குழை மாங்கலியம் போன்றதாதலின், கணவ னிறந்தது கேட்டுக் குழையைச் சிதறு வாராயினர்; "மாற்றரசர் மணிமுடி யுந் திறலுந் தேசு மற்றவர்தங் காதலி மார் குழையுந் தந்தை, காற்றளையு முடன்கழல வந்து தோன்றி"(பெரிய திரு. ௪: ௪, க), "இட்டபொன்னோலை வாசியே" (ஆநந்தலகரி, ௨அ), "நஞ் சுண்டு பித்துண்டோங்தேவ ரென்பார், தம்பாவை யர்க்கன்று காதோலை பா லித்த தயவாளர்கூடல்" (மதுரைக் கல. ௨அ) என்பவற்றாலு முணர்க.

2356. (௩) முப்பழமூறிய நீர்: "முப்பழச்சுனை" 75.

2361. (௨) ஒழிதல் - தங்கல்; "மின்னுக்கொடியொத் தொழிந்திட் டாள்" 2504.

2363. (உரை) துயலாசிற்ப - அசையாசிற்ப.

2369. (௨) உழைக்கலங்கள்: "மகளிர் மங்கல வுழைக்கலஞ் சுமந்த வர்" (சூளா. தூதுவிடு. ௩௬.) (௪) சின்னமலர்: "சின்னப்பூச் செருகு மென்பூ" கம்ப. கோலங்காண். ௧௭.

2371 (க) "பைங்கண் மதர்வைப் பகுவாயரியேறு" சூளா. பாயிரம், க.

2380. (௨) பொன்நிறை - பொன் னைப்போற் பெறுதற் கரியநிறை.

2384. (க)"விடங்கொண்டமீனைப் போலும்" என்பர். (உரை) 'மெய்புகு வன்ன முயக்கம்': "மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்து" அகநா.௩௦௫.

2389. (௪) ஆணம் - அன்பு.

2392.(௨)சீலமில்லன சினக்களிறு - நிறையழிகொல்யானை; அவற்றை அகற்றுவிட்டாலும், அவற்றின் செல வை முன்னர்ப் பறையறைவித்துத் தெரிவியாவிட்டாலும் மனிதர்கள் துன் புறுவரென்பது வெளிப்படை; "நிறை யழி கொல்யானை நீர்க்குவிட்டாங்குப் பறையறைந்தல்லது செல்லற்கவென்

ளு, விலைறயேதவறுடையான்" (கலி. ருக) என்பதனல் அறியலாகும்.

2398. (ங) ஆக-பொருந்த; "ஆக வமைகவதுவேயவ்வரசநீதி" சூளா. அரசியற். உகக.

2401. (க) நிரந்து, நிரல்படக் கோத்தென்பர்; (குறள், சுசஅ - பரிமேல்); "நிரந்திலங்கு வெண்பன் மடந்தை" குறுந். ருஉ.

2404. (க) நுப்புரவுகள் - நுகர் பொருள்கள்.

2407. (உ) உடைமணி: "உடைமணிகட்டி" திருச்சிற். ஙஅரு.

2409. (க) விதானித்து - மேற்கட்டிகட்டி.

2413. (உரை) மயிர்வினைக்கல் யாணமென்றது இங்கே புருவமொதுக்குதலை யென்பர்.

2414 - 5: பெருங். க: சஉ, கஙரு; உ: ரு, கூ - கசு:

2415. (க) ஆர்த்தி-நிறைத்து.

2417. சக்கரவாள சக்கரவர்த்திகளென்னும் பெயர்,புறநா. களரு-ஆம் பாடலின் விசேடவுரையிலும் வந்துள்ளது.

2418. (உ) அத்து-துவர்; துவருரிஞ்சி யாட்டுதல்: 623.

2425 (ங) திருவிலன்னதார் - இந்திரவில்லைப்போன்ற மாலை; 2070.

2432. (ச) நடந்தஃது-நடந்தது.

2434. (க) மையணி மதயானை: "மையணி யிரும்பிடி" (பெருங். க: சஅ, கஅச); "இமையஞ்சன மால் களிறு" கம்ப. அதிகாயன். உக.

2435. (உரை) ஒப்பியாநின்றார் - அலங்கரிக்கின்றார்.

2436. (க) யானையுளரசன் : "நாகாதிபன் விடுமும்மத நாறுந்திசை" பாரத. அருச்சுனன் தீர்த்த. சo.

2442. இதிற் கூறப்பெற்றுள்ள சிற்பவிசேடம்மிகப்பாராட்டற்பாலது; 1081 - ஆம் பாடலின் ஒப்புமைப் பகுதியைப் பார்க்க.

2445. (உ) காற்சிறு பரடுபுல்லிக் கிண்கிணியும் சிலம்பும் ஆர்த்தல்: "பைம்பொற் கிண்கிணி பரட்டு மிசை யார்க்குஞ், செந்தளிர்ச்சீறடி", "சேவடிக்கேற்ற செம்பொற் கிண்கிணி, பாடகக்குரலொடு பரடுபிறழ்ந்தாரற்ற" பெருங். உ: ங, அரு - சு; ஷி கசு, கஅரு - சு.

2446. இக்கவியிற் கூறப்பெற்ற கோலம் பிற்காலத்தில் வழங்காதாயிற்றென்பர் ; தொல், செய். சு. அo - ந.

2447. மகளிர் ஆண்மையைவிரும்பல்: கம்ப. கோலங்காண். கசு.

2450. (க - உ) எழுத்துவடிவ பட மல்லிகைமாலை கட்டப்பட்டதென்று இங்கே கூறியிருத்தல் பண்டைக்காலத்திற் சிற்பவேலையின் நுட்பம் நன்கமைந்திருந்தது என்பதை நன்கு புலப்படுத்துகின்றது; தன் கருத்தை மானனீகையென்பவள்மட்டும் அறிந்துகொள்ளும்படி வாசவதத்தையின் நெற்றியில் உதயணன் கோலஞ்செய்து அவள்பால்அனுப்பினனென்று பெருங்கதையில் முகவெழுத்துக் காதையிற் கூறப்பட்டிருத்தல் இதனை வலியுறுத்தும்.

2452. (உ) உருளும் -கெடும்.

2462. (க) மொய் - வலி.

2463. (உரை) பருதி - நீளமான சமிதை. சமிதை கஉ - அங்குலமுள்ளதாக இருத்தல்வேண்டுமென்பர்.

2473 - 5. பெருங். உ: உ, எo - எச; ஷி. ங: கச, அக - சு.

2477. (உ) மார்பிற் கொடிவடிவமெழுதுத லுண்டென்றும் தெரிகின்றது: "ஆடுகொடி யணிந்தவுயரலங்கல்வரை மார்பன்", 2483.

2478. (மு) பெருங் ; க: ஙச, உகச - அ.

2484. (உ) சவிய அழகுடையன.

2491. (ங) 'உளமையாடி' என்றும் பிரதி பேதமுண்டு.

2495: பெருங்.உ:ச,கசுஉ-உ0ரு.

2503. இச்செய்யுளில் மகளிர் மேனியின் நறுமணத்திற்குக் கூறிய உவமை ஸ்ரீ காளிநாசராலும் கூறப் பெற்றுள்ளதென்பர்.

2508. (ரு) பாம்பிற் றோன்றிய முத்து நீல நிறத்தது: திருவிளை, கஎ: ருரு.

2515. (உரை) பாண்மைச் சொல்லாலே - வணக்கச் சொல்லாலே.

2517. (க - உ): 1129; சூளா. நகர. ரு.

2519. (ச)வளாயினுர்-வளைத்தார்.

2521. (உ) இலிற்றும்-பிலிற்றும்.

2525. (உரை) ஆலித்து - முழங்கி.

2527. (க) சூலம் - இடிதாங்கி; 3003; "சூலத்தாற் காளியை யொக்கும்" கம்ப. நகர. சு.

2529. (உரை) வேட்கை பிறவாப் பருவத்தாரும் வேட்கை பிறக்கின்ற பருவத்தாரும் வேட்கை பிறந்த பருவத்தாருமென இங்கே கூறியது போல் மகளிரை மூன்று கூருக்கி வழங்குவர் வடநூலாரும்.

2535. (உரை) நுசுப்புமிடித்தார்- இடைவறுமையுற்ருர்; "இடைமிடித் தார்தழை"வெங்கைக்கோவை, ருக.

2537. (ரு) பறை - பறத்தல்; "குருகின் மென்பறை விளிக்குரல்" ஐங்குறு, அசு.

2541. (க) முழால்: "முழிலிற் பொலிவண் முழவும்" தணிகை. வள்ளி. ருசு.

2544. (ரு)'காதநான்ககன்ற' என்றதனுல், இராசமாபுரம் நீர்காத அகலமுடையதென்பது பெறப்பட்டது; "காத நான்கும் கடுங்குர லெடுப்பி" (சிலப். ரு: கருரு) என்பதனுல், காவிரிப்பூம்பட்டினத்தின் எல்லையும் நாற்காதமுடையதென்று தெரிகின்றது. இவ்விரண்டையு முற்றுநோக்குமிடத்து, பெரியநகரத்தின் எல்லை நாலுகாதமாக இருத்தல்வேண்டுமென்று வெளியாதலுடன், காதம் என்ற சொற்குப் பொருள் யாதோ என்ற ஐயமுமுண்டாகிறது.

2548. (ச) சேண் நெடிய - மிக நெடிய.

2552. (க)ஞெமுங்க:(சூளா.சுயம். சுரு.) (உ) திரு-நல்வினை; 2556: உ.

2560. (உரை) முன்னம் அடைத்துவைத்து அரசன்வருங்கால் கோயிற் கதவைத்திறத்தல், இக்கவியின் ஒப்புமைப் பகுதியால் அறியலாகும்.

2569. (உரை) ஏனுதிமோதிரம்: 2167.

2574. இளமையில் தான்விளையாடிக்கொண்டிருந்த ஓராலமரத்திற்குச் செய்யுமுபகாரமாகச் சீவகன் அதற்கேற்ப மாலையை அணிவித்தானென்பது முதலிய செய்தி, தன்பக்காலத்தில் தன்னை ஏற்றிக்கொண்டுவந்து இளைப்பால் இடைவழியில் இறந்துபோன பெண்யானை ஒன்றற்கு உதயணன் மாடஞ்சமைப்பித்தானென்பது முதலிய செய்தியை ஒத்துள்ளன; பெருங். ச: ரு, க0-ஆம்அடி முதலியவற்றைப் பார்க்க.

2580. (ரு - ச) உத்தாகுருவும் பவணலோகமும் இன்பத்திற் சிறந்தவையென்பர்.

2582. (ச) கொற்றமென்பதற்கு அரசவுரிமையென்றும் பொருளுண்டு; "ஒருவன்மேற் கொற்றம்வைப்பின்" (204) என்பதனுலும், பெருங்கதையிலுள்ள பகுதிகளுள் ஒன்றன்பெயராகிய 'கொற்றங் கொண்டது' என்பதனுலும் விளங்கும்.

2595. (உரை) 'ஐராவதத்தின் மேல்'என்றவாக்கியத்திற்கு, திக்கஜபர்வதங்களுள் ஒன்ருகிய ஐராவதத்தின் மேலுள்ளபொய்கையில் மலர்ந்ததாமரைமலர்மேலுள்ள திருமகள் என்றும் ஐராவதமென்பதற்கு ஐராவதக்ஷேத்திரமென்றும் பொருள்கூறுவர்; ஸ்ரீபுராணத்தில்,(உரு) பார்சுவதீர்த்தங்

கார்புராணத்திலுள்ளதாகிய, 'ஸ்வாமி பிறந்தவுடன் ஜன்மாபிஷேகத்திற்குக் கொண்டுபோகுங்காலத்தில், ஜம்பூத்வீபப்பிரமாணமாகி, முப்பத்திரண்டு முகத்தையுடைத்தாகி, முகமொன்றுக்கு எட்டுக்கொம்பை உடைத்தாகி, கொம்பொன்றுக்கு ஒருபொய்கையாகி, பொய்கையொன்றுக்கு முப்பத்திரண்டு கமலபுஷ்பமுள்ளதாகி, புஷ்பமொன்றுக்கு முப்பத்திரண்டு இதழாகி, இதழொன்றுக்கு முப்பத்திரண்டு நர்த்தனஸ்திரீகளாகி நிர்மிக்கப்பட்டதோரைராவதம்' என்னும்வாக்கியமும், "பொலம்பூங் காவும் புனல்யாற்றுப் பரப்பு, மிலங்குநீர்த் துருத்தியு மிளமரக் காவு, மரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி, யொருநூற்று நாற்ப தியோசனை விரிந்த, பெருமால் களிற்று" (சிலப். ௨௫. ௧௨-௬) என்னும்பகுதியும் அதன் அரும்பதவுரையும் இங்கே அறியத்தக்கன.

2598. (உரை) இசை காமத்தை விளைக்குமென்பது, "நஞ்சுகொப்புளிக்கும் பேழ்வாய் நாகனை துரந்த நம்பி, கஞ்சநான் மலர்வாய் வைத்த கழையிசை யமிழ்த மாரி,யஞ்செவி தவழ்தலோடு மாய்ச்சியர் நிறத்து மாரன், செஞ்சிலை பழுத்துக் கான்ற செஞ்சரந் தவழ்ந்த மாதோ" (பாகவத. ௧௦ : ௧௨, ௬) என்பதனாலும் விளங்குகின்றது.

2604. (க) பிறந்த ஆங்கு.

2605. (ச) சீவகன் குருகுலத்திற் பிறந்தவன் : 290.

2608. (உ) தம்பெருமா னென்றது, விசயையை.

2609. (உ) 'உற்றது நாங்கள்கூற' என்றொரு பாடபேதங் காணப்படுகின்றது ; நன். வி. சூ. ௪௫௮-பார்க்க.

2613. (ச) இதன்பொருளும், "துன்பத் தாற்றுன்பந் துய்த்த லல்லது, துன்பத் தாலின்பந் துய்க்க வெண்ணுத, லன்பிற் காஞ்சிர மாக்கி மாங்கனி, தின்குற் றஃதவர் சிந்தை வண்ணமே" (மேரு. வச்சிராயுதன். ௬) என்பதன்பொருளும் ஒத்திருத்தல் காண்க.

2622. (உ) துற்றுஅவிழும் - உண்ணப்படுஞ் சோற்றையும். (௩) தருமம் கறுப்புச் சிவப்பென்று தெரியாதவரென்பது ஒருபழமொழி.

2625. (௩) 'பாவத்தைச் செய்வார் அதன் விளைவின்கண் அந்தோ வினையே யென்றழுங்குவார்' (குறள், ௨௭௫-பரிமேல்.) (ச) "நமரங் காளறிமின்" 547.

2628. (உரை) 'தாம்நின்ற நோன்பு' என்றது, மகன் வாழவேண்டுமென்று முன்பு நோற்றிருந்ததனை.

2629. (உரை) கையறவு - செயலறுதல்.

2631. (க) கன்னிப்பருவத்தும் விவாகமானபின்பும் கணவனிறந்தபின்பும் பெண்பாலார் துறத்தற்குரியரென்பர் ; "கன்னி யிற்றுற வன்னங்கள் கணவனிற் றுறவின்,மன்னு மாரியாங் கணகனுல் வாங்குமக் குசைகள்" (திருவிளை. சமணரைக்கழு. ௧௭)

2640. (கீ) புகழ்ந்துரை - புகழ். (உ) இகழ்ந்துரை - இகழ்.

2641. (ச) இல - இலவு.

2656. இதிற் கூறப்பட்ட மாலைகளின் இயல்பைக் குறிஞ்சிப்பாட்டின் ௧௦௩ - ௪ ஆம் அடிகளின் குறிப்பாலுணர்க. (உரை) பாராவளையம் - சுழல்படை ; இது பாரா வளையெனவும் வழங்கும் ; "சுழல்வட்டம் பாரா வளையே" பிங்கலந்தை, ௧௫: ௬௦.

2674. (உரை) அவிழ்பதம்-சோறு.

2683. (ச) கைத்தீ - செலுத்தி ; "நுகமின்றி விளாக்கைத்து" திருவா. அதிசய. ௮.

2686. (க) "செம்மயிர்க்குறுத்தாட் பேரெலி" (கூர்ம. சம்பு. ௩௭.) மயிரால் ஆடை நெய்யப்படுதல், "நூலினும் மயிரினு நுழைநூற் பட்டினும்... நறுமடி செறிந்த வறுவை வீதியும்"

(சிலப்.கச: உ0ரு-௯) என்பதனாலும் அதனுரையாலும் அறியலாகும்.

2689. (ங) செத்தும்-செதுக்கும். (ச) பூச்செயாமேனி-கழுவாதமேனி.

2700. (உ) மதுநுகர்கையில் மோந்து இன்புறுதற் பொருட்டுக் குவளைமலர் வட்டிலில் விரவப் பெற்றது; "இஞ்சிவீ விராய பைந்தார் பூட்டி" (பதிற். சஉ) என்பது முதலியவற்றையும் அவற்றின் உரையையும் பார்க்க.

2706. (மு) சூளா. துறவு. கஅஎ.

2713. (க-உ) இடப தீர்த்தங்கரர் அவதரிக்குமுன்பு இவ்விடமெல்லாம் போகபூமியாக விருந்தனவென்றும் அப்பால் கருமபூமியாயினவென்றும் கூறுவர்.

2718. (உரை) மூவகைச் செவிகளுள், "தோளா மரச்செவித் தூராவயிற்றுச்சமடர்" (திருநூற். க0) என்பதனால் மரச்செவியும், 'எஃகுச்செவியாலே சுருதியையளந்து' (மநுத. கச0-சக-ங) என்பதனால் எஃகுச் செவியும் நூல்களில் வழங்கப்பட்டவாறு அறிக.

2720. (க) 'இனம்பிரியேறு' என்று பாடம் இருப்பின் நன்று.

2723. (ங) தொழுத்தை யேன்: "தூசனஞ் சொல்லுந் தொழுத்தைமாரும்" (திவ்ப. பெரியாழ்வார். உ: கூ, அ); "இத்தொழுத்தையோங் தனிமை தானே", "தொழுத்தையோங் தனிமையும்" ஷை. திருவாய். க0: ங, ங-ச.

2725. (க) ஆட்டி - அலைத்து.

2726-7. (மு) "வானார் நுதலார் வலைப்பட்டடியேன் பலவின் கனிபீ ந்தது போல்வதன்முன், ஆணோடு பெண்ணா முருவாகி நின்றா யடியே ஐயப்போவதோர் குழல்சொல்லே" (தே. சுந்தர. திருநெல்வாயில்திருவரத்துறை, கூ) என்னும் திருவாக்கு இதன் பொருளை ஆராய்தற்கு இன்றியமையாதது.

2727. (உ) அரம்பு - குறும்பு: "அரம்பு மல்லலுங் கரம்பு மில்லது" (பெருங், ங: உ, சஅ); "அரம்பு செய்பிணி" தணிகை. பிரமன், கக.

2730. (உரை) காமன் மனவேட்கையடங்கியவன்: "சிலைவலான் போலுஞ் செறிவினான்" கலி. கசங.

2733. (ங) அரசனுக்குக் கழிந்த நாழிகையைக் கணிகள் கூறுதல், "பூமென்கணையும் பொருசிலையுங்கைக் கொண்டு, காமன் றிரியுங் கருவூரா-யாமங்க, ளொன்றுபோயொன்றுபோ யொன்றுபோய் நாழிகையு, மொன்று போயொன்று போயொன்று" (சிலப். ரு:சகூ-அடியார். மேற்.) என்பதனால் விளங்குகின்றது. நாழிகைகூறுங்கணிகள், நாழிகைக்கணக்கரென்றும், கடிகையாரென்றுங் கூறப்படுவர்.

2735. (ங) வீமசேனன் மடைத்தொழிலிற்சிறந்தவனென்பது வெளிப்படை. அவனால் மடைநூலொன்று செய்யப்பட்டுள்ளதென்பது, "காவெரியூட்டிய கவர்கணைத் தூணிப், பூவிரி கச்சைப் புகழோன் றன்முன், பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட் பனுவல்" (சிறுபாண், உங அ-சக) என்பதனால் விளங்கும்; பீமபாகமென்று தமிழில் ஒருநூல் வழங்குகின்றது.

2736. (ச) உறவர்: "உறந்பால நீக்கலுறுவர்க்கு மாகா" நாலடி.க0ச.

2738. (க) நற்றவஞ் செய்த வீரர்-புண்ணியமிகுத்தவர். (க - உ) "திருமக ளிலைமையுஞ் செல்வர் கேட்டிரேன், மருவியமனிதரை யிகந்து மற்றவர், பொருவறு புகழினார் புதிய காமுறு, மொருவர்கள் ளுறவில னுணர்ந்து கொண்மினே", "புண்ணிய முலந்தபின் பொருளிலார்களைக், கண்ணிலர் துறந்திடுங் கணிகைமார்கள்போ, லெண்ணிலளிகந்திடு மியாவர் தம்மையு, நண்ணிய நன்பிலணங்கை வண்ணமே" (சூளா. முத்தி. கச,

கரு) என்பவற்றில் திருமகளியல்பு இச்செய்யுளிற் போலவே கூறப்பட்டிருத்தல் காண்க.

2743. (உ) சாரணர்-சமணமுனிவர்; அவர் தலசாரணர், ஜலசாரணர், பலசாரணர், புஷ்பசாரணர், தந்துசாரணர், சதுரங்குலசாரணர், சங்கசாரணர், ஆகாசசாரணரென எண்வகையர்; இவ்விருவராகச்சென்று தருமோபதேசஞ்செய்தல் அவர்கட்கு இயல்பென்பர். 'மேல்' என்றது, 2893-ஆம் கவியை.

2746. (௩) மேற்கூறிய சாரணரிருவருள், உபதேசிப்போர் மூத்தோராதலின், 'நூற்கடன்மாதவன்' என ஒருமையாற்கூறினர் ; இது, சிலப். ௧௦: ௭௬௩-ஆம் அடி முதலியவற்றிலும் பெறப்படும்.

2749 - 53. இச்செய்யுட்களின் பொருளும், "வினைப்பய வலியினாலே வேறுவே றியாக்கை யாகித், தனிப்பல பிறவிதம்முட் டுன்புறாஉம் பல்லுயிர்க்கு, மனித்தரி னரியதாகுந் தோன்றுத றேன்றி னாலு, மினித்தவை நுகர வெய்துஞ் செல்வமு மன்ன தேயால்", "உயர்குடியதனிற்றேன்ற லூனமில் யாக்கையாதன், மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்லராதல், பெரிதுணர் வரிய வெய்தல் பேரறங் கோட லென்றும், கரிதிவை பெறுத லேடா பெற்றவர் மக்களென்பார்" (வளையாபதி) என்பவற்றின் பொருளும் ஒருவாறு ஒத்து விளங்குதல் காண்க.

2751. (உரை) கரும்புறத்தோர் - வேடர் ; இச்சொல் இலக்கணவுரைகளில் மேற்கோளாகவழங்குகின்றது.

[illegible] ப்பய: "சின்னெறி [illegible] கம்ப. அகத்திய. [illegible] துனிவு. [illegible]) இவ்வடிகளை [illegible] மைத்தார் பரிமே [illegible] ௨௦.

லதி வென

2772. (௪) குரலாய்நிற்பர் - குரலையுடையராகி நிற்பார்.

2773. (உரை) 'பறையலகு இக்காலத்துப் பலகறை யென மருவிற்று': "நின், மிஞிறுஞிமிறுக விளங்க-விமிழ்கின்ற, வைசாகி வைகாசி வாய்ந்த பறையலகே, யைதாம் பலகறையென்றுனவே" கச்சி. வண்டு. ௭௧௪ - ௫.

2774. (௧) "மானிணப் புழுக்கலொடு தேனெய் ஷிதவையின்" (பெருங். உ: ௧உ, ௧௧௩.) (௩) சுந்து-நீர்.

2777. (௪) "அச்சணங்கயில்வேல்" கூர்ம. கன்னன்சிவபூசை. ௧௪.

2778. (௧) பொதிர்ப்பு - துளைக்க.

2783. (உ) "உழப் பெருதுடைய தாமே" 751.

2784. (உ - ௪) "ஆரைச் சாகாட்டாழ்ச்சி போக்கு, முரணுடை நோன்பகட் டன்ன வெங்கோன்", "பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய, வரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும், பெருமிதப் பகட்டுக்குத் துறையுமுண்டோ" (புறநா. ௬௦, ௯௦); "மடுத்தவா யெல்லாம் பகடன்னான்" குறள், ௬௨௪.

2786. (உ) "நீராலிக்கட்டி நனிநிரந்தெழுந்து" சூளா. சுயம். ௨௦௪.

2787. (உ) கண்படுத்து-கொன்று.

2790 (௧) நிழனோக்கி-கண்ணாடி. நிழலைநோக்கி.

2793 (உ-௩) நாவாய்கவிழ்தற்றன்மை: "வந்ததே, யாழ்கலதி தன்னகத்துழ்"(நாலடி. ௧உ.) (௪)மடி-மடங்கு.

2794 (௪) நுகம்-பாரம்; 203; "எழுவர்பூண்ட வீகைச் செந்நுகம்...ஒருதான் றாங்கிய" சிறுபாண். ௧௧௩-௫.

2800. (உ) கருவத்துச்சென்று - கருவிற்சென்று; அத்து, சாரியை.

2801. (உ) பகுவொளி-பேரொளி.

2802. (உரை) மார்பிற் கோதை - மார்பின்மாலை; "கோதைமார்பிற் கோதை" புறநா. ௪அ.

2806. (உ) 'புருவமுமுருவஞ் செய்ய' என்றும் பாடபேதமுண்டு;

'உரு' அச்சமாதலின், உருவமென் பதை அதன் திரிபாகக் கொள்க.

2808. தேவர்கள் ஜினபூஜைசெய் வதுண்டென்றும் தேவலோகத்தில், 8497023 ஜினாலயங்களுள்ளனவென் றும் கூறுவர்; இதனை, "பாரிடையிரி ருநூற்றைம்பத் தெட்டுப்பத் தாம்பவ ணத், தோரேழுகோடி யெண்ணெணன் பானிலக்க முயர்ந்தக்ர்பத், தோரியல் யோனிதொள்ளேழாயி ரச்சின்ன மெண்ணவொண்ணச், சீரிய வந்தரர் சோதிடத் தீசர்நற் சேதியமே" (திரு நூற். கூஉ) என்பதனாலுணர்க. சேதி யம் - சினாலயம்.

2809. (உரை) 'பற்று...மலங்கள்': 3039 (க.)

2815. புண்ணிய மிகுதிக்கு இந் திரனையும் பாவமிகுதிக்குக் குரங்கினை யும் எடுத்துக் காட்டினர்.

2816. (உ) சிறப்பு - பூசை.

2817. இக்கவியின் விசேடவுரையி லுள்ளவரலாறு இரத்தின காண்டக மென்னும் வடநூலிற் சொல்லப்பட் டுள்ள தென்பர்.

2818. இதிற்கூறப்பீட்டவை துற விகளுக்குரிய நித்தியாசாரங்களாம்.

2819. (ச) நுணுக்குவ-குறைப்பன.

2820. தம்குஞ்சியைத்தம்கையாற் பறித்தல், 'உலோச்சு' என்னும் பெய ரினதென்பர்; இந்தக்கிரியை, 3031-ஆம் கவியிலும்வந்துள்ளது; "தம்க்கு டுத்துத்தலையைப்பறிப்பாரொடு" (தே. திருஞான. திருப்பிரமபுரம், 'விடைய தேறி' கo); "பறித்த புன்றலைக் குண்டிகைச் சமணர்" ஷெ ஷெ 'அன்னமென்னடை' கo.

2823. (ரு) "புல்லென்ற நாப்புல வர் போன்று" (பு-வெ. கo: கச); 'புற்கென்ற செந்நாப் புலவரை யொத்து' ஷெ உரை.

2825 (மு) 1167, 2640; 'நடுவு நிலை...சமநிலை; அஃதாவது, செஞ் சாந்தெறியினும் செத்தினும் போழி னும் நெஞ்சோர்ந் தோடா நிலைமை; அது காம வெகுளி நீங்கினார் கண்ணே நிகழ்வது' தொல். மெய்ப்பாடு. சூ. கஉ-பேர்.

2826. துறவிகள் பிக்ஷைக்குச்செ ல்லுதல், "வில்லின தெல்லை கண்ணு ளேக்கிமெல் லடிகள் பாவி, நல்லருள் புரிந்துயிர்க்கணைகைமுத லாய நாணி, யில்லவ ரெதிர்கொண் டியி னெதிர் கொளுண் டியருமாகி, நல்லற வமுத முண்டார் நடந்தனர் வீதி யூடே" (முதலாவது, உச) என இப்படியே யசோதரகாவியத்திற் கூறப்பட்டி ருத்தல்காண்க.

2831. (உரை) உயிரின் வகை இன்னவென்பது 3107 - ஆம்பாடல் முதலியவற்றால் விளங்கும்.

2833. இச்செய்யுளின் பாடபேதம் மிகஅதிகம்; உரைக்குஏற்றபாடம் இங் கேபதிபிக்கப் பெற்றது; ஏனையிடங் களிலும் இப்படியே.

2836. (க) பொற்குவ டென்பதற் குக் குடவரையென்று பொருளெழுதி யது, "அத்தமென்னும் பொன்னஞ் சிலம்பு" (இறை. சூ. கஅ - உரை, மேற்) என்பதை நோக்கிப்போலும்.

2843. (உ) கப்பம் - பதினாறு வகைக்கல்பலோகம்; "கப்பத்திந்திரன் காட்டிய நூலின்" சிலப். கக: கருச.

2845. (க) "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு, மருளானா மா ணாப் பிறப்பு" (குறள். ருருக); இக் கவியாற் கூறப்பட்டவை இரத்தினத் திரயங்கள்; 1463 - ஆம் கவியின் குறிப்பைப்பார்க்க.

2846. (ச) "எல்லையி லின்ப முணர்வு வலிகாட்சி, புல்லும் வினை வென் றவர்க்கு" (அருங்கல. கருஎ); "அநந்தசதுட்டயமமையெய்த" பஞ்ச கல்யாணவகவல்.

2847. (உரை) ஏனைநான்காவன: நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயு வின்மை, அழியாவியல்பென்பன.

2858. (ச) கழிக்கும் - காலம் போக்கும்.

2863. (ரு) நடாய் - நடத்தி. (க-உரை) இக்கவியில், 'வடமலைப்பொன்' என்பதற்குத் திருவென்று பொருளெ ழுதியிருப்பது 183 - ஆம் கவிக்குறிப்பால் விளங்கும்.

2868. இக்கவிமுதலியவற்றுற் கூற ப்படும் உயிர்க்கொலை முதலியவை ஸப் தவியஸனத்தின்பாற்படுமென்பர்.

2872. (உ) படுகால் : இது 'படிக் கால்' எனவும் வழங்கும் ; "குறுந் தொடை நெடும்படிக்கால்" (பட்டின. கசஉ.) (ரு - ச) "வைத்த, பொ ருளு மவனே நகுமே யுலகத்; தருளு மவனே நகும்" நாலடி. உஎரு.

2877. (க)"அறவியங்கிழவோனடி யிணை" (மணி. கக: உரு); அறவி யமனத்தினையாகி" "அறவியான் றுனு மறவமிர்தீர்ந்தான்" நீல. தருமம. சஅ, கoக.

2884. (ரு) தொலைப்பரு - நீக்கு தற்கரிய வென்றுமாம். (ச) 3109 : க - உ.

2889. (உரை) ஸஹஸ்ராரமென் பது,கர்பலோகம் பதினறனுள் பன்னி ரண்டாவதென்பர்.

2890. (க) " அரங்கினுடுவார்சிலம் பினன்னரின், திரங்குவார்புனற்சரயு" (கம்ப.கையடை. உஉ); "தானுயிருற ......செவியினேற்பது" (ஷை.பம்பை. கடு) ; " பொருந்துறுதனம்...செல் வார்" நைடத. நகர. உக.

2899. (க - ரு) ஏற்றுரிமுரசம்: "விசித்து வினைமாண்ட மயிர்க்கண் முரசம்" (புறநா. கூரு: எ); "ஏற்றுரி போர்த்த விடியுறழ் தழங்குரற், கோற் றெழில் வேந்தன் கொற்றமுரசம்" (பெருங். உ: உ, உஅக); 2142-ஆம் கவியின் ஒப்புமைப்பகுதியைப்பார்க்க.

2900. (ச) இடியுமிழ் மு ர ச ம்: 2392: ரு; "இடிமுரசறைந்ததென்பவே" சூளா. சுயம். உகரு.

2902. (க) 'கரும்பல்லது காடின் மையான்" சிலப். கo: அக-டு; அடி யார். உரைநடை.

2904. (க) பொள்ளல் - உள்ளீ டில்லாமை.

2905. (ச) வீற்றிரீஇ - தனியே இருக்கச்செய்து; 2914: ரு.

2906. (ரு) நுண்சொற் புலவர் - அமைச்சர்; கூருஉ, கூருச, கூருரு - ஆம் திருக்குறள்கள் முதலியவற்று லறிக. "அஞ்சொனுண்டேர்ச்சிப் புல வர்"புறநா. உருடு: கடு.

2909. (க - உ) தெரிந்தவனூர்ந் தால் தேர் பலநாளூரலாமென்பது ஒரு பழமொழி.

2913. (ச) பெருநம்பியென்பது, ஓரரசனுக்குப் பின்னே அரசவுரிமை பெற உரியோர்க்குக் கொடுக்கப்படும் பட்டப்பெயரென்றுதெரிகிறது; 'முன் னேன் றன்னைப் பின்னரியற்றிப் பின் னேன் றன்னையும் பெருநம்பியாகென' சிலப். பதிகம், க - உ ; கட்டுரை ; அடியார்.

2916: (உ - ரு). "தாளே பெ ருங்கிளை தோளே துணைவி, பல்லே மக்கள் கண்ணே தோழர்" பெருங். உ: கo, கoo - கoக.

2923. (ச) அழற்கொடி - நெருப் பொழுங்கு.

2926. (ச) பொருட்குன்று-மேரு.

2928. (உரை) கையுறை- கையின் கண் சேர்த்துவது; காணிக்கை.

2929. (க) சின்னத்துணி - சிறிய துண்டு. (உ)துன்னம் மூசிய-தையல் மூடிய; "ஒரோகை, யொன்றன்கூ றுடை யுடுப்பவரே யாயினும்" (கலி. கஅ.) (ரு) அகலேந்தி - ஓட்டையேந்தி.

2931. (ரு) ஒள்ளியான் - அறி வுடையான்; 741.

2934. (ச) ஆற்றுணு-கட்டுச்சோறு.

2935. (ச) காலவேல் - இறுதி யைச் செய்யும்வேல்; "காலவேலான்" கம்ப. கைடை. கக.

2943. இக்கவியின் சில வாக்கியங் களும், கருத்தும் 269 - ஆம் கவியிற் காணப்படுகின்றன.

2944. (உ -ரு) "கருங்கால்வெண் குருகுமேயும் பெருங்குளமாயிற்றென் னிடைமுலைநிறைந்தே" குறுந். ௩௨௫.

2946. (ச) போகுஉயிராகி-போவ தற்குத்துணிந்தஉயிரை உடையாராகி.

2949 (2) கொப்புளித்திட்ட - கைவிட்ட.

2961.(ச) இன்னே - இப்படியே.

2966. (உ) உலறி - காய்ந்து.

2969. (உ): 3069. தொழித்த- ஆரவாரித்த;"தொழித்தளிசேர் மலர்ச் சுனை வெறுத்த கேதாரம்" தணிகை. புராண. சக.

2970. (க) சுரையெயிறு - உட் டுளையையுடைய எயிறு; 2958 (க)

2971. (உ) வறை - வறையல்; வறுவலென வழங்கும்.

2972. (க) "புலிக்கண் வெப்பர்" (புறநா. உசுக: ச.) (உ) "மர்தர் மென்முல்லையீன்ற வான்முகை யனைய மூரல்" (நைடத. நாடு, ௧ச.) நிமிரல்- நீட்சி.

2974. (க) 833-ஆம் செய்யுளின் ஒப்புமைப் பகுதியைப்பார்க்க.

2975. (க - உ): 113.

2977. "அட்டிலுமிழ்ந்தன புகைய கிற்புகை, கொட்டிலு மிழந்தன" கம்ப. நகர்நீங்கு. ௨0ச.

2979. (ரு) நற்பு - நன்மை.

2980. (க)"நிறைந்தபால் கிளிவட் டிலு மிழந்தன" கம்ப. நகர்நீங்கு. ௨0ச.

2984. (உ) வெள்ளில் - பாடை.

2987. இச்செய்யுளின் உரையில் காதலென்பதற்கு எழுதிய பொருள் கூர்ந்தறியற்பாலது.

2989. (உரை.) தாமமுதலியமுடி யின்வகை ஐந்தன்பெயர்கள், சூடா மணிநிகண்டு, எ-ஆம்தொகுதி, உஉ- ஆம் செய்யுளிலும் பிறநிகண்டுகளிலு முள்ளன.

2991. (ச) "கடலேயனையம் யாங் கல்வியால்" நன்னெறி, எ.

2993. (ச) கழூமிய - மயங்கிய.

2999. (உ) பையமெல்ல : ஒரு பொருட் பன்மொழி. (ரு) விருந்து பட்டு - புதுமையுற்று.

3007. (உரை) கோயில் கந்தகுடி யெனப்படும்.

3012. (க) "வாடாமாமலர் மாலை கள் தூக்கலின்" மணி. ரு: ௫௦.

3013. (உரை) திவ்யத்தொனி யாவது அருகனுக்குத் தேவர்கள்செய் யும் எண்வகைச் சிறப்பினுளொன்று; எண்வகைச் சிறப்புக்களை, "சுடர் மண்டலஞ் சுரதுந்துபி தெய்வத் துவ னிசிங்கப்,பிடரமண் டலவணை பிண்டி வெண்சாமரை பெய்மலரி, னடர்மண் டலமழை யம்பொற் குடைமும்மை யாமடியோ, மிடர்மண் டலக்கெடுப் பார்க்கிமையோர்செயுமெண்சிறப்பே" (திருநூற். ௮0) என்பதனு லுணர்க.

3017. (உ) அல்லாப்புற்று-சுழன்று.

3018. (உ) "வாடாமாலையோடை யொடுதுயல்வர"(முருகு. எக.); "வா டாமாமலர் மாலைதூக்கலின்" மணி. ரு: ௫0.

3019. (உ) அமராதார் - விரும்பி நினைந்து பொருந்தாதார். (ச) நூல் நாழிகை -நெய்தற்றொழிற்குரிய கருவி களுள் ஒன்று.

3024.(உரை) கணதரரிருக்குமிடம் கணதர கோட்டமெனவழங்கும்.

3038. (ச) நீல. ஆசீவக. உ.

3039. (க - உ) "பாம்புரி... துறந்து" என்பது, 1546 - ஆம்கவி யாலும் அதனுரையாலும் விளங்கும்.

3046. (ச) பட்டத்துயானையை ஐராவணமென வழங்கல், மூவருலா விற் காணப்படும்.

3048. (உ) ஆற்றுமணல், கடல் மணல்களை அளவின் பேரெல்லைக்குக்

கூறுதல்மரபு; புறநா. ருரு, கஙஈ ; மதுரை. உஙரு - எ.

3068. (ங) "இன்னரகீதத்துக் கேள்விமாந்தர்" பெருங் க:ஙஉஎ,கமஅ.

3070. (ச) குரைய : "நேர்வருங் குரையகலம்" குறிஞ்சி. கச.

3105. (க) தீற்றி- ஊட்டப்பட்டு.

3111. (க) "மணி நிலை விசும் பொடுவரங்களிவன" சூளா.இரத.கூஉ.

3116. (உரை) கர்ப்பாவ தரணம், ஜன்மாபிஷேகம், பரிநிஷ்கிரமணம், கேவலஞானம், பரிநிர்வாணமென்னும் பஞ்சகலியாணங்களுள், பரிநிர்வாணம் ஐந்தாவதாதலின் கலியாணமெனப் பட்டது; பரிநிர்வாணம் - முத்தி.

3121. (க) ஐயமின்றி - நற்காட்சியிற் சங்கையின்றி.

3143. (உரை)முத்தும் பவளமும் கலந்து கோத்த வடம்போன்றதென் றும் அரிதிற் பொருடந்தும் எளிதிற் பொருடந்தும் செய்யுட்கள் நின்றன வென்றும் கூறப்பட்டிருத்தலின், இந் நூல் மணிமிடைபவளம்போன்றதென் பதைத் தெரிவித்தபடியாயிற்று.

---

இந்நூல் 3145-ஆம் கவியுரையின் இறுதியில் நச்சினார்க்கினியராற் குறிப் பிக்கப்பெற்றுள்ள 'பகைமாற்று' என்னுங்கவி வருமாறு:—

"பகைமாற் றொருநற் பரன்வாழ்த் தவைச்சொற் பதிக விலம்பகமோ
வகைமாற் றொருநா மகளோ கோவிந்தை மணமுறு தத்தைகுணம்
மிகைமாற் பதுமை கேமசரி கனகம் விமலையர் வீழ்சுரமஞ்
சகைமாற் றொடுமண் மகள்பூ விவக்கணை முத்தியீ ராறென்றே."

இது, செந்தமிழ்த் தொகுதி உ௦, பகுதி ரு, உங-ஆம் பக்கத்தில் 'பெயர் விழையான்' என்பவரால் வெளியிடப்பெற்றுள்ளது.

---

கீழே கண்டவற்றை இந்நூற் பிரயோகவிளக்கத்தில், உரியஇடங்களிற் சேர்த்துக்கொள்க.

| | | | |
|---|---|---|---|
| 1. | மு. | யா. வி. உரை | ஒழிபு உ |
| 23. | ,, | ,, ,, | ,, ,, |
| 31. | ,, | தொல். இளம். | செய் ௬௦ங |



உ

பரமபதிதுணை.

# சீவகசிந்தாமணி.

## நச்சினார்க்கினியருரை.

---

### கடவுள்வாழ்த்து

1. மூவாமுதலாவுலகமொருமூன்றுமேத்தத்
தாவாதவின்பந்தலையாயதுதன்னினெய்தி
யோவாதுநின்றகுணத்தொண்ணிதிச்செல்வனென்ப
தேவாதிதேவனவன்சேவடிசேர்துமன்றே

என்பது. இத்தொடர்நிலைச்செய்யுள் தேவர் செய்கின்றகாலத்திற்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமுமாதலானும், "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" (தொல். சிறப்பு.) என்றதனால், அகத்தியத்தின்வழி நூல் தொல்காப்பியமாதலானும், பிறர்கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறியவிலக்கணமே இதற்கிலக்கணமென்றுணர்க.

அவ்விலக்கணங்களிற் செய்யுளியலின்கண்ணே ஆசிரியர் பா நான்கென்றும், அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுகவென்றுங்கூறிப் பின்பு அம்மை முதலிய எட்டும் தொடர்நிலைச்செய்யுட்குஇலக்கணமென்று கூறுகின்றுழி, "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்" (தொல். செய். சூ. உ௩அ) என்பதனால், "மெல்லென்றசொல்லான் அறம்பொருளின்பம் வீடென்னும் விழுமியபொருள்பயப்பப் பழையதொருகதைமேற் கொச்சகத் தாற்கூறின், அது தோல்" என்று கூறினமையின், இச்செய்யுள் அங்ஙனங் கூறியதோலாமென்றுணர்க.

இச்செய்யுள் முன்னோர்கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதியாம் (தொல். புறத்திணை. சூ. உள.) இதனானே, "யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது" (தொல். செய். சூ. கசசு) என்பதற்குத் தேவபாணியும் காமமுமேயன்றி வீடும் பொருளாமென்பது ஆசிரியர் கருத்தாயிற்று.

முந்துநூல்களிற் காப்பியமென்னும்வடமொழியால் தொடர்நிலைச்செய்யுட்குப் பெயரின்மையும் இதற்குப் பின்புகூறிய நூல்கள் இதற்கு விதியன்மையுமுணர்க.

இனி, இத்தொடர்நிலைச்செய்யுளை இனமென்ப. அந்நூல்கள் இன மென்றுகாட்டிய உதாரணங்கடாம் அவர்சேர்த்த அவ்வப்பாக்கட்கே இனமா காது ஒழிந்தபாக்கட்கும் இனமாதற்கு ஏற்றலானும், துறையை விருத்தமா கவும், தாழிசையை விருத்தமாகவும் ஓதுதற்கு அவை ஏற்றமையானும், "மூவாமுதலா" என்னுங்கவிமுதலியன தாழம்பட்டவோசையான் விருத் மாயும் சீர்வரையறையானும் மிகத்துள்ளியவோசையானும் துறையாயும் கிடத்தலின், இதனை விருத்தக்கலித்துறையெனல்வேண்டும்; அதுகூறவே துறையும் விருத்தமுமெனப் பகுத்தோதிய இலக்கணநிரம்பாதாமாகலானும் இனமென்றல் பொருந்தமின்று. இச்செய்யுட்களின் ஓசை வேற்றுமையும் மிக்குங்குறைந்தும் வருவனவும் கலிக்கேயேற்றலிற் கொச்சகமென்றடங்கின.

"யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்பதனால் இக் கவியும் மேலிற்கவியும் முன்னிலையன்றியும் தேவர்ப்பராயினவாம்.

இனி, அளவியற்சந்தம், அளவழிச்சந்தம், அளவியற்றாண்டகம், அள வழித்தாண்டகம், சம்சந்தத்தாண்டகம், சந்தத்தாண்டகம், தாண்டகச்சந்த மென அடக்குவார்க்கு அவற்றுள்ளும் சிலவன்றி முழுதமடங்காமையுணர்க.

மூவாமுதலாவென்பது, மூத்த முதலியவென்னும் பெயரெச்சங்களின் எதிர்மறையடுக்கு; "எதிர்மறுத்து மொழியினும் பொருணிலைதிரியா" (தொல். வினை. சூ. ௩௧) என்பதனால், உலகமென்னும் வினைமுதற் பொருளொடு முடிந்தது; "முதலா வேன தம்பெயர் முதலும்" (தொல். மொழி. சூ. ௩௩) என்பதனான், முதலுமென்பதொருவினை உடன்பாட் டிற்கு உளதாம். ஆசிரியர், "காலமுலகம்" (தொல். கிளவி. சூ. ௫௮) என்றும் பிறண்டும் சூத்திரஞ்செய்தலின், அது வடமொழியன்று. ஈண்டு உலகமென்றது உயிர்க்கிழவனை; "உலக முவப்ப" (முருகு. ௧) என்றது போல. ஒருமூன்றுமென்ற. குற்றியலுகரம் மெய்யொடுங்கெட்டு, "முதலீ ரெண்ணினொற்று ரகர மாகு, முகரம் வருத லாவயி னான" (தொல். குற் றியலுகரப். சூ. ௩௩) என்னும் விதியும்பெற்று, "அளந்தறி கிளவியும்" (தொல். குற்றியலுகரப் சூ. ௪௧) என்னுஞ்சூத்திரத்து, "தோன்றுங் காலை" என்ற இலேசான் முடிந்தது. ஒருமூன்று மேத்த எய்தியென்க; உம்மை, "இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவி, வினைப்படு தொகுதி யின்" (தொல். கிளவி. சூ. ௩௩) வந்தது. உலகமென்னும்பெயர் மூன் றென்னும் பெயர்ப்பயனிலைகொண்டு, அது தான் ஏத்தவென்னும் வினைப் பயனிலைகொண்டது. வருத்தமாகிய குறிப்புணர்த்திய தாவென்னும் உரிச் சொல், வினைக்கு முதனிலையாய்த் தாவாதவெனப் பெயரெச்சமறையாய் இன்பமென்னும் பெயரொடுமுடிந்தது. ஏத்தத் தாவாதவென்பது, "வினை யெஞ்சு கிளவியும்..................வல்லெழுத்து மிகுமே" (தொல். உயிர் மயங்கு. சூ. ௨) என்பதனான், ஒற்றுமிக்கது. தாவாத வின்ப மென்பது உடம்படுமெய்யாயிற்று; இன்பமென்னும் பெயர் தலையாயதென்னுங் குறிப்புப்பெயரைக்கொண்டது; "அல்வழி யெல்லா மெல்லெழுத்தாகும்"

(தொல். புள்ளி. சூ. ௧௪) என்பதனன், மகரம் நகரமாயிற்று. தன்னி னய்தியென்ற இன், காரகவேதுப்பொருட்கண்வந்த ஐந்தாமுருபு. தன் னிலெய்தியென்று பாடமாயின், மணியினதொளியும் மலரினதுநாற்றமும் போலத் தன்னுள்ளேபெற்றென்க. எய்தியெனநின்ற செய்தெனெச்சம், கார ணகாரியப்பொருட்டாய் நின்றவென்னும் பெயரெச்சவினையொடு முடிந்து, அது குணமென்னும் பொருட்பெயரொடுமுடிந்தது. ஓவாதென்னும் எதிர் மறையெச்சமும் நின்றவென்பதனொடு முடியும். குணமாவன, தாவாத வின்பமென்பதனாற்பெற்ற அநந்தசுகமொழிந்த ஏழுகுணங்களும்; அவை:— அநந்தஞானம், அநந்தவீரியம், அநந்ததரிசனம், நாமமின்மை, கோத்திர மின்மை, ஆயுவின்மை, அழியாவியல்பென்பன. அத்து, இரண்டாமுருபின் கண்வந்த சாரியை; "அத்தே வற்றே யாயிரு மொழிமே, லொற்றுமெய் கெடுத லென்மனார் புலவர்" (தொல். புணரியல், சூ. ௩௧) என்பதனன், மகரம் கெட்டு "அத்தி னகர மகரமுனை யில்லை" (ஷை ஷை சூ. ௨௩) என் பதனன், அகரம் கெட்டுமுடிந்தது. "குற்றிய லுகரமு மற்று" (ஷை ஷை சூ. ௩). என்பதனன் வருமொழியில் ஒகரமேறிற்று. ஒண்ணிதி, பண்புத்தொகை. ஒண்ணிதிச்செல்வன் - வீடாகிய விளங்கிய நிதியையுடைய செல்வன்; இகரவீற்று வேற்றுமைச்சொல்லாதலின், வல்லெழுத்துமிக்கது. செல்வனென்றார், அழியாதவின்பத்தை நுகர்தலின். என்பவென்னுமுற்றுச் சொல், சாதுக்களென்னும்பெயர் தொக்குநின்றதனொடுமுடியும்; தோன்று வெழுவாயுமாம். தேவும்: தெய்வத்துக்கு ஒருபெயர்; நான்கனுருபு விரிக்க. ஆதியாகியவென்க. சேவடி பண்புமாத்திரையாய்க்குறைந்த சொல்லாத லின், மருவின்பாத்தியதாய் நின்றது. சேவடிசேரதுமென ஒற்று இரட் டாதுநின்றது, இரண்டாவதற்கோதிய திரிபில்அன்னபிறவால் (தொல். தொகை. சூ. ௧௫.) சேர்தும், பன்மைத்தன்மை; ஈண்டு ஒருவரைக்கூறும் பன்மை. அன்று, அசை. ஏகாரம், ஈற்றசை.

(இதன்பொருள்.) தேவர்களுக்கு ஆதியாகிய தேவனுவான், கெடாத இன்பம் தனக்கு ஒப்பற்றதனை அந்தமுமாதியுமில்லாத மூன்றுலகுமேத்தத் தன்னாற்பெறுகையினாலே தன்னை விட்டுநீங்காதுநின்ற குணங்களையுடையனு கிய ஒண்ணிதிச்செல்வனென்பர் சாதுக்கள்; ஆதலின், யாமும் இவ்விலக்கியம் இனிதுமுடிதற்பொருட்டு அவன் திருவடிகளை வணங்குவேமென்றாரென்க.

இஃது, அருகசரணம் சித்தசரணம் சாதுசரணம் தன்மசரண மென்னு நான்கினுள், சித்தசரணம்.

இனி, தான் மூவாமுதலாக வேண்டியென்றும், நாம் மூவாமுதலாக வேண்டியென்றும் வினையெச்சமாக்குவாருமுளர்; அதற்கு எய்தியென்பத னொடு முடிக்க.

மேல்வருஞ் செய்யுட்கும் இவ்வாறுரைப்பின் உரைபெருகுமாதலின், இனி நல்லறிவுடையோர் உய்த்துணருமாறு சுருங்கவுரைக்கின்றாம்.

வேலியலாடவர்விரவிவிண்ணவ
ராலயமிதுவெனவையஞ்செய்யுமே.

கணை - அலகு.

(இ - ள்.) அவ்விடம், மாலையும் பூணும் மயங்கப்பட்டுச் சிலைபோலும் நுதலினரோடே ஆடவரும் கலக்கப்பட்டுத் தேவரிருப்பிடமிதுவென்று ஐயந்தருமென்க. (கூக)

91. கற்சுணஞ்செய்ததோண்மைந்தர்காதலா
னற்சுணப்பட்டுடைபற்றநாணினாற்
பொற்சுணத்தால்விளக்கவிப்பப்பொங்கிய
பொற்சுணம்புறம்பணைதவழும்பொற்பிற்றே.

கல் - உலம். சுண்ணப்பட்டு - சுண்ணமணைந்தபட்டு. சுண்ணத்தால் உருபினும்பொருளினும் மெய்தடுமாறி ஒன்றனிலைக்களத்து ஒன்றுசென்றது. மகளிர், தோன்றா எழுவாய்.

(இ - ள்.) மைந்தர், மகளிர்புலந்துபோவுழித் தம் காதலால் அவருடையைப்பிடிக்க, அதுநெகிழ்ந்தநாணாலே அவர் சுண்ணத்தைக்கொண்டு விளக்கை அவிப்ப மிக்கெழுந்தசுண்ணம் புறம்பின்மருதநிலத்தேபரக்கும் பொற்பிற்று அவ்விடமென்க.

காதலாரும் பாடம். (கூஉ)

92. நலத்தகுநானநின்றிடிக்குநல்லவ
ருலக்கையாலுதிர்ந்தனதெங்கினொண்பழ
நிலத்தவைசொரிதலின்வெரீஇய்மஞ்ஞைபோய்க்
கலத்துயர்கூம்பின்மேலாடுங்களைவைத்தே.

நலத்தகு, 'வியத்தகு' என்றாற்போல நின்றது.

(இ-ள்.) விரும்பத்தகுகின்ற சுண்ணத்தை நின்றிடிக்கும் மகளிர் உலக்கையாற் கழன்றனவாகிய பழத்தை அத்தெங்கு மடலிலேதாங்கி நிலத்தே சொரிதலின் வெரீஇப மயில்போய் அச்சநீங்கிக் கூம்பின்மேலாடும் களைவைத்து அவ்விடமென்க.

நானம், ஆகுபெயர் ; அதிலே நனைத்திடித்தலின். புகாரினது ஆழத்தால் நகரளவும் கலம்வந்தது; அரசன் விளையாடுதற்குச் சமைத்தனவுமாம். ()

93. இட்டவெண்ணிலப்படாவகையினீண்டிய
முட்டிலாமூவறுபாடைமாக்களாற்
புட்பயில்பழுமரப்பொலிவிற்றாகிய
மட்டிலாவளநகர்வண்ணமின்னதே.

மிலேச்சராதலின், ஐபறிவிற்குரிய 'மாக்கள்' என்னும்பெயராற் கூறினர்.

(இ - ள்.) போகட்டளள்ளு நிலத்தில்வீழாததொருகூற்ருலே திரண்ட குறைவற்ற பதினெட்டுப்பாடைமாக்களாலே பழமரப்பொலிவிற்ருகிய நகரின்செய்தி, எக்காலமும் யான் முற்கூறியதன்மைத்தென்க.

இதனுனே நெருக்கமும் ஓசைவேறுபாடும் பயன்கோடலும்கூறினர்.

"கடிநகரமைதிசெப்புவாம்" (சீவக.எஅ) என்றதுமுதலாக நடுவுகூறிய வினைகளை, "புடைநகர்த்தொழிலிடங்கடந்து" (ஷை அ௫) என்பதனுேடு முடித்து, அதுமுதல் இடைநகரிற் கூறிய வினைகளை, 'இன்னது' என்பதனுேடுமுடிக்க. (௯௪)

94\. தங்கொளிநித்திலத்தாமஞ்சூடிய
வெங்களியிளமுலைவேற்கண்மாதரார்
பைங்கிளிமுன்கைமேற்கொண்டுபார்ப்பெனுங்
கொங்கலர்தாமரைக்கிடங்குகூறுவாம்.

'சூடிய' என்ருர், 'முலைமுடிசூடிற்று' என்ருற்போல. வெம்மை - விருப்பம். மேல் தாமரைகூறுதலின், பார்ப்பு - அன்னப்பார்ப்பு.

(இ - ள்.) மாதரார், கிளியை முன்கையிலேகொண்டு பார்ப்பை அக்கிளிக்கு எண்ணிக்காட்டுதற்குக் காரணமாகிய கிடங்கினைக் கூறுவாமென்ருரென்க. (௯௫)

95\. கோட்சுறுவினத்தொடுமுதலைக்குப்பைக
ளாட்பெறுதிரிதாவஞ்சிப்பாய்வன
மோட்டிருப்பனிக்கிடங்குழக்கமொய்த்தெழுந்
தீட்டருப்புள்ளினமிரற்றுமென்பவே.

(இ - ள்.) சுறுவினத்தோடே முதலைத்திரள் கரையிலேவந்த ஆளை எதிர்ப்படப் பெறுவாய் உள்ளே திரிதருதலான்,அதற்கஞ்சி விசைத்துப்பாய்வனவாகிய இரு உழக்குதலின் ஈட்டமறுத புள்ளினம் எழுந்தரற்றுமென்க.

முன்னே கழியணைந்தமைபெறுதலின், சுறவுகூறினர். கரையில் அஞ்சி ஆழத்திற்சென்ருல் ஆளைக்கொல்லுதல் அவற்றிற்குத்தொழில். (௯௬)

96\. சிறையனப்பெடையினேடுடிச்சேவல்போ
யறுபதவண்டினமார்ப்பத்தாமரை
யுறைவதுகுழுவினினீங்கியோகொடு
கறையறமுயல்வதோர்கடவுளொத்ததே.

(இ - ள்.) அன்னப்பெடையினேடே சேவலாடிப்போய் வண்டினமெழுந்தார்ப்பத் தாமரைப்பூவிலே குவிந்திருக்கின்றது, சுற்றத்தினின்றுநீங்கிக் கறையறத் தீயிடைநின்று யோகத்தோடுதவஞ்செய்வதொருகடவுளையொத்ததென்க.

யோகம், திரிந்தது. கறை - மும்மலம். எழுந்தவண்டு புகைக்கும், பூ நெருப்பிற்குமுவமம். (௯௭)

97. அரும்பொனும்வெள்ளியுமணியுமல்லது
கருங்கலந்தோய்விலாக்காமர்பூந்துறை
குரும்பைமென்முலையின்மேற்குலாயகுங்குமம்
விருந்துசெய்திடவெறிமேனிசேர்ந்ததே.

(இ-ள்.) குளிப்பார்முலையிற்குங்குமம், தன்னைப் புதுமைசெய்தலாலே பொற்குடமுதலியனமுகத்தலல்லது மட்குடமுகவாத துறை மேனிசிவந்த தென்க.

பொன்முதலியகாரணப்பெயர், அவற்றானியன்ற காரியத்தின்மே னின்ற ஆகுபெயர். வெறி - மணம். (௬௮)

98. பட்டவர்த்தப்பலிற்பரவையேந்தல்கு
லட்டொளியரத்தவாய்க்கணிகையல்லது
மட்டுடைமணமகன்மலர்ந்தபோதினுற்
கட்டுடைக்காவலிற்காமர்கன்னியே.

அட்டு ஒளி அரத்தம் - உருக்கி ஒளியையுடைய அரக்கு. மட்டு - காம பானம். கட்டு - கர்பித்தல்.

(இ - ள்.) அகப்பட்டவரைக் கரையேறுமற்கோறலிற் பரத்தையை யொக்கும்; அதுவொழிய மலர்ந்தபூவினால் மணஞ்செய்த குலமகளையொக் கும்; காவலாற் கன்னியையொக்குமென்க. (௬௯)

99. நிரைகதிர்நித்திலங்கோத்துவைத்தபோல்
விரைகமழ்கமுகின்மேல்விரிந்தபாளையுங்
குரைமதுக்குவளைகள்கிடங்கிற்பூத்தவு
முரையினோரோசனையுலாவிநாறுமே.

குரைமது, வினைத்தொகை. உரை - புகழ்; புகழால் எங்குமுலாவி.

(இ - ள்.) நித்திலத்தைக்கோத்துவைத்தபோற் கரையிற் கமுகின்மேல் விரிந்த விரைகமழ்பாளையும், அகழிற்பூத்தகுவளையும், உலாவி ஓரோசனை நாறுமென்க. (௭0)

100. தாய்முலைதழுவியகுழவிபோலவு
மாமலைதழுவியமஞ்சுபோலவு
மாய்முகிறழீஇய்சும்பருதநெற்றிய
சேயுயர்மதில்வகைசெப்புகின்றதே.

(இ - ள்.) நீர்சுமந்தினைத்த மேகத்தைத் தன்னிடத்தே அணைத்தலா லே குழவியை அணைத்த தாயுடையமுலைபோலவும், மஞ்சைத்தன்னிடத் தே அணைத்த பெரியமலைபோலவும் அசும்பருத தலையையுடைய மதிலின்கூறு பாடு இனிக் கூறுகின்றதென்றுரென்க. (௭௧)

வேறு.

101. மாற்றவர்மறப்படைமலேந்துமதில்பற்றி
னூற்றுவரைக்கொல்லியொடுநூக்கியெறிபொறியுந்
தோற்றமுறுபேய்களிறுதுற்றுபெரும்பாம்புங்
கூற்றமனகழுகுதொடர்குந்தமொடுகோண்மா.

இதுமுதலாக, "கரும்பொன்" (௧0௪) அளவுமொருதொடர்.

நூற்றுவரைக்கொல்லி - சதக்கினி; நூறுபேரை ஒருகாற்கொல்வதொரு பொறி. நூக்கி - தள்ளி. எறிதல் - அடித்தல்; "சேரியம் பெண்டிர் நெஞ் சத்தெறிய" (நற். ௯௧) என்றாற்போல. தோற்றமுறுபேய் - கட்புல னாகியபேய். துற்றுதல் - விழுங்குதல். தொடர் - துவக்குசங்கிலி. குந்தம் - விட்டேறு. கோண்மா - புலிமுதலியன. இவற்றிற்கு எண்ணும்மைவிரிக்க. ()

102. விற்பொறிகள்வெய்யுவிடுகுதிரைதொடர்யில்வாள்
கற்பொறிகள்பாவையனமாடகடுசெந்தீக்
கொற்புனைசெய்கொள்ளிபெருங்கொக்கெழில்செய்கூகை
நற்றலைகடிருக்கும்வலிநெருக்குமரமிலேயே.

விடுகுதிரை - பகைவர்மேலே விடுங்குதிரைப்பொறி. தொடர்வாள் - தானேதொடர்ந்துகொல்லும்வாள். கற்பொறிகள் - இடங்கணிமுதலியன. பாவையும் அன்னமும் மாடங்களும் அடப்படுந்தீயும்; மாடம் - நாடகசாலை. கொல் - கொற்சாதி. காய்ந்த இரும்புடன் கொளுத்தலின், 'கொள்ளி' என் றார். எழில்செய், இகழ்ச்சிக் குறிப்பு. தலைகளைத்திருகிக்கொள்ளும்வலி யுடனே நெருக்குமரமாவது ஐயவித்துலாம். இவற்றிற்கும் எண்ணும்மை விரிக்க. (எ௩)

103. செம்புருகுவெங்களிகளுமிழ்வதிரிந்தெங்கும்
வெம்புருகுவட்டுமிழ்வவெந்நெய்முகந்துமிழ்வ
வம்புமிழ்வவேலுமிழ்வகல்லுமிழ்வவாகித்
தம்புலங்களால்யவனர்தாட்படுத்தபொறியே.

எவ்விடத்துந்திரிந்து செம்புருகினநீரை உமிழ்வனவும், பகைவர்வேதற் குக்காரணமான உருகுவட்டைஉமிழ்வனவும், நெய்யைஉமிழ்வனவுமாக யவனர் இயந்திரித்தபொறியும். உம்மை விரிக்க. ஆகி - ஆக. புலம் - அறிவு. ()

104. கரும்பொனியல்பன்றிகதநாகம்விடுசகடங்
குரங்குபொருதகரிஞெடுகூர்ந்தரிவநுண்ணூல்
பரந்தபசும்பொற்கொடிபதாகையொடுகொழிக்குந்
திருந்துமதிறெவ்வர்தலைபணிப்பத்திருந்தின்றே.

இரும்பான்இயன்ற பன்றி. நாகம் - விடவரவு. நூல் - அரிகயிறு. பதாகை - பெருங்கொடி.

(இ - ள்.) பொற்கொடிகள் பதாகையொடு கொழிக்குந் திருந்துமதில், மாற்றவர் மறப்படை அகழைக்கடந்து தன்னைப்பற்றின், அத்தெவ்வர் தலை

பனிக்கும்படி நூற்றுவரைக்கொல்லிமுதல் மாநிலையீருகவுள்ளவையும், செம்புருகு கனிமுதலியவற்றை உமிழ்வனவாக யவனர் தாட்படுத்த பொறிகளும் பன்றிமுதல் நுண்ணூலீருகவுள்ளவையும் திருந்திற்றென்க.

மதில் இன்னதுமின்னதும்திருந்திற்றெனச் சினைவினைமுதலொடு முடிந்தது. பற்றிற் பனிப்பவென்க; இத்தொடர்நிலையிற் சொற்களைத்துணித்துப் பலவிடத்தினுமெடுத்துக்கூட்டியது, செய்யுளுறுப்பு இருபத்தாறினும் மாட்டென்பது ஒருறுப்பாதலின்; "அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய நிலையினு, மியன்றுபொருண் முடியத் தந்தன ருரைத்தன், மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்" (தொல். செய். சூ. ௨௧௦) என்றும், "மாட்டு மெச்சமு நாட்ட லின்றி, யுடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே" (ஷை ஷை சூ. ௨௧௧) என்றும் தொல்காப்பியனூர் கூறினர். இதனல், நாடுமுதலியகவிகளில் மாட்டின்றி வந்தனவுங்கொள்க. இவ்விதி மேல்வருவனவற்றிற்குக்கொள்க. (௭௫)

105. வயிரவரை கண்விழிப்பபோன்றுமழையுகளும்
வயிரமணித்தாழ்க்கதவுவாயின்முகமாக
வயிரமணிஞாயின்முலைவான்பொற்கொடிக்கூந்தல்
வயிரக்கிடங்காடைமதிற்கன்னியதுகவினே.

வரைகள் கண்விழிப்பனபோன்று கதவுடையவென வினைக்குறிப்பொடு முடிந்தது. மழையுகளும்வாயிலெனவே கோபுரமாம். ஞாயில் - ஏப்புழைக்குருவாய் எய்து மறையுஞ்சூட்டு. கவினது என மாறுக. 'அது' இடப்பொருளுணர்த்திற்று.

(இ - ள்.) முலையினையும் கூந்தலினையும் ஆடையினையுமுடைய மதிற்கன்னி கதவினையுடைய நாலுவாயிலும் நாலுமுகமாகக் கவினிடத்தாயிற்றென்க.

இனி, ஆகவென்பதை எங்குங்கூட்டி, மதில் இன்னது இன்னதாகக் கவினிடத்ததென்றுமாம். மதிலில் இன்னது இன்னதாகையிலே அம்மதிற்கன்னியதாயிருக்கும் அழகென்றுமாம். (௭௬)

106. செம்பொன்மழைபோன்றடிதொறுமிரங்கள்சிந்திப்
பைம்பொன்விளைதீவினிதிதடிந்துபலர்க்கார்த்தி
யம்பொனிலத்தேகுகுடியகநகரமதுதா
னும்பருலகொப்பததன்றன்மைசிறிதுரைப்பாம்.

(இ - ள்.) இனிக் கூறுகின்றது, பொன்விளைகின்ற தீவில் நிதியைவெட்டிப் பொன்னைமழைபோன்று அடிக்கடி சிந்திப் பலர்க்கும் பல ஆயிரங்களைக் கொடுத்து நிறைவித்ததினாலே மறுமையில் தேவருலகத்திலே செல்லுங்குடியையுடைய உள்நகரம்; அதுதான் நுகர்ச்சியான் உம்பருலகொப்பதொன்றாயினும் அதன் றன்மை சிறிது கூறுவாமென்றுரைக்க. (௭௭)

வேறு.

107. துப்புறழ்தொண்டைச்செவ்வாய்த்தோழியர்காமத்தூதி
னொப்பவொன்றுதியாகவாயிரத்தோரெட்டீறுச்
செப்பித்தஞ்செம்பொனல்குனலம்வரைவின்றிவிற்கு
முப்பமைகாமத்துப்பினவரிடமுரைத்துமன்றே.

(இ - ள்.) வேட்கையிலேவிலைவிக்குந் தோழியராகியதூதாலே செம்பொன் ஒன்றுதியாக ஆயிரத்தெண்கழஞ்சீறாக, வந்தவனுக்கு ஒப்ப விலை சொல்லித் தம்மல்குலைவிற்கும் உவர்ப்பில்லாத காமநுகர்ச்சியையுடைய பரத்தையரிடத்தைக் கூறுவாமென்க.

தொண்டை, வாய்க்குஅடை. நலம்வரைவின்றி-ஒருவரிடத்தும் அன்புநிலைபேறின்றி. "உப்புடையமுந்நீர்" (சீவக. உ௮௦) என்றார் உவர்ப்பிற்கு; உப்பு - இனிமையுமாம். இனி உவமத்தொகையாக்கி, இதற்கு இஃது அளவென்று உப்பிடுமாறுபோலக் கொடுக்கும் பொருளளவான அன்பென்றுமுரைப்ப. துப்பையொக்கும் தொண்டைபோலும்செவ்வாயென இரண்டுவமையும் செவ்வாயை நோக்குதலின், அடுத்துவரலுவமையன்று. (எ௮)

108. குங்குமமெழுகிச்சார்வுந்திண்ணையுங்குயிற்றியுள்ளாற்
றங்குமென்சாந்தத்தோடுதாமமுந்தாழநாற்றி
யெங்குநற்சுவர்கடோறுநாடகமெழுதியேற்பப்
பொங்குமென்மலர்பெய்சேக்கைபொலிந்து விண்புகற்சியுண்டே.

(இ - ள்.) அச்சேரிப்புறமெங்கும், சார்ந்திருக்குமிடத்தையும்திண்ணையையும்பண்ணிக் குங்குமத்தாலேமெழுகி, உள்ளெல்லாம் மெழுகினசந்தனத்திலே மாலையையும்தாழநாற்றிச் சுவர்கடோறும் காமக்குறிப்புப்பட நாடகமெழுதிச் சேக்கைபொலிந்து விண்ணை விரும்பப்பண்ணுதலுடைத்தென்க.()

109. தூசுசூழ்பரவையல்குல்சுமக்கலாதென்னவீழ்த்த
காசுசூழ்கோவைமுத்தங்கதிர்முலைதிமிர்ந்தசாந்தம்
வாசநற்பொடிகண்மாலைவண்டுணைவிழ்ந்தமுற்ற
மாசைப்பட்டரசுவைகவருங்கடிகமழுமன்றே.

(இ-ள்.) தூசுசூழல்குலைச்சூழ்ந்தகோவை, இவ்வல்குல் நம்மைச் சுமக்கமாட்டாதென்று கருதினாற்போல வீழ்த்தகாசு முத்தம் சாந்தம் சுண்ணம் மாலைஎன்கின்றவை வீழ்ந்தமுற்றம் அரசுவிரும்பித்தங்கும்படி கமழுமென்க.()

110. அஞ்சிலம்பொலியோடல்குற்கலையொலியணிந்தமுன்கைப்
பஞ்சிமெல்விரலிற்பாணிபண்ணொலிபவழச்செவ்வா
யஞ்சிநோந்துயிர்க்குந்தேன்சோர்குழலொலிமுழவினோசை
துஞ்சலிலோசைதம்மாற்றுறக்கமுநிகர்க்கலாதே.

முன்பு சேடியர்கையாற் செம்பஞ்சணிந்த விரல். செவ்வாயைமுன்னும் பின்னுங்கூட்டுக. வாயுறுத்தற்குஅஞ்சி உற்றபின் தன்றொழின்முடித்தற்கு நேர்ந்தனதங்குழல்.

(இ - ள்.) சிலம்பொலியோடே கலையொலி யாழொலி பாட்டொலி குழலொலி முழவினொலியாகிய ஒழியா ஒலிகளாலே இச்சேரிக்குத் துறக்கமு மொவ்வாதென்க. (அக)

111. தேனுலாமதுச்செய்கோதைதேம்புகைகமழவூட்ட
வானுலாஞ்சுடர்கண்மூடிமாநகரிரவுசெய்யப்
பானிலாச்சொரிந்துநல்லாரணிகலம்பகலைச்செய்ய
வேனிலான்விழைந்தசேரிமேலுலகனையதொன்றே.

சுடரென்றது, ஞாயிற்றினது சுடரையும் திங்களினது சுடரையுமாக் கிப் பானிலாவைத் திங்களின் சுடரிற்கேற்றுக.

(இ - ள்.) கோதையைப்புகைத்தலால் அப்புகை வானுலாஞ்சுடர்களை மறைத்து நகரைப் பகலேஇரவையுண்டாக்க, அவ்விரவை நல்லாரணிகலத் தின் மாணிக்கங்கெடுத்துப்பகற்பொழுதைச்செய்ய இயல்பான இரவிலும் பா னிலாச்சொரிந்து வானுலாவுந்திங்களின் சுடர்களை அம்மணிகண்மறைத்துப் பகற்பொழுதைச்செய்ய அச்சேரி மேலுலகையொப்பதொன்றேயாயிற் றென்க.

ஏகாரம், தேற்றம். இரவும்பகலுமின்மையிற் றுறக்கமொத்தது. இனி, பால் - பகுதி, நிலா - ஒளியென்றுமுரைப்ப; "நிலாத்தலைத்திகழும்பைம் பூண்" (சீவக. ககூ௰) "பணிநிலாவீசும்பைம்பொற்கொடி" (ஷை. உ௫ஙக) என்றாற்போல. (அஉ)

112. இட்டநூல்வழாமையோடியோசனையெல்லைநீண்டு
மட்டுவார்மாலைவேய்ந்துசதுக்கங்கண்மலிந்தசும்மைப்
பட்டமும்பசும்பொற்பூணும்பாங்தொளிநிழற்றுந்தீந்தே
னட்டுந்தாரணிந்தமார்பராவணங்கிளக்கலுற்றேன்.

(இ - ள்.) வலித்தநூற் செவ்வைதப்பாமற்கிடந்து நீண்டுவேய்ப்பட்டு நாற்சந்திகளிலே மிக்கவொலியினையுடைய அங்காடித்தெருக் கூறுதலுற்றேனெ ன்றானென்க.

தம் தாத்திற்கேற்பப்பெற்ற பட்டமும் பூணும் எங்கும்விளங்குதற்குக் காரணமான வணிகர் முதலாயினர். (அங)

113. மணிபுனைசெம்பொற்கொட்டைவம்பணிமுத்தமாலைக்
கணிபுனைபவழத்திண்காழ்கம்பலக்கிடுகினூன்றி
யணிநிலமெழுகிச்சாந்தினகிற்புகைத்தம்பொற்போதிற்
றிணிநிலமணிந்துதேங்கொளையவிசிதறினாரே.

கணி - நூல்போனவன்; அவன்புனைந்தகாழ். திணிநிலம் - படுத்தநிலம். தேங்கொளைபவி - தெய்வங்கள் இனிதாகக்கொண்ட ஐபவி.

(இ-ள்.) மணியழுத்தின பொன்னாற்செய்த கடைமணியையுடைய கச்சுத்தூக்கின பவழக்காம்பைக் கம்பலம்வேய்ந்த சட்டத்திலே கொளுத்தி னின்றி மெழுகிப் புகைத்து அணிந்து சிதறினாரென்க.

முத்தமாலைபுனைந்த கூடு.                    (அச)

114. பொன்சொரிகதவுதாளிற்றிறந்துபொன்யவனப்பேழை
மின்சொரிமணியுமுத்தும்வயிரமுங்குவித்துப்பின்னு
மன்பெரும்பவழக்குப்பைவாலணிகலஞ்செய்குப்பை
நன்பகலிரவுசெய்யுநன்கலங்கூப்பினாரே.

(இ - ள்.) பொன் தானேசொரிதற்குக் காரணமான கதவைத்திறந்து பேழையிலிருந்த மணிமுதலியவற்றைக் குவித்துப் பின்னரும் பவளத்திரள்களையும் குறைப்பணிகளையும் நீலமணிப்பூண்களையும் குவித்தாரென்க.

நன்பகல் - கடும்பகல்.                    (அரு)

115. விழுக்கலஞ்சொரியச்சிந்திவீழ்ந்தவையெடுத்துக்கொள்ளா
வொழுக்கினரவர்கள்செல்வமுரைப்பரிதொழிகவேண்டா
பழுக்குலைக்கமுகுந்தெங்கும்வாழையும்பசும்பொன்னாலு
மெழிற்பொலிமணியினாலுங்கடைதொறுமியற்றினாரே.

(இ - ள்.) கலத்தைச்சொரிதலாற் சிதறிவீழ்ந்தவற்றைக்கொள்ளா ஒழுக்கினர்; அதுவேயன்றி, அவர்க்கு நாடோறும்நடுதற்குக் கமுகுமுதலியன தேடவேண்டா; அஃது என்னையெனின், அவற்றைப் பொன்னாலும் மணியாலும் இயற்றினாரதலான். அவர்கள் செல்வம் என்னாலுரைத்தலரிது; இனி நீரும் கேட்கவேண்டுமென்னும்விருப்பத்தை ஒழிவீராகவென்க.

இனி உரைப்பரிது, கேட்கவிரும்பவேண்டா, ஒழிகவென்றுமாம். (அசு)

116. மூசுதேனிறாலின்மூசமொய்திரையியம்பியாங்கு
மோசையென்றுணரினல்லாலெழுத்துமெய்யுணர்தலாகாப்
பூசுசாந்தொருவர்பூசிற்றெழுவர்தம்மகலம்பூசி
மாசனமிடம்பெறாதுவண்கடைமலிந்ததன்றே.

இறாலின்மூசு தேன்போலமூச. உம்மை, சிறப்பு. ஓரோசையும் பாடம். பூசுசாந்து - நன்குமதித்த சாந்து. பூசி - பூச.

(இ - ள்.) மாசனம் போக்கிடம்பெறாமல் ஒருவர்பூசிற்று எழுவர்தம் மகலம் பூசும்படி மூச ஆங்குப்பிறந்த ஓசையும் மொய்திரைபோல இயம்பி ஓசையென்று உணர்தலன்றி எழுத்தின்வடிவு உணர்தலாகாதாய்க் கடையிலே மலிந்ததென்க.

நான்குசாதியும் அநுலோமப் பிரதிலோமரும் சங்கரசாதியும்பற்றி, எழுவர் என்றார்.                    (அஎ)

117. மெய்யணிபசும்பொற்சுண்ணமேதகுநானநீரி
னைதுபட்டொழுகியானையழிமதங்கலந்துசேறாய்ச்

செய்யணிகலன்கள்சிந்திமாலேயுமதுவுமல்கி
வெய்தடியிடுதற்காகாவீதிகள்விளம்பலுற்றேன்.

அணிசுண்ணம், 'உண்டசோறு' போல்நின்றது ; மிச்சில் கவிழ்த்தல் மரபு. செய்யணிகலம் - அரிதிற்செய்தகலம். மாலேயினும் கலத்தினுந் தீண்டுதற்கு அடிநாணிற்று, தமது நலத்தான்.

(இ - ள்.) அணிந்துமிக்கசுண்ணம் நானத்தாலும் பனிநீராலும் இளகுதல்பட்டு வீதியில் ஒழுகலின், அதனேடு மதமுங்கலந்து மதுவுமல்கிச் சேறுய்ச் சிந்தி விரைய அடியிடுதற்காகா வீதிகள் கூறலுற்றேனென்க.

இவை பீடிகைத்தெருவொழிந்தன. (அஅ)

வேறு.

118. முழவணிமுதுநகர்முரசொடுவளேவிம
விழவணிமகளிர்தம்விரைகமழிளமுலே
யிழையணியொளியிளவெயில்செயவிடுபுகை
மழையெனமறையினபொலிவினதொருபால்.

(இ - ள்.) ஒருபால், முழ்வுநிரைத்த கோயில்களிலே முரசும்வளேயும் விம்முதலால், அவ்விழவிற்கு ஒப்பித்த மகளிருடைய முலேயினணிந்த இழையிலொளி இளவெயிலே உண்டாக்கும்படி இடுகின்றபுகை மழையென ஞாயிற்றை மறைத்த பொலிவினையுடைத்தாயிற்றென்க. (அகூ)

119. குடையொடுகுடைபலகளிறொடுநெரிதர
வுடைகடலொலியினொடுறுவரர்பலிசெல்
முடியொடுமுடியுறமிடைதலின்விடுசுடர்க்
கொடியுடைமழைமினிற்குலவியதொருபால்.

உடைகடலொலி - உடைகடலொலிபோலும் ஒலி.

(இ - ள்.) ஒருபால், அரசனேக் குடையுங்குடையும் களிறுங்களிறும் பல நெருங்கிச் சேவித்தல் காரணமாகத் தேவருடைய பலிநடத்தலாலே, அதனேச் சேவிக்கும் அரசர் முடியுமுடியுநெருங்குதலின், விடுசுடர் மழையின் மின்போற் குலவியதென்க.

இது, செல்வமுண்டாதற்குப் பலிநடக்குமென்றார். இனிப் பலிநடத்தலிற் குடைமுதலியன நெரிதர முடிநெருங்கிற்றென்றுமாம். (கூ0)

120. பூத்தலேவாரணப்போர்த்தொழிலிளேயவர்
நாத்தலேமடிவிளிக்கூத்தொடுகுமிறாக்
காய்த்துறுதமனியத்துகளொடுகடிகமழ்
பூத்துகள்கழுமியபொலிவினதொருபால்.

பூ - தோன்றிப்பூ. காய்த்துற - காய்த்ததலுற்ற.

(இ - ள்.) ஒருபால், கோழிப்போரின்வெற்றியைத் தமதாகவுடைய இளையவர் சீழ்க்கைக் கூத்தோடு நெருங்குதலான், அப்பொழுதுசிந்தும் பொற்றுகளும் பூத்துகளுமயங்கின பொலிவினதென்க. (கக)

121. மைந்தரொடூடியமகளிரையிளையவ
ரந்துகில்பற்றலிற்காசரிந்தணிகிளர்
சுந்தரநிலமிசைச்சொரிதலின்மின்னணிந்
திந்திரதிருவிலினெழிலினதொருபால்.

(இ - ள்.) ஒருபால், கணவரோடூடியமகளிரை அவர் துகில்பற்றலிற் காசு கோவையற்று நிலத்தே விசையோடே சிந்துதலின், ஒளியையணிந்து வானவில்லின் எழிலினதென்க.

சுந்தரம் - நன்மை. (கஉ)

122. வளையறுத்தனையனவாலரியமைபத
மளவறுநறுநெயொடடுகறியமைதுவை
விளைவமைதயிரொடுமிசைகுவிர்விரையுமி
னுளவணிகலமெனுமுரையினதொருபால்.

(இ - ள்.) ஒருபால், வளையை நுண்ணிதாக அறுத்தாற்போன்றனவாகிய வாலிய அரிசியாலமைத்தசோற்றையும் நெய்யால்அட்டகறியையும் முற்றின தயிராலமைத்த துவையினையும் மிசைகுவீராக விரையுங்கோள்; உண்டால் தருதற்கு அணிகலமுளவெனும் உரையினதென்க.

ஒடு, எண்ணொடுவுமாம். வாலவிழும் பாடம். (கங)

123. வரைநிரையருவியின்மதமிசைசொரிவன
புரைநிரைகளிறொடுபுனைமணியியறேர்
விரைநிரையிவுளியொடிளையவர்விரவுபு
குரைநிரைகுளிர்புனல்யாற்றினதொருபால்.

(இ - ள்.) ஒருபால், மலையொழுங்கின் அருவியைத் தம்மேலே செரிந்து கொள்வனபோல மதத்தை யேலே சொரிவனவாகிய உயர்ச்சியையுடைய களிற்றேடும் தேர்ப்பூண்டாற் செலவுவிரைந்த இவுளியோடும் இளையவர் விரவி நிரைத்த யாற்றினதென்க.

அருவிபோல் வீழ்கின்ற மதமென்பாருமுளர். மிகையும் பாடம். (கச)

124. வரிவளையரவமுமணிமுழவரவமு
மரிவளர்கண்ணியரணிகலவரவமும்
புரிவளர்குழலொடுபொலிமலிகவினிய
திருவிழைகடிமனைதிறவிதின்மொழிவாம்.

புரிவளர்குழல் - நரம்பிடத்து இசைவளர்தற்குக் காரணமாகியகுழல்; "குழல்வழி யாழெழீஇத் தண்ணுமைப் பின்னர்,முழவியம்ப லாமந்திரிகை" (கூத்தநூல்.) புரி-விருப்பமுமாம்.

(இ - ள்.) குழலொடு வளையரவமும் முழவரவமும் கலவரவமும் கவி னியமனைகளைச் செவ்விதாகக் கூறுவாமென்றாரென்க.

இஃது அரசற்குரியவர் இருப்பு. (கரு)

வே று.

125. பாவையன்னவர்பந்துபுடைத்தலிற்
றூவியன்னம்வெரீஇத்துணையென்றுபோய்க்
கோவைவித்தில்மாடக்குழாமிசை
மேவிவெண்மதிதன்னொடிருக்குமே.

(இ - ள்.) மகளிர் பந்தடித்தலின் அன்னம் அவ்வோசைக்கு வெருவி மதியை இனமென்றுகருதிக் கூடப்போய் மாடங்களின்மேலே அம்மதி யோடே மேவியிருக்குமென்க.

மதி இயங்குந்தோறும் தானும் இயங்கிற்று. (கசு)

126. திருவநீணகர்ச்செம்பொனினீடிய
வுருவவொண்கொடியூழினுடங்குவ
பரவைவெங்கதிர்ச்செல்வனபன்மயிர்ப்
புரவிபொங்கழலாற்றுவபோன்றவே.

பரவை - பரத்தல்.

(இ - ள்.) அத்திருவையுடையமனைகளில் நீடியகொடி முறையால் அசை வன, செல்வனுடையபுரவியை அழலாற்றுவபோன்றனவென்க. (கஎ)

127. இழைகொள்வெம்முலையீரமுலர்த்துவார்
விழையவூட்டியமேதகுதீம்புகை
குழைகொள்வாண்முகஞ்சூழ்குளிரங்கதிர்
மழையுண்மாமதிபோன்மெனத்தோன்றுமே.

இழை தான்விரும்பிக்கொண்ட வெவ்வியமுலையிலே கணவர்பூசிய சந் தனமுதலியவற்றின் ஈரத்தை உலர்த்துவார், தொழிற்பெயர்.

(இ - ள்.) கணவர்விழைய ஈரமுலர்த்துவாரூட்டிய புகைசூழ்முகம் மழையுட்குளிரும் கதிர்மதிபோலுமெனத் தோன்றுமென்க. (கஅ)

128. செம்பொற்கண்ணிசிறூர்களைந்திட்டவு
மம்பொன்மாலையவிழ்ந்துடன்வீழ்ந்தவுந்
தம்பொன்மேனிதிமிர்ந்ததண்சாந்தமும்
வம்புண்கோதையர்மாற்றுமயலரோ.

(இ - ள்.) மகளிர் தம்மேனி திமிர்ந்த சாந்தமும் மயிர்குலைந்துசோர வீழ்ந்தமாலையும் சிறூர்களைந்த கண்ணியும் சேடியர்மாற்றும் துராலென்க.

வண்டுகள் புதுமையையுண்ட பழமாலையைச்சூடுதலிற்சேடியராயிற்று. 'கண்டுகை விட்ட மயல்'' (நாலடி. சஉ) என்றார் பிறரும். (கக).

129. வேரியின்மெழுக்கார்ந்தமென்பூநிலத்
தாரியாகவஞ்சாந்தந்தளித்தபின்
வாரிநித்திலம்வைப்பபொற்பூவொடு
சேரிதோறிதுசெல்வத்தியற்கையே.

அரி - ஐம்மை ; விகாரம். ஆரி - அழகென்றுமாம்; ஆரியாக - மேலாக வென்றுமாம். மேலும், "தளித்தசுண்ணம்" (சீவக. கருநுo) என்ப. வேரி-இருவேரியுமாம்.

(இ - ள்.) நாற்றமும் தோற்றமும் இனியவற்றான் மெழுகிய மெழுக்கு ஆர்ந்த வேரியையுடைய பூநிலத்தே ஐதாகத் தொழில்படச் சாந்தைப்பூசின பின்பு பொற்பூவோடு நித்திலத்தையும் வைப்பார்கள் ; சேரிதோறும் செல் வத்தியற்கை இத்தன்மைத்தென்க. (கoo)

130. கருனைவாசமுங்காரிருங்கூந்தலா
ரருமைசான்றவகிற்புகைவாசமுஞ்
செருமிச்சேர்ந்துகண்ணீர்வரத்தேம்பொழி
லுரிமைகொண்டனவொண்புறவென்பவே.

கூந்தலிலார்ந்த புகையென வினைத்தொகை ; கூந்தலார், பெயருமாம்.

(இ-ள்.) புறவுகள் பொரிக்கறியினது வாசப்புகையும் அகிலினது வாச ப்புகையும் செருமிக் கண்ணீர்வருதலாலே பொழிலைத் தாம் இருத்தற்குரிய இடமாகக் கொண்டனவென்க. (கoக)

131. நறையுநானமுநாறுநறும்புகை
விறகின்வெள்ளியடுப்பினம்பொற்கல
நிறையவாக்கியநெய்பயிலின்னமு
துறையுமாந்தர்விருந்தொடுமுண்பவே.

நறை - நறைக்கொடி. நானம் -தூவியெரிக்கும்புழுகு. நிறைய - மடைநூல்விதியிற்குறையாமல். விருந்துபெறற்கருமையின்,உம்மை சிறப்பும்மை.

(இ - ள்.) வெள்ளியடுப்பிலே நறையுநானமுநாறும் நறும்புகை விற காலாக்கின அமுதை மாந்தர் பொற்கலத்தே விருந்தோடுமுண்பரென்க.

விறகு - சந்தனமுதலியன. (கoஉ)

132. பாளைமென்கமுகின்பழமெல்லிலை
நீள்வெண்மாடத்துநின்றுகொண்டந்நலா
ராளிமொய்ம்பர்க்களித்தணிசண்பக
நாள்செய்மாலைநகைமுடிப்பெய்பவே.

மணமெல்லியபாளை. வெள்ளிலைபாடமாயின், கொம்பிலேவெளுத்த தாம். நகைமுடி - முத்தமாலையையுடையமுடி.

(இ-ள்.) நல்லார் மாடத்தேநின்று பாக்கையும் வெற்றிலையையும் பறித்துக்கொண்டு மொய்ம்பர்க்குக்கொடுத்து அவரணிந்த சண்பகமாலையைவாங்கி நாட்காலமன்றாயினும் வேட்கைமிகுதியால் தமதுமுடியிலே பெய்வரென்க.

இனி நாட்காலத்தேசெய்த சண்பகமாலையணிந்த முடியிலே அக்காலத்திற்கு உரிய பூக்களைப் பெய்வரென்றுமாம். (௧௦௩)

133. எழுதுவாணெடுங்கண்ணிணையந்நலார்
மெழுகுகுங்குமமார்பிடைவெம்முலை
யுழுதுகோதையுஞ்சாந்துமுவந்தவை
முழுதும்வித்திவிளைப்பர்திளைப்பவே.

மையெழுதங்கண். குங்குமமெழுகும். திளைப்பன, கரணங்கள்.

(இ-ள்.) அம்மகளிர் கணவர்மார்பிலே முலையாலே உழுது கோதையையும் சாந்தையும் வித்தித் திளைப்பனவற்றில் தாங்கள் உவந்தனவற்றை முழுதும் விளைப்பரென்க. (௧௦௪)

134. குஞ்சிமேலனிச்சம்மலர்கூட்டுணு
மஞ்சிலோதியரம்மலர்ச்சீரடி
மஞ்சுதோய்மணிமாடத்துமல்குபூம்
பஞ்சிமேலும்பனிக்கும்பனிக்குமே.

கூட்டுணும் - கவரும்.

(இ-ள்.) ஓதியருடைய அனிச்சமலர்கூட்டுணுஞ் சீறடி ஆடவர்குஞ்சிமேலும் பனிக்கும் ; பஞ்சிமேலும் பனிக்குமென்க.

கோபத்தாலும் கரணத்தாலும் நடுங்கிற்றென ஊடலுங்கூடலுமுணர்த்திற்று ; "கொல்புனற் றளிரி னடுங்குவன ணின்று" (பதிற். ருஉ). என்றார் பிறரும். நகராதலின், ஊடற்குக் காரணங்கூறாராயினர். "எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயிற், பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்" (தொல். இடை. சூ. ௩௬) என்பதனாற் குஞ்சிமேலுமென்று உம்மைகொடாராயினர். (௧௦௫)

135. தூமமேகமழுந்துகிற்சேக்கைமேற்
காமமேநுகர்வார்தமகாதலால்
யாமமும்பகலும்மறியாமையாற்
பூமிமாநகர்பொன்னுலகொத்ததே.

ஏகாரம், தேற்றம். காமமே : ஏகாரம், பிரிநிலை. "யாமத்துமெல்லையும்" (கலி. ௧௩௧) என்றார்பிறரும். பூமியின். பூமென்மாநகரும் பாடம் ; பூ, வடமொழி.

(இ-ள்.) சேக்கைமேல் நுகர்வார் தம்முடையகாதலால் இரவும்பகலும் அறியாமையின், அந்நகர் பொன்னுலகத்தை ஒத்ததென்க. (௧௦௬)

136. அரவுகான்றிட்டவங்கதிர்மாமணி
யுரவுநீர்முத்துமுள்ளூறுத்துள்ளன
விரவன்மாந்தர்க்குமின்னவையீவதோர்
புரவுபூண்டனர்பொன்னகர்மாந்தரே.

உரவுநீர் - உலாவுநீர். உம்மை, இழிவுசிறப்பு.

(இ - ள்.) மணியுமுத்தும் உள்ளூறுத்து இன்னவை இரவன்மாந்தர்க்கும் உள்ளனவாதலாற் பொன்னகர்மாந்தரே புரவுபூண்டனரென்க.

இஃது இகழ்ச்சி. ஏகாரம், எதிர்மறை. இனி இன்னவை இரவன்மாந்தர்க்கும் உள்ளனவாயிருத்தலிற் பின் மாந்தரே புரவுபூண்டாரென்றது,உயிர் உறுப்புமுதலியன கொடுத்தற்குத் துணிந்தாரிவரே யென்றுமாம்; ஏகாரம், தேற்றம். (க0எ)

137. முல்லையங்குழலார்முலைச்செல்வமு
மல்லன்மாநகர்ச்செல்வமும்வார்கழற்
செல்வர்செல்வமுங்காணியவென்பபோ
லெல்லியும்மிமையாரிமையாததே.

(இ - ள்.) இமையார் இமையாதிருந்தஇருப்பு, நீயிர் இம்மூன்றுசெல்வத்தையும் விடாமற்காண்டற்கு யாம் விழித்திருந்தேமென்று தம் கண்ணை நோக்கிக் கூறுவாரைப்போலே இருந்ததென்க.

மூன்றுவன: போகமும் செல்வமும் வீரமும். 'என்பவே' என்பதுபாடமாயின், இமையார், நீயிர் இவைகாண்டற்கு யாங்கள் இமையாதிருந்ததென்று கண்ணிற்குக் கூறுவாரென்க. ஏகாரம், ஈற்றசை. (க0அ)

138. முழவுஞ்சங்கமுமுன்றின்முழங்குவ
விழவும்வேள்வும்விடுத்தலொன்றின்மையாற்
புகழலாம்படித்தன்றிதுபொன்னக
ரகழ்தன்மாக்கடலன்னதொர்சும்மைத்தே.

வேள்வி-விசேடமான நாட்களில் நிகழ்வன; வேள்வென ஈறுதிரிந்தது.

(இ - ள்.) விழவினும் வேள்வியினும் ஒன்றைக் கைவிடுதலின்மையான், முழவும் சங்குமுழங்குவன், கடலன்னதொரு சும்மைத்தாதலான், இப்பொன்னகர் புகழலாம்படித்தன்றென்க. (க0கூ)

139. திங்கண்முக்குடையான்றிருமாநக
ரெங்குமிங்குமிடந்தொறுமுண்மையா
லங்கண்மாநகர்க்காக்கமறுததோர்
சங்கநீணிதியாற்றழைக்கின்றதே.

சங்கமென்னும் பேரெண்ணையுடைய தோன்றுபட்ட நிதியோடே.

(இ - ள்.) ஸ்ரீகோயில், தெருவிடமெங்கும் மனையிடமெங்குமுண்டாகையினாலே, மாநகர்க்கு இடந்தோறும் நிதியோடேஅறுதலோராக்கம் தழையாநின்றதென்க.

இனி, மாநகருண்மையால், நகர்க்கு ஆக்கமறுது; அவ்வாக்கம் ஒருசங்கநிதியாலே தளிர்க்கின்றதென்றுமாம்; சங்கநிதி - அரசன். (௧௧௦)

வேறு.

140. தேன்றலைத்துவலைமாலைபைந்துகில்செம்பொன்பூத்து
ஞான்றனவயிரமாலைநகுகதிர்முத்தமாலை
கான்றமிர்தேந்திநின்றகற்பகச்சோலையார்க்கு
மீன்றருள்சுரந்தசெல்வத்திராசமாபுரமதாமே.

தேனைத் தலையிலே துவலையாகவுடைய மாலைமுதலியவற்றைப்பூத்து நான்றனவாகிய வயிரமாலைமுதலியவற்றைத் தோற்றுவித்து, அமிர்தையேந்திநின்ற கற்பகச்சோலையென்று ஊரிற்கு ஒரு பெயர் கூறிற்று; இதற்கும் அவையுண்மையின்.

(இ - ள்.) அம்மனைகூறியவூர், யார்க்கும் அருளையீன்று செல்வத்தைச் சுரந்த கற்பகச்சோலை; அஃது இராசமாபுரமென்னும் பெயரையுடைத்தாமென்க.

இனி, தான்சுரந்த அருளாலே யார்க்கும் மறுமையிற் கற்பகச்சோலையையீன்று அச்சோலையிற் செல்வத்தைத் தன்னிடத்தேயுடையது, இராசமாபுரமென்றுமாம்; என்றது: இதில் வாழ்வாருளைக்கண்டு பிறர்க்கும் அருள் பிறந்து சுவர்க்கமெய்துவரென்றவாறு.

இத்துணையும் நகரின்சிறப்புக்கூறினார். (௧௧௧)

## கோயிற்சிறப்பு.

வேறு

141. வேகயானைமீளிவேல்வெய்யதானையையகோன்
மாகநீண்மணிம்முடிமாரிவண்கைமாசில்சீ
ரேகவாணைவெண்குடையிந்நகர்க்குமன்னவ
னாகநீரநன்னகர்நன்மைதன்னஞ்செப்புவாம்.

தானையென்றது ஒழிந்தமூன்றுபடையை. ஐய - வியக்கத்தக்க. தேவர் புகழுமுடியென்று குலநன்மை கூறினார். சீர் - மிக்கபுகழ். ஏகவாணை-பொதுவறவாளுதல்.

(இ-ள்.) யானைமுதலியவற்றையுடையமன்னவனது கோயிலின் நன்மையைச் சிறிது கூறுவாமென்றாரென்க. (௧௧௨)

142. நீணிலம்வகுத்துநீர்நிரந்துவந்திழிதரச்
சேணிலத்தியற்றியசித்திரச்சுருங்கைசேர்
கோணிலத்துவெய்யவாங்கொடுஞ்சுறத்தடங்கிடங்கு
பூணிலத்துவைத்ததோர்பொற்பினிற்பொலிந்ததே.

(இ - ள்.) நீர் நிரந்துவந்திழியும்படி, நீணிலத்தைவெட்டிப் புறம்பில் அகழ்தொடங்கிப்படுத்த வழிசேர்ந்தகிடங்கு நிலமகளுக்குப் பூணிட்டதோர் அழகுபோலப்பொலிந்ததென்க.

சுற, புறனடையாற்கொள்க (தோல். உயிர்மயங்கு. சூ. ௬௨.) சுருங்கை - கரந்தகற்படை. (கசு௩)

143. இஞ்சிமாகநெஞ்சுபோழ்ந்தெல்லைகாணவேகலின்
மஞ்சுசூழ்ந்துகொண்டணிந்துமாகநீண்டநாகமு
மஞ்சுநின்னையென்றலிறைஞ்டுநின்றுநீண்டதன்
குஞ்சிமாண்கொடிக்கையாற்கூவிவிட்டதொத்ததே.

(இ - ள்.) மதிலானது மாகத்தின் நடுவைப்பிளந்து நாகத்தின் எல்லையைக்காண ஏகுதலின், அதனை மஞ்சு முற்படப்போகாமற்றடுத்துப் பின்பு காலைக்கட்டிக்கொண்டு, ஆகாயத்தேயுயர்ந்த நாகமும் நின்னை அஞ்சுமென்றலின், தான் மேகபதத்தளவிலேநின்று தன்றலையினீண்ட கொடிக்கையாலே நம்மைவந்துகாண்கவென்றுகூவிவிட்டதன்மையையொத்தது, அவை அசைந்த தன்மையென்க.

குஞ்சி - கொடிநாட்டுங்குழி; கழையுமாம். (கசுச)

144. முத்தமாலைமுப்புரிமூரிமாமணிக்கத
வொத்தநான்குகோபுரமோங்கிநின்றொளிர்வன
சத்திநெற்றிசூட்டியதாமநீண்மணிவணன்
றத்தொளிமணிம்முடித்தாமநால்வபோலுமே.

(இ - ள்.) மாமணிக்கதவையுடைய தம்மிலொத்த நீலமணிக்கோபுரம் நான்கிலும்நின்று ஒளிர்வனவாகிய சூலத்தினெற்றியிற்சூட்டிய முப்புரியாகிய முத்தமாலை, தாமத்தையுடைய உலகளந்த மாயோன்முடியில் தாமம்நால்வன போலுமென்க.

ஒன்றவும் பாடம். முப்புரியாகிய முத்தமாலையையுடைய கதவுமாம். இழத்துதல் - வீசுதல். (கசுரு)

145. சங்குவிம்முநித்திலஞ்சாந்தொடேந்துபூண்முலைக்
கொங்குவிம்முகோதைதாழ்கூந்தலேந்துசாயலா
ரிங்கிதக்களிப்பிறலெய்தியாடும்பூம்பொழில்
செங்கணிந்திரன்னகர்ச்செல்வமென்னதன்னதே.

புரசு

15

சங்கு விம்மு நித்திலம் - சங்கு சூல்முற்றியீன்ற முத்து. செல்வம், ஆகுபெயர்.

(இ - ள்.) நித்திலத்தைச் சாந்துடனேந்திய முலையினையும் கூந்தலினையுமுடைய சாயலார் காமக்குறிப்போடுகூடியகளிப்பாற் சென்று ஆடும்பொழில் இந்திரனகரிற்கற்பகச்சோலை என்னதன்மைத்து, அன்ன தன்மைத்தென்க.()

146. வெள்ளியானைமென்பிடிமின்னிலங்குபைம்பொனுற்
றுள்ளுமாஞெருத்தலுஞ்செம்பொனம்பொன்மான்பிணே
யுள்ளுகாமமுள்சுடவேந்தனுக்குறைவதோர்
பள்ளிமாடமண்டபம்பசுங்கதிர்ப்பவண்ணமே.

(இ - ள்.) வெள்ளியாற்செய்த களிறும் பைம்பொனுற்செய்த பிடியும் செம்பொனுற்செய்த ஒருத்தலும் அம்பொனுற்செய்த பிணேயும் ஒன்றையொன்று உள்ளுக்காமம் வேந்தனுள்ளத்தே வேட்கைமிகுப்ப அச்சோலேயில் அவன் உறைவதொருமண்டபத்திற் பள்ளிமாடம் நாகருலகையொக்குமென்க.

இனி, வெள்ளியாலே யானேயும் பிடியும் செய்தவென்றுமாம். (கசஎ)

147. கோழரைமணிம்மடற்கூந்தனெற்றியேந்திய
மாழையந்திரள்கனிமாமணிமரகதஞ்
சூழ்குலேப்பசுங்கமுகுகுலுடாளேவெண்பொனு
லூழ்திரண்மணிக்கயிறூசலாடவிட்டதே.

(இ - ள்.) பொன்னுற்செய்தபழத்திண்யும் மரகதமணியாற்செய்த குலேயிணேயும் வெள்ளியாற்செய்த பாளேயிணேயும், ஏந்திய கொழுவிய அரையினேயும், நீலமணியாற்செய்த மடலிணேயுமுடைய கூந்தற்கமுகின்நெற்றியில் ஊசலாடவிட்டகயிறு முத்தவடமென்க. (கசஅ)

148. மென்றினேப்பிறங்கலுமிளிர்ந்துவீழருவியுங்
குன்றயன்மணிச்சுனேக்குவளேகண்விழிப்பவு
நின்றுநோக்குமான்பிணேநீலயானேமன்னவன்
கன்றுகாமம்வெஃகியகாமர்காமபூமியே.

காமர்காமபூமி-காமனுக்கு விருப்பஞ்செய்கின்றபூமி; "காமரை வென்ற கண்ணேன்" (திருச்சிற். கசுச) போல.

(இ - ள்.) நீலயானேமன்னவன் தழும்பிய காமத்தாலேவிரும்பிய பூமியிடத்துச் செய்குன்றில்திண்யையும், அதினின்றும் குதித்துவிழுகின்ற அருவியையும், மானும்பிணேயும் அதன் அயலிற் சுனேக்குவளே காப்பார்கண்போ விழியாநிற்கவும், உண்பனவாகநின்று நோக்குமென்க. தவர்

பிறங்கல் - திரள். இவற்றைச் சித்திரமெனிற் கோயிற்கு அங்கமாதலாது செய்குன்று கூறிற்றிலராவர். (கசகூ)

149. தீங்குயின்மணந்துதேன்றுஞ்சவண்டுபாண்செய
வேங்கைநின்றுபொன்னுகுக்கும்வெற்புடுத்தசந்தன
மோங்குபிண்டிசண்பகமூழிநாறுநாகமு
நீங்கநீங்குமின்னுயிர்நினேப்பினின்றிளஃகுமே.

ஊழ், ஊழியெனத்திரிந்தது ; முறைமைப்பட அலர்ந்துநாறும்.

(இ - ள்.) குயிலாகியகாளங்கூடித் தேனாகிய யாழ்தங்க வண்டுபாட அவற்றிற்குப் பரிசிலாக வேங்கை பொன்னைச்சொரியும் முற்கூறிய செய்குன்றைச் சந்தனமுதலியன சூழ்ந்தன; இக்குன்றையும் காவையும்நீங்க உயிர்நீங்கும்; நினைப்பின் உயிர்தளிர்க்குமென்க. (கஉ0)

150. முத்தம்வாய்புரித்தனமொய்கதிர்ப்பசும்பொனாற்
சித்திரத்தியற்றியசெல்வமல்குபன்மணி
பத்தியிற்குயிற்றிவான்பதித்துவைத்தபோல்வன
வித்திறத்தபந்தெறிந்திளையராடுபூமியே.

(இ - ள்.) இளையர் பந்தாடுபூமிகள், முத்து விளிம்பிலே அழுத்தப்பட்டன; பொன்னாலே பண்ணப்பட்டன; மணி பத்தியிற் குயிற்றப்பட்டு வானை இவ்வுலகிலேஇருத்தினாற்போல்வனவாகியஇத்திறத்தனவென்க.(கஉக)

151. வைத்தபந்தெடுத்தலும்மாலையுட்கரத்தலுங்
கைத்தலத்தினோட்டலுங்கண்ணிநெற்றிதீட்டலும்
பத்தியிற்புடைத்தலும்பையரவ்விளாட்டலு
மித்திறத்தபந்தினோடின்பமெல்லையில்லையே.

(இ-ள்.) பந்தைக் கையாற்றொடாதே காலாலேதட்டியெடுத்தலும்கரத்தலும் கையிலேகொள்ளலும் செல்ல ஓட்டுதலும் கண்ணியையுடைய நெற்றியிலே தீட்டுதலும் ஒருகாலைக்கு ஒருகாலுயரப் பத்தியாகப்புடைத்தலும் தாம் நிலையிலேநின்று அரவுபோலப்பரந்து உலாவுதலுண்டாம்படி புடைத்தலுமாகிய இக்கூற்றவாகிய அப்பந்தினோடுண்டானவின்பம் முடிவில்லையென்க.()

152. கூற்றமன்னகூர்நுதிக்குருதிவான்மருப்பிடைச்
சீற்றமுற்றமன்னர்தஞ்சென்னிபந்தடிப்பன
வூற்றிருந்தமும்மதத்தோடையானைபீடுசால்
காற்றியற்புரவிதேர்கலந்துகௌவைமல்கின்றே.

கூற்றம், யானைக்குவமை. சீற்றமுற்ற - அரசன் வெகுண்ட. ஊற்று இருந்த - இடைவிடாத.

(இ - ள்.) மருப்பிடையே மன்னர்தலையைப் பந்தடிப்பனவாகிய யானை புரவி தேர் இவைகூடி ஒலிமிக்கது, அவ்விடமென்க.

இவை, அரசன் ஏறுவனவாதலின், உள்நிற்றல் இயல்பு. (கஉ௩)

153. கவ்வையங்கருவிசூழ்ந்துகண்படுக்குமாடமுந்
தெவ்வர்தந்தநீணிதிசேர்ந்தசெம்பொன்மாடமு
மவ்வல்குழலினார்மணிக்கலம்பெய்மாடமு
மிவ்வலந்தவல்லவும்மிடங்களெல்லையில்லையே.

(இ - ள்.) மனச்செருக்கால் ஆரவாரமுடைய வீரர்திரள், அரசனது பகையை மனத்தானோக்கி யாமந்தோறுங்காத்துத் துயில்கொள்ளுமாடமும்,

திரைகிடக்குமாடமும், கலம்இட்டுவைக்குமாடமுமாகிய இக்கூறப்பட்ட இடங்களும், கூருதொழிந்த ஆயுதசாலைமுதலிய இடங்களும் முடிவில்லை யென்க.

கருவி - தொகுதி ; ஈண்டு, ஆகுபெயர். இனி, பகைவர்க்குக் கவ்வை யைச் செய்தலையுடைய ஆயுதங்கள் சூழ்ந்து நோக்கினூர்கண்ணை அகப்படுக் கும் ஆயுதசாலையுமென்ப. (கஉச)

154. பூத்தகோங்கும்வேங்கையும்பொன்னிணர்செய்கொன்றையுங்
காய்த்துநின்முகண்டெறூஉங்காமர்வல்லிமாதரார்
கூத்தருதபள்ளியுங்கொற்றமன்னமங்கைய
ரேத்தல்சான்றகோயிலுமிடைப்படுத்தியன்றவே.

தமதுகண்ணுனது இளையோர்மெய்யை வெவ்விதாக்கி அவர்நெஞ்சிலே நின்று சுடுமாதராரெனச் சினைவினைமுதலொடுமுடிந்ததென்க.

(இ - ள்.) மாதரார்நாடகசாலையும், காவன்மகளிர் அரசற்கு வெற்றி நிலைபெறும்படி ஏத்தும் ஸ்ரீகோயிலும் கோங்குமுதலியவற்றைநடுவேயாக்கிப் பண்ணினவென்க.

இதனுல், இரண்டும் தம்மில் இடைவிட்டிருக்குமென்ருர் ; மேலே ''வண்புகழ் மாலடி வந்தனை செய்தாள்'' (சீவக. உஉ௦) என்ப. (கஉரு)

155. கந்துமாமணித்திரள்கடைந்துசெம்பொனீள்சுவர்ச்
சந்துபோழ்ந்தியற்றியதட்டுவேய்ந்துவெண்பொனு
லிந்திரன்றிருநகரிருமையோடுமிவ்வழி
வந்திருந்தவண்ணமேயண்ணல்கோயில்வண்ணமே.

(இ - ள்.) மாமணித்திரளைத் தூணுகக் கடையப்படுதலானும், பொற் சுவரிலே சந்தனத்தைஅறுத்துப்பண்ணிவைத்தநெடுங்கையை வெள்ளியாலே வேயப்படுதலானும், அண்ணல் கோயிலின்றன்மை, இந்திரனகர் இவ்வழி வந்திருந்த தன்மையேயாயிருந்ததென்க.

ஏகாரம், தேற்றம். (கஉசு)

156. ஆடலின்னரவ்வமுமங்கைகொட்டிநெஞ்சுணப்
பாடலின்னரவமும்பணைமுழவ்வரவமுங்
கூடுகோலத்தீஞ்சுவைக்கோலயாழரவமும்
வாடலில்லவோசையால்வைகனுளும்வைகின்றே.

கொட்டி - ஒக்கடித்து. ஒழிந்தகருவிகளோடுகூடும்அழகையும் சுவை யையுமுடைய நரம்பையுடைய யாழ்.

(இ - ள்.) கூத்தின்அரவமும் பாட்டினரவமும் முழவினரவமும் யாழின் அரவமுமாகிய குறைதலில்லாத ஓசையாலே அண்ணலுக்கு நாள்கடோறும் நாள் கழியாநின்றதென்க.

இனி, வைகவாயின், ஓசையோடுசெல்ல, நாளும் கழியாநின்றதென்க. கோயிலின்சிறப்புக்கூறினர். (கஉஎ)

## சச்சந்தன் சரித்திரம்.

### வேறு.

157. நச்சுநாகத்திஞரழற்சீற்றத்த
னச்சமுற்றடைந்தார்க்கமிர்தன்னவன்
கச்சுலாமுலையார்க்கணங்காகிய
சச்சந்தன்னெனுந்தாமரைச்செங்கணுன்.

இதுமுதல், "கோதை" (கருகூ) அளவுமொருதொடர்.
நச்சு, நாகத்திற்கு அடை. அன்னவன், தொழிற்பெயர்.

158. வண்கையாற்கலிமாற்றிவைவேலினற்
றிண்டிறற்றெவ்வர்தேர்த்தொகைமாற்றினு
னுண்கலைக்கிடனுய்த்திருமாமகள்
கண்களுக்கிடனுங்கடிமார்பனே.

நோக்கியகண்கள் வேறுசெல்லாத புதியமார்பன்.

159. கோதைநித்திலஞ்சூழ்குளிர்வெண்குடை
யோதநீருலகொப்பநிழற்றலாற்
றாதையேயவன்றாணிழற்றங்கிய
காதலாற்களிக்கின்றதிவ்வையமே.

கோதைநித்திலம், உம்மைத்தொகை. ஒப்ப - எல்லார்க்குமொப்ப.

(இ - ள்.) சச்சந்தனென்னுஞ்செங்கணுன், அடைந்தார்க்குஅமிர்தன்ன வன், அடையாதார்க்கு உயிர்போமளவும் சென்று கோபமாறும் நஞ்சுபோ லுஞ்சீற்றத்தன், கடிமார்பன், கலைக்கு இடனுகிக் கையாலே கலியைமாற்றி வேலாலே தேர்த்திரளைமாற்றினுன்; மாற்றிக் குடையாலே ஒப்பநிழற்றலால் உலகிற்குத் தாதையே; ஆதலின், அவன்தாணிழலிலேதங்கவேண்டி இவ்வுல கம் அவன் மேல்வைத்த காதலாலே களியாகின்றதென்க.

இனி, தாணிழற்றங்கியவையம், அவன் உலகில்வைத்தகாதலாலே களிக் கின்றதென்றுமாம். இவற்றுல், தெறலும் அளியும் அழகும் கொடையும் வீர மும் கல்வியும் முறைசெய்தலும் கூறினுர். (கஉ௮-ஙூo)

160. தருமன்றண்ணளியாற்றனதீகையால்
வருணன்கூற்றுயிர்மாற்றலின்வாமனே
யருமையாலழகிற்கணையைந்துடைத்
திருமகன்றிருமாநிலமன்னனே.

தருமன் - அறக்கடவுள். இதற்கு உவமையும் உருபும்விரிக்க.

(இ - ள்.) அம்மன்னன் அமிர்தத்தையொத்தலும் உலகைநிழற்றலுமா கியதண்ணளியால் தருமன்; கலிமாற்றின ஈகையால் வருணன்; தேர்த்தொ கைமாற்றுமிடத்தால் அழற்சீற்றத்தனுய்உயிரைமாற்றுதலிற் கூற்றம்; கலைக்

கிடனுமருமையால் வாமன்; மகளிர்க்கு அணங்காகிய அழகாற்காமனென்று உவமைகூறுதற்குக் கொண்டுகூறினர், கூறியதுகூறல்அன்றென்க. (கசுக)

161. ஏனைமன்னர்தமின்னுயிர்செற்றவேற்
றூனைமன்னாரிற்றுனிமிலேறனுன்
றேனேமாரியன்னுன்றிசைகாவலன்
வானந்தோய்புகழான்மலிவெய்தினுன்.

(இ - ள்.) ஒழிந்தபகைவர் உயிரைச்செற்ற தம்மரபிலுள்ளாரில் தான் செருக்கினல் ஏறனையான், மொழியால் தேன்மாரியனையனாகிய காவலன் சுவர்க்கத்தேசெறியும்புகழாலே மிகுதல்பெற்றானென்க.

தேனே: ஐ, அசை. (கசுஉ)

162.(க) செல்வற்கின்னணஞ்சேறலிற்றீம்புனன்
மல்குநீர்விதையத்தரசன்மக
ளல்லிசேரணங்கிற்கணங்கன்னவள்
வில்லினீள்புருவத்திறுதிமேவற்கணுள்.

163.(உ) உருவுஞ்சாயலுமொப்பவுரைப்பதற்
கரியவாயினுமவ்வளைத்தோளிகட்
பெருகுகாரிகைபேசுவல்பெண்ணணங்
கரியதேவருமேத்தருநீரளே.

இவையிரண்டும் ஒரு தொடர்.

க. புனலின துவளப்பம்பொருந்திய நீர்மையையுடையவிதையம்; தண்ணீரும் விளைவிக்குநீருமாம். திருவிற்கு ஒருதிருவன்னவள், இல்பொருள்.

(இ - ள்.) செல்வற்கு இன்னணம் நல்வினை நடத்தலாலே, இதற்கு ஏற்ப விதையத்தரசன்மகள், இவ்வுலகிற்பெண்ணால் அணங்குதற்குரிய தேவரும் ஏத்தரும் நீர்மையையுடையாளாயினள்; அவ்வேற்கண்ணாளாகிய அணங்கன்னவளுடைய வடிவும் மென்மையும் இத்தன்மையவென்று உவமைகூறுவார்க்கு அரியவாயினும், அவளிடத்துக் காரிகையைச் சிறிது கூறுவேனென்றாரென்க.

அது மேற்கூறுகின்றார். (கசுரு-ச)

வேறு.

164. எண்ணெயுநானமுமிவைமூழ்கியிருடிருக்கிட்
டொண்ணறுந்துகிற்கிழிபொதிந்துறைகழித்தனபோற்
கண்ணிருண்டுநெறிமல்கிக்கடைகுழன்றகருங்குழல்கள்
வண்ணப்போதருச்சித்துமகிழ்வானுத்தகையவே.

இருண்டு, இருளவென்க. குழல், மயிர்மாத்திரையாய் ஐவகையையும் உணர்த்தலிற் பன்மைகூறினர்.

(இ - ள்) எண்ணெயுநானமுமென்கிற இவையிற்றிலேமூழ்கிக் குழன்ற கரியகுழல்கள், இருளைப்பிடித்துநீளமுறுக்கி அறல்படப்பிடித்து உறையிலேபொதிந்து அதனை வாங்கப்பட்டவைபோல நோக்கினோர்கண் இருளும்படி நெறிமல்கிச் சேடியர்போதைக்கொண்டு வழிபட்டாலும் வருந்துந்தன்மையவென்க.

கண் - இடமாக்கி; கருங்குழல் - கொடியகுழலென்றுமாம். குழன்றும் பாடம். (கசரு)

165. குழவிக்கோட்டிளம்பிறையுங்குளிர்மதியுங்கூடினபோ
லழகுகொள்சிறுநுதலுமணிவட்டமதிமுகமுந்
தொழுதாற்குவரங்கொடுக்குந்தொண்டைவாய்துமுறுவ
லொழுகுபொற்கொடிமூக்குமுருப்பசியையுருக்குமே.

குழவிப்பருவத்து ஒருகலையையுடைத்தாய்ப் பின்பு இளமைப்பருவத்தே நின்றபிறை. இளமை - ஈண்டுக் குழவிப்பருவமொழிந்ததன்மேற்று ; "இளமையுந்தருவதோ" (கலி. கரு) என்றார்பிறரும். "மாக்கடனடுவணெண்ணாட் பக்கத்துப், பசுவெண்டிங்க டோன்றியாங்குக் கதுப்பயல்விளங்குஞ் சிறுநுதல்" (குறுந். கஉக) என்றார்பிறரும். வட்டமதிமுகம் - வட்டத்தையுடைய மதித்தமுகம்; அடையுமாம். தான் தொழப்பட்ட கணவனுக்கு வரங்கொடுக்கும். வளருகின்ற பொலிவினையுடைய நீண்டமூக்கும்.

(இ - ள்.) பிறையும் மதியும் கூடினபோல் அழகுகொண்டநுதலும் முகமும்வாயும் முறுவலும் மூக்கும் உருப்பசியையுருக்குமென்க.

உருக்குதல் - நுகர்தற்கு அவளும் ஆண்பாலாக விரும்புதல். (கசசு)

166. வண்சிலையைவனப்பழித்துவார்ந்தொழுகிநிலம்பெரு
நுண்கருமைகொண்டொசிந்துநுதலிவர்ந்துபோந்துலாய்க்
கண்கூடாகடைபுடைத்துக்கைவல்லானெழுதியபோற்
பண்பார்ந்தகொடும்புருவம்பழிச்சாறுப்படியவே.

(இ- ள்.) எழுத்து ஒருமைப்படுதற்குத் துகிலிகைக்கோலை உதறிக் கைவல்லானெழுதியவைபோல் தமக்குரியகுணநிறைந்த கொடியபுருவம், வனப்பழித்துத் தாம்செல்லுமளவுஞ்சென்று மேற்செல்லாவாய்க் கூரிய கருமைகொண்டுவளைந்து நுதலில் தாம் சேறற்குரிய அளவுஞ்சென்று போந்து பரந்து தம்மிற்கூடாவாதலின், பழிச்சுதலமையாத தன்மையவென்க.

'வனப்பிகந்து வார்ந்தொழுக' என்பதூஉம் பாடம். (கசஎ)

167. சேலனையசில்லரியகடைசிவந்துகருமணியம்
பாலகத்துப்பதித்தன்னபடியவாய்முனிவரையு
மாலுறுப்பமகிழ்செய்வமாண்பினஞ்சுமமிர்தமுமே
போல்குணத்தபொருகயற்கண்செவியுறப்போந்தகன்றனவே.

(இ -ள்.) சில அரியவாய்ச் சிவந்து மாயோனையும் பாற்கடலையும் முகத்தேவைத்தாற்போன்ற தன்மையவாய் மாலுறுப்பனவாய் மகிழ்ச்சிசெய்வன

வாய்த் துன்பத்தாலும் இன்பத்தாலும் நஞ்சும் அமுதும்போலும் குணத்தவா கியகண், செவியுறநீண்டு அதற்கேற்ப அகன்றனவென்க.

கன்னியாதலின், 'மாலுறப்ப' என்றார். மகிழ்செய்வ - கணவனுக்கு மகிழ்செய்வ. மாண்பிலாநஞ்சு. கயல்போற்பிறழுங்கண். கருமணியைப் பாலிற் பதித்தாற் பால்நிறங்கெடுமென்றுணர்க. (கசஅ)

168. மயிரெறிகத்தரிகையனையவாய்வள்ளைவா
டுயிர்செகுத்துமுன்னொன்றிப்பின்போகாதுருவமைந்த
செயிர்மகரகுண்டலமுந்திளைப்பானுவார்காதும்
வயிரவின்முக்குஞ்சூடிவண்ணம்வீற்றிருந்தனவே.

(இ - ள்.) கத்தரிகையனையவாய் வாடுவள்ளையின் அழகைக்கெடுத்துப் பின்மறியாது முன்னேபொருந்தி அழகமைந்த குண்டலமும் தோடும் அசைதலமையாதகாதும்வயிரத்தினொளியை இடத்தேசூடி வீற்றிருந்தனவென்க.

வாட்டாயின், வாட்டின காதென்க. 'காதும்' என்ற உம்மை, இறந்தது தழீஇயிற்று. (கசுக)

169. ஈனுதவிளங்கமுகின்மரகதமணிக்கண்ணு
மானாதேயிருள்பருகுமருமணிகடைந்ததூஉந்
தானாகியிருளொடோர்தாமரைப்பூச்சுமந்தன்ன
கானார்ந்ததிரள்கழுத்துக்கவின்சிறைகொண்டிருந்ததே.

கோட்புகாதகன்னிக்கமுகு வரையிற்கும் செய்ப்பிற்கும், மணி திரட்சிக்கும் நிறத்திற்கும் உவமம். உதயகிரியிற் சிந்தூர அருவிவீழ்ந்த சிந்தூராகரத் திற் பதினாறுசதுர்யுகம் சிவப்பேறின முழுமாணிக்கம் இருளைக்கெடுத்தலின், 'இருள்பருகு மருமணி' என்றார். இருளும் தாமரையும், மயிர்க்கும் முகத் திற்கும் உவமம். கான் - மணம்.

(இ - ள்.) கமுகினது மரகதமணிபோலுங்கண்ணும் இருளைக்கெடுக் கும் மாணிக்கங்கடைந்ததுவுந்தானாய்ச் சுமந்தன்ன கழுத்து அழகு குடி கொண்டிருந்ததென்க. (கசுo)

170. மணிமகரம்வாய்போழ்ந்துவாழ்முத்தவடஞ்சூழ்ந்தாங்
கணியரக்கார்செம்பஞ்சியணையனையவாடமைத்தோ
டுணிகதிர்வளைமுன்கைத்தொகுவிரல்செங்காந்தண்
மணியரும்புமலரங்கைகுலிகமார்வனப்பினவே.

துணிதல் - தெளிதல். பஞ்சணை, நிறத்திற்கும் மென்மைக்குமுவமம். அமை, திரட்சிக்கும் செய்ப்பிற்குமுவமம்.

(இ-ள்.) அமைத்தோள், மகரம்வாய் அங்காத்தலாலே ஆங்குவாழுமுத் தஞ்சூழப்பட்டுச் செம்பஞ்சணையை அனைய. குவிந்தவிரல்கள் காந்தளின் அழகையுடைய அரும்பையனைய. அகங்கை தாமரைமலரையனைய. இக்கை கள் குலிகமார்ந்த வனப்பினவென்க.

போழ்ந்தவும், வான்முத்தமும் பாடம். (கசுக)

171. தாமச்செப்பிணைமுகட்டுத்தண்கதிர்விடுநீல
மாமணிதாபித்தனபோன்மனம்பருகுகருங்கண்ண
வேமுறவடிபரந்திளம்பிறைவடஞ்சூடி
யாமணங்குகுடியிருந்தஞ்சுணங்குபரந்தனவே.

(இ - ள்.) தாமத்தையுடையமுலையிரண்டும், தம்தலையிலே நீலமணியை அழுத்தினாற்போல நோக்கினார்மனத்தை உள்ளடக்குங்கரியகண்ணவாய், கண்டார்மயக்கமுற அடிபரந்து, சூடி, தம்மேலுறையும் விற்றுத்தெய்வம் இருப்பிடமாக இருக்கப்பட்டுச் சுணங்குபரந்தனவென்க.

'தாமச்செப்பிணை' எனவே முலையாம். இனி, பூஞ்செப்பாக்கின், இக்கவிசினையிற் கூறுமுதலறிகிளவியுமாம். ஆமணங்கு - மேல்ஆகக்கடவ வருத்தமுமாம். (கசஉ)

172. அங்கைபோல்வயிறணிந்தவலஞ்சுழியமைகொப்பூழ்
கங்கையின்சுழியலைக்குங்கண்கொளாநுடங்கிடையை
யுண்டெனத்தமர்மதிப்பர்நோக்கினார்பிறரெல்லா
முண்டில்லையெனவையமல்லதொன்றுணர்வரிதே.

(இ - ள்.) அகங்கைபோலும்வயிற்றை அழகுபெறுத்தின கொப்பூழ், சுழியைவருத்தும். கட்புலனாகா இடையைத் தமர் பயிறலின் உண்டென்று கருதுவர்; பிறர் அதனைநோக்கினாரெல்லாம் அல்குலும் முலையுமுண்மையின் உண்டென்றும் கட்புலனாகாமையின் இல்லையென்றும் ஐயுறுதலன்றி இரண்டிலொன்று துணிவார்க்கு அறிதலரிதென்க.

கங்கை, குலந்தூய்மைக்குக் கூறினார். (கசங)

173. மன்னுகவிணைப்படமுந்தேர்த்தட்டும்மதிமயக்கிப்
பொன்னாலவட்டமும்போற்கலையிமைக்குமகலல்குல்
கொன்னிளம்பரிதியுக்குறுமுயலின்குருதியும்போன்
றின்னரத்தப்பட்டசைத்திந்திரற்கும்புகழ்வரிதே.

மன் - பெருமை. இணைப்படம் - இரண்டுபுறமுமொத்தபடம். கலை, அடை. கொன் - விடியற்காலம்; "கொன்வரல்வாடை" போல. உம்மை, சிறப்பு.

(இ - ள்.) படமும் தட்டும் ஆலவட்டமும்போலே வட்டமகன்றவல்குல், பருதியும் குருதியும்போலே கண்ணுக்கு இனியபட்டு உடுக்கப்பட்டு எல்லாரையும் மதிமயக்குதலின், இந்திரற்கும் புகழ்தலரிதென்க. (கசச)

174. வேழவெண்டிரடடக்கைவெருட்டிமற்றிளங்கன்னி
வாழைத்தண்டெனத்திரண்டுவாலரக்குண்செம்பஞ்சி
தோழமைகொண்டெனமென்மையுடையவாயொளிதிகழ்ந்து
மாழைகொண்மணிமகரங்கௌவிவீற்றிருந்தனவே.

வெருட்டி, பெயர். மற்று, வினைமாற்று. செம்பஞ்சி, பஞ்சிமாத்திரை. பொன் தன்னிடத்தே அடக்கின மணி. மகரம், ஆகுபெயர்.

(இ - ள்.) ஒழுக நோக்குதலான், அயிராவதத்தின்கையை வெருட்டிய குறங்குகள், தண்டெனத் திரண்டு பஞ்சிதன்னுடனே தோழமைகொண்டு மென்மைபெற்றதெனத் தாம் மென்மையுடையவாய்த் திகழ்ந்து குறங்கு செறிகௌவி மேலாயிருந்தனவென்க.

'திரண்ட' பாடமாயின், பெயராம். (கசரு)

175. பக்கத்தாற்கவிழியவாய்மேல்பிறங்காப்பாண்டிலா
வொக்கநன்குணராமைபொருந்தியசந்தினவாய்
நெக்குப்பின்கூடாதுநிகரமைந்தமுழந்தாளு
மக்களுக்கில்லாதமாட்சியின்மலிந்தனவே.

(இ - ள்.) மேற்பக்கத்திலே கவிழ்ச்சியையுடையவாய்ப் பேர்ந்தவட்ட மாம்படி உள்ளே பொருந்திய சந்தினவாய் நெகிழ்ந்து பின்போகாமல் ஒப் பற்றமுழந்தாளும் மாட்சியினால் மிக்கனவென்க.

நன்மை இதற்கொப்ப வேறொன்றில் உணராதபடி பொருந்தியசந்து.()

176. ஆடுதசைபிறங்காதுவற்றாதுமயிரகன்று
நீடாதுகுறுகாதுநிகரமைந்தவளவினவாய்ச்
சேடாவநாழிகையிற்புடைதிரண்டுதேனெய்பெய்
வாடாதகாம்பேபோற்கணைக்காலின்வனப்பினவே.

(இ - ள்.) கணைக்கால், தசைபேராதுமாய் வற்றாதுமாய் மயிர்மிக்கு நீடாமற் குறுகாமல் ஒப்பிலாதஅளவினவாய் அம்பறாத்தூணிபோலே திரண்டு காம்புபோல் இனிய வனப்பினவென்க.

சேடு - பெருமை. தேவிநிறத்திற்கு உவமை பதுமராகமாயினும்,மயிர்கள்அகன்றதனால், காம்பு உவமையாயிற்று. இனிக் கணைக்காலின் வனப்பு இன்னவென்றுமாம். ௦ (கசஎ)

177. பசும்பொன்செய்கிண்கிணியும்பாடகமும்பாடலைப்ப
நயந்தெரிபொற்சிலம்புமுத்தரிபெய்தகாக.
வியைந்தெழிலார்மணியாமைமிளம்பார்ப்பின்கூன்புறம்போ
லசைந்துணர்வுமடிந்தொழியுமடியிணைபுகழ்வார்க்கே.

(இ - ள்.) அரி பெய்யப்பட்டு, கிண்கிணியும் பாடகமும் தாங்கிக் கிடக்கின்ற இடத்தை வருத்துதலாலே,சிலம்பு சிறிதேசிரிப்ப அழகார்ந்த யாமைப் பார்ப்பின்புறம்போலும் அடியிணையைப் புகழஇயைந்துபுகழ்வார்க்கு உணர்வு தளங்கிக் கெட்டுப்போமென்க.

நயந்து - விரும்பி. "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" (தொல். மரபு.சூ. ச); "தவழ்பவை தாமுமவற்றோ ரன்ன" (ஷெஷெஷெரு)என்றார்.()

178. அரக்கியல்செங்கழுநீரகவிதழ்போலுகிர்சூடிப்
பரப்பின்றிநுதியுயர்ந்துபழிப்பறத்திரண்டுநீண்
டொருக்குறநெருங்கிப்பொன்னொளியாழியகங்கௌவித்
திருக்கவின்கொண்மெல்விரல்கடேனார்க்குந்தகையவே.

(இ - ள்.) திருவினது விரலினழகைக்கொண்டவிரல்கள், நுதிபரப்பின்றித்தோன்றித் திரண்டு நீண்டு சேரநெருங்கி மோதிரம்கௌவப்பட்டு அகவிதழ்போலும் உகிர்சூடிப் பூவென்று தேனார்க்குந் தகைமையவென்க.

குலிகமூட்டின இதழ், செம்பஞ்சு ஊட்டினதற்கு உவமம். (கசஅ)

179. என்பொடுநரம்பின்றியிலவம்பூவடரணுக்கி
யின்புறவரம்புயர்ந்திருநிலமுறப்புல்லி
யொன்பதின்சாணடப்பினுமொருகாதமென்றஞ்சு
மென்பஞ்சிச்சீறடியுமேதக்கவிழைவினவே.

(இ - ள்.) என்புநரம்புமின்றி இலவிதழைக் கெடுத்துக் கட்கினிய புறவெல்லை உயர்ந்து நிலத்தையுறப்புல்லி நடப்பினும் அஞ்சுமடியும் பெருமை தக்க விழைவினவென்க.

ஏழடியென்றல் மரபாயிருக்க, ஒருகாதமென்னுமெழுத்து நோக்கி, 'ஒன்பதின்சாண்' என்றாரேனும் அடியிடுமளவில் ஏழாம். (கஎ0)

180. இவ்வுருவுநெஞ்செனுங்கிழியின்மேலிருந்திலக்கித்
தவ்வுருவுநினைப்பென்னுந்துகிலிகையால்வருத்தித்துக்
கவ்வியதனைக்கிநற்கண்விடுத்துக்காதனீர்
செவ்விதிற்றெளித்தானுக்காமப்பூச்சிதறினான்.

(இ - ள்.) கூறிய இவ்வுருவை ஒருப்பட்டிருந்து நெஞ்சென்னும் படத்திலே குறித்து அதனை நினைவென்னுங்கோலாலே உறப்புவிளங்க எழுதித் தான்கைக்கொண்ட தியானத்தாலே நயனமோக்கம்பண்ணின மாமன்மகளாதலின், அன்பென்னும் நீரைச்சொரிந்து புணர்ச்சிவேட்கையாகிய அமையாத பூவைச் சிதறினானென்க.

இவன் எழுதிப்பிரதிட்டித்தான். இலக்கு - குறித்துப்பார்த்தல். 'இருந்திலேகித்து' என்பதும் பாடம். (கஎக)

181. மெய்பெருவெழுத்துயிர்க்குமழலைவாயின்முறுவற்
றையலாணெடுங்கண்வலைப்பட்டுச்சச்சந்த
னையுருணணங்கெனவேயகத்தடக்கிச்செல்கின்றான்
மொய்யறுக்களியானைமுழங்கித்தேனிமிர்தாரான்.

எழுத்து வடிவுபெற்றுத் தோற்றும் இளையவார்த்தையையும் முறுவலையுமுடைய தையலாள் ; மழலை எக்காலத்திற்கும் கூறுப. மொய் - போர்.

(இ - ள்.) அங்ஙனங்குறித்த தாரானாகிய சச்சந்தன், விசேடித்துத் தையலாள் கண்வலையிலே அகப்பட்டுக் கால் நிலந்தோய்தல்முதலியன கண்டு தெளிந்தும் அணங்கென்றே உட்கொண்டு செல்லாநின்றானென்க. (கஎஉ)

வேறு.

182. வண்டினமுகபடாமணிந்துவார்மத
முண்டுகுத்திடுகளிற்றுழவன்றன்மகள்
பெண்டிர்தம்பெருநலங்கடந்துபெற்றபேர்
விண்டலர்கோதைக்குவிசயையென்பவே.

(இ - ள்.) வண்டினமாகிய முகபடாத்தை அணிந்து மதத்தைத் தான் உண்டு சிந்துங்களிற்றுழவன்றன்மகள்பெயர் விசயையென்பர்; அக்கோதைக்கு அப்பெயர் பெண்டிர்நலங்கடந்துபெற்ற காரணப்பெயரென்க.

பெயர், பேரெனமருவிற்று. (கடுங)

183. அருமணிமரகதத்தங்கணுறிய
வெரிநிறப்பொன்னிதழேந்துதாமரைத்
திருமகளிவளெனத்திகைவெண்குடைப்
பெருமகன்கோயிலுட்பேதைவைகுமே.

(இ - ள்.) இமவானில் மரகதப்பாறையிற் பதுமையென்னுங்கயத்தில் தோற்றிய பொற்றாமரையிற் றிருவென்ன விதையத்தரசன்கோயிலிலே பேதை வைகாநிற்குமென்க.

திகைதல் - மேலாதல். திரு உவமம், வடிவிற்கும் நல்வினையுடையோனிடத்து ஏகுந்தன்மையும் பொதுவாயிருத்தற்கும். (கடுச)

184. கலம்புரியகலல்குற்றாயர்தவ்வையர்
சிலம்புரிதிருந்தடிபரவச்செல்பவள்
வலம்புரிசலஞ்சலம்வளை இயதொத்தனள்
குலம்புரிந்தனையதோர்கொடியினீர்மையாள்.

(இ - ள்.) குலம் கொடியினீர்மை புரிந்தனையதொரு நீர்மையாள், மேகலை விரும்பின அல்குலையுடைய ஐவகைத்தாயரும் அவர்மக்களாய்த் தனக்கு மூத்தவர்களும் அடிபரவச்செல்பவள், வலம்புரி சலஞ்சலத்தைவளைத்ததன்மையையொத்தாளென்க.

சிலம்புபுரி, விகாரம். (கடுரு)

185. இன்னகிற்கொழும்புகையுயிர்க்குமீர்ங்குழன்
மென்மலர்க்கோதைதன்முலைகள்வீங்கலின்
மின்னுருக்குறுமிடைமெலியமெல்லவே
கன்னிதன்றிருநலங்கனிந்ததென்பவே.

மின்னுருக்குறுமிடை - மின் வடிவுகெடுதற்குக் காரணமான இடை. 'நடுக்குறும்' என்றும் பாடம்.

(இ - ள்.) குழலையுடைய கோதைதன்முலைகள், இடைமெலிய வீங்குதலாலே, அவள் நலம் முதிர்ந்ததென்க. (கடுசூ)

186. முந்துநாங்கூறியமூரித்தானையக்
கந்துகொல்கடாக்களியானைமன்னவன்
பைந்தொடிப்பாசிழைப்பரவையேந்தல்கு
றந்தைமாட்டிசைத்தனன்றனதுமாற்றமே.

(இ - ள்.) தானையையும் யானையையுமுடைய அச்சச்சந்தன் விசயையுடைய முந்துகூறிய தந்தைமாட்டே தனது மாற்றத்தை இசைப்பித்தானென்க.

தனதுமாற்றம் - அவனைக் கொள்ளவேண்டுமென்னுமாற்றம். (கருஎ)

187. மருமகன்வலந்ததுமங்கையாக்கமு
மருமதிச்சூழ்ச்சியினமைச்சரெண்ணிய
கருமமுங்கண்டவர்கலத்தற்பான்மையிற்
பெருமகற்சேர்த்தினார்பிணையனாளையே.

ஆக்கம், இளவியாக்கம்போனின்றது ; அவள் முதிர்ச்சியுமாம். கருமம் - கோவிந்தனுக்கு இவன் உதவியாதல்.

(இ - ள்.) தந்தையுந்தாயும், மருமகன் கூறியதனையும் மங்கை அவனிடத்து அன்பை அமைத்துக்கோடலையும் அமைச்சரெண்ணிய கருமத்தையும் பார்த்து, மைத்துனமுறையானும் பிணையனாளைப் பெருமகற்குச் சேர்த்தினாரென்க.

"பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" (தொல். களவு. சூ. கச) என்பதனான் ஒப்பும் பெருந்திணைப்பாற்படுங்காந்தருவமாமாறு பெரும்பொருளாருணர்க. (கருஅ)

வேறு.

188. பொனங்கொடியமிர்தனாளும்பொன்னெடுங்குன்றனானு
மனங்கனுக்கிலக்கமாகியும்புகொண்டழுத்தவிள்ளா
ரினந்தமக்கெங்குமில்லாரியைந்தனரென்பமுக்கட்
சினந்திகழ்விடையினானுஞ்செல்வியுஞ்சேர்ந்ததொத்தே.

(இ- ள்.) குன்றனானும் கொடியாகிய அமிர்தனாளும், முன்பு இலக்கமாய் நின்று, பின்பு அவர், விடையினானும் செல்வியும் சேர்ந்ததொத்து விள்ளாராய் ஒருடம்பாயினாரென்க.

கொடியென்றார், குன்றுமறையப்படர்ந்து கேடுபிறப்பித்தலின். அழுத்த இலக்கமாய். காட்சியும் நிலையும் முயக்கமுங்கூறி, அவற்றிற்கு உவமை மேற்கூறுகின்றார். (கருக)

189. காதலாற்காமபூமிக்கதிரொளியவருமொத்தார்
மாதருங்களிறனானுமாசுணமகிழ்ச்சிமன்ற
லாதரம்பெருகுகின்றவன்பினாலன்னமொத்துந்
தீதிலார்திளைப்பினுமான்செல்வமேபெரிதுமொத்தார்.

காதல் - எல்லாப்பொருளையும் நுகர்தற்குச்செல்லும் வேட்கை. காம பூமி - தானப்பயனாற்பெறும் போகபூமி. உம்மை, சிறப்பு. ஆதரம் பெருகு மன்பாவது - புணர்வதன்முன்னும்பின்னும் ஒருதன்மைத்தாய்ச் செயற்கை யால் மிகுமன்பு. அன்னம், புணர்ச்சியால் மெய்யுருகுமென்மைக்கு உவ மம். பலரும், "துணைபுணரன்னத்தின்றூவி" (கலி. எ௨; சிலப். ௩: ௬௬) என்று புணர்ச்சியால் தூவிக்கு மென்மை பிறக்குமென்றார். 'ஒத்தும்' என் பதனை முனனும் பின்னுங்கூட்டுக. இவ்வெச்சத்தைத் தீதிலாரில் தீதின்மை யோடு முடிக்க. தீதிலாத்திணைப்பிற் பாடமாயின் ஆமானையொத்தும் தீதிலா மாதரும் களிறனுமென்க. ஆமான் நக்குங்காற்பிறக்கும் இனிமையேகண்டு உவமம். ஏகாரம், தேற்றம்.

(இ - ள்.) மாதரும் களிறனும், மகிழ்ச்சியையுடைய முயக்கத்தால் மாசுணத்தையொத்தும், அன்பாலுளதாகிய மென்மையால் அன்னத்தை யொத்தும், கண்முதலிய அவயவநுகர்ச்சியால்ஆமானையொத்தும், தீதிலாத வர்கள் இப்புணர்ச்சிக்கு முன்னர்ப்போகபூமியிலுள்ளார் செல்வமே பெரிது மொத்தார்; இப்பொழுது காதலால் அவர்கள் தன்மையுமொத்தாரென்க. ()

190. தன்னமர்காதலானுந்தையலுமணந்தபோழ்திற்
பொன்னனாளமிர்தமாகப்புகழ்வெய்யோன்பருகியிட்டான்
மின்னவிர்பூணினானைவேற்கணார்க்கியற்றப்பட்ட
மன்னியமதுவின்வாங்கிமாதரும்பருகியிட்டாள்.

(இ - ள்.) காதலானும்தையலும்முற்கூறியாக்குப்புணர்ந்தபொழுதிலே அவன் பொன்னனானை அமிர்தமாகப் பருகினான்; அவன் பருகினதன்மை யைத்தானுங்கண்டு பூணினானை அவளும் மதுப்போலேபருகினாளென்க.

மகளிர்க்குச் சமைத்தமது. வாங்கி - அவன்காட்டக்கண்டு. பருகி யிடுதல், ஒருசொல். இதனால், அதரபானமும் அல்குற்பானமுங்கூறி மேல் இவற்றிற்கு உவமைகூறுகின்றார். (௧௬௧)

191. பவழவாய்பரவையல்குலென்றிவைபருகும்வேலான்
கவழமார்களிறுபோன்றான்காதலிகரும்பையொத்தா
டவழ்மதுக்கோதைமாதர்தாமரைப்பூவதாக
வுமிழ்நகைவேலினானுமொண்சிறைமணிவண்டொத்தான்.

'இவை' என்றது, கரும்பையும் தாமரைப்பூவையும். கரும்புவமை, நெருக்கி நீர் நுகர்தற்கு. பூவதாக - பூவினதுதன்மை எக்காலமுமுண்டாக. இது, வேறுபாடின்மையின் வேறுபடவந்த உவமமாயிற்று; எனவே பதும யோனியாம். 'வேலினானும்' என்றது, களிறுபோல வன்மையுடையோனு மென்றவாறு; உம்மை, சிறப்பு.

(இ - ள்.) வாயும் அல்குலும்இவையென்றுஉட்கொண்டு,வேலான்பவழ வாயைப் பருகிக் களிற்றையொத்தான்; அப்பொழுது அவள் கரும்பையொத்

தாள். அவ்வேலானும் அல்குலைப் பருகி மாதர் பூவாயிருக்கச் செவ்விகுலையா திருக்க நுகர்வதோர் வண்டையொத்தானென்க.

செவ்விகுலையாதிருக்கநுகர்வதொருவண்டு, இல்பொருளுவமை. (கசுஉ)

192. பளிக்கறைப்பவழப்பாவைபரிசென்த்திகழுஞ்சாயற்
களிக்கயல்பொருவபோன்றுகடைசிவந்தகன்றகண்ணு
ளொளிக்கவின்கொண்டகாமத்தூழுறுகனியையொத்தா
ளளித்தயில்கின்றவேந்தனஞ்சிறைப்பறவையொத்தான்.

(இ - ள்.) கண்ணாள் கனியையொத்தாள்; அவளுக்கு மேன்மேலும் விருப்பமுண்டாக்கி அயில்கின்ற வேந்தன், வாவலையொத்தானென்க.

பளிக்குப்பாறையை அடுத்த பவழப்பாவை இவளது தன்மையெனத் திகழும்சாயல், ஈண்டு ஒளியதுமென்மை; இது செயற்கைநலம். இதற்கு அடுத்ததுகாட்டும் பளிங்கைப் (குறள். எ00) பவழம் தன் தன்மையாக்கி னாற்போல, அடுத்தமகளிர்தன்மையனும் அரசனை இவளும் தன்றன்மையே யாக்கிக்கொண்டாளெனக் கதைகருதிய நயமுமுண்டு. பொருவபோன்று பொருதெனவிரிக்க. கொண்ட கனி. அயிறல் - உண்டல்; "உண்டற்குரிய வல்லாப்பொருளை, யுண்டனபோலக் கூறலு மரபே" (தொல். பொருளியல். கக); "தோணலமுண்டு துறக்கப் பட்டோர்" (கலி. உங) என்றார் பிறரும். பழமும் வாவலும் வடுப்பட நுகர்தற்குவமை. (கசுங)

வேறு.

193. துறுமலர்ப்பிணையலுஞ்சூட்டுஞ்சுண்ணமு
நறுமலர்க்கண்ணியுநாறுசாந்தமு
மறுசிலத்தமிர்தமுமகிலுநாவியும்
பெறுநிலம்பிணித்திடப்பெரியர்வைகினர்.

பிணையல் - மலர்நெருங்குமார்பின்மாலை. சூட்டு - நெற்றிக்கட்டு. கண்ணி - முடிக்குமாலை. அமிர்தம் - அடிசிலும்பானமுமுதலியன. இனி, அறுசிலத்தமிர்தம் - அறுசுவையுமாம்; ஆறுகாலத்திற்குரிய பானமுமாம்.

(இ - ள்.) பெரியவர், புணர்ச்சியற்றசிலத்தே பிணையல்முதலியனதம்மை நுகரும் இந்திரியங்களைப்பிணிப்ப வைகினரென்க. (கசுச)

194. துடித்தலைக்கருங்குழற்சுரும்புண்கோதைத
னடித்தலைச்சிலம்பினோடரவமேகலை
வடித்தலைக்கண்மலர்வளர்த்தநோக்கமோ
டடுத்துலப்பரிதவரூறிலின்பமே.

துடி-எலம். வடித்தலைக்கண்-ஒப்பினால் வடுவகிரிடத்தே நிற்குங்கண்.

(இ - ள்.) அவரின்பம், கோதைதன்கண்மலர் ஊடலையும் கூடலையும் விளைவித்த நோக்கத்தானே, அவளூடினகாலத்து அடி அவன்றலையிற்படுத லிற் பிறந்தசிலம்பின் அரவத்தோடும் கூடினகாலத்துப்பிறந்த மேகலையரவத் தோடும் அடுத்து முடிதல் அரிதாயிருந்ததென்க.

அவனும் பாடம். (கசுரு)

195. இழைகிளரிளமுலையெழுதுநுண்ணிடைத்
தழைவளர்மதுமலர்தயங்குபூஞ்சிகைக்
குழைமுகக்கொடியொடுகுருதிவேலினான்
மழைமுகின்மாரியின்வைகுமென்பவே.

பூண் விளங்குதற்குக்காரணமாயமுலை. ஓவியமெழுதுவார், இதன் நன்மைகருதி எழுதுதற்குக் காரணமான இடை. தழையிலேவளர்ந்த. சிகை-முடி. முலைமுதலியவற்றையுடையகொடி; இஃபொருளுவமை.

(இ - ள்.) வேலினான், கொடியோடே மாரிக்காலத்துமழைமுகில்போலே அருள்பொழிந்து தங்குமென்க. (கசுரு)

196. படுதிரைப்பவழவாயமுதமாந்தியுங்
கொடிவளர்குவிமுலைத்தடத்துள்வைகியு
மிடியினுங்கொடியினுமயங்கியாவதுங்
கடிமணக்கிழமையோர்கடலின்மிக்கதே.

(இ - ள்.) மிக்க மணக்கிழமை, அமுதத்தையுண்டும் வைகியும் மாவிடிபோலவும் நூழிற்கொடிபோலவும் உணர்வும் உடம்புமெல்லாமயங்கிக் கடலின்மிக்கதென்க. (கசுஎ)

197. கப்புரப்பசுந்திரைகதிர்செய்மாமணிச்
செப்பொடுசிலதியரேந்தத்தீவிய
துப்புமிழ்ந்தலமருங்காமவல்லியு
மொப்பரும்பாவைபோன்றுறையுமென்பவே.

(இ-ள்.) கருப்பூரமுதலியவற்றையுடைய சுருளைச் சேடியர்செப்போடேந்த, அதனை நுகர்ந்து ஐம்பொறிக்குமினிய நுகர்ச்சிகளைக் கணவனுக்குக் கொடுத்துப் புணர்தற்கு அலமரும்விசயையும் அவனுக்குக் கொல்லிப்பாவைபோல் தங்குமென்க.

கப்புரம், பாகதம். உம்மை, சிறப்பு. வேறுகருத்துச் செல்லாமல் தன்னையே கருதுவித்தலின், பாவையென்றார்.

இதற்குமுன்பு உலகியன்மணங்கூறி, மேற் காமமிகுதியாற் கெடுகின்றமை கூறுகின்றார். (கசுஅ)

198. மண்ணகங்காவலின்வழுக்கிமன்னவன்
பெண்ணருங்கலத்தொடுபிணைந்தபேரருள்
விண்ணகமிருள்கொளவிளங்குவெண்மதி
யொண்ணிறவுரோணியோடொளித்ததொத்ததே.

இன், நீக்கப்பொருட்டு. உரோகிணி, விகாரம். அவ்வுரோகிணிகாரணத்தின் இருடிசபிக்க மதிதேய்ந்ததொருகதை.

(இ-ள்.) மன்னவன் மண்ணகம் இருள்கொளும்படி காவலிற்றப்பிப் பெண்களுக்கு அருங்கலமானவளுடனே சேர்ந்த கழிகண்ணோட்டம், மதிவிண்ணகமிருள்கொள உரோகிணியோடொளித்தநன்மையையொத்ததென்க. ()

வேறு.

199. குங்குமத்தோளினானுங்கொழுங்கயற்கண்ணினாளுந்
தங்கியகாதல்வெள்ளந்தணப்பறப்பருகுநாளுட்
டிங்கள்வெண்குடையினாற்குத்திருவிழுக்குற்றவண்ணம்
பைங்கதிர்மதியிற்றெள்ளிப்பகர்ந்தெடுத்துரைத்துமன்றே.

(இ - ள்.) தோளினானும் கண்ணினாளும் வேட்கைப்பெருக்கத்தின் நீக்கமறப் பருகுநாளிலே, அவனுக்குச் செல்வம் மதிபோல் ஒழுகக் குறைந்த தன்மையைத் தெரிந்துகூறிப் பின்பு சீவகன்சரிதம் எடுத்துரைக்கலுற்றுமென்றாரென்க.

இதன்கருத்து: இச்செய்யுட்கு அங்கமாகிய வருணனைகள்கூறி, அதற்குரிய தலைவனை நாட்டுகின்றார், இத்துணையும் அவன் தோன்றற்குக்காரணங் கூறி, அதற்கு முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைப் பிரித்த தீவினைவந்து குரவரைப்பிரித்தலும் கூறவேண்டுதலின், திருவிழுக்குற்றமை முற்கூறுகின்றாரென்றுணர்க. திருவிழுக்குறுதலாவது - கட்டியங்காரற்கு அரசளித்தலும் அமைச்சர்சொற்கேளாமையும். (௧௭௦)

200. களிறனானமைச்சர்தம்முட்கட்டியங்காரனென்பா
னொளிறுவாட்டடக்கையானுக்குயிரெனவொழுகுநாளுட்
பிளிறுவார்முரசிற்சாற்றிப்பெருஞ்சிறப்பியற்றிவேந்தன்
வெளிறிலாக்கேள்வியானைவேறுகொண்டிருந்துசொன்னான்.

(இ - ள்.) களிறனான், தன் அமைச்சரில் வெளிறிலாக்கேள்வியையுடைய நிமித்திகனைத் தனக்கு வேறாகக்கொண்டு கட்டியங்காரனென்கின்றவனைத் தனக்கு உயிரெனக்கொண்டொழுகுநாளிலே, வேந்தன் அத்தடக்கையானுக்கு முடியும் குடையுமொழிந்த சிறப்புக்களையுண்டாக்கி அதனை உலகறிய முரசாற்சாற்றி இருந்து இக்காரியத்தைக் கூறினானென்க.

மதச்செருக்காற் பாகன்றோட்டியை நீவுமாறுபோலக் காமக்களிப்பால் தன் அமைச்சர்கூற்றைக் கடத்தல்நோக்கி, 'களிறனான்' என்றார். நிமித்திகன் கருமமேகூறுதலும், கட்டியங்காரன் அரசன்கருத்திற்கேற்ப ஒழுகுதலும் இரண்டற்குங்காரணம். "கோதனான்" (சீவக. ௨௪௦) என்றும், "கரிமாலை நெஞ்சினான்" (ஷை ௨௬௪) என்றும், "கல்லாமந்திரி" (ஷை ௩௪௫) என்றும் மேற்கூறலின், கட்டியங்காரனை வெளிறிலாக்கேள்வியானெனலாகாது; இனி இகழ்ச்சிக்குறிப்பென்பாருமுளர். (௧௭௧)

201. அசைவிலாப்புரவிவெள்ளத்தரிஞ்சயன்குலத்துட்டோன்றி
வசையிலாள்வரத்தின்வந்தாள்வான்சுவையமிர்தமன்னாள்
விசையையைப்பிரிதலாற்றேன்வேந்தனீயாகிவைய
மிசைபடக்காத்தல்வேண்டுமிலங்குபூண்மார்பவென்றான்.

அரிஞ்சயன் - தேவிபாட்டன். வசையிலாள், வினையெச்சமுற்று. வேண்டுமென்பது,உம்மீற்றுன்வந்ததோர் ஏவல்கண்ணியவியங்கோள்;"வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்" (புறநா. ௩௬௭) என்றார்பிறரும்.

(இ - ள்.) பூண்மார்பனே, அமுதன்னாள், அரிஞ்சயனது அசைவிலாக் குலத்துட்டோன்றி வசையின்றி முற்பவத்தில் எனது வேண்டுகோளாலே வந்தாள்; அவளைப்பிரிதலாற்றேன்; நீ இனி வேந்தனாய் உலகை இசையுண்டாகக் காப்பாயாகவென்றானென்க. (௧௭௨)

202. அண்ணாறுவுரைப்பக்கேட்டேயடிகளிற்றெருத்தினிட்ட
வண்ணப்பூந்தவிசுதன்னைஞமலிமேலிட்டதொக்குங்
கண்ணகன்ஞாலங்காத்தலெனக்கெனக்கமழுங்கண்ணி
மண்ணகம்வளருந்தோளான்மறுத்துநீமொழியலென்றான்.

தவிசு - கழுத்துமெத்தை. மண்வளர்தற்குக்காரணமாகிய தோளான்-அரசன்; 'மண்ணெழுவனையதோள்' பாடமாயின், பண்ணியவெழுவாம்; "ஆவுதி மண்ணி" (மதுரை. ௪௯௪) என்றாற்போல. தோளாயும் பாடம்.

(இ - ள்.) கட்டியங்காரன்,தான் கருதியிருந்ததனை அரசன்றானேகூறக் கேட்டு உண்மகிழ்ந்து, ஞாலங்காவல் எனக்குத் தவிசை ஞமலிமேலிட்டு தொக்குமென்று மறுப்ப, தோளான் என்காரியமாக நீ மறுத்துமொழிய லென்றானென்க.

வேறோரூர்திகூறாது ஞமலியைக்கூறினான், அவன்அயிராதுதருதற்கு. ()

203. எழுதருபருதிமார்பனிற்றெனவிசைத்தலோடுந்
தொழுதடிபணிந்துசொல்லுந்துன்னலர்த்தொலைத்தவேலோய்
கழிபெருங்காதலாள்கட்கழிநலம்பெறுகவையம்
பழிபடாவகையிற்காக்கும்படுநுகம்பூண்பலென்றான்.

ஒடு, உடனிகழ்ச்சி. கழிபெரு, ஒருபொருளிருசொற்பிரிவில்லாதது.

(இ - ள்.) அரசன் என்னிலை இற்றென இசைத்தவளவிலே, கட்டியங்காரன் தொழுது வணங்கிப் பகையென்றுகூறப்படும் பகைவரையெல்லாம் கொன்றவேலோய்,நீ நலம்பெறுக ; யான் பழிபிறவாதபடி வையத்தைக் காக்கும் பெரியபாரத்தைப் பூண்பேனென்றானென்க.

தன் நினைவை அவன்காரியம்போற் கூறினான். (௧௭௪)

204. வலம்புரிபொறித்தவண்கைமதவலிவிடுப்பவேகிக்
கலந்தனன்சேனைகாவல்கட்டியங்காரனென்ன
வுலந்தருதோளினாய்நீயொருவன்மேற்கொற்றம்வைப்பி
னிலந்திருநீங்குமென்றோர்நிமித்திகனெறியிற்சொன்னான்.

'பொறித்த' எனப் பிறவினையாற்கூறினார், அயன்படைத்தனோக்கி. மத, விசேடித்த உரிச்சொல். உலம்வளர்க்குந்தோள்.

(இ - ள்.) மதவலி, உபசாரமாகக் கையாலேகாட்டிவிடுப்பக் கட்டியங்காரன்போய்ச் சேனையைக்காத்தலைக் கலந்தானென்று கூறக்கேட்டு, நிமித்திகனென்னுமமைச்சன், தோளினாய், ஒருவன்மேல் உனது கொற்றம்வைப்பின், நிலமும் திருவும் நின்னை நீங்கும்; இதனை நீயே ஓரொன்று நீதியாற் கூறினனென்க. (கஎரு)

205. எனக்குயிரென்னப்பட்டானென்னலாற்பிறரையில்லான்
முனைத்திறமுருக்கிமுன்னேமொய்யமர்பலவும்வென்றான்
றனக்கியான்செய்வசெய்தேன்றான்செய்வசெய்கவொன்று
மனக்கினாமொழியவேண்டாவாழியரொழிகவென்றான்.

என்னலாற்பிறரையில்லான் - என்னையொழியப்பிறரையில்லாதான்; இன்மை, உடைமைக்கு மறுதலை. முன்னே - சிறப்பிக்குமுன்னே. வென்றானென்பவே நடத்துதற்குரியனென்றான். நன்மையுந் தீமையுங்கருதிச் செய்வவெனப் பன்மையாற்கூறினான்.

(இ - ள்.) உயிரெனப்பட்டான், பிறரையில்லான், வென்றான்; அவன் றனக்கு யான்செய்வனசெய்தேன்; அவன்றான் எனக்குச் செய்வனசெய்க; நீ சிறிதும் பொறுமைகூறவேண்டா; நீயும் நின்னிலையிலே வாழ்வாயாக; இனி இக்கூற்றினைத் தவிர்வாயாகவென்றானென்க. (கஎசு)

206. காவலகுறிப்பன்றேனுங்கருமமீதருளிக்கேண்மோ
நாவலர்சொற்கொண்டார்க்குநன்கலாற்றீங்குவாரா
பூவலர்கொடியனார்கட்போகமேகழுமிமேலும்
பாவமும்பழியுமுற்றார்பற்பலர்கேளிதென்றான்.

நாவலர் - அமைச்சர். கழுமி - மயங்கி. இஃது உலகியலாற் கூறினான். மேற்கூறுவனவெல்லாம் போகத்தையே நோக்குதலின், இதுவென ஒருமையாற்கூறினான்.

(இ - ள்.) காவல, நாவலர்சொற்கொண்டார்க்குத் தீங்குவாரா; ஆதலால், திருவுள்ளமன்றேனும் அருளிக்கேண்மோ; ஒருவன்மேற் கொற்றம் வையாதிருக்கின்ற இது கருமமன்றான்; அதற்கு உடம்படாமையின், நின்னையொழியக் கழுமி முன்னும் இம்மையிற்பழியும் மறுமையிற்பாவமுமுற்றார் மிகப்பலர்; இதனைக் கேளென்றானென்க. (கஎஎ)

207. பெரும்பெயர்ப்பிரமனென்னும்பீடினாற்பெரியநீரா
னரும்பியமுலையினாளுக்கணிமுகநான்குதோன்ற
விரும்பியாங்கவளையெய்தான்விண்ணகமிழந்ததன்றித்
திருந்தினாற்கின்றுகாறுஞ்சிறுசொல்லாய்நின்றதன்றே.

(இ - ள்.) பிரமனென்னும் தவத்தாற் பெரியநீரான், திலோத்தமை பொருட்டு நான்குமுகம் தோன்றும்படி விரும்பி அவ்விடத்து அவளைப்பெரு

ஞய் விண்ணகமிழந்ததேயன்றிப் பின் தவத்தாற் பாவந்தீர்ந்தவற்கு இன்றளவும் புறஞ்சொல்லாய் நின்றதல்லவோவென்றுனென்க.

பெயர் - புகழ். அன்றே: ஏகாரம், வினா. முறைசெய்யாமையிற் றன்னிலையிழந்தான். தோற்றியும் பாடம். (களஅ)

208. கைம்மலர்க்காந்தள்வேலிக்கணமலையரையன்மங்கை
மைம்மலர்க்கோதைபாகங்கொண்டதேமறுவதாகக்
கொய்ம்மலர்க்கொன்றைமாலைக்குளிர்மதிக்கண்ணியாற்குப்
பெய்ம்மலரலங்கன்மார்பபெரும்பழியாயிற்றன்றே.

கைமலர் - கைபோலுமலர். மலையரையன் - மலைகளுக்கரசன். மைமலர்க்கோதை - நீலமலராற்செய்த கோதை; இறைவி ; ஆகுபெயர். மாலை-அடையாளப்பூ. கண்ணி-சூடும்பூ; "கண்ணியுந் தாரு மெண்ணினராண்டே" (தொல். மரபு. சூ. எகூ) என்றார்.

(இ - ள்.) 'இடப்பட்டமாலைமார்பனே, மலையரையன்மனைவியாகிய மேனைபெற்றகோதையைப் பாகத்தேவைத்ததேமறுவையுடையதொன்றாகக் கொன்றையாற்செய்தமாலையினையும் மதியாகிய கண்ணியினையுமுடைய அரனுக்குப் பழியாயிற்றல்லவோவென்றுனென்க. (களகூ)

209 நீனிறவண்ணனன்றுநெடுந்துகில்கவர்ந்துதம்முன்
பானிறவண்ணனோக்கிற்பழியுடைத்தென்றுகண்டாய்
வேனிறத்தானைவேந்தேவிரிபுனற்றொழுனையாற்றுட்
கோனிறவளையினார்க்குக்குருந்தவனொசிந்ததென்றான்.

வேனிறம் - வேலினது விளக்கம். கோல் - திரட்சி.

(இ - ள்.) வேந்தே, மாயோன் பலதுகிலைக் கவர்ந்து தம்முனாகிய பானிறவண்ணன் நோக்கிற் பழியுடைத்தென்றுகாண் தொழுனையாற்றிலே கோவியர்க்குக் குருந்தொசித்தது ; இஃது அங்ஙனந் தீதென்றுனென்க. (கஅ௦)

210. காமமேகன்றிநின்றகழுதைகண்டருளினாலே
வாமனார்சென்றுகூடிவருந்தினீரென்றுவையத்
தீமஞ்சேர்மாலைபோலவிழித்திடப்பட்டதன்றே
நாமவேற்றடக்கைவேந்தேநாமிதுதெரியினென்றான்.

காமமே: ஏகாரம், தேற்றம். என்று - என்ன. ஈமம் - சுடுகாடு.

(இ - ள்.) வேந்தே, நாம் இக்காமத்தைத் தெரியின்,காமமே அடிப்பட்டு நின்று ஆண்கழுதையைக்கண்டு, அருளாலே புத்தனார் பெண்கழுதையாய்ச் சென்றுகூடி, இக்காமத்தாலேவருந்தினீரேயென்ன, அது வையத்திலே ஈமத்திலேவிழுந்தமாலைபோல இழித்திடப்பட்டதல்லவோவென்றுனென்க.()

211. படுபழிமறைக்கலாமோபஞ்சவரன்றுபெற்ற
வடுவுரையாவர்பேர்ப்பார்வாய்ப்பறையறைந்துதூற்றி

யிடுவதேயன்றிப்பின்னுமிழுக்குடைத்தம்மகாம
நடுவுநின்றுலகமோம்பனல்லதேபோலுமென்றான்.

(இ - ள்.) கேட்பாயாக; காமத்தாற் பிறந்த பழியை மறைக்கலாமோ, பஞ்சவர் ஒருத்தியையே மனைவியாக்கலிற்பெற்ற வடுவுரையைப் போக்குவார் யார்? அது தூற்றியிடுதலேயன்றி மறுமையிலும் நரகமுதலியவற்றைத் தரும்; ஆதலால், நடுவுநிலையிலே நின்று உலகமோம்புதலே நல்லதுபோலு மென்றானென்க.

போலும், ஒப்பில்போலி. (கஅஉ)

212. ஆரறிவிகழ்தல்செல்லாவாயிரஞ்செங்கணானுங்
கூரறிவுடையநீரார்சொற்பொருள்கொண்டுசெல்லும்
பேரறிவுடையைநீயும்பிணையனாட்கவலஞ்செய்யு
மோரறிவுடையையென்றானுருத்திரதத்தனென்பான்.

ஆரறிவிகழ்தல் செல்லா - பெரிய அறிவு பிறராலிகழப்படாத. அவலம்- அரசன் கொலையுண்டல்.

(இ-ள்.) அரசன் நிமித்திகன் கூற்றைக்கொள்ளாமைகண்டு, அருகிருந்த உருத்திரதத்தன், இந்திரனும் அமைச்சர்சொற்பொருளைக் குறிக்கொண்டு நடக்கும்; அவனைப்போல நீயும் அறிவுடையை; ஆயினும், இப்பொழுது இவன் சொல்லைக்கொள்ளாமையின், பிணையனாட்கு அவலஞ்செய்யும் ஓரறிவுடையையாயினையென்றானென்க. (கஅ௩)

213. அளந்துதாங்கொண்டுகாத்தவருந்தவமுடையநீரார்க்
களந்தனபோகமெல்லாமவரவர்க்கற்றைநாளே
யளந்தனவாழுநாளுமதுவெனக்குரையலென்றான்
விளங்கொளிமணிகள்வேய்ந்துவிடுசுடரிமைக்கும்பூணான்.

(இ - ள்.) பூணான், வரைந்துகாத்த தவமுடையார்க்குக் கருவாய்ப் பதி கின்றபொழுதே போகமெல்லாம்அளந்தன; அவரவர்க்கு அப்பொழுதே வாழும்நாளும்அளந்தன; அஃது எனக்கு உரையலென்றானென்க.

போகமுமென்னும் உம்மை கூறிற்றிலர், செஞ்சொலாய் முற்படக் கிளத்தலின்; "நிலந்திரு நீங்கும்" (சீவக. ௨0௪) என நிமித்தகன்கூறிய செல்வநிலையாமையையும், உருத்திரதத்தன் கூறிய யாக்கைநிலையாமையையும், நிலையாமையென ஒருமையாக்கி, 'அது' என்று ஒருமையாற்கூறினான். உரையலென்றான், நிமித்தகனை நோக்கி; அவன் உரியனாதலின். (கஅ௪)

214. மூரித்தேந்தாரினாய்நீமுனியினுமுறுதிநோக்கிப்
பாரித்தேன்றருமநுண்ணூல்வழக்கதுவாதல்கண்டே
வேரித்தேங்கோதைமாதர்விருந்தினைக்காகவின்பம்
பூரித்தேந்திளையகொங்கைபுணர்கயான்போவலென்றான்.

(இ - ள்.) தாரினய், நூல்வழக்கு இடித்துக்கூறல் (குறள். ௬௩௮)ஏர் அமைச்சர்க்கு இயல்பென்றமைகண்டு, உறுதிநோக்கி இத்துணையும்பரக்கக் கூறினேன்; இனி மாதர்கொங்கையை நினக்கு எப்பொழுதும் விருந்தாகக் கொண்டு புணர்க; நீ என்னைமுனியினும் நின் தவறுகாணுமல் துறவிடத்தே போவேனென்றானென்க.

மூரி, பண்புமாத்திரமுணர்த்தாது பெயராதலின், வேற்றுமைத்தொகை. முனியினுமென்பது எதிர்காலமுணர்த்துமெச்சம்; உம்மை, ஐயம். 'இளைய கொங்கை' என்று இளமைநிலையாமை கூறினான். அரசன்போவென்னுமல் தானேபோவேனென்றல் நீதியன்மையின், துறவு உட்கோளாயிற்று. இதனுன், "வெளிறிலாக்கேள்வியான்" (சீவக. ௨௦௦) என்றார்.

"களிறனன்" (சீவக. ௨௦௦) முதல் இத்துணையுமொருதொடர். (௧௬௫)

வேறு.

215. இனமாமென்றுரைப்பினுமேதமெனுன்
முனமாகியபான்மைமுளைத்தெழலாற்
புனமாமலர்வேய்நறும்பூங்குழலாண்
மனமாநெறியோடியமன்னவனே.

இனமாம் - நினதுவேட்கையும் முற்கூறிய தேவரது வேட்கைத்திரளிலே வைத்து எண்ணுவதொரு வேட்கையாம். குழலாள் மனமாம் மன்னவன் - குழலாள் மனக்கருத்தாய் நுகரும் மன்னவன்; நெறியோடியமன்னவன் - அரசநீதிகெட்டமன்னவன்.

(இ - ள்.) குழலாள் மனமாம்மன்னவன், முற்பிறப்பில் தீவினை முளைத்துத்தோன்றுதலாலே, இது முற்கூறிய இனத்தேயாமென்று பின்னுங்கூறினும் தனக்குவரும் ஏதமெண்ணுமினனென்க. (௧௬௬)

216. கலையார்துகிலேந்தல்குலுங்கதிர்சூழ்
முலையார்தடமும்முனியாதுபடிந்
துலையாத்திருவின்னமிர்துண்டொளிசேர்
மலையார்மணிமார்பன்மகிழ்ந்தனனே.

விசயையதுகெடாத இளமைச்செவ்வியை நுகர்ந்து. ஆர்தல் - ஒத்தல்.

(இ - ள்.) மார்பன், அவளல்குலாகிய இன்பக்கடலினும் முலைத்தடத்திலும் வெறுதேபடிந்துஉண்டு வேறுமனக்கவற்சியின்றி மகிழ்ந்தானென்க.()

217. விரிமாமணிமாலைவிளங்குமுடித்
திருமாமணிசிந்துதிளைப்பினரா
யெரிமாமணிமார்பனுமேந்திழையு
மருமாமணிநாகரினுயினரே.

(இ - ள்.) மார்பனும் ஏந்திழையும், மார்பிற்கிடந்த விரிந்த மாமணி மாலையும் மணிபோலும் மயிர்முடியிற்கிடந்த தெய்வவுத்தியும் சிந்தும் திளைப்பினராய் நாகரைப்போல் ஒன்றாயினரென்க. (௧௬௮)

218. நறவார்ந்ததொர்நாகிளந்தாமரைவா
யுறவீழ்ந்ததொரொண்மணிபோன்றுரவோ
னறவாக்கியவின்பமமர்ந்தவிருட்
கறைவேற்கணினுள்கனவுற்றனளே.

தேனிறைதலும் மிக்க இளமையும்மாறுத தாமரையெனவே பதுமயோனியாம். உறவோனுற - பிள்ளையாரவதரிக்க. அறவு, தொழிற்பெயர்.

(இ - ள்.) அங்ஙனம் நாகரைப்போலமர்ந்த இருட்கண்ணே தாமரைவாய் வீழ்ந்ததொரு முத்தைப்போன்று உரவோனுற, அப்பொழுதே இன்பம் அறுதலையாக்கிய கனவைக் கறைவேற்கண்ணினுள் கண்டாளென்க. (கஅஏ)

வேறு.

219. பஞ்சியடிப்பவளத்துவர்வாயவ
டுஞ்சுமிடைக்கனமூன்றவைதோன்றலி
னஞ்சிநடுங்கினளாயிழையாயிடை
வெஞ்சுடர்தோன்றிவிடிந்ததையன்றே.

(இ - ள்.) துவர்வாயினையுடையாள் துயிலிடைக் கண்டகனு மூன்று; அவை பின்பு மனத்தே தோன்றலின், அவள் அஞ்சிநடுங்கினுள்; அக்காலத்தே விடிந்ததென்க.

எனவே கடிதிற்பயக்குமாறுயின. இவை பிற்பயக்குங்கனவாதலின், பின்னும் நெஞ்சிற்றேன்றின. (கக௦)

220. பண்கெழுமெல்விரலாற்பணைத்தோளிதன்
கண்கழுஉச்செய்துகலைநலதாங்கி
விண்பொழிபூமழைவெல்கதிர்நேமிய
வண்புகழ்மாலடிவந்தனைசெய்தாள்.

பண்,ஆகுபெயர்; யாழொடுபயின்றவிரலும், ஆகுபெயர். கழுஉச்செய்து, "நல்ல, மருஉச்செய்து" (நாலடி. உசசு) என்பதுபோல நின்றது. விண், ஆகுபெயர். தீவினையை வெல்லும் அறவாழி.

(இ - ள்.) பணைத்தோளி, கண்கழுவித் தாங்கி அக்கோயிலின் மாலடியை வணங்கினுளென்க.

"தெய்வமஞ்சல்" (தொல். மெய்ப்பாடு. உச) என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரம், தன் குலதெய்வத்தை வணங்குதற்கு விதியாமாறுணர்க. (கககக)

221. இம்பரிலாநறும்பூவொடுசாந்துகொண்
டெம்பெருமானடிக்கெய்துகென்றேத்தி
வெம்பரிமானெடுங்தேர்மிகுதானையத்
தம்பெருமானடிசார்ந்தனளன்றே.

(இ-ள்.) அவள், இவ்வுலகில் நிகரில்லாத பூவையுஞ்சாந்தையுங்கொண்டு, எம்பெருமானே, நின்னடிக்கு இவை பொருந்துவனவாகவென்றேத்தி, தன் கணவனடியை வணங்கினாளென்க.

அ, உலகறிபொருண்மேற்று. (கஉஉ)

222. தானமர்காதலிதன்னொடுமாவலி
வானவர்போன்மகிழ்வுற்றபின்வார்நறுந்
தேனெனப்பாலெனச்சில்லமிர்தூற்றெனக்
கானமர்கோதைகளுமொழிகின்றாள்.

தேவர்நோக்கத்தால் நுகர்ந்தாற்போல இவனும்நோக்கத்தால்நுகர்ந்து மனமகிழ்ச்சியுற்றபின். கனவுமூன்றிற்கும் தேன்முதலியமூன்றும் உவமம்: "பிண்டி......வீழ்ந்தது" (சீவக. உஉந) என்னுமொழி, இவள்கூறுதலின் இனிதாய்ப் பின் தீங்குவிளைத்தலிற் றேனுவமம்; "ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்" (குறுந். நுருச) என்றார் பிறரும். "எண், முத்தணிமாலை" (சீவக. உஉந) என்ற சொல் குலந்தூய்மைகூறுதலிற் பாலுவமம். இவன் ஆக்கத்திற்கு ஊறுமமிர்து உவமம்; இவனுக்கம் அமுதுபோல்உயிர்களைக்காத்தலின்.

(இ-ள்.) மாவலி, தான் மேவின காதலிதன்னோடே மகிழ்வுற்றபின்பு, அவள் தேன்முதலியனவென்னும்படி களுமொழியாநின்றாளென்க. (கஉந)

223. தொத்தணிபிண்டிதொலைந்தறவீழ்ந்ததெண்
முத்தணிமாலைமுடிக்கிடனாக
வொத்ததன்றாள்வழியேமுளையோங்குபு
வைத்ததுபோலவளர்ந்ததையன்றே.

முத்தணிமாலை-முத்லைதயொத்தமாலை; அணி, "மின்னணிநுண்ணிடை" (திருச்சிற். நுசஉ) போல் உவமவுருபு; என்றது, வெள்ளியமாலையை. இது குலந்தூய்மை கூறிற்று; "வெண்டாமரைமலர்த்தடங்கள்போலு, நங்குடி" (சீவக. ருசஎ) என்பர் மேலும்; முத்தமாலையெனின், மேல், "நறுமாலை" (ஷை உஉரு), "எண்கோதைத்தொகை" (ஷை உகூஎ) என்றல் பொருந்தாது. வளர்ந்ததை, வினைத்திரிசொல்; "உரைத்ததை" (கலி. எசு) போல.

(இ-ள்.) ஒருபிண்டி, தான் அணிந்த தொத்துக்கள் ஒழுகக்கெட்டுப் பின்பு தானும் நேராகவீழ்ந்தது; அதன்வழியிலே ஒருமுளை அதனையொத்து எட்மோலையையுடையதொருமுடிக்கு இருப்பிடனாக நட்டுவைத்தாற் போலே ஓங்காநின்று வளர்ந்ததென மொழிந்தாளென்க.

மேலே, "தளும்புநலத்தாரொடு" (சீவக. உஅஅக) என்றலின், முத்தணிமாலையைக் கனவிற்கண்டாள்; அது காரணம். இதனால், சுற்றங்கெட்டபடியும் அரசன்கெட்டபடியும் கூறினார். அது கதையிற் காண்க. (கஉச)

224. வார்குழைவில்லிடமாமுடிதூக்குபு
கார்கெழுகுன்றனையான்கனவின்னியல்

பார்கெழுநூல்விதியாற்பயன்ருன்றெரிந்
தேர்குழையாமலெடுத்துரைக்கின்ருன்.

(இ - ள்.) சலியாதவன், கனவின் இயல்பை, கனுநூலின்விதியாலே பயனைத்தெரிந்து தான்பார்த்து முடிதுளக்கி அவற்றில் நல்லவற்றை எடுத்து அவள் அழகுகெடாமற் கூறுநின்றுனென்க.

அஃது, அசோகுமுறிந்ததுகூருமல் மாலையையும் முடியையும் இரண்டு கனவாகப் பிரித்தது. (கஉரு)

225. நன்முடிநின்மகனுநறுமாலைக
ளன்னவனுலமரப்படுந்தேவியர்
நன்முளைநின்மகனுக்கமதாமெனப்
பின்னதனுற்பயன்பேசலன்விட்டான்.

(இ - ள்.) அவன் அவட்கு முடி நின்மகனும்; நறியபூமாலைகள் அந்நல் வினையுடையோனுல் அமரப்படும் தேவிமார்; முளை நின்மகனுக்கமென மூன்றுக்கிக்கூறிப் பின்பு இறந்ததனுலுள்ள பயனைப் பேசலனுய் விட்டா னென்க.

"குருதிக்கோட்டுக்குஞ்சரநகரம்" (சீவக. உகஅஉ) போல் முத்தமாலை யை மாலையென்னும்பெயர்கருதி நறுமாலையென்றலாகாமையுணர்க; மாலை யென்னும்பெயர் பொதுவாகலின். (ககசு)

226. இற்றதனுற்பயனென்னெனவேந்திழை
யுற்றதின்னேயிடையூறெனக்கென்றலு
மற்றுரையாடலளாய்மணிமாநிலத்
தற்றதொர்கோதையிற்பொற்றொடிசோர்ந்தாள்.

உற்றதென இறந்தகாலத்தாற் கூறினன், தெளிவுபற்றி; "இல்லை, கனு முந்துறூத வினை" (பழ. உ) என்றலின். இன்னே, உதாசீனம்போனின்றது.

(இ - ள்.) இற்றதனுற்பயன் என்னென்று தேவிகேட்ப, ஏந்திழாய், எனக்கு, இங்ஙனே ஓரிடையூறுவந்ததுகாணென்றவளவிலே, பின்பு உரையா டலளாய் மணிநிலத்தே தங்கியதொரு கோதைபோலே வீழ்ந்தாளென்க. ()

227. காவிகடந்தகண்ணீரொடுகாரிகை
யாவிநடந்ததுபோன்றணிமாழ்கப்
பாவியெனுவிவருத்துதியோவெனத்
தேவியையாண்டகைசென்றுமெய்சார்ந்தான்.

(இ - ள்.) காரிகை, கண்ணீருடனே ஆவிபோனுற்போல அழகுகெடுத லாலே, ஆண்டகை சென்று பாவியேனுடையஆவியை வருத்துகின்ருயோ வெனக்கூறி அவளை மெய்யைச்சார்ந்தானென்க.

தேவியை மெய்யையென்ற இரண்டுருபும், "தெள்ளிது" (தொல். வேற்றுமைமயக்கு. சூ. ரு) என்றதனுன் முடியும். (கசுஅ)

228. தண்மலர்மார்புறவேதழீயினுனவள்
கண்மலர்த்தாள்கனவின்னியன்மெய்யெனும்
பெண்மயமோபெரிதேமடவாய்க்கெனப்
பண்ணுரையாற்பரவித்துயர்தீர்த்தான்.

(இ-ள்.) குளிர்ந்த அகன்ற மார்பிலேயுறத் தழீயினுன்; அதனுல் அவள் விழித்தாள்; அப்பொழுது, நினக்குக் கனவின் றன்மையை மெய்யெனக்கருதும் பெண்டன்மை ஓ,பெரிதாயிருந்ததெனக்கூறிப் புனைந்துரையாற் பரவித் துயர்தீர்த்தானென்க.

ஏகாரம், ஈற்றசை. ஓ, வியப்பு. (கசுசு)

229. காதலன்காதலினுற்களித்தாய்மலர்க்
கோதையங்கொம்பனையார்சங்குழாந்தொழத்
தாதுகுதாமமணிந்தகில்விம்மிய
போதுகுமெல்லணைப்பூமகள்சேர்ந்தாள்.

(இ-ள்.) பூமகள், காதலன் கொண்டாட்டத்தாலே களித்துச் சேடியர் தொழத் தாமஞ்சூழ்ந்து அகில் விம்மிய அணையிலே சேர்ந்தாளென்க. (உ00)

230. பண்கனியப்பருகிப்பயனுடகங்
கண்கனியக்கவர்ந்துண்டுசின்னுள்செல
விண்கனியக்கவின்வித்தியவேற்கணி
மண்கனிப்பான்வளரத்தளர்கின்றுள்.

விண், ஆகுபெயர். வித்திய - பரப்பிய. குழவிப்பருவத்தாலும் அரசநீதியாலும் வீடுபேற்றாலும் மண்ணையுருக்குமவன்.

(இ-ள்.) பண்ணைப் பழுக்கக்கேட்டும் நாடகங்களைக் கண்ணுருகமுகந்து நுகர்ந்தும் இருவர்க்கும் இங்ஙனம் சிலநாள்சென்றவளவிலே, வேற்கண்ணி பிள்ளைவளர்தலாலே தளராநின்றுளென்க. (உ0

வேறு.

231. கரும்பார்தோண்முத்தங்கழன்றுசெவ்வாய்விளர்த்து பசலைபூத்தகாமம், விரும்பார்முலைக்கண்கரிந்துதிங்கள்வெண்கது பெய்திருந்தபொற்செப்பேபோ,லரும்பால்பரந்துநுசுப்புங்கண்ணு புலனுயிற்றுய்ந்தவனிச்சமாலை, பெரும்பாரமாய்ப்பெரிதுநைந்து சூற்சலஞ்சலம்போனங்கைநலந்தொலைந்ததே.

(இ-ள்.) வயாவிற்கு நங்கையுடையதோள் மெலிந்து வாய்வெளுத்துக் கண்கள் பசலைபூத்தன, பின்பு முதிர்கின்றவளவிற்குக் காமத்தை விரும்பு

தற்குக் காரணமான முலைக்கண் கருகிப் பால்பரந்து நுசுப்பும்கண்ணினது நுகர்ச்சிப்பொருளாயிற்று ; பின்பு முதிர்ந்த அளவிற்கு அனிச்சமாலை பாரமாய்ச் சலஞ்சலம்போல் நைந்து நலந்தொலைந்ததென்க.

உம்மை, சிறப்பு. (உ0உ)

வேறு.

232. தூம்புடைநெடுங்கைவேழந்துற்றியவெள்ளிலேபோற்
றேம்புடையலங்கன்மார்பிற்றிருமகன்றமியனாக
வோம்படையொன்றுஞ்செப்பாடிருமகளொளித்துநீங்க
வாம்புடைதெரிந்துவேந்தற்கறிவெனுமமைச்சன்சொன்னான்.

வேழம் - வெள்ளிலுக்கு வருவதொருநோய்; "குருதிக்கோட்டுக் குஞ்சரநகரம்" (சீவக. உகஅஉ) போல வேழத்திற்குக் கை அடை. தேம்புதலுடைய திருமகன் ; தேம்புதல் - கெடுதல் ; ஷகாரம்; "புட்டேம்பப் புயன்மாறி" (பட்டின. ச) என்றார் பிறரும். தமியனாக - அரசவுரிமையை நீங்க. ஓம்படை ஒன்றும் செப்பாள் - தான் பரிகாரம் சிறிதும் கூறாளாய். அவன் வஞ்சித்து அரசுவௌவுதலின், 'ஒளித்து நீங்க' என்றார். ஆம்புடை-பிள்ளையார் பிழைப்பதொரு கூறுபாடு.

(இ - ள்.) திருமகன் வெள்ளில்போலத் தமியனாகத் திருமகணீங்கப் பின்பு அவனுக்குத் தன்னறிவென்னுமமைச்சன் ஆம்புடைதெரிந்து கூறினானென்க. (உ0௩)

233. காதிவேன்மன்னர்தங்கள்கண்ணெனவைக்கப்பட்ட
நீதிமேற்சேறறேற்றாய்நெறியலாநெறியைச்சேர்ந்து
கோதியல்காமமென்னுமதுவினிறகுளித்தனான்றே
யோதியபொறியற்றாயோரரும்பொறிபுனைவியென்றான்.

(இ - ள்.) அவ்வறிவென்னுமமைச்சன், வேன்மன்னர் ஊனாகிய கண்ணைக் கண்ணென்பாருடனே காதித் தம்முடைய கண்ணென்று துணிந்து வைத்த நீதியிற்செல்லாயாய்த் தீநெறியைச்சேர்ந்து காமமென்னுங்கள்ளிலே யழுந்தினஅன்றே நல்வினையற்றாய் ; ஆதலால், இனி ஓரெந்திரத்தைப் புனைவியென்றானென்க. (உ0ச)

வேறு.

227. அந்தரத்தார்மயனேயெனவையுறுந்
தந்திரத்தாற்றமநூல்கரைகண்டவன்
வெந்திறலான்பெருந்தச்சனைக்கூவியோ
ரெந்திரவூர்தியியற்றுமினென்றான்.

(இ - ள்.) அரசன், தொழிலோடே நூலைக் கரைகண்டவனாகிய தச்சனைக்கூவி எந்திரமானதோரூர்தியை இயற்றுமினென்றானென்க.

தொழிலால் மயனேயெனத் துணிந்து வடிவால் ஐயமுறுந்தச்சன். இயற்றுமின், ஒருமைபன்மைமயக்கம். ஊர்தி - ஏறப்படுவது. (உ0ரு)

235. பல்கிழியும்பயினுந்துகினூலொடு
நல்லரக்கும்மெழுகுங்கலஞ்சான்றன
வல்லனவும்மமைத்தாங்கெழுநாளிடைச்
செல்வதோர்மாமயில்செய்தனனன்றே.

கிழி - சீலை. பயின் - பற்றுதற்குரியன. துகினூல் - வெள்ளியநூல்.

(இ - ள்.) கலஞ்சான்றனவாகிய கிழிமுதலியனவற்றையும் ஒழிந்தனவற்றையும் கூட்டி, அவன்கூறியபடியே செல்வதொருமயிலை ஏழுநாளிலே செய்தானென்க. (உ0சு)

236. பீலிநன்மாமயிலும்பிறிதாக்கிய
கோலநன்மாமயிலுங்கொடுசென்றவன்
ஞாலமெல்லாமுடையானடிகைதொழு
தாலுமிம்மஞ்ஞையறிந்தருளென்றான்.

(இ - ள்.) மயிலையும் பண்ணினமயிலையும் அவன்கொண்டுசென்று, அரசனைவணங்கி இம்மயில்களில் ஆலுமஞ்ஞையை அறிந்தருளென்றானென்க.

பீலி, இரண்டற்குமேற்றுக. (உ0எ)

237. நன்னெறிநூனயந்தானன்றுநன்றிது
கொன்னெறியிற்பெரியாயிதுகொள்கென
மின்னெறிபல்கலமேதகப்பெய்ததோர்
பொன்னறைதான்கொடுத்தான்புகழ்வெய்யோன்.

(இ - ள்.) வெய்யோன், இம்மயில் நூலினுடைய நீதிதானுயிருந்தது; இது மிக நன்றெனக்கூறி, தான் கொற்றொழிலிற்பெரியாய், இதுகொள்கவென்று பொன்னறையைக் கொடுத்தானென்க.

மின்னெறி-மின்னைக்கெடுக்கும். இந்நூலின் நீதியென்றுமாம். (உ0அ)

238. ஆடியன்மாமயிலூர்தியையவ்வழி
மாடமுங்காவுமடுத்தொர்சின்னாள்செலப்
பாடலின்மேன்மேற்பயப்பயத்தான்றுரந்
தோடமுறுக்கியுணர்த்தவுணர்ந்தாள்.

(இ - ள்.) ஆடுதலியன்றமயிலாகிய ஊர்தியைத் தேவிதான் பாட்டுப்போலே பையப்பைய மேன்மேற்றுரந்து மாடத்திலும் காவிலுமடுத்துச் சின்னாள்சென்றவளவிலே, ஒருநாள் அங்ஙனங்கற்பித்தவன் விசையுடனோடும்படி முறுக்கியுணர்த்த அவள் அதுவுமுணர்ந்தாளென்க. (உ0கூ)

வேறு.

239. பண்டவழ்விரலிற்பாவைபொறிவலந்திரிப்பப்பொங்கி
விண்டவழ்மேகம்போழ்ந்துவிசும்பிடைப்பறக்கும்வெய்ய

புண்டவழ்வேற்கட்பாவைபொறியிடந்திரிப்பத்தோகை
கண்டவர்மருளவீழ்ந்துகால்குவித்திருக்குமன்றே.

(இ - ள்.) கண்டவர் மருளும்படி பாவை விரலாலே பொறியை வலத்தே திரிப்ப அது பொங்கிப் போழ்ந்து பறக்கும்; அவன் அதனை இடத்தே திரிப்ப அது வீழ்ந்து காலைக் குவித்திருக்குமென்க.

பகைவர்க்குப் புண்செல்லுதற்குக் காரணமான வேல். கால்பரப்பிற் பொறிகெடும். (௨௪௦)

வேறு.

240. காதிவேல்வல்கட்டியங்காரனு
நீதியானிலங்கொண்டபினீதிநா
லோதினார்தமைவேறுகொண்டோதினான்
கோதுசெய்குணக்கோதினுட்கோதனான்.

காதிவேல்வல - பொருத வேலைவல்ல. உம்மை, இழிவுசிறப்பு. கோதுசெய்குணக்கோது - நூல்கள் பயனின்றாகக்கூறியகுணங்களிற் கோது; அஃதாவது செய்ந்நன்றிக்கேடு; உட்கோதனான் - அதிலேநிற்கின்ற பயனிலாதோன். இனிப் பயனின்மைசெய்கின்ற குணத்துக்கோதின தீக்குணங்கட்குள்ளாகிய செய்ந்நன்றிக்கேடுதன்னை ஒப்பானென்றுமாம்.

(இ - ள்.) கோதனாகிய கட்டியங்காரனும், அரசன் கொடுப்பநிலத்தை அடிப்படுத்தியபின்பு தருமநூலோதினாரெல்லாரையும் தனக்கு மாறாகக் கொண்டு ஒருமொழி கூறினானென்க. (௨௪௧)

241. மன்னவன்பகையாயதொர்மாதெய்வ
மென்னைவந்திடங்கொண்டஃதிராப்பகற்
றுன்னிநின்று செகுத்திடுநீயெனு
மென்னையான்செய்வகூறுமினென்னவே.

(இ - ள்.) மன்னவன்பகையாயதொருதெய்வம் என்னை இருப்பிடமாகக் கொண்டுவந்து அத்தெய்வம் இரவும்பகலும் நெருங்கிநின்று நீ செகுத்திடு என்னாநிற்கும்; அதற்கு யான் செய்யத்தகுவன யாவை; அவற்றை நீர் கூறுவீராகவென்று கூறினானென்க.

'என்ன' என்பிதனை, "உட்கினரா" (சீவக. ௨௪௨) என மேல்வருகின்றதனோடுமுடிக்க. (௨௪௨)

242. அருமைமாமணிநாகமழுங்கவோ
ருருமுவீழ்ந்தெனவுட்கினராவவன்
கருமங்காழ்த்தமைகண்டவர்தம்முளான்
றருமதத்தனென்பானிதுசாற்றினான்.

(இ - ள்) மணி அழுங்கும்படி நாகத்தின்மேலே இடிவீழ்ந்தாற்போலே அம்மொழியைக் கேட்டு அமைச்சர் உட்கினராக, அவர்களினுள்ளானாகிய தருமதத்தனென்கின்றவன் கண்டு இதனைப் பலரறியக்கூறினானென்க.

மணி அரசனுக்கும், நாகம் அமைச்சர்க்கும், 'செகுத்திடு' என்றசொல் இடிக்குமுவமை. காழ்த்தமை - கொல்லத்துணிந்தமை. 'ஆயவன்' என்ற பாடத்திற்கு அரசனுலாயவனென்க. (உசங)

243. தவளைக்கிண்கிணித்தாமரைச்சீறடிக்
குவளையேயளவுள்ளகொழுங்கணு
ளவளையேயமிர்தாகவவ்வண்ணலு
முவளகந்தனதாகவொடுங்கினுன்.

(இ - ள்.) அவ்வண்ணலும் சீறடியையுடைய கண்ணுளாகிய அவளையே அமுதாகக்கொண்டு அந்தப்புரமொன்றுமே தனக்குரித்தாக ஒழிந்தவற்றில் வேட்கையின்றிச் சுருங்கினுனென்றுனென்க.

ஏகாரமிரண்டும் தேற்றம். உம்மை, சிறப்பு. உவளகம் - ஒருபக்கமு மாம். (உசச)

244. விண்ணினோடமிர்தம்விலைச்செல்வது
பெண்ணின்னின்பம்பெரிதெனத்தாழ்ந்தவ
ணெண்ணமின்றியிறங்கியிவ்வையகந்
தண்ணந்தாமரையாளொடுந்தாழ்ந்ததே.

(இ - ள்.) விண்ணும் அமிர்தும் விலைபெறுவதொன்றுயிருக்கும் பெண்மை ; அதிலும் நினதரசின தின்பம் பெரிதுகாணென்று காரியங்கூறுதலின், நின்னிற்றுழ்ந்த நிமித்திகன் செல்வம்வேண்டுதலின்றித் துறவிலே வீழ்தலாலே இவ்வையகம் திருமகளுடனேகூடி நின்னிடத்தே தங்கிற்று ; இனி நினக்கு வேறொரு மனக்கவற்சியின்றென்றுனென்க.

'நின்னின்பம்' என்றது, அரசனைநோக்கி நிமித்திகன்கூறியது. 'பெண்ணினின்பமெனப்பெரிதாழ்ந்தவன்' என்பதும் பாடம். (உசரு)

245. தன்னையாக்கியதார்ப்பொலிவேந்தனைப்
பின்னைவௌவிற்பிறழ்ந்திடும்பூமக
ளன்னவன்வழிச்செல்லினிம்மண்மிசைப்
பின்னைத்தன்குலம்பேர்க்குநரில்லையே.

(இ - ள்.) தன்னை ஆக்கியவேந்தனைப் பின்னைக் கொல்வனுயின், தன் குலமும் திருவும் மண்மிசையினின்றும் பிறழும் ; அவன்வழியேயொழுகின், தன்குலத்தையும் செல்வத்தையும் மண்மிசையினின்றும் பெயர்ப்பாரில்லையென்றுனென்க.

பூமகள் - திரு. இஃது உலகியலாற்கூறினுன். தார்கெழுவேந்தனும் பாடம். (உசசா)

246. திலகநீண்முடித்தேவரும்வேந்தரு
மூலகமாந்தர்களொப்பவென்றோதுப
குலவுதார்மன்னர்க்கியானிதுகூறுவன்
பலவுமிக்கனர்தேவரிற்பார்த்திவர்.

(இ - ள்.) முடிகளுக்கு மேலாயமுடியையுடையதேவரில் அரசர் பல குணங்களால் மிக்காராயினும், உலகிலுள்ளார் தேவரும்வேந்தரும்ஒப்பரென்றுகூறுவர் ; அவர் அறியார் ; யான் மன்னர்க்குள்ளதொரு விசேடங்கூறுவேன் ; அதனைக் கேளென்றானென்க.

'கூறலென்' என்று பாடமாயின், ஒப்புக்கூறேனென்றானென்க. இது முதல், "மன்னவன்பகையாயதொர்மாதெய்வம்" (சீவக. உசக) என்றதனைக்குறித்துக்கூறுகின்றான். (உகஎ)

247. அருளுமேலரசாக்குமன்காயுமேல்
வெருள்ச்சுட்டிடும்வேந்தெனுமாதெய்வ
மருளிமற்றவைவாழ்த்தினும்வையினு
மருளியாக்கலழித்தலங்காபவோ.

மன்-மிகுதி. மருளி: இ, பகுதிப்பொருள்விகுதி. மற்று, வினைமாற்று. "தாமினிநோயும்" (பு. வே. வாகை. நூ) என்றாற்போல உம்மைமாற்றுக. ஆக்கல் அழித்தல், காலந்தோன்றாத வினைப்பெயர். ஆப, எதிர்காலத்திற்குரிய பகரத்தொடு அன்பெறாதுவந்த அகரவீற்றுப் பலவறிசொல். ஓகாரம், எதிர்மறை.

(இ - ள்.) வேந்தெனுந்தெய்வம் அருளுமேல் அரசாக்கும் ; காயுமேற் சுட்டிடும். மற்று மயக்கத்தையுடைய அத்தெய்வங்கள் தம்மை ஒருவன் வாழ்த்துவனாயின் அவனையருளியாக்கலும், தம்மையொருவன் வைவனாயின் அவனை அருளாதழித்தலும் அவைகட்கு அப்பொழுதே ஆகாவேயென்றானென்க. (உகஅ)

248. உறங்குமாயினுமன்னவன்றன்னொளி
கறங்குதெண்டிரைவையகங்காக்குமா
லிறங்குகண்ணிமையார்விழித்தேயிருந்
தறங்கள்வெளவவதன்புறங்காக்கலார்.

இறங்கு கண்ணிமையார் - தெய்வத்தன்மைகுலையுந் தேவரென்றது, மேலே, "எல்லேமூ வைந்துநாள்க ளுளவெனவிமைக்குங் கண்ணும்" (சீவக. அகo) என்பராதலின் ; கண்ணிமையார், தேவர்க்கு ஒரு பெயர்.

(இ - ள்.) மன்னவன் உறங்குமாயினும் அவனொளி உலகைக் காவாநிற்கும் ; தேவர் விழித்தேயிருந்தும் தம்மை நோக்கி உலகத்தார்செய்கின்ற அறங்களை அசுரர்வெளவ அதனைப் பரிகரிக்க மாட்டாரென்றானென்க.(உகக)

249. யாவராயினுநால்வரைப்பின்னிடிற்
றேவரென்பதுதேறுமிவ்வையகங்
காவன்மன்னவர்காய்வனசிந்தியார்
நாவினும்முரையார்நவையஞ்சுவார்.

(இ - ள்.) இழிந்தோராயினும் அவர் பின்னே நால்வரைத் திரியச் சொல்லுவாராயின், அவரைப்பால்வரைதெய்வமென்னுந்தன்மையை இவ்வை யகந்தேறுமாதலான் மன்னவர்களானவரும் நவையை அஞ்சுவர், அவர் காய்வனவற்றை உவமைகூறுமிடத்துங் கூறுர்; நினைப்பதுஞ்செய்யாரென்று னென்க. (உஉ௦)

250. தீண்டினூர்தமைத்தீச்சுடுமன்னர்தீ
யீண்டுதங்கிளையோடுமெரித்திடும்
வேண்டிலின்னமிர்துங்நஞ்சுமாதலான்
மாண்டதன்றுநின்வாய்மொழித்தெய்வமே.

(இ - ள்.) தீ தீண்டினூரையே சுடும் ; அதுபோலன்றி மன்னருடைய கோபம் தீங்குசெய்தவர்களைத் திரண்ட சுற்றத்தோடுஞ்சுடும் ; அவரது அருள், அவரைவிரும்புவாருண்டாயின் அமுதுபோல் உறதிபயக்கும்; அவரது செற்றம் அவரைவிரும்பாதார்க்கு நஞ்சுபோற் கரந்துநின்றுகொல்லும்; அ னமாதலால், நின்றெய்வம் என்றெய்வம்போல மாண்டதன்றென்று னென்க.

இதனுற் பகைவரையும் நட்டாரையும் நிகட்பையுங்கூறினுன். (உஉக)

251. வேலின்மன்னனைவிண்ணகங்காட்டிநின்
ஞாலமாள்வதுநன்றெனக்கென்றியேல்
வாலிதன்றெனக்கூறினன்வாண்ஞமற்
கோலைவைத்தன்னவொண்டிறலாற்றலான்.

(இ - ள்.) வாள்வலியாலே ஞமனுக்கு வல்லவனுயின் வந்துபார்க்கவெ ன்று ஓலைவைத்தாற்போன்ற திறலைநடத்துதலுடைய தருமதத்தன், மன் னனை வேலினுல்விண்ணேற்றி, இவ்வுலகையாள்வது எனக்கு நன்றென்றி யேல், அது நினக்கு நன்றன்று என்றுனென்க.

இவன் முன்னின்றுகூறிய அருமைநோக்கி, 'ஆற்றலான்' என்றுர். (உஉஉ)

வேறு.

252. குழற்சிகைக்கோதைசூட்டிக்கொண்டவனிருப்பமற்ருேர்
நிழற்றிகழ்வேலினுனைநேடியநெடுங்கணுளும்
பிழைப்பிலாட்புறந்தந்தானுங்குரவரைப்பேணல்செய்யா
திழுக்கினுரிவர்கள்கண்டாயிடும்பைநோய்க்கிரைகளாவார்.

(இ - ள்.) இடும்பைநோய்களுக்கு இரைகளாவார், தன்கணவனையொ ழிய வேறெருவனைத் தேடியவளும் தன்னைத்தப்பாத மனைவியை மனத்தாற் கொள்ளாதவிட்டவனும் குரவரைப் பேணுதல்செய்யாதே தப்பினுருமாகி இவர்கள்காணென்றுனென்க.

தரவு, "செலவினும் வரவினும்" (தொல். கிளவி. உஅ) என்னும் பொதச்சூத்திரத்தான்முடிக்க. குரவர் - அரசன், உவாத்தியாயன், தாய், தந்தை, தம்முன் எனஐவர். (உஉ௩)

253. நட்பிடைக்குய்யம்வைத்தான்பிறர்மனைநலத்தைச்சேர்ந்தான்
கட்டழற்காமத்தீயிற்கன்னியைக்கலக்கினுனு
மட்டுயிருடலந்தின்ருனமைச்சனுயரசுகொன்ருன்
குட்டநோய்நரகந்தம்முட்குளிப்பவரிவர்கள்கண்டாய்.

(இ - ள்.) நட்பிடத்து வஞ்சித்தவனும், பிறர்மனையாளைச் சேர்ந்தவனும், மிக்க அழல்போலும் காமத்தீயினுற் கன்னியை அத்தன்மைகுலைத்து வரையாதவனும், உயிரை அட்டு உடலைத்தின்றவனும், கொன்றவனுமாகிய இவர்கள் காண், இம்மையிற் குட்டநோயினும் மறுமையில் நரகத்தினும் அழுந்துவரென்ருனென்க.

கலக்குதல் - கைக்கிளைவகையாகிய இராக்கதமென்னுமணத்தில் தப்பியதாம். (உஉச)

254. பிறைய்துவளரத்தானும்வளர்ந்துடன்பெருகிப்பின்னுட்
குறைபடுமதியந்தேயக்குறுமுயறேய்வதேபோ
லிறைவனுத்தன்னையாக்கியவன்வழியொழுகினென்று
நிறைமதியிருளைப்போழுநெடும்புகழ்விளக்குமென்ருன்.

(இ - ள்.) பிறைவளர அதுதானும் உடனேவளர்ந்து பெருத்துப் பின்பு குறைதலுண்டான மதிதேய முயலும் தேயுமாறுபோலத் தன்னை இறைவனுக ஆக்கினவன் வழியிலே அவனேடும்பெருகி அவனேடும் தேய்ந்தொழுகுவனுயின், அவ்வொழுக்கம் இருளையோட்டுமதிபோலப் பழியையோட்டும்; புகழைவிளக்குமென்ருனென்க. (உஉரு)

255. கோணிலைதிரிந்துநாழிகுறைபடப்பகல்கண்மிஞ்சி
நீணிலமாரியின்றிவிளைவஃகிப்பசியுநீடிப்
பூண்முலைமகளிர்பொற்பிற்கற்பழிந்தறங்கண்மாறி
யாணையிவ்வுலகுகேடாமரசுகோல்கோடினென்ருன்.

(இ - ள்.) அரசன் தான்நடத்துமுறைமையிற் பிறழ்வனுயின், இவ்வுலகு, கோள் நிற்கும் நிலைகுலைந்து இராநாழிகை குறையப் பகற்பொழுதுகள் மிக்கு மாரியின்ருய் நிலம் விளைவுசுருங்கிப் பசிமிக்கு மகளிர் கற்பழிந்து அறச்சாலைகளுமின்றிக் கெடும்; அரசனுணையேயென்ருனென்க.

கட்டியக்காரன் கொலைகுறித்ததும் அரசன் அவற்கு அரசளித்ததும் உட்கொண்டு இரண்டுகவியும் பொதுவாகக்கூறினன். எச்சங்கள், செயப்படுபொருளன. (உஉசு)

256. தார்ப்பொலிதருமதத்தன்றக்கவாறுரைப்பக்குன்றிற்
கார்த்திகைவிளக்கிட்டன்னகடிகமழ்குவளைப்பைந்தார்
போர்த்ததன்னகலமெல்லாம்பொள்ளெனவியர்த்துப்பொங்கி
நீர்க்கடன்மகரப்பேழ்வாய்மதனன்மற்றிதனைச்சொன்னுன்.

குன்றிலே கார்த்திகைவிளக்கிட்டன்னவாகக் குவளைத்தார்போர்த்த அகலம். மகரவாய்போலும் பெரியவாய்.

(இ-ள்.) வாகைத்தாராற்பொலிந்த தருமதத்தன், அமைச்சர்க்கும் அரசர்க்கும் தக்கபடியைக் கூறினானாக; மதனன், தன் அகலமெல்லாம் கடுக வியர்த்துப் பொங்கி இதனைக் கூறினானென்க. (உஉஎ)

257. தோளினால்வலியராகித்தொக்கவர்தலைகள்பாற
வாளினாற்பேசலல்லால்வாயினாற்பேசதேற்றேன்
காளமேகங்கள்சொல்லிக்கருனையாற்குழைக்குங்கைகள்
வாளமர்நீந்தும்போழ்தின் வழுவழுத்தொழியுமென்றான்.

(இ-ள்.) பகைவரது தலைகள்சிதற வாளினால் வஞ்சினமுடித்தலல்லது வாயினாற்பேசுதலையறியேன்; தாங்கள் காளமேகங்கள்போல் இங்ஙனம் முழங்கக் கூறுதலாலே, கருனையோடே சோற்றைத்திரட்டுங்கைகள் அமர்க்கடலை நீந்தும்பொழுது மிகவேர்த்து வாள்வழுக்குமென்று கூறினானென்க.

தேற்றேன், "தேற்றாய் பெரும பொய்யே" (புறநா. ருக) என்றாற்போல்நின்றது. இக்கவி முன்னிலைப்புறமொழி. (உஉஅ)

258. நுண்முத்தமேற்றியாங்குமெய்யெலாம்வியர்த்துநொய்தின்
வண்முத்தநிரைகொணெற்றிவார்முரிபுருவமாக்கிக்
கண்ணெரிதவழவண்கைமணிநகுகடகமெற்றா
வெண்ணகைவெகுண்டுநக்குக்கட்டியங்காரன்சொன்னான்.

(இ-ள்.) கட்டியங்காரன், மெய்யெலாம் முத்தழுத்தினாற்போலக் கடிதின்வியர்த்து அவ்வியர்ப்புநிரைத்த நெற்றியிலே புருவமாக்கிக் கண் எரிதவழாநிற்கக் கடகத்தை உடைத்து வெடிசிரிப்பாக வெகுண்டுசிரித்து ஒரு வார்த்தைகூறினானென்க.

வார்புருவம் - நெடியபுருவம். (உஉக)

259. என்னலாற்பிறர்கள்யாரேயின்னவைபொறுக்குநீரா
ருன்னலாற்பிறர்கள்யாரேயுற்றவற்குறுதசூழ்வார்
மன்னன்போய்த்துறக்கமாண்டுவானவர்க்கிறைவனாக
பொன்னெலாம்விளைந்துபூமிபொலியயான்காப்பலென்றான்.

உற்றவன் - சச்சந்தன். உறுத - பொன்னுலகாளாமல் மண்ணுலகாளுதல். இனி, உற்றவன் - கட்டியங்காரனுமாம். விளைந்தபூமியும் பாடம்.

(இ-ள்.) நீ கூறிய கடியசொற்களைப்பொறுப்பார் என்னையொழிய வேறுயார், அதற்குயானே; தன்னைச் செறிந்தவற்கு உறுதகாரியங்களைச் சூழ்வார் உன்னையொழிய வேறுயார், அதற்குநீயே; இனி அமைக; வேந்தன் தேவர்க்கிறைவனாக, யான் பூமியெல்லாம் விளைந்து பொன்பொலியக் காப்பேனென்றானென்க. (உஙo)

260. விளைகபொலிகவஃதேயுரைத்திலம்வெகுளவேண்டா
களைகமெழுகமின்னேகாவலற்கூற்றங்கொல்லும்
வளைகயமடந்தைகொல்லுந்தான்செய்தபிழைப்புக்கொல்லு
மளவறுநிதியங்கொல்லுமருள்கொல்லுமமைகவென்றான்.

(இ - ள்.) நீ கூறியவாறே பூமியெல்லாம் விளைக ; பொன்னும் பொலிக ; நினதுநினைவே கூறிற்றிலேம் ; அவற்றிற்கு நீவெகுளவேண்டா ; இப்பொழுதே களைவேமாக எழுவேம் ; இதற்குக்காரணம் யாதெனின், காவலனைக்கொல்லுங்கூற்றம், நிலமகளாய்க்கொல்லும் ; பிழைப்பாய்க்கொல்லும் ; நிதியாய்க்கொல்லும் ; அருளாய்க்கொல்லும் ; ஆதலால், அவனுக்கு அக்கொலை அமைவதாகவென்றானென்க.

இனி, 'அஃதேலுரைக்கிலம்' என்பது பாடமாயின், நின்கருத்து அதுவாயின், வேறு கூறுகின்றிலேமென்க. இனி, கூற்றமும் கயமடந்தைமுதலியனவும் காவலனாகிய கட்டியங்காரனைக் கொல்லுமென்று உட்கொண்டு, 'இனி வார்த்தையமைக' என்றானென்பாருமுளர். 'விளைகபொலிக' ஒரு வழக்கென்பாருமுளர். (உருக)

261. நிலத்தலைத்திருவனுடனீப்பருங்காதல்கூர
முலைத்தலைப்போகமூழ்கிமுகிழ்நிலாமுடிகொள்சென்னி
வெலற்கருந்தானைநீத்தவேந்தனைவெறுமைநோக்கிக்
குலத்தொடுங்கோறலெண்ணிக்கொடியவன்கடியசூழ்ந்தான்.

(இ - ள்.) திருவனுளிடத்தே தனதுகாதல்கூருதலின், அவளது முலைப்போகத்தே அழுந்தித் தானையைநீத்த சென்னியையுடைய வேந்தனை வெறுமையைப்பார்த்துப் பிள்ளையுடனேகொல்லக்கருதி, அதற்குவேண்டும் கடிய தொழில்களைக் கொடியவன் சூழ்ந்தானென்க.

நிலத்தலைத்திரு, இல்பொருளுவமை. (உருஉ)

262. கோன்றமர்நிகளமூழ்கிக்கோட்டத்துக்குரங்கத்தன்கீ
ழேன்றநன்மாந்தர்க்கெல்லாமிருநிதிமுகந்துநல்கி
யூன்றியநாட்டையெல்லாமொருகுடைநீழல்செய்து
தோன்றினன்குன்றத்துச்சிச்சுடர்ப்பழிவிளக்கிட்டன்றே.

(இ - ள்.) அரசன்சுற்றம் விலங்கிலேமூழ்கிச் சிறையிலேத்தாழத் தன் கீழ்மையையேற்ற மாந்தர்க்கெல்லாம் நிதியைநல்கி நாட்டையெல்லாம் குடையால் நீழல்செய்து ஊன்றுதற்குக் குன்றத்திலிட்டவிளக்குப்போலே பழியாகிய விளக்கையிட்டுத் தோன்றினனென்க.

கீழ் - இடமுமாம். நன்மாந்தர், இகழ்ச்சி. ஊன்றிய, பெயரெச்சமுமாம். (உருங)

263. பருமித்தகளிறுமாவும்பரந்தியறேரும்பண்ணித்
திருமிக்கசேனைமூதூர்த்தெருவுதொறெங்குமீண்டி

யெரிமொய்த்தவாளும்வில்லுமிலங்கிலைவேலுமேந்திச்
செருமிக்கவேலினான்றன்றிருநகர்வளைந்ததன்றே.

(இ - ள்.) சேனையானது, களிறுமுதலியவற்றைப்பண்ணி, வாள்முதலியவற்றையேந்தி, தெருவுதோறும் ஈண்டி, வேலினனது நகரை எங்கும் வளைந்ததென்க.

உள் நிற்கும் ஊர்திகளும் உட்படவளைந்து அந்தப்புரத்தினுட் புகுதாது நின்றதுகண்டு வாயிலோன் உணர்த்துகின்றமை மேற்கூறுகின்றார். (உ௬௪)

264. நீணிலமன்னபோற்றிநெடுமுடிக்குருசில்போற்றி
பூணணிமார்பபோற்றிபுண்ணியவேந்தபோற்றி
கோணினைக்குறித்துவந்தான்கட்டியங்காரனென்று [லான்.
சேணிலத்திறைஞ்சிச்சொன்னான்செய்யகோல்வெய்யசொல்

போற்றி, பரிகாரம். பூணணிமார்ப - பகைவர் கவசமணிவதற்குக் காரணமானமார்ப ; "அரும்பூண அவெறிந்தாங்கு" (சீவக. உ௪௫) என்பர் மேலும். போற்றி, நான்குகூறியது நிலத்திற்கும் குலத்திற்கும் வீரத்திற்கும் தருமத்திற்கும் நின்னையொழிய இல்லையென்று இரங்கினன்.

(இ-ள்.) வெய்யசொல்லைக்கூறுதலுடைய வாயிலோன், போற்றியென்று கூறி இறைஞ்சி, கட்டியங்காரன் நின்னைக் கொலைகுறித்துவந்தானென்று கூறினனென்க.

'கோண்' எனின் மாறுபாடாம். (உ௬௫)

265. திண்ணிலைக்கதவமெல்லாந்திருந்துதாழுறுக்கவல்லே
பண்ணுகபசும்பொற்றேரும்படுமதக்களிறுமாவுங்
கண்ணகன்புரிசைகாக்குங்காவலரடைகவென்றான்
விண்ணுருமேறுபோன்றுவெடிபடமுழங்குஞ்சொல்லான்.

வல்லேயென்றது, எவ்விடத்தும் கூட்டுக. வெடிபட - வெடித்தலுண்டாக.

(இ - ள்) சொல்லான், கதவமெல்லாம் தாழிடுக ; தேர்முதலியவற்றைப் பண்ணுக ; புரிசையிலே அதுகாக்கும் காவலரடைகவென்றானென்க.

இஃது, இராசதத்தாற்கூறினன். (உ௬௬)

266. புலிப்பொறிப்போர்வைநீக்கிப்பொன்னணிந்திலங்குகின்ற
வொலிக்கழன்மன்னருட்குமுருச்சுடர்வாளைநோக்கிக்
கலிக்கிறையாயநெஞ்சிற்கட்டியங்காரனம்மேல்
வலித்ததுகாண்டுமென்றுவாளெயிறிலங்கநக்கான்.

(இ- ள்.) புலியினது வரியையுடைய கவசத்தைத் தவிர்த்து மன்னரஞ்சும் வாளைநோக்கி வலித்ததுகாண்டுமென்று மிகச் சிரித்தானென்க.

இது, வீரத்திற்கண் எள்ளுதலாற் பிறந்தநகை. ஊர்திகளின்மையின், கவசநீக்கினனென்க. போர்வை - உறையுமென்ப. (உ௬௭)

**267.** நங்கைநீடக்கல்வேண்டுநன்பொருட்கிரங்கல்வேண்டா
எங்குனீயன்றுகண்டகனவெலாம்விளைந்தவென்னக்
கொங்கலர்கோதைமாழ்கிக்குழைமுகம்புடைத்துவீழ்ந்து
செங்கயற்கண்ணிவெய்யதிருமகற்கவலஞ்செய்தாள்.

வேண்டுமென்பது, ஒருவியங்கோள் ; "ஓதல்வேண்டும்". (குறள். சுகூ) என்றாற்போல. நன்பொருள் - பிள்ளை. எல்லாமென்றான், பிள்ளையார் ஆக்கங்கருதி உயிர்சிற்றற்கு. தெளிவுபற்றி, 'விளைந்த' என்று இறந்தகாலத்தாற்கூறினான்.

(இ - ள்.) நங்காய், நீ இரங்குதல்வேண்டா; பிள்ளைகாரணத்தாற் போவாயாக ; அஃது என்னெனின், நீ அன்று கங்குலிற்கண்ட கனவெல்லாம் பயன்பட்டனகாண் என்றுகூற, கயற்கண்ணி, கோதைபோல மாழ்கி வீழ்ந்து தன்பிள்ளைக்கு வருத்தஞ்செய்தாளென்க. (உகூஅ)

**268.** மல்லலைத்தெழுந்துவீங்கிமலைதிரண்டனையதோளா
னல்லலுற்றழுங்கிவீழ்ந்தவமிர்தமன்னாளையெய்திப்
புல்லிக்கொண்டவலநீக்கிப்பொம்மல்வெம்முலையினாட்குச்
சொல்லுவானிவைகள்சொன்னான்சூழ்கழற்காலினானே.

(இ - ள்.) மற்றொழிலை வருத்தி எழுந்து நீண்டுமலைதிரண்டனையதோளானாகிய.கழற்காலினான், அல்லலுற்றுக் கெட்டுவீழ்ந்த அமிர்தமன்னாளைச் சேர்ந்து, தழுவி அவலத்தைநீக்கி அவளுக்கு முன்பு அன்பிற்றலைப்பிரியாதன கூறுகின்றவன் இப்பொழுது அவ்வன்பிற்றலைப்பிரிந்தன கூறினானென்க.

அமுதயின்றார்க்கு நாளுலந்தால், அது வேறுபாடு தோற்றுவிக்குமாறு போல் இவற்கும் வேறுபாடுதோற்றுவித்தலின், 'அமிர்தமன்னாள்' என்றார்.()

**269.** சாதலும்பிறத்தலுந்தம்வினைப்பயத்தினாகு
மாதலுமழிவுமெல்லாமவைபொருட்கியல்புகண்டாய்
நோதலும்பரிவுமெல்லாநுண்ணுணர்வின்மையன்றே
பேதைநீபெரிதும்பொல்லாய்பெய்வளைத்தோளியென்றான்.

(இ - ள்.) பேதாய், தோளி, சாதல்தானும் பிறத்தல்தானும் ஆதல்தானும் அழிதல்தானுமெல்லாம் தம்வினைகளின் பயத்தாலுண்டாம் ; ஆண்டுச் சாதற்கும் அழிதற்கும் நோதலும், பிறத்தற்கும் ஆதற்கும் அன்புறுதலும் எல்லாம் அறிவின்மையன்றே; இங்ஙனமாதலின், நீ பெரிதும் அறிவிலியாயிருந்தாய்; அவ்வினையுறுதல் பொருட்கு இயல்புகாணென்றானென்க. (உசா0)

**270.** தொல்லைநம்பிறவியெண்ணிற்றொடுகடன்மணலுமாற்றா
வெல்லையவவற்றுளெல்லாமேதிலம்பிறந்துநீங்கிச்
செல்லுமக்கதிகடம்முட்சேரலஞ்சேர்ந்துநின்ற
வில்லினுளிரண்டுநாளைச்சுற்றமேயிரங்கல்வேண்டா.

அவற்றுள் எல்லாம்பிறந்துமேதிலமெனமாற்றுக. இரண்டுநாள் - சிறிது நாளென்னும்பொருட்டு.

(இ - ள்.) நம்முடைய பழைய மானிடப்பிறப்பை எண்ணின், வெண் மணலும் உரையிட்டப்போதாத எல்லையுடைய; அப்பிறவியுளெல்லாம் பிறந் தும் வேறுபட்டேம்; இனி இவ்வுடம்பைநீக்கிச் செல்லுங்கதியிலும் சேரேம்; ஆதலின், இப்பொழுதுசேர்ந்துநின்ற இரண்டுநாளை உறவை உறவாகக்கருதி அதற்கு இரங்கவேண்டாவென்றானென்க. (உசக)

271. வண்டுமொய்த்தரற்றும்பிண்டிவாமனூல்வடித்தநுண்ணூ
லுண்டுவைத்தனையநீயுமுணர்விலாநீரையாகி
விண்டுகண்ணருவிசோரவிம்முயிர்த்தினையையாத
லொண்டொடிதகுவதன்றாலொழிகநின்கவலையென்றான்.

இறைவன் அருளால் வண்டுமொய்த்தது. நூல், ஆகுபெயர். அனைய, நெஞ்சறிபொருண்மேற்று.

(இ-ள்.) ஒண்டொடி, வாமனூற்சொல்லப்பட்ட நூற்பொருளை உணர்ந்து வைத்து அவ்வாறுணர்வுடையநீயும் உணர்வில்லாததன்மையையாய் எனது மொழியை வேறுபட்டுக் கண்ணீர்வீழ விம்மியுயிர்த்து இத்தன்மையையா தல் தகாது; இவ்வருத்தத்தைத் தவிர்கவென்றானென்க. (உசஉ)

272. உரிமைமுன்போக்கியல்லாலொளியுடைமன்னர்போகார்
கருமமீதெனக்குமூர்திசமைந்ததுகவலவேண்டா
புரிநரம்பிரங்குஞ்சொல்லாய்போவதேபொருண்மற்றென்று
னெரிமுயங்கிலங்குவாட்கையேற்றிளஞ்சிங்கமன்னன்.

(இ - ள்.) வாளைப்பிடித்த கையினையுடைய ஏறுகிய சிங்கத்தையொப் பான், நரம்பு இரங்குதற்குக்காரணமானசொல்லாய், மன்னர் உரிமையை முன்னேபோக்கியல்லது தாம்போகார்; ஆதலால், இப்போக்கு எனக்கும் கரு மம்; உனக்குங்கருமம்; ஏறுதற்கு ஊர்தியுஞ்சமைந்தது; இனிக் கவலவேண் டா; போவதே கருமமென்றானென்க.

பிள்ளையாற்கதிபெறுதலும் பகைவேறலுங்கருதி, இருவர்க்கும் கருமமெ ன்றான். கவற்சி - இருதலைக்கொள்ளியிடத்து எறும்புபோற் கணவனையும் புதல்வனையுநோக்கிக் கவலுதல். (உசங)

273. என்புநெக்குருகியுள்ளமொழுகுபுசோரயாத்த
வன்புமிக்கவலித்தாற்றாவாருயிர்க்கிழத்திதன்னை
யின்பமிக்குடையசீர்த்தியிறைவனதாணைகூறித்
துன்பமில்பறவையூர்திசேர்த்தினன்றுணைவிசேர்ந்தாள்.

உருகி, உருக. அனந்தசுகமிகுதலாலே சீர்த்தியையுடைய அருகன். அவனாணை: "ஓ ணமொ அரஹந்தாண்" (ஓம் ணமோ அரஹந்தாணம்) என்னும்மொழி. கூறி - கூற. துன்பமில்பறவை - தீதற்றபறவை.

(இ-ள்.) என்புருகும்படி உள்ளம் ஒழுகாநின்றுசோரப் பிணித்த அன்பு மிகுதலால் ஆற்றாத உயிர்போலுங்கிழத்தியைப் பறவையாகிய ஊர்தியைச் சேர்த்தினான்; அத்துணையும் செயலற்று இறைவனது ஆணைகூறச் சேர்ந்தானென்க. (உசச)

வேறு.

274. நீருடைக்குவளையினெடுங்கணின்றவெம்பனி
வாருடைம்முலைமுகந்நனைப்பமாதர்சென்றபின்
சீருடைக்குருசிலுஞ்சிவந்தழன்றோர்தீத்திரள்
பாருடைப்பணிக்கடல்சுடுவதொத்துலம்பினான்.

உடைம்முலை: மகரவொற்று வண்ணத்திற்கடுத்தது. பாரை அகத்தடக்கினகடலென்றது ஊழிக்காலத்துநீரை. தான் உண்டாக்கினபடையைத் தான் அழிக்கின்றதன்மைபற்றி, நெருப்பும் நீரும் உவமைகூறினார்.

(இ - ள்.) மாதர், நீரறாததொரு குவளைபோல வெய்யநீர் இடையறாது நின்ற கண் வாருடைகின்ற முலைமுகத்தை நனைப்பப் போனபின்பு, குருசிலும் நெஞ்சு அழன்று கோபித்து மடங்கற்றீ கடலைச் சுடுவதொத்து முழங்கினானென்க. (உசரு)

275. முழைமுகத்திடியரிவளைத்தவன்னமள்ளரிற்
குழைமுகப்புரிசையுட்குருசிறானகப்பட
விழைமுகத்தெறிபடையிலங்குவாட்கடலிடை
மழைமுகத்தகுஞ்சரம்வாரியுள்வளைத்தவே.

குழைமுகமளிர் காக்கும்புரிசையெனவே அந்தப்புரமாயிற்று; "ஆடவர்குறுகா வருங்கடி வரைப்பின்" (நெடுநல். க0எ) என்றார்பிறரும். இழைமுகத்தெறிதல் - நூல்பிளக்கவெறிதல். மழை - மதம்.

(இ- ள்.) முழையிடத்தே அரியைவளைத்த குஞ்சரத்திரள்போலஅந்தப்புரத்தே குருசில் அகப்படும்படி வேலையும்வாளையுமுடைய மள்ளராகியகடலினிடையிற் குஞ்சரங்கள் செண்டுவெளியிலே வளைத்தவென்க.

அரியை யானைவளைத்தல், இல்பொருளுவமம். (உசசு)

276. அயிலினிற்புனைந்தவாளழன்றுருத்துரீஇயுடன்
பயில்கதிர்ப்பருமணிப்பன்மயிர்ச்செய்கேடகம்
வெயிலெனத்திரித்துவிண் வழுக்கிவந்துவீழ்ந்ததோர்
கயிலணிக்கதிர்நகைக்கடவுளொத்துலம்பினான்.

விலையுலந்துவீழ்ந்ததொருகடவுள் உவமையாயிற்று, இவனும் இங்ஙனம் நிற்றலின். கயில் - மூட்டுவாய். நகை - முத்துவடம்.

(இ - ள்.) கூர்மையாற்புனைந்தவாளை, நெஞ்சழன்றுகோபித்து உருவி அதனுடனே கேடகத்தையும் ஞாயிற்றைத்திரிக்குமாறுபோலத் திரித்துக்கடவுளையொத்து முழங்கினானென்க. (உசஎ)

277. மாரியிற்கடுங்கணைசொரிந்துமள்ளரார்த்தபின்
வீரியக்குருசிலும்விலக்கிவெங்கணைமழை
வாரியிற்கடிந்துடனகற்றமற்றவன்படைப்
பேரியற்பெருங்களிறுபின்னிவந்தடைந்தவே.

(இ-ள்.) மள்ளர் கணையை மாரியிற்சொரிந்து ஆர்த்தபின்பு, குருசிலும் அக்கணைமழையைவிலக்கிச் செண்டுவெளியில்நின்று நாற்படையையும் சேரக் கெடுத்துப்போகப் பேரணியினின்ற பெருங்களிறுகள் செற்றி வந்துசேர்ந்தன வென்க.

தம்பேர் உலகில் இயலுதலையுடைய பெரிய களிறு. (உ௭அ)

278. சீற்றமிக்கமன்னவன்சேர்ந்தகுஞ்சரந்நுதற்
கூற்றருங்குருதிவாள்கோடுறவழுத்தலி
னூற்றுடைநெடுவரையுருமுடன்றிடித்தென
மாற்றரும்மதக்களிறுமத்தகம்பிளந்தவே.

கூற்றரு - சொல்லுதற்கரிய. ஊற்று-அசும்பு.

(இ-ள்.) சச்சந்தன், கோடுறத் தன்னைச்சேர்ந்த குஞ்சரங்களின் நுதலிலே வரைக்கண் உருமிடித்தென வாளையழுத்தலின், அக்களிறுகள் மத்தகம் பிளந்தனவென்க. (உ௭௯)

279. வேன்மிடைந்தவேலியும்பிளந்துவெங்கண்வீரரை
வான்மயிர்ச்செய்கேடகத்திடித்துவாள்வலையரிந்
தூனுடைக்குருதியுள்ளுழக்குபுதிரிதரத்
தேன்மிடைந்ததாரினான்செங்களஞ்சிறந்ததே.

வேலி, ஆகுபெயராதலிற் பிரித்தென்னாது, 'பிளந்து' என்றார். தன்னை ஒறுத்தவரைப் பரிசையாலிடித்து. வலையென்றார், தப்பாமற்சூழ்தலின்.

(இ - ள்.) பிளந்து இடித்து அரிந்து திரிதலால் தாரினான்களம் சிறந்ததென்க.

இத்துணையும் இவன்வெற்றியாதலின், இவன்களமென்றார். (உ௮௦)

வேறு.

280(க)உப்புடையமுந்நீருடன்றுகரைகொல்வ
தொப்புடையதானையுளொருதனியனாகி
யிப்படியிறைமகனிருங்களிறுநூற
வப்படையுளண்ணலுமழன்றுகளிறுந்தி.

281(உ)நீடகமிருந்தநிழனேமிவலனேந்திக்
கேடகமறுப்பநடுவற்றரவுசேர்ந்தாங்
கோடுகதிர்வட்டமென்வொய்யெனவுலம்பிக்
காடுகவர்தீயின்மிகைசீறுபுவெகுண்டான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) தனக்கு வேலியாகிய கரையைக் கடல் தானே கொல்லுகின்றாற் போலத் தமக்குக் காவலாகிய அரசனைப் படை தாமே கொல்லுகின்றதென்றார். ஒருதனி - ஒப்பிலாத தனி.

(உ) நீடகமிருந்தநேமி - பகையின்மையின் நெடுநாள் உள்ளேயிருந்த சக்கரம். நடுவற்று - பாதியில்லையாய். சீறுதல் - செற்றம்.

(இ - ள்.) இறைவனுகிய மகன் தானையுள் தனியனாய்நின்று முற்கூறிய வாறே களிற்றைஊற அதற்கு அழன்று கட்டியங்காரனும் களிற்றைஊந்திச் சக்கரத்தையேந்தி அரவுசேர்தலால் நடுவற்று விசும்பிலே ஓடுகின்ற கதிர் வட்டமெனக் கேடகத்தையறுத்தலிற் சச்சந்தன் உலம்பி அவன்மிகையைச் சீறுகின்று தீப்போல வெகுண்டானென்க. (உருக-உ)

282.(க)நெய்ம்முகமணிந்துநிழறங்கியழல்பொங்கி
வைம்முகமணிந்தநுதிவாளழலவீசி
மைம்முகமணிந்தமதயானைதவ்நூறிக்
கைம்முதறுணிந்துகளிறுழவதுநோனுன்.

283.(உ)மாலைநுதிகொண்டுமழைமின்னெனவிமைக்கும்
வேலைவலனேந்திவிரிதாமமழகழியச்
சோலைமயிலார்கடுணைவெம்முலைகடுஞ்சுங்
கோலவரைமார்பினுறுகூற்றெனவெறிந்தான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) நுதி-நுனி. கருமையையுடையமுகத்தே பட்டமணிந்த மதயானை. தவ - மிக. முதல் - அடி.

(உ) விரிதாமம் அழகழிய-இவன்சூடும் வாகைமாலைமேல் அழகுகெட்டுப் போக. மயிலின்றன்மையாரென்ற பன்மையால், தேவியர் பலராயிற்று. முலைகடுஞ்சுமார்பு' எனவே முன் தனக்கு நிகராக எறிவாரின்மை தோன்றிற்று ; "மகளிர் மலைத்த லல்லது மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப" (புறநா. க0) என்றார் பிறரும். வேல்வடிவுகொண்டு உறுவதொரு கூற்றென. யானை வீழாநிற்க எறிந்தான்.

(இ - ள்.) அம்மனம்வெகுண்டு வாளைஓச்சி யானையை வெட்டுதலாலே அது கைதுணிந்துவீழாநிற்க, அதனைக் கட்டியங்காரன்பொறுனய் வேலையேந்தி அழகுஅழியா அவன்மார்பிலே கூற்றென எறிந்தானென்க. (உருந-ச)

வேறு.

284. புண்ணிடங்கொண்டவெஃகம்பறித்தலிற்பொன்னனுர்தங்
கண்ணிடங்கொண்டமார்பிற்றடாயினகாதுவெள்வேன்
மண்ணிடங்கொண்டயானைமணிமருப்பிடையிட்டம்ம
விண்ணிடமள்ளர்கொள்ளமிறைக்கொளிதிருத்தினுனே.

தடாயினவேல்: தடாயின, பெயரெச்சம். அம்ம, அசை.

(இ - ள்.) மார்பிலே தைத்துநின்றவேல் பறித்தலின், அம்மார்பிலே பொருதவளைந்த அதனைப் பட்டுவீழ்ந்த யானையின் மருப்பிடையிலேயிட்டு மள்ளர்விண்ணிடங்கொள்ளும்படி அவ்வளவுக்குண்டாகிய இளக்கத்தைப் போக்கினானென்க. (உ௫௫)

285. ஏந்தல்வேற்றிருத்தயானையிரிந்தனவெரிபொற்கண்ணி
நாந்தகவுழவர்நண்ணார்கூற்றெனநடுங்கிமள்ளர்
சாய்ந்தபின்றறுகணாண்மைக்கட்டியங்காரன்வேழங்
காய்ந்தனன்கடுகவுந்திக்கப்பணஞ்சிதறினானே.

(இ-ள்.) ஏந்தல் வேலைத்திருத்துதலாலே மள்ளர் நடுங்கிச்சாய்ந்தபின், யானை இரிந்தன; உழவர் அணுகார்; அதுகண்டு கட்டியங்காரன் அவர்களைக் காய்ந்தனனாய் வேழத்தைச்செலுத்திக் கப்பணத்தைச்சிதறினானென்க.

நாந்தகம் - வாள். நண்ணார், முற்று. கப்பணம் - இரும்பால் ஆனை நெருஞ்சிமுள்ளாகப்பண்ணியது. இதனான், இவன்வேறொருயானையை ஏறினமையுணர்க. (உ௫௬)

286. குன்றமார்பரிந்துவெள்வேற்குமிமாமஞ்ஞையூர்ந்து
நின்றமால்புருவம்போலநெரிமுரிபுருவமாக்கிக்
கொன்றவன்வேழம்வீழ்ப்பமற்றுமோர்களிற்றிற்பாய்ந்து
நின்றமாமள்ளர்க்கெல்லாநீண்முடியிலக்கமானான்.

ஊர்தல்-ஈண்டுப் போதன்மேற்று; "வானூர்மதியம்" (நாலடி. ௧௨௫) போல. மால் புருவம்போல - மால் புருவம்நெரித்தாற்போல. நீண்முடி, ஆகுபெயர்.

(இ - ள்.) வேலாலே குன்றினது மார்பைப்பிளந்து மயில் போகப்பட்டு நின்ற முருகனைப்போலப் புருவமாக்கிக் கட்டியங்காரனதுவேழத்தை முன்பு திருத்தினவேலாலே கொன்றுவீழ்ப்ப; அவன் மற்றும் ஒருகளிற்றிற்பாய்தலாலே மள்ளர்க்கெல்லாம் சச்சந்தன் இலக்காயினானென்க. (உ௫௭)

வேறு.

287. நஞ்சுபதிகொண்டவளநாகணையினன்ற
னெஞ்சுபதிகொண்டுபடைமூழ்கநிலம்வீசு
மஞ்சுதவழ்குன்றனையதோளொசிந்துமாத்தாட்
குஞ்சரங்களூறிக்கொலைவாளொடித்துநின்றான்.

நாகணையினன் - சச்சந்தன். ஒசிந்து - ஒசிய.

(இ - ள்.) நாகணையினன்றன் நெஞ்சைப் பதியாகக்கொண்டு மள்ளர் படைகள் மூழ்காநிற்க, தானும் குஞ்சரங்களைத் தோளொசியவெட்டி வாளை ஒடித்துநின்றானென்க.

நிலத்திலுள்ளார்க்குக்கொடுக்குந்தோள், ஆகுபெயர். இனி, 'மதி கொண்ட' என்பது பாடமாயின் திருமால் உட்கொண்டசக்கரமென்க.

தோளசைந்தும் பாடம். (உ௫௮)

288. ஆரமருளாண்டகையுமன்னவகைவீழும்
வீரரெறிவெம்படைகள்வீழவிமையானுய்ப்
பேரமருளன்றுபெருந்தாதையொடும்பேராப்
போரமருணின்றவிளையோனிற்பொலிவுற்றான்.

வீழும் - விரும்பும்.

(இ - ள்.) ஆண்டகையும் அமரிலே முற்கூறியவாறே விரும்பும் வீரரெறிகின்ற படைகள்வீழ இமையானுய்,பாரதத்திற் புறங்கொடாமற் பொருகின்ற போரிலே தன்னனோடே மாறுபட்டுநின்ற அபிமன்னுவைப்போலே பொலிவுற்றானென்க.

இனி 'நீடும்' பாடமாயின், நெடும்பொழுதாம் ; "நீடுகின்றனன்" என்றார் பிறரும். (௨௫௧).

289. பேரழ்ந்துகதிர்நேமியொடுவேல்பொருதழுந்தத்
தாழ்ந்துதறுகண்ணிணைகடீமழலவிழியா
வீழ்ந்துநில்மாமகடன்வெம்முலைஞெமுங்க
வாழ்ந்துபடுவெஞ்சுடரினாண்டகையவிந்தான்.

ஆழ்ந்து - மறைந்து. ஆண்டகைமை, குணப்பண்பு ; "ஆண்டகைக் குரவிர்" (சீவக. ௩௧௩) போல. அவிதல் - குறைதல் ; "திரைபாடவிய" (பரி. ௪ ; அகநா. ௨௬௦) என்றாற்போல. பண்பியாக்கிப் பட்டானென்னின், "பாருவி" (சீவக. ௨௬௧) என்னுங்கவி வேண்டாவாம். இவன் பகைவர் முகநோக்கி வீழ்ந்தமையின், பிள்ளையார் பின்பு பகைவென்றார்.

(இ - ள்.) சக்கரத்தோடே வேலும்போழ்ந்து தம்மிற் பொருது அழுந்துதலாலே மெய்வலிகுறைந்து தறுகண்மையையுடைய கண்கள் அழலவிழித்து முலை ஞெமுங்க வீழ்ந்து சுடர்போல் ஆண்டகைமை குறைந்தானென்க. ()

வேறு.

290. தோய்ந்தவிசும்பென்னுந்தொன்னாட்டகந்தொழுதுபுலம்பெய்திமைந்தர்மாழ்க, வேந்துமுலையாரினைந்திரங்கக்கொடுங்கோலிருள்பரம்பவேஎபாவ; மாய்ந்தகுருகுலமாமாழ்கடலினுண்மூளைத்தவறச்செங்கோலாய்கதிரினை, வேந்தர்பெருமானைச்சச்சந்தனைமந்திரிமாநாகமுடன்விழுங்கிற்றன்றே.

கடலாங்குருகுலம், சிறப்புநிலைக்களமாக முதலொடுமுதலேவந்த மெய்யுவமம். மந்திரிமாநாகம், செழக்கிடுபொருள் நிலைக்களமாக முதலொடுமுதலே வந்த வினையுவமம். தொல்காப்பியனார் சொல்லும்பொருளும் உடன் ஆராய்தலின், உருவகவுவமையென்றேகூறினார். செங்கோலையுடையகதிர், இல்பொருளுவமம். உடன்விழுங்கிற்று - அரசவுரிமையெல்லாம் கொண்டான். நாகத்திற்கேற்ப 'விழுங்கிற்று' என்றார்.

(இ - ள்.) மக்கள்செறிந்த விசும்பென்றுகூறும் ஏமாங்கதத்தே சான்றோர் மயங்க, கற்புடைமகளிர் இரங்க, கொடுங்கோலாகிய இருள்பரவ,

பெருமானைச் சச்சந்தனைக் கடல்போலும் குருகுலத்தே முளைத்த கதிர்போல் வானை நாகம்போலும்மந்திரி விழுங்கினன் ; ஏஎபாவமென்க.

ஏ எ, குறிப்புமொழி. இதனால், அவன் ஆண்டகைமை குறைந்ததற்கு இரங்கினர். (உசுக)

291. பாலருவித்திங்கடோய்முத்தமாலைப்பழிப்பினெடுங்குடைக் கீழ்ப்பாய்பரிமான்றேர்க், கோலருவிவெஞ்சிலையான்கூர்வாளோடு மணிக்கேடகமுமறமுமாற்றி, வாலருவிவாமனடித்தாமரைமலர்சூடி மந்திரமென்சாந்துபூசி, வேலருவிக்கண்ணினர்மெய்காப்போம்ப வேந்தன்போய்விண்ணோர்க்குவிருந்தாயினனே.

பாலருவி - பால்போலுங்கிரணம். தோய், உவமவுருபு; புறனடையா கொள்க. வாலருவி - சுக்கிலத்தியானம். வேலருவி - வேலொழுங்கு. கண்ணி னர் காவற்றொழிலை ஈண்டுப் பேணப்போய்:

(இ - ள்.) குடைநிழற்கண்ணே தேர்மீதுநின்று கோல் இடையறும வழங்கும் சிலையானகியவேந்தன், அவை உதவாமையின், வாளும் கேடகமு மறமும் துணையாகப்பொருது, அவற்றைப்போக்கி வாமனுடைய அருவி யாடிச் சாந்தைப்பூசி மலரையொத்த அடியைச்சூடிப் போய்த் தேவர்க வழிபடுதற்குப் புதியனாயினனென்க.

உயிர்நீங்குகின்றபொழுது தியானம்வந்து உதவுதலின், வீடுபெற் னென்க ; சுவர்க்கமுமாம். (உசுஉ)

292. செந்தீக்கருந்துளையதீங்குழல்யாழ்தேந்தேமென்னுமண முழவமுந், தந்தாங்கிளையார்மெல்விரல்கடீண்டத்தாந்தாமென்றிர குந்தண்ணுமைகளு, மந்தீங்கிளவியாரைஞ்னூற்றுவரவைதுறைபே யாடலரம்பையன்ன,ரெந்தாய்வெறுநிலத்துச்சேர்தியோவென்றினை திரங்கிப்பள்ளிபடுத்தார்களே.

செந்தீயாற் கருந்துளையவான குழல்கள். தேந்தேம், தாந்தாம்: அநுக ணம். இளையார் - நிருத்த கீத வாச்சியத்திற்குரியமகளிர். 'கிளவியாரைஞ் னூற்றுவர்' என்றார், அகப்பரிவாரம் ஐஞ்ஞூற்றுவரேயென்றற்கு. மேலு நால்வரையொழிந்த தோழர் ஐஞ்ஞூற்றுவரும் அகப்பரிவாரமென்றுணர்க தமக்குரியதுறைகள் முற்றக்கற்று அவையிலே ஆடுதலுடைய அரம்பையன் னர்.

(இ - ள்.) இளையார், குழல்முதலியவற்றை ஈமத்தேகொண்டுவந்து விரல்களால் வாசியாநிற்க, ஐஞ்ஞூற்றுவரும் அரம்பையன்னரும் இரங்கிப் பள்ளிபடுத்தாரென்க.

"கோன்றமர் நிகளமூழ்கி" (சீவக. உசுஉ) எனவே ஆடவரின்மை யுணர்க. (உசுஙு)

293. மடையவிழ்ந்தவெள்ளிலைவேலம்புபாயமணிச்செப்பகங் கடைகின்றவேபோற், றுடையவிழ்ந்தமாலையுமுத்துந்தோய்ந்த

துணைமுலையினுள்ளரங்கிமூழ்கக்காமன், படையவிழ்ந்தகண்பனிநீர் பாயவிம்மாப்பருமுத்தநாமழலைக்கிண்கிணியினார், புடையவிழ்ந்தகூந் தல்புலவுத்தோயப்பொழிமழையுண்மின்னுப்போற்புலம்பினாரே.

தொடை. முறுக்கு. தோய்ந்த - செறிந்த. காமன்படையவிழ்ந்த - காமனம்புதோற்ற. முத்தமாகிய நா. புலவு - குருதி; ஆகுபெயர்.

(இ - ள்.) கிண்கிணியினார், மணிச்செப்பை உள்வாயைக் கடைகின்ற கருவிகள் அதனுள்ளே அழுந்துமாறுபோல, மூட்டுக்கழன்றவேலும் அம்பும் ஆண்டுப் பரந்துகிடக்கின்றவை முலையினுள்ளே தைத்து அழுந்தும்படி புரண்டழுது, பின்பு, பெய்கின்ற மேகத்தினுள்ளே மின்தோன்றுமாறுபோலக் கூந்தல் மெய்யைமறைத்து நிலத்தைத்தீண்ட, அதனுள்ளேயிருந்து அழுதாரென்க.

விம்மிப் புலம்பினாரென்க. (உகூச)

294. (க) அரிமானோர்மெல்லணைமேன் மஞ்ஞைசூழக்கிடந்தாங்கு வேந்தன்கிடந்தானைத்தான், கரிமாலைநெஞ்சினான்கண்டான்கண்டே கைதொழுதான்கண்ணீர்கலுழ்ந்துகுத்தபி, னெரிமாலையீமத்திழு தார்குடமேனைநூறுமேற்பச்சொரிந்தலறியெம், பெருமானேயெம் மையொளித்தியோவென்றுப்பெரியகண்ணீர்சொரிந்தலறுவார்.

295. (உ) கையார்வளைகள்புடைத்திரங்குவார்கதிர்முலைமே லாரம்பரிந்தலறுவார், நெய்யார்கருங்குழன்மேன்மாலைசிந்திநிலத்தி டுவார்நின்றுதிருவில்வீசு, மையார்கடிப்பிணையும்வார்குழையுங்களைந் திடுவார்கையால்வயிறதுக்குவா, ரையாவோவென்றழுவார்வேந்தன் செய்தகொடுமைகொடிதென்பார்கோல்வளையினார்.

296. (ங) பானாட்பிறைமருப்பிற்பைங்கண்வேழம்பகுவாயோர் பையணன்மாநாகம்வீழ்ப்பத், தேனார்மலர்ச்சோலைச்செவ்வரையின் மேற்சிறுபிடிகள்போலத்துயருழந்தா, மானுதடியேம்வந்தவ்வுலகி னின்னடியடைதுமென்றழுதுபோயினாரெங், கோனார்பறிப்பநலம் பூத்தவிக்கொடியினிப்பூவாபிறர்பறிப்பவே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) கலுழ்ந்தி - வழிபாட்டிற்படுதலின் மனம் தன்வழித்தன்றிக்கலங்கி. அழுதது உவகைக்கலுழ்ச்சி; "விளிவில்கொள்கை" (தொல். மெய்ப்பாடு. சூ. ரு) என்றதனான், இதுவும் அழுகைப்பாற்படும். மாலை - இயல்பு. ஈமம் - விறகு. ஏனைநூறு - சந்தனமுதலியன. ஒளித்தியோ - நின்மெய்யும் எரிநுகர்கின்றதோ.

(உ) கதிரையுடைய ஆரம். திருவில்லைநின்றவீசுங்குழை. நீலக்கடிப்பிணை - குதம்பைபோல்வதொருபணி. ஒ, இரக்கக்குறிப்பு. கொடிதென்றது, அரசற்குச்செய்யும்நீர்க்கடன் மரபுசெய்யாமைநோக்கி.

(ரு) வாயையும் பையையும் அணலையுமுடையதொரு நாகம். 'சிறுபிடிகள்' எனவே அக்களிறு கூடுதற்குரிய குலத்திற்பிறந்த பிடிகளல்லவென்பது பெற்றாம். 'இக்கொடி' என்றார், தம்மைப்பிறர்போல. இவர்கள் அரசற்குக் காமமொழிந்த நுகர்ச்சி கொடுத்தற்குரிய மகளிர்.

(இ. ள்.) மயில்சூழ்ந்துகிடப்ப ஓர் அரிமான், அணைமேற்கிடந்தாற்போலத் தேவியர் சூழ்ந்துகிடப்ப வேந்தன்கிடந்தவனைக் கரிந்த இயல்பினையுடைய நெஞ்சினனன்றான்கண்டான்; கண்டு கலுழ்ந்து தொழுதான்; தொழுது கண்ணிருகுத்தபின்பு, அவன் செற்றம் நீங்கினமைகண்டு, கோல்வளையினர், ஈமத்தே குடமும் ஏனையவும் அரசற்குப்பொருந்தச் சொரிந்து அலறி, பின்பு ஒளித்தியோவென்று நீர்சொரிந்து அலறுவார், இரங்குவார், அலறுவார், இடுவார், களைந்திடுவார், அதுக்குவார், அழுவார், கொடிதென்பாராய்ச் செவ்விய வரைமேல் ஒருநாகம்வேழத்தைவீழ்ப்ப அதுகாத்தற்குரியபிடிகள் துயருழக்குமாறுபோலத் தாம் துயருழந்து எங்கோனுர் நுகர் அவருக்குக் கொடுத்த நலங்கள் பிறர்க்குக் கொடேம்; இனி அவ்வுலகிலேசென்று அடியடைவேமென்று ஆனாது அழுது போயினரென்க. (௨௬௫-எ)

297. செங்கட்குறுநரியோர்சிங்கவேற்றைச்செகுத்தாங்கதனிடத்தைச்சேர்ந்தாலொப்ப, வெங்கட்களியானைவேல்வேந்தனைவிறலெரியின்வாய்ப்பெய்தவன்பெயர்ந்துபோய், பைங்கட்களிற்றின்மேற்றன்பெயரினாற்பறையறைந்தான்வேன்மாரிபெய்தாலொப்ப, வெங்கணவருமினைந்திரங்கினாரிருண்மனத்தான்பூமகளையெய்தினனே.

(இ. ள்.) நரி, நிகரில்லாத சிங்கவேற்றைச்செகுத்து அப்பொழுதே அதற்குரியஇடத்தைச்சேர்ந்தால் அச்சிங்கத்தின்றொழிலை நடத்தாது தன்றொழிலை நடத்துமாறுபோல, இருண்மனத்தானாகிய விறலவன், வேந்தனை எரிவாய்ப்பெய்துபோய்ப் பூமகளை எய்தினன்; அதுவேயன்றித் தன்பெயராலே பறைசாற்றினன்; அதுகேட்டு வேல்மழைபெய்தால் அதற்கு இரங்குமாறுபோல எவ்விடத்தவரும் இரங்கினரென்க.

அவன்கருத்தால் மகளிர்பெய்தலின், 'அவன்பெய்தான்' என்றார். விறலவனென்க; இஃது இகழ்ச்சி. இனைந்து - கெட்டு. (௨௬அ)

## சீவகன் உற்பத்தி.

### வேறு.

298. களிமுகச்சுரும்புண்கோதைகயிலெருத்தசைந்துசோர
வளிமுகச்சுடரினில்லாமனத்தொடுமயங்கியிப்பாற்
சுளிமுகக்களிறனன்றன்சொன்னயநெறியிற்போய
கிளிமுகக்கிளவிக்குற்றதிற்றெனக்கிளக்கலுற்றேன்.

களிமுகம் - களிக்கின்றநெறி. கயில், ஆகுபெயர். அசைந்துசோர - குலைந்துவிழ. சுளித்தல் - கோபித்தல்.

(இ - ள்.) காற்றின்முன்னின்ற சுடர்போல ஒருவழியில்லா மனத்தோடே எருத்தத்திலே கோதைசோர மயங்கிக் களிறனுனது வார்த்தையின் பயனை உட்கொண்டுபோன கிளிபோலுங் கிளவிக்கு இப்பாலுற்ற தீங்கு இத் தன்மைத்தென்று கூறுதலுற்றேனென்க. (உகூகூ)

299. எஃகெனவிலங்குவாட்கணெறிகடலமிர்தமன்னு
ளஃகியமதுகைதன்னுலாய்மயிலூருமாங்கண்
வெஃகியபுகழினன்றன்வென்றிவெம்முரசமார்ப்ப
வெஃகெறிபிணையின்மாழ்கியிறுகிமெய்ம்மறந்துசோர்ந்தாள்.

எஃகென - கூர்மைதான் இதன்வடிவென. ஆய்மயில் - விசைகுறைந்த மயில். எஃகெறி-எஃகாலெறிந்த. மாழ்கி-மனமயங்கி. இறுகி - மூர்ச்சித்து. இது கையாறுதலிற் பொறி இடந்திரித்தலாற்றுமையுணர்க.

(இ - ள்.) அரசனுக்கு வாளின்றன்மையாகிய கண்ணையுடைய அமுதன்னுள், அவனை நீங்குதலாற் குறைந்தவலியாலே மயிலைச் செலுத்துகின்ற அவ்விசும்பிடத்தே புகழினனது கொடிய முரசார்ப்ப, அதுகேட்டு மாழ்கி மெய்ம்மறந்து இறுகிச் சோர்ந்தாளென்க.

வேந்தாந்தன்மையை விரும்பியபுகழினன். (உஎ0)

300. மோடுடைநகரினீங்கிமுதுமரந்துவன்றியுள்ளம்
பீடுடையவருமுட்கப்பிணம்பலபிறங்கியெங்கும்
காடுடையளவையெல்லாங்கழுகிருந்துறங்குநீழற்
பாடுடைமயிலந்தோகைபையவீழ்ந்ததன்றே.

பீடுடையவரும் உள்ளம் உட்க எங்கும் பிணம்பெருத்து. துவன்றிப் பிறங்கித்தானுடைய எல்லையெல்லாம் கழுகு உறங்குநிழலையுடையகாடென்க. பாடு - ஈண்டு இடப்பக்கம். உடை மயில் - உடைகின்ற மயிலென வினைத் தொகை. பொறிக்கு, "ஓடமுறுக்கி" (சீவக. உ௩அ) என்னும்வாசகம் முன்னர் உளதாகலின், அதற்கேற்ப 'உடைகின்றது' என்றார். கையால் இடந்திரித் தாற் கடிதின்வீழ்கின்றது, ஈண்டுத் தானே இடந்திரிதலிற் பையப்பையநிலத் திற்கு அண்ணிதாக வீழ்ந்ததென்றார். வீழ்ந்தது, நிகழ்காலத்திற்றேன்றிய இறப்பு.

(இ - ள்.) அங்ஙனம் மூர்ச்சிப்பதன்முன்பு வலத்திலேமுறுக்கின விசை தானே கைவிட்டபின் இடத்தேபிரிகின்ற தோகைமயில் அந்நகரினின்றுநீங்கிச் சுடுகாட்டின்கேரே வீழ்ந்ததென்க. (உஎக)

301. மஞ்சுசூழ்வதனையொத்துப்பிணப்புகைமலிந்துபேயு
மஞ்சுமம்மயானந்தன்னுளகில்வயிறூர்ந்தகோதை
பஞ்சிமேல்வீழ்வதேபோற்பல்பொறிக்குடுமிநெற்றிக்
குஞ்சிமாமஞ்ஞைவீழ்ந்துகால்குவித்திருந்ததன்றே.

மேகம், புகைநிறத்திற்கு உவமம். பேயும்: உம்மை, சிறப்பு. அகில், ஆகுபெயர். குஞ்சி - மயிர்.

(இ - ள்.) அன்னம்வீழ்ந்த அந்தமயில், புகைமலிந்து பேயும் அஞ்சும் மயானத்தே வீழ்கின்றபொழுது, மாலை பஞ்சின்மேல் வீழ்வதுபோல் மெல்லெனவீழ்ந்து காலைகுவித்திருந்ததென்க.

'இருக்கும்' என்றும் பாடம். இம்மயிற்பொறியைக் கூனியது உருவாகியதெய்வம் மறைத்துக் கட்டியங்காரனும் கோவிந்தனும் தேவியைத்தேடாமற்காத்ததென்றுகொள்க. அது பின்பு, "கனியார்மொழியாட்குமயிற்கும் காமர்பறிகல்கி" (சீவக. ௨0௬௩)எனச் சேரக்கூறியவாற்றானுமுணர்க.(௨௭௨)

302. வார்தருதடங்கணீர்தன்வனமுலைநனைப்பவேல்பெற்
றார்கடலனையகாட்டுளச்சமொன்றானுமுள்ளா
ளேர்தருமயிலஞ்சாயலிறைவனுக்கிரங்கியேங்கிச்
சோர்துகிறிருத்தறேற்றாடணைபிரிமகன்றிலொத்தாள்.

வார்தலைத்தருகின்ற. ஏல் - மனவெழுச்சி. தான் நிற்கின்ற நிலையிற் கலக்கத்தாலே பேய்முதலியவற்றிற்குச் சிறிதும் அஞ்சாளாய். யாதிசெய்வலென்றிரங்கி. ஏங்கி - அழுது. தேற்றாள், தொழிற்பெயர். அன்புமிகுதியாற் கையாறு முற்படுதலின், 'இறங்கி' (சீவக. ௨௬௬) எனக் கையாறுகூறி, இரங்கியெனக் கவலைகூறி, ஏங்கியென அரற்றுக்கூறி, அச்சமுள்ளாளென அவலங் கூறினார். வருத்தந்தோன்றிநிற்றல், அவலம். வாய்விட்டழுதல், அரற்று. யாதுசெய்வலென்றல், கவலை. மூர்ச்சித்தல், கையாறு.

(இ - ள்.) மயிலஞ்சாயல், திருத்தல்தேற்றாதவள், காட்டிலே உணர்வு பெற்று இறைவனுக்கு இரங்கிக் கண்ணீர் முலையைநனைப்ப ஏங்கி அச்சமுள்ளாளாய் மகன்றிலை ஒத்தாளென்க. (௨௭௩)

303. உண்டெனவுரையிற்கேட்பாருயிருறுபாவமெல்லாங்
கண்டினித்தெளிகவென்றுகாட்டுவாள்போலவாகி
விண்டொடநிவந்தகோயில்விண்ணவர்மகளிற்சென்றாள்
வெண்டலைபயின்றகாட்டுள்விளங்கிழைதமியளானாள்.

(இ - ள்.) விளங்கிழை, கோயிலிலே விண்ணவர்மகள்போல நல்வினையின்வண்ணமாய்நடந்தவள், இப்பொழுது, பல்லுயிர்களும்நுகரும் பாவமுண்டென்று நூலிலேகேட்பாரெல்லாம் இனி என்னைக்கண்டு தெளிவீராக வென்று உலகிற்குக் காட்டுவாள்போலத் தான் தீவினையின்வண்ணமாய்க் காட்டிலே தமியளானாளென்க.

மகப்பெறுங்காலத்திற்குத் துணையின்றி வருந்துதலிற் 'காட்டுவாள் போலவாகி' என்றார். (௨௭௪)

304. இருள்கெடவிகலியெங்குமணிவிளக்கெரியவேந்தி
யருளுடைமனத்தவாகியணங்கெலாம்வணங்கிநிற்பப்
பொருகடற்பருதிபோலப்பொன்னனான்பிறந்தபோழ்தே
மருளுடைமாதருற்றமம்மர்நோய்மறைந்ததன்றே.

(இ - ள்.) பெறுதற்கரியோன், மணிவிளக்கு ஏந்தியெரிய அணங்குகள் வணங்கிநிற்பக் கடலிடத்துப் பருதிபோலப் பிறந்தபொழுதே, மயக்கமுடைய மாதருற்ற வருத்தநோய் மறைந்ததென்க.

இகலி - விளக்கோடிகலி. ஏந்தி - மிக்கு. இவன் வீடுபெறுவனென்பது கருதித் தெய்வம்வணங்கிற்று. "கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு" (நாலடி. உ0க) என்றார்பிறரும். முன், "வெஞ்சுடரினுண்டகை யவிந்தான்" (சீவக. உஅசு) எனக்கூறி, அச்சுடர் குழவிபாய்த்தோன்றின்மை கூறினர். ஞாயிறு தோற்றத்தில் இருளைப்போக்கிப் பின் மதியத்தைக் கெடுக்குமாறுபோல, இவனும் பிறந்தபொழுதே தேவியிருளைப்போக்கிப் பின்பு பகைவெல்லுமென்பது கருத்து. இக்கருத்தால், "செய்யோன் செழும்பொற்சரம்" (சீவக. உருஉஉ) என்றும், "மதிவீழ்வதுபோல வீழ்ந்தான்" (ஷை ஷை) என்றுங் கூறினர்.                    (உளரு)

305. பூங்கழற்குருசிறந்தபுதல்வனைப்புகன்றுநோக்கித்
தேங்கமழோதிதிங்கள்வெண்கதிர்பொழிவதேபோல்
வீங்கிளமுலைகள்விம்மித்திறந்துபால்பிலிற்றவாற்றாள்
வாங்குபுதிலகஞ்சேர்த்தித்திலகனைத்திருந்தவைத்தாள்.

புதல்வன்பொருட்டு இவளைப்போக்குதலின், 'குருசிறந்தபுதல்வனை' என்றார். முலைகள் திங்களின்கதிரைத் தாம்பொழிவதுபோலப் பால்சொரியும் பருவத்தளவும் பொறுளாய்ப் பாலை வலியவாங்கியென்க; என்றது, மகப்பயந்தோர்க்குப் பயந்தபொழுதே பால்சுரவாதாதலால்.

(இ - ள்.) ஓதி, புதல்வனைநோக்கிப் பிலிற்றுந்தணையும் ஆற்றாளாய் வாங்கித் திருந்தத் திலகமிட்டுத் திலகனைவைத்தாளென்க.                    (உளசு)

வேறு.

306. (க) கறைபன்னீராண்டுடன்விடுமின்காமர்சாலைதளிநிறுமின், சிறைசெய்சிங்கம்போன்மடங்கிச்சேராமன்னர்சினமழுங்க, வுறையுங்கோட்டமுடன்சீமினெண்பொற்குன்றந்தலைதிறந்திட், டிறைவன் சிறுவன்பிறந்தானென்றேறப்பார்க்கூர்தோறுய்த்தீமின்.

307. (உ) மாடமோங்கும்வளநகருள்வரம்பில்பண்டந்தலைதிறந்திட், டாடைசெம்பொனணிகலங்கள்யாவும்யாருங்கவர்ந்தெழுநாள், வீடலின்றிக்கொளப்பெறுவார்விலக்கல்வேண்டாவீழ்ந்தீர்க்குக், கோடிமூன்றேடரைச்செம்பொன்கோமானல்குமெனவறைமின்.

308. (௩) அரும்பொற்பூணுமாரமுமிமைப்பக்கணிகளகன்கோயி, லொருங்குகூடிச்சாதகஞ்செய்தோகையரசர்க்குடன்போக்கிக், கருங்கைக்களிறுங்கம்பலமுங்காசுங்கவிகள்கொளவீசி, விரும்பப்பிறப்பாய்வினைசெய்தேன்காணவிஃதோஒபிறக்குமா.

309. (ச) வெவ்வாயோரிமுழவாகவிளிந்தாரீமம்விளக்காக,வொவ்வாச்சுடுகாட்டயரரங்கினிழல்போனுடங்கிப்பேயாட, வெவ்வாய்மருங்குமிருந்திரங்கிக்கூகைகுழறிப்பாராட்ட,விவ்வாறாகிப்பிறப்பதோவிதுவோமன்னர்க்கியல்வேந்தே.

இவைநான்கும் ஒருதொடர்.

(க) கறை - கடமை. பாலக்கிரகாரிட்டம் பன்னீராண்டளவும் உண்டாகையினாலே அதற்குச் சாந்தியாகப் பன்னீராண்டு கடமைகொள்ளாதொழிதல் அரசியல்பென்று, 'பன்னீராண்டு' என்றார். இனி, அரசர்க்குப் பதினோராண்டிலே உபநயனம்பண்ணிப் பன்னீராண்டிலே இல்லறக்கிழமைபூண்டு அரசவுரிமையெய்துதல் இயல்பாகலின், பன்னீராண்டும் உலகத்தார்க்குத் தானமாகவிடுதல் இயல்பென்றலுமொன்று. உடன் - சேர. சாலை - அறச்சாலை. தளி - கோயில். திறமின் - இவையிற்றைப்படைமின். மன்னர் சிறைசெய்சிங்கம்போல் மடங்கிச் சினமழுங்கும்படி உறையும். சீமின் - இடித்துத்தூய்மைசெய்மின். புதல்வற்பயந்தாற் சிறைவீடுசெய்தல் பிதிருடைய தனிசு நீங்குதலாம். திறந்திட்டு - திறந்துபோகட்டு. சிறுவன்பிறந்தானென்று மகிழ்ந்து ஏற்பார்க்கு. உய்த்து - கொண்டுசென்று. இது தானம்.

(உ) நகர் - கோயில். பண்டம் - நெல்லுமுதலியன. யாவும் - பிறவும். ஏழுபிறப்பினுமுள்ள தீவினை நீங்குதற்கு, 'எழுநாள், வீடலின்றிக்கொளப்பெறுவார்' என்றார். ஏழுபிறப்பாவன: "மக்கள் விலங்கு பறவை யூர்வன, நீருட் டிரிவன பருப்பதம் பாதவ, மெனவிவை யெழுபிறப் பாகு மென்ப." வீடல், விகாரம். வீழ்ந்தீர்க்கு - உயர்ந்த தானத்தைப்பெற விரும்பினீர்க்கு. உடம்பிற்கு மூன்றரைக்கோடிமயிர் உளவாகலின், ஒருமயிர்க்கு ஒருபொன்னாக மூன்றரைக்கோடிபொன் நல்குமென்றார். தலைதிறந்து, பண்டங்களையும் ஆடைமுதலியவற்றையும் பிறவற்றையும் கொள்ளைகொள்ளப்பெறுவாரை யாரும் விலக்குதல்வேண்டாவென்க.

(ங) ஒருங்கு - சேர. செய்து - செய்ய. ஓகை - உவகை. கவிகள் - பெருமங்கலம்பாடுவார். பிறப்பாய்-பிறக்கும் நீ. இஃது - இத்தன்மைத்து. ஓஓ, இரக்கக்குறிப்பு. பிறக்குமா - பிறக்கும்படியென்னும்பொருட்டு; மாறு, யாவென விகாரமுமாம்.

(ச) வெவ்வாய் - கொடியவாய். பிறப்பார்க்கு ஒவ்வாச்சுடுகாடு. மருங்கு - பக்கம். ஓரி முழவாக ஈமம்விளக்காக அரங்கிலே பேய் ஆடவென்க. இவ்வாறென்றது, தந்தைவிரும்பும்படி நல்வினையுடைய தன்மையை. இதுவென்றது, செயலின்றித் தாய்வருந்தும்படி தீவினையுடைய தன்மையை.

(இ - ள்.) தேவி, புதல்வனைநோக்கி, கோமானுனவன் கணிகள் சாதகஞ்செய்ய ஓகைபோக்கி விசிக் கறைவிடுமின், திறமின், சீமின், ஈமின், விலக்கல்வேண்டா என அறைமின், வீழ்ந்தீர்க்கு நல்குமென அறைமினென்று விரும்பப்பிறக்கும் நீ ஓஓ தீவினைசெய்தேன் காண்டற்காகப் பிறக்கும்படி

இத்தன்மைத்தாயிருந்தது ; வேந்தே, இவ்விரண்டிலும் இவ்வாறுகிப் பிறப் பது மன்னர்க்குஇயல்போ ?· பேயாடக் கூகைபாராட்ட இதுவாகிப்பிறப்பது மன்னர்க்கியல்போ ? கூறுயென்றுளென்க.

ஓகாரமிரண்டும் வினு: என்றெனவும், கூறுயென்றுளெனவும் வருவிக்க. ஆகி, இரண்டிடத்திற்கும்கூட்டுக. (உள்எ - அ௦)

310. பற்றுமன்னனகர்ப்புறமாற்பாயல்பிணஞ்சூழ்சுடுகாடா
றுற்றுரில்லாத்தமியேனுலொதுங்கலாகாத்தூங்கிருளான்
மற்றிஞ்ஞாலமுடையாய்நீவளருமாறுமறியேனு
லெற்றேயிதுக்கண்டேகாதேயிருத்தியாலென்னின்னுயிரே.

(இ - ள்.) இஞ்ஞாலமுடையாய், நீ கிடக்கின்ற இடம் பகைவனிடமாயிராநின்றது ? நினதுபாயல் சுடுகாடாயிரா நின்றது ; யானும் உசாவுவதற்கு ஒருதுணையுமில்லாத் தமியேனுயிராநின்றேன்; நின்னைக்கொண்டுபோகக் கருதிற் போகவொண்ணுத இருளாயிராநின்றது ; மேல் நீ வளருமாறும் அறியேனுயிராநின்றேனென்று பிள்ளையை நோக்கிக்கூறி, இனி இதுவும்அறிந்தே இச்செய்திகண்டும் போகாதே கொடியவுயிரே இராநின்றுய்; இதற்குக் காரணம் என்னென்று கூறினுளென்க.

மற்று, வினைமாற்று. (உ௲க)

311. பிறந்தநீயும்பூம்பிண்டிப்பெருமானடிகள்பேரறமும்,புறந்தந்தென்பாற்றுயர்க்கடலைநீந்தும்புணைமற்றுகாக்காற், சிறந்தாருளரேலுரையாயாற்சிந்தாமணியேகிடத்தியான், மறங்கூர்நுங்கோன்சொற்செய்தேன்மம்மர்நோயின்வருந்துகோ.

சொல், ஆகுபெயர். வருந்துகு, வருந்துவேனெனத் தனித்தன்மை.

(இ - ள்.) சிந்தாமணியே, நீ ஒன்றமுரையாமற் கிடவாநின்றுய்; இனி எனது வருத்தம்நீக்கப்பிறந்த நீயும் பேரறத்தையுடைய அடிகளும் புறந்தந்து என்னிடத்துப்பிறந்த துயர்க்கடலை யான் நீந்தும் புணையாகாதபொழுது மற்று நின்னினும் அவனினும் சிறந்தாருளரேல் உரைக்கின்றிலை ; நுங்கோன் கூறிய காரியத்தைச்செய்த யான் வருந்தக்கடவேனேவென்று கூறினுளென்க. (உ௲உ)

312. அந்தோவிசயைபட்டனகொண்டகங்ககைபுறங்கையாறு்போற், கந்தார்களிற்றுத்தங்கோமான்கழியமயிலோர்மயிலூர்ந்து, வந்தாற்போலப்புறங்காட்டுள்வந்தாடமியேயெனமரங்கள், சிந்தித்திரங்கியழுவனபோற்பனிசேர்கண்ணீர்சொரிந்தனவே.

(இ - ள்.) அகங்கைபோய்ப் புறங்கையான கடுமைபோல விசயை கோமான்படாநிற்கப் புறங்காட்டுள்வந்தவள் தனியேபட்ட தீங்குகளை உட்கொண்டு அந்தோவென்ன இரங்கி அழுவனபோல மரங்கள் தமக்கு அடுத்த பனியாகிய கண்ணீரைச் சொரிந்தனவென்க. (உ௲௩)

313. அடர்பொற்பைம்பூணரசழியவரும்பொற்புதல்வற்பெற் றிருந்த, விடர்கொணெஞ்சத்திறைவியுமிருங்கண்ஞாலத்திருள்பரு கிச், சுடர்போய்மறையத்துளங்கொளியகுழவிமதிபெற்றகங்குளிர் ந்த, படர்தீரந்தியதுவொத்தாள்பணிசெய்கோட்டுப்படாமுலையாள்.

அடர் - தகடுமாம். உம்மை, சிறப்பு. படர்தீர்ந்த அதுவென்க. அந்தி- சந்தியாதேவி. பணிசெய் - பிழைத்தலைச்செய்த.

(இ - ள்.) உலகில் நீங்கினை நீக்கின அரசுபடப் புதல்வனைப்பெற்றிருந்த படாமுலையாளாகிய இறைவியும், சிறிது இடர்தீர்ந்தமையால், இருளைப்பரு கிச் சுடர்மறையக் குழவியாகிய மதியைப்பெற்றுச் சிறிதுமனங்குளிர்ந்த அந்தி படர்தீர்ந்த அத்தன்மையையொத்தாளென்க. (௨அச)

வேறு.

314. தேனமர்கோதைமாதர்திருமகன்றிறத்தையோராள்
யானெவன்செய்வலென்றேயவலியாவிருந்தபோழ்திற்
றானமர்ந்துழையினீங்காச்சண்பகமாலையென்னுங்
கூனியதுருவங்கொண்டோர்தெய்வதங்குறுகிற்றன்றே.

(இ - ள்.) மாதர், திருமகன் நல்வினையையோராளாய், யான் யாது செய்வலென்று வருந்தியிருந்தவளவிலே, ஒரு தெய்வந்தான் இவளிடத்து நின்றும் நீங்காத சண்பகமாலையென்னும் கூனியதுவடிவைக்கொண்டு அம ர்ந்து குறுகிற்றென்க.

இவன் அரசன்மகனாதலின், ஆண்டுறையும் தெய்வம் வந்தது. தெய் வதம், தைவதமென்னும் வடமொழிச்சிதைவு. (௨அரு)

315. விம்முறுவிழுமவெந்நோயவணுறைதெய்வஞ்சேரக்
கொம்மெனவுயிர்த்துநெஞ்சிற்கொட்புறுகவலைநீங்க
வெம்மனைதமியையாகியிவ்விடருற்றதெல்லாஞ்
செம்மலர்த்திருவின்பாவாயான்செய்தபாவமென்றாள்.

(இ - ள்.) அவ்விடத்துறையுந் தெய்வமாகிய கூனிசேர, பொருக்கென உயிர்த்து நெஞ்சிற்கவலை நீங்குதலாலே, அக்கூனி, அன்னாய், பாவாய், நீ இவ்விட்டுற்றதெல்லாம் யான்செய்ததீவினையாலே ; இனி வருத்தம்நீங்கென் றாளென்க.

தேவிபாதுவிழுமத்தாலே நோயையுடையதாகிய தெய்வம். திருவின் : இன், அசை. தெய்வம் கூனியாய் நிற்றலின், உயர்திணையாற்கூறினார்.(௨அசு)

316. பூவினுட்பிறந்ததோன்றற்புண்ணியனனையநம்பி
நாவினுளுலகமெல்லாநடக்குமொன்றாதுநின்ற
கோவினையடர்க்கவந்துகொண்டுபோமொருவனின்னே
காவியங்கண்ணினாயாமறைவதுகருமமென்றாள்.

தோன்றல் - தலைமை. புண்ணியன் - முருகன். நா, ஆகுபெயர்.

(இ-ள்.) அவள், கண்ணினாய், நம்பிவார்த்தையிலே உலகமெல்லாம் நடக்கும்; அங்ஙனம்நடத்தற்குப் பொருந்தாதுநின்ற கட்டியங்காரனைக் கொல்லும்படி இவனை ஒருவன் இப்பொழுதேவந்து கொண்டுபோம் ; ஆதலால், யாம் மறைந்திருப்பது கருமமென்றாளென்க. (உஅஎ)

317.(க) சின்மணிமழலைநாவிற்கிண்கிணிசிலம்பொடேங்கப்
பன்மணிவிளக்கினீழனம்பியைப்பள்ளிசேர்த்தி
மின்மணிமிளிரத்தேவிமெல்லவேயொதுங்குகின்றா
ணன்மணியீன்றுமுந்நீர்ச்சலஞ்சலம்புகுவதொத்தாள்.

318.(உ) ஏதிலாரிடர்பன்னூறுசெய்யினுஞ்செய்தவெல்லாந்
தீதிலவாகவென்றுதிருமுலைப்பான்மடுத்துக்
காதலான்பெயர்சுமந்தகதிர்மணியாழிசேர்த்திக்
கோதைதாழ்குழலினாளைக்கொண்டுபோய்மறையநின்றாள்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) மணியாகிய நா. பன்மணி-உயிர்நீத்தவர்பூண்டமணி. நீழல், விகாரம் ; நிழலிடம்.

(உ) ஏதிலார் - அயலார். தீதிலவாக-நன்றாக; காப்பாக. அவள் முலையைப்பிடித்துக் கூனிகொடுத்தாள். ஆழிசேர்த்திற்று, அறிந்துவளர்த்தற்கு. சேர்த்தி, சேர்த்தவென்க.

(இ - ள்.) கூனி, நம்பியைப் பள்ளியிலேசேர்த்தித் தீதிலவாகவென்று முலைப்பாலைமடுத்து ஆழிசேர்த்தினளாக; தேவி, கிண்கிணி சிலம்பொடேங்க மணிமிளிர ஒதுங்குகின்றவள், சலஞ்சலம் மணியையீன்று முந்நீரிலே புகுவதொத்தாள் ; அங்ஙனம் போகின்ற அக்குழலினாளைக் கூனி கொண்டுபோய் மறையநின்றாளென்க.

தெய்வம், ஒருபள்ளியைத் தேவியறியாதபடி நிருமித்ததென்றுணர்க; அது, பின்பு ஆசிரியன், "பூந்தவிசிறுச்சி" (சீவக. ௩அசு) என்பதனாலும் பெற்றாம். (உஅஅ - கூ)

319. நல்வினைசெய்திலாதேனம்பிநீதமியையாகிக்
கொல்வினைமாக்கள்சூழக்கிடத்தியோவென்றுவிம்மாப்
புல்லியகொம்புதானோர்கருவிளைபூத்ததேபோ
லொல்கிபோர்கொம்புபற்றியொருகணானோக்கிநின்றாள்.

(இ-ள்.) அப்பொழுது, அத்தேவி, நின்னைப்பெறுதற்கு நல்வினைசெய்து, வளர்த்தற்கு நல்வினைசெய்யாதேனுடைய நம்பி, நீ தனியையாய்க் கொடிய விலங்குகள்சூழக் கிடத்தியோவென்று அழுது, கொம்பைப்புல்லிய கருவிளை தான் ஒருபூவைப் பூத்ததுபோல ஒருகொம்பைப்பற்றி ஒதுங்கி ஒருகண்ணாலே நோக்கிநின்றாளென்க. (உகo)

வேறு.

320. நாளொடுநடப்பதுவழுக்கிமின்னொடேர்
கோளொடுகுளிர்மதிவந்துவீழ்ந்தெனக்
காளகவுடையினன்கந்துநாமனும்
வாளொடுகனையிருள்வந்துதோன்றினான்.

(இ - ள்.) அவள் அம்மனம்நிற்க,மதி நாளொடு நடக்கின்றதனைத்தப்பி மின்னோடுசெல்கின்ற மேகத்துடனே வந்துவீழ்ந்தாற்போல, கந்துக்கடனும் கருமையை இடத்தேயுடைய உடையினனாய்க் கனையிருளிலே வாளொடு வந்துதோன்றினனென்க.

நடப்பது, தொழிற்பெயர். ஊர்கோள், வினைத்தொகை; ஆகுபெயர். கோள் - பாம்புமாம்; இதற்கு உம்மைவிரிக்க. நாமனும்: உம்மை, சிறப்பு.()

321. வாள்கடைந்தழுத்தியகண்ணினார்கடந்
தோள்கடைந்தழுத்தியமார்பன்றாங்கிரு
ணீள்சுடர்நிழன்மணிகிழிப்பநோக்கினா
னள்கடிந்தணங்கியவணங்குகாட்டுளே.

அழுத்தியகண் - அழுத்தினாற்போலுங்கண். தோள்கடைதல் - புல்லுதல்விசேடம். அணங்குகள் ஆளைக்கடிந்துவருத்திய காடென்றதற்கு அடை.

(இ - ள்.) கண்ணினார் தோளழுத்தியமார்பன் காட்டிலே செறிந்த இருளைச்சுடரையுடைய மணிகிழித்தலாலே பிள்ளையை நோக்கினானென்க.(௨௬௨)

322. அருப்பிளமுலையவர்க்கனங்கனாகிய
மருப்பிளம்பிறைநுதன்மதர்வைவெங்கதிர்
பரப்புபுகிடந்தெனக்கிடந்தநம்பியை
விருப்புளமிகுதியின்விரைவினெய்தினான்.

அருப்பிளமுலை - அரும்புபோலுமுலை; விகாரம். மருப்பு-கோடு. மதர்வை - மயக்கம். பரப்புபு-கதிர் தனதுகிரணங்களைப் பரப்பாநின்று. கிடந்ததென, விகாரம்.

(இ- ள்.) பிறைபோலும் நுதலையுடைய முலையவர்க்கு அனங்கனாதற்கு இப்பொழுது, உதயத்து இளஞாயிறு கிடந்ததெனக் கிடந்தநம்பியை, அவன் விருப்பத்தையுடைய மனச்செருக்காலேவிரைவோடு சேர்ந்தானென்க.(௨௬௩)

323. புனைகதிர்த்திருமணிப்பொன்செய்மோதிரம்
வினைமலர்த்தாரினான்மறைத்துவண்கையாற்
றுனைகதிர்முகந்தெனமுகப்பத்தும்மினான்
சினைமறைந்தொருகுரல்சீவவென்றதே.

வினைதல் - கைசெய்தல். துனைகதிர் - இருளைநீக்குதற்கு விரைகின்ற கதிர். எல்லாப்புலன்களுக்கும் விருப்பஞ்சேறலின், 'முகப்ப' என்றார், "மன்னெயின்முகவை" (புறநா. ௩௭௩) என்றார் பிறரும். தும்முதல் நன்னிமித்தம். சீவ, வேண்டுகோளாகிய வியங்கோட்கண்வந்த வடசொல்,

(இ - ள்.) தாரிஞன், மோதிரத்தைப் பிறரும் அறிவரெனமறைத்துக் கையாலே இளஞாயிற்றை யெடுத்தாற்போல நம்பியையெடுப்ப, அவன் தும்மினன்; அப்பொழுது, அத்தெய்வம் சினையிலேமறைந்துநின்று சீவிப்பாயாக வென்று ஒருகுரல் வாழ்த்திற்றென்க.

தேவி அச்சத்தால் தன்னுள்ளே வாழ்த்துதலின், 'ஒருகுரல்' என்றார். ()

324. என்பெழுந்துருகுபுசோரவீண்டிய
வன்பெழுந்தரசனுக்கவ லித்தையனை
நன்பழம்பகைதவநூறுவாயென
வின்பழக்கிளவியினிறைஞ்சியேத்தினாள்.

என்புக்குள்ளேயெழுந்து உடலுருகி அவசமாக வளர்ந்த அன்பு. அரசனுக்குப் புத்திரமுகங்காணும்நல்வினையின்மைகண்டு வருந்தி. நன், திசைச்சொல். தவ - மிக. கிளையறநூறுவாயென்பது கருத்து.

(இ - ள்.) அப்பொழுது 'தேவி, கந்துகன் பிள்ளையையெடுத்ததுகண்டு பழையஅன்பு தோற்றி அவலித்து, பின்பு தெய்வத்தைவணங்கி, ஐயனைப் பகைதவநூறுவாயென வாழ்த்தினாளென்க. (உசு)

325. ஒழுக்கியலருந்தவத்துடம்புநீங்கினா
ரழிப்பரும்பொன்னுடம்படைந்ததொப்பவே
வழுக்கியபுதல்வனங்கொழியமாமணி
விழுத்தகுமகனொடும்விரைவினேகினான்.

(இ - ள்.) கந்துகன், அருந்தவத்தேநின்ற உடம்பைவிட்டவர் மேலான உடம்பைப்பெற்ற நிலைமையையொப்ப, தன்புதல்வன் காட்டிலேகிடப்ப, மணிபோல விழுத்தக்க மகனைக்கொண்டு விரைவோடே ஏகினனென்க.

ஒழுக்கத்தாலே இயன்ற தவம்,அழிப்பருமருந்தவமென்க. தவவுடம்பை இவன்புதல்வனுக்கு உவமைகூறினார்,அவனாலே சீவகனைப்பெறுதலின்.(உகசு)

326. மின்னடுகனையிருணீந்திமேதகு
பொன்னுடைவளநகர்பொலியப்புக்கபின்
றன்னுடைமதிசுடத்தளருந்தையலுக்
கின்னுடையருண்மொழியினியசெப்பினான்.

பொலிய-துன்பம்நீங்கி இன்பம்நிகழ. தன்னுடைமதி-பெண்மதி. இன்மொழி, "புண்ணியற்பெறுதிர்" (சீவக. ககூo) என்றது. அருளுடைமொழி,"பின்றையுநிகழ்வதுண்டு" (ஷ ஷ) என்றது; எல்லார்க்கும் அருள் பிறத்தலிற் சிறைகோடலை அருளென்றார்.

(இ - ள்.) அவன், இருளைநீந்தித் தன்மனையிலே புக்கபின், தையலுக்கு முனிவன்கூறிய இரண்டுமொழியினும் இனியமொழியைக் கூறினனென்க. ()

327. (க). பொருந்தியவுலகினுட்புகழ்கண்கூடிய
வருந்ததியகற்றியவாசில்கற்பினாய்
திருந்தியநின்மகன்றீதினீங்கினான்
வருந்தனீயெம்மனைவருகவென்னவே.

328. (உ) கள்ளலைத்திழிதருங்களிகொள்கோதைத
னுள்ளலைத்தெழுதருமுவகையூர்தர
வள்ளலைவல்விரைந்தெய்தநம்பியை
வெள்ளிலைவேலினான்விரகினீட்டினான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) உலகிற்பொருந்திய புகழெல்லாம்கூடிய அருந்ததிக்கற்பை அகற்றிய கற்பினாய். ஆசு - குற்றம். திருந்திய - நல்வினை திருந்திய. வருந்தல்:. அல்லீற்றுவியங்கோள். எம்மனை - எம்மில்லாளே.

(உ) தேன் இதழையலைத்து இழிதற்குக் காரணமான களிப்பு. உள்ளலைத்து - தன்னெஞ்சிலே தரங்கித்து. "இதுமகவழியின்வாழேன்" (சீவக. ககஉச) என்றவளுயிரையும் மேற்பொருள்களையுங் கொடுத்தலின், 'வள்ளல்' என்றார். விரகு - தேவிசேர்த்தின திலகத்தை மாற்றினது.

(இ - ள்.) கந்துகன், கற்பினாய், நின்மகன் சாதலினின்றுந்தப்பினானெனச்செப்பினான் ; செப்பி இனி வருந்தல் ; எம்மில்லாளே, வருகவென, கோதை உவகைபரத்தலால் வள்ளலை மிகவிரைந்தெய்த, வேலினான் நம்பியை விரகால்நீட்டினானென்க. (உகஅ - க)

329. சுரிமுகவலம்புரிதுவைத்ததூரியம்
விரிமுகவிசும்புறவாய்விட்டார்த்தன
வெரிமுகத்திலமேந்திச்சேந்தபோற்
கரிமுகமூலையினார்காய்பொன்சிந்தினார்.

(இ - ள்.) அப்பொழுது வலம்புரி இசைத்தன ; நால்வகைவாச்சியங்களும் ஆர்த்தன ; நித்திலமேந்துதலாற் கோபித்தனபோற் கரிந்தமுகத்தையுடைய முலையினார் எரிமுகத்தே காய்ந்த பொன்னைக் கொள்ளையூட்டினாரென்க. (நூoo)

330. அழுகுரன்மயங்கியவல்லலாவணத்
தெழுகிளைமகிழ்ந்தெமதரசுவேண்டினான்
கழிபெருங்காதலான்கந்துநாமனென்
றுழிதருபெருநிதியுவப்பநல்கினான்.

அரசன்படுதலால் அழுகுரல். எழுகிளைமகிழ்ந்து - எழுபிறப்பும் கிளைமையைவிரும்பி ; வளர்கின்றகிளையுமாம். உழிதரு - ஓரிடத்துமில்லாது திரியும்.

(இ - ள்.) அதுகேட்டுக் கட்டியங்காரன், அரசனிருப்பிற்குத் தொடர்ந்த பீடிகைத்தெருவிலே இருந்தும் கந்துகன் எமது அரசாட்சியை விரும்பினுதலால் மிக்ககாதலையுடையனென்றுகொண்டு, அவன்உவப்ப நிதியை நல்கினனென்க. (௩0௧)

331. திருமகற்பெற்றெனச்செம்பொற்குன்றெனப்
பெருநலநிதிதலைதிறந்துபீடுடை
யிருநிலத்திரவலர்க்கார்த்தியின்னணஞ்
செருநிலம்பயப்புறச்செல்வன்செல்லுமே.

பெற்றென ஆர்த்தி; எனவெனெச்சம் காரணகாரியப்பொருட்டு ; 'மருந்துதின்றெனப் பிணிநீங்கிற்று' என்றாற்போல. குன்றென-பெரிய. செருநிலம்பயப்புற - அரசன் போர்செய்த இந்நகர்தன்னிலே சீவகனும் போர் செய்து பிறந்தபயன் உறவேண்டி.

(இ - ள்.) செல்வன், திருமகனைப்பெறுதலாலே, கட்டியங்காரன் நல்கின பின்பு நிதியைப் பீடுடையஇரவலர்க்கு ஆர்த்தி, அம்மகன் போரிலே தன்பகையைவெல்லவேண்டி, மேலும் இங்ஙனம் கொடைக்கடன்பூண்டொழுகுமென்க.

" அருளிலர், கொடாமை வல்ல ராகுக" (புறநா. உஎ) என்றார்பிறரும். ஆழியாற் குலனுணர்தலின், அதற்குரியதொழிலே கருதினன் கந்துகனும்.()

வேறு.

332. நல்லுயிர்நீங்கலுநன்மாண்புடையதோர்
புல்லுயிர்தன்னொடுநின்றுழிப்புல்லுயிர்
கல்லுயிர்காட்டிற்கரப்பக்கலங்கவிழ்த்
தல்லலுற்றானுற்றதாற்றவுரைப்பாம்.

நல்லுயிர் - சச்சந்தன். புல்லுயிர் - பிள்ளை. கரப்ப, செய்விப்பதன்றொழில். கவிழ்த்த அல்லல்: இது காரணகாரியம்; கருவிக்கண் அடங்கும்; 'உண்டஎச்சில்' போல. 'உற்றது' என்று இறந்தகாலத்தாற் கூறினர், கதையை உட்கொண்டு.

(இ - ள்.) தேவி, தனது நல்லுயிர்நீங்குதலாலே புல்லுயிருடனேநின்ற விடத்து, அதனைக் காட்டிலே விதிமறைத்தலாலே, ஒருவன் மரக்கலம் கவிழ்த்தலால் அவனுற்ற வருத்தத்தைத் தான் காட்டிடத்தே உற்றவள், மேல் உற்றதனை முடிவுபோக உரைப்பாமெனத் தேவர் கூறினரென்க. (௩0௩)

333. பொறியறுபாவையிற்பொம்மெனவிம்மி
வெறியுறுகோதைவெறுநிலமெய்த
விறுமுறையெழுச்சியினெய்துவதெல்லா
நெறிமையிற்கூறநினைவினகன்றாள்.

பொறி - எந்திரம். பொம்மென - கடுக. 'எய்துவதெல்லாம்' என்றார், 'ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி, பன்மைக் காகு மிடனுமா ருண்டே"

(தொல். எச்ச. சூ. சுடு) என்றதனுல். செறிமை: மை, பகுதிப்பொருள் விகுதி.

(இ - ள்.) கோதை, விம்மிப் பாவைபோலே நிலனெய்துதலாலே, கூனி, அந்தத்திலும் ஆதியிலுமெய்தும் காரியத்தையெல்லாம் செறியாலே கூற, அவள் வருத்தத்தில்நின்றும் நீங்கினளென்க.

கனவால் ஆக்கமுமுளதென்று கருதிய தேவி மனங்கொள்ளும்படி கூனி தன்தெய்வத்தன்மையால் மேல்வருவனகூறலின், அதனை உட்கொண்டு 'நினை வின் அகன்றாள்' என்க. (ஙoச)

334. பெருமகற்காக்கம்பிறழ்வின்றிக்கேட்டே
திருமகடானினிச்செய்வதையெல்லா
மொருமனத்தன்னாயுரையெனவோடுந்
தெருமருதெய்வதஞ்செப்பியதன்றே.

ஏகாரம், ஈற்றசை. செய்வதை, வினைத்திரிசொல். இருவர்க்கும் ஒரு மனம். ஓடு, உடனிகழ்ச்சி. தெருமருதெய்வதம் - புதல்வன் அன்னப்பார்ப் பைப் பிரித்த தீவினையை உறுகின்ற தன்மையைத் தானோக்கி அதற்கு அவனை வேறோரிடத்துநீக்கித் தேவியைத் தனியேகொண்டுபோகின்றதற்கு வருந்து கின்றதெய்வம். செப்பியது - கணவனையிழந்தார்க்கு நோன்புகடனாதலின், அதற்கு இயைவதொருகருமம் தேவிக்குக்கூறிற்று.

(இ - ள்.) மகனுக்கு ஆக்கம் பிறழ்வின்றாகக்கேட்டுத் தேவிதான், இனி யான்செய்யுங்காரியங்களெல்லாம், அன்னாய், உரையாயென்னுதலோடும், தெய்வம் துணிந்து செப்பிற்றென்க.

அது மேற்கூறுகின்றார். (ஙoரு)

335. மணியறைந்தன்னவரியறலைம்பாற்
பணிவருங்கற்பிற்படைமலர்க்கண்ணாய்
துணியிருட்போர்வையிற்றுன்னுபோகி
யணிமணற்பேர்யாற்றமரிகைசார்வாம்.

(இ - ள்.) நீலமணியிலே அறலையழுத்தியன்ன ஐம்பாலினையும் உலகெல் லாம் நினைதலேவலிலே வருதற்குக்காரணமான கற்பினையுமுடைய படை போ லுங் கண்ணாய், இருளாகிய போர்வையிலே மறைந்துபோய், அமரிகையென் னும்பேர்யாற்றில் அணிமணலிலே அயாவுயிர்ப்பாம்; அதனைத் துணியென்று ளென்க.

பகைநிலத்தை இருளிலே கழிவாமென்றாள். (ஙoசு)

336. (க) அமரிகைக்கோசனையைம்பதுசென்றாற்
குமரிக்கொடிமதிற்கோபுரமூதூர்
தமரியலோம்புந்தரணிதிலக
நமராதுமற்றதுநண்ணலமாகி.

337. (உ) வண்டார்குவளையவாவியும்பொய்கையுங்
கண்டார்மனங்கவர்காவுங்கஞலிய
தண்டாரணியத்துத்தாபதப்பள்ளியொன்
றுண்டாங்கதனுளுறைகுவமென்றாள்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) ஓசனை, வடசொற்சிதைவு. குமரிமதில். உலகிற்கெல்லாம் தமராம் இயல்பை நடத்தும். தேவி நோற்றற்குத் தாபதப்பள்ளிவேண்டுதலானும், அரசனை அமரில் நீத்துப் புதல்வனைப் புறங்காட்டில் நீத்துத் தமரிடத்துச் சேறல் ஆகாமையானும், கூனி, 'நண்ணலமாகி' என்றாள்.

(உ) வாவி - யாற்றிலோடை. பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. ஆங்கு, உவமவுருபு.

(இ - ள்.) அந்த அமரிகைக்கு ஐம்பதுயோசனைபோனால் தரணிதிலகமென்னும் மூதூர் நமரது; அதனைச் சேரேமாய், மற்று வாவியும் பொய்கையும் காவும்நெருங்கிய தண்டகாரணியமென்கின்ற வனத்தே ஒருதாபதப் பள்ளி உண்டு; அதனிடத்தே அவர் உறைகின்றாற்போல உறைகுவமென்றாளென்க. (ஙoஎ-அ)

338. (க) பொருளுடைவாய்மொழிபோற்றினள்கூற
மருளுடைமாதர்மதித்தனளாகி
யருளுடைமாதவரத்திசைமுன்னி
யிருளிடைமின்னினிலங்கிழைசென்றாள்.

வேறு.

339. (உ) உருவமாமதிவாண்முகத்தோடிய
விருவிலும்மெறிமாமகரக்குழைத்
திருவிலும்மிவைதேமொழிமாதரைப்
பொருவினீளதர்போக்குவபோன்றவே.

வேறு.

340. (ங) சிலம்பிரங்கிப்போற்றிசைப்பத்திருவிற்கைபோய்மெய்காப்ப
விலங்குபொற்கிண்கிணியுங்கலையுமேங்கவெறிவேற்கண்
மலங்கமணிமலர்ந்தபவளக்கொம்புமுழுமெய்யுஞ்
சிலம்பிவலந்ததுபோற்போர்வைபோர்த்துச்செல்லுற்றாள்.

341. (ச) பஞ்சியடரணிச்சநெருஞ்சியீன்றபழமாலென்
றஞ்சுமலரடிகளரங்கண்டன்னவருங்காட்டுட்
குஞ்சித்தசைந்தசைந்துகுருதிகான்றுவெய்துயிரா
வஞ்சியிடைநுடங்கமயில்கைவீசிநடந்ததே.

வேறு.

342. (ரு) தடங்கொடாமரைத்தாதுறைதேவியுங்
குடங்கைபோலுண்கட்கூனியுங்கூர்ம்பரற்
கடங்களும்மலையுங்கடந்தார்புன
லிடங்கொள்யாற்றகமெய்தினரென்பவே.

இவை ஐந்தும் ஒருதொடர்.

(க) மருளுடைமாதர்-மயக்கந்தீர்ந்தமாதர். கேளிரைக்கண்டால் துன்பம் மிகுமாதலின், தமரிடைச் (சீவக. ௩௩௬) சேறலாகாதென்றும் நோற்பலென்றும் யான் கருதியதனையே கூறினளென்றது அவளேகூறினளாகக் கொண்டமைதோன்ற 'மதித்தனளாகி' என்றார். புதல்வற்பயந்த புனிறுதீராது (மணி. எ: எ௫) இராத்திரியிற் சேறலரிதென்றுகருதித் தெய்வம் தன்தெய்வத்தன்மையாற் கொண்டுபோகின்ற விரைவுதோன்ற, 'மின்னின்' என்றார்.

(உ) முன்புநிறைமதிபோலும் முகத்தில் ஒளி, இப்பொழுது வருத்தத்தாற் கெட்ட கரியவொளி; "இருங்கண்யானை" (பதிற்) போல. பொருவில்-வெம்மையால் ஒப்பில்லாத. அதர்போக்குவ-வழிபோக்குவ; விளக்கு; ஆகுபெயர்.

(௩) வில்லென்னும்பெயர்பற்றி, விற்படை பக்கத்தே காப்பவென்றார். கண்மலங்க - தனியேபோதற்கு அஞ்சிச்சுழல; வலம்புரிசலஞ்சலம்வளை இய தொத்தவளாதலின் (சீவக. க அச) மணியைப்பூத்ததொரு பவளக்கொம்பைச் சிலம்பிசூழ்ந்ததுபோல மெய்முழுதும் போர்வையாலே மறைத்து.

(௪) 'ஈன்ற' என்றார், பழத்தின்செருக்கால். அரம் - வாளரம். குஞ்சித்து-குந்தி. வெய்துயிரா மயில். நடந்ததே - நடந்தித்தன்மையே; ஏகாரம், தேற்றம். பஞ்சிஅடரையும் அனிச்சத்தையும் நெருஞ்சிப்பழமென்றுகருதிக் குஞ்சித்து அசைந்தசைந்து குருதிகான்று அஞ்சும் மலரடியென்க. கைவீசியென்று வருந்தாமைகூறினர்.

(௫) புனலிடங்கொண்ட -நீரறாத. என்ப, அசை.

(இ - ள்.) கூனி, மொழிகளை விரும்பினளாய்க்கூற, அதனை மாதர் மதித்தனளாய் மாதவரிருக்கின்ற அத்திசையைக்கருதிப் போர்வைபோர்த்து அருங்காட்டிலே இடைநுடங்கக் கையைவீசி நடைக்குவருந்தாததொரு மயில் நடந்ததன்மையே மலரடிகளாலே செல்லலுற்றாள்; அப்பொழுது, இருவிலும் திருவிலும் மாதரை இரவிடை வழிபோக்கும் விளக்குப்போன்றன; அவ்விளக்கிலே கூனியொழிய வேறொருவரின்மையின், கண் அலமருதலாற் சிலம்பு இசைப்பத் திருவிற்காப்பக் கிண்கிணியும் கலையுமேங்கக் கடங்களும் மலையுங்கடந்து அந்த இலங்கிழை மின்போலச்சென்றாள்; இங்ஙனஞ்சென்ற தாதுறைதேவியும் அவளுக்கு ஏற்பச்சென்றகூனியும் பின்னர் யாற்றிடைக் குறையைச் சேர்ந்தாரென்க. (௩0௬-௩௫)

343. எல்லையெய்தியவாயிரச்செங்கதிர்
மல்லன்மாக்கடற்றோன்றலும்வைகிருட்

டொல்லைநல்வினைமுற்படத்தோன்றிய
வல்லல்வெவ்வினைபோலவகன்றதே.

எய்திய எல்லை. மல்லல் - மணிமுதலியவள்ள்.

(இ-ள்.) எய்தின அளவிலே, ஒருவர்க்கு நல்வினைவந்துதோன்ற அதற்கு முன்னே தோன்றிநின்ற தீவினை அகலுமாறுபோல, உலகம் பகற்பொழுதைப் பெறவேண்டிக் கதிர் கடலிற்றோன்றின அளவிலே இருள் அகன்றதென்க. ()

344. நுணங்குநுண்கொடிமின்னொர்மழைமிசை
மணங்கொள்வார்பொழில்வந்துகிடந்ததொத்
தணங்குநுண்டுகின்மேலசைந்தாளரோ
நிணங்கொள்வைந்நுதிவேனெடுங்கண்ணினாள்.

மிகவும்நுண்ணிய ஒழுங்குபட்டமின். அணங்கும் - இழைதெரியாது வருந்தும்.

(இ - ள்.) கண்ணினாள், அவ்வாற்றிடைக்குறையிற் பொழிலிலே வந்து, மஞ்சிலே ஒருமின்கிடந்த தன்மையையொத்து, துகிலின்மேலே கிடந்தாளென்க. (௩கரு)

345. வைகிற்றெம்மனைவாழியபோழ்தெனக்
கையினானடிதைவரக்கண்மலர்ந்
தையவோவென்றெழுந்தனளாய்மதி
மொய்கொள்பூமிமுளைப்பதுபோலவே.

தெய்வம்,கூனிவடிவாய்நிற்றலின், தன்மொழிநீகேற்ப அடி தைவந்தது. ஈண்டு அரசனைக் கனவிற்கண்டு அது நனவாகாமையின், 'ஐயவோ' என்றாள்; ஓ, இரக்கக்குறிப்பு. ஆய்மதி - ஒளியற்றமதி. அதுவும் உதயத்தே தோன்றும். மொய்கொள் - அணுச்செறிந்த.

(இ - ள்.) அப்பொழுது, கூனி, எம்மன்னாய், வாழ்வாயாக; பொழுது வைகிற்றென்று அடியைத்தடவ, கண்ணைவிழித்து ஐயவோவென்று மதி பூமியிலே முளைப்பதுபோல எழுந்தாளென்க.

முகமெடுத்தற்கு உவமை. அன்னை, ஈண்டு முறைப்பெயரன்மையின், "அன்னையென்னை" (தொல். பொருளியல், ருஉ) என்னும் பொருளியற் சூத்திரத்தாற்கொள்க. (௩கசு)

346. தூவியஞ்சிறையன்னமுந்தோகையு
மேவிமென்புனமானினமாதியா
நாவிநாறெழின்மேனியைக்கண்டுகண்
டாவித்தாற்றுகிலாதழுதிட்டவே.

(இ-ள்.) அதனைக்கண்டு மானினமுதலாக அன்னமுந்தோகையும்மேவி எழின்மேனியைக்கண்டு கொட்டாவிகொண்டு ஆற்றாது அழுதிட்டனவே; தமக்கு இவை இயல்பாகக் காலையிற்செய்தனவல்லவென்க.

ஏகாரம், தேற்றம். (௩கஎ)

347. கொம்மைவெம்முலைப்போதிற்கொடியனு
ளும்மைநின்றதொரூழ்வினையுண்மையா
லிம்மையிவ்விடருற்றனளெய்தினுள்
செம்மைமாதவர்செய்தவப்பள்ளியே.

கொம்மை - பெருமை. செம்மை - செவ்வை.

(இ - ள்.) அவை வருந்தினபின், பால்சுரத்தற்கு வெவ்விதாகிய முலையினையுடைய திருவனுள், முற்பிறப்பிற்செய்த தீவினையுள்ளதாதலால் இப்பிறப்பில் இவ்வருத்தமுற்முள்; அது நீங்குதலாலே மாதவர் தவஞ்செய்கின்ற பள்ளியைச்சேர்ந்தாளென்க. (௩கஅ)

வேறு.

348. வாளுறைநெடுங்கணுளைமாதவமகளிரெல்லாந்
தோளுறப்புல்லுவார்போற்ருெக்கெதிர்கொண்டுபுக்குத்
தாளுறுவருத்தமோம்பித்தவநெறிப்படுக்கலுற்று
நாளுறத்திங்களூரநல்லணிநீக்குகின்முர்.

வாளின்றன்மை முன் தங்கியகண்ணுளை. மாதவஞ்செய்வார்க்குப் புல்லலாகாமையின், 'புல்லுவார்போல்' என்முர். வருத்தம் தேவிக்கு இன்றென்பது உணராது இக்காட்டில்வருவார்க்கு வருத்தமுளதென்று தாம் கருதி ஓம்பினுர். மேல் தவத்திற்சேறற்கு நெறியாகிய நோன்பை உண்டாக்கலுற்று. கணவனை இழந்ததற்கும் புதல்வன் வாழ்தற்கும் பொருந்தியநோன்பு. நல்லநாள்வந்துபொருந்த. நாடோறும் திங்கள் ஒருகலை ஏருநிற்க.

(இ - ள்.) மகளிரெல்லாம் தொக்குக் கண்ணுளைப் புல்லுவாரைப்போல் எதிர்கொண்டுபுக்கு ஓம்பி அவள்கருத்தறிந்து படுக்கலுற்று உற ஊற நீக்குகின்முரென்க.

தேவி நீக்குகின்றவற்றைஅவர்மேலேற்றினுர், ஏவினுரைக்கருத்தாவாக; 'அரசரெடுத்த தேவகுலம்' போல. (௩கக)

வேறு.

349. திருந்துதகரச்செந்நெருப்பிற்றேன்ருேய்த்தமிர்தங்கொளவுயிர்க்குங்
கருங்காழகிலினறும்புகையிற்கழுமிக்கோதைகண்படுக்குந்
திருந்துநானக்குழல்புலம்பத்தேனும்வண்டுமிசைப்புலம்ப
வரும்பொன்மாலையலங்கலோடாரம்புலம்பவகற்றினுள்.

தகரவிறகாலாக்கினநெருப்பிலே தேன்ருேய்த்திட்ட அகிலினது இனிமை கொள்ள நாறும்புகையிலே மயங்கிக் கண்படுக்கும் கோதை.

(இ - ள்.) கோதைபுலம்ப, தேனினமும் வண்டினமும் தாதுதாமையின் இசைக்குப்புலம்ப, பொன்னரிமாலையும் நெற்றிமாலையும் தலைக்கோலமாகியமுத்தும் புலம்ப, இவற்றைக் குழலினின்று அகற்றினுளென்க. (௩உ௦)

350. திங்களுகிரிற்சொலிப்பதுபோற்றிலகம்விரலிற்ருனீக்கிப்
பைம்பொன்மகரகுண்டலமும்பாவைகழுத்தினணிகலமும்
வெங்கண்வேந்தற்கமிர்தாகிவேற்கட்பாவைபகையாய
வங்கண்முலையினணிமுத்துமரும்பொற்பூணுமகற்றினுள்.

சொலிப்பது - இடப்பது. சிதைப்பதும் பாடம். இன்பத்தால் அவனைக் கெடுத்தலின், தனக்குப்பகையாயமுலை.

(இ - ள்.) பாவைதான், திலகத்தை விரலாலேநீக்கி, குழையையும் குண்டலத்தையும் கழுத்தின் அணிகலங்களையும் முலையில் அணிந்தமுத்தையும் பூணையும் நீக்கினாளென்க. (கூ௫க)

351. பஞ்சியனையவேய்மென்றோட்பகுவாய்மகரங்கான்றிட்ட
துஞ்சாக்கதிர்கொடுணைமுத்தந்தொழுதேனும்மையெனத்துறந்து
வஞ்சிவருத்துநுசுப்பினாள்வளைகையுடைத்துமணிக்காந்த
ளஞ்சச்சிவந்தமெல்விரல்சூழரும்பொனாழியகற்றினாள்.

அங்காந்த வாயினையுடைய மகரங்கான்ற மாறாத கதிரையுடைய பலவடம்சேர்ந்தமுத்தம். அரசன் நீங்காமல் முயங்குதற்குக் காரணமாய்த் தன்னைக் கெடுத்தலின், 'தொழுதேன்' என்றாள். வளைகழற்றுதல் அரிதாதலிற் கையாலுடைத்தென்றார். மணி - அழகு.

(இ - ள்.) நுசுப்பினாள், நும்மைத் தொழுதேனென்று தோளின் முத்தத்தைத் துறந்து, வளையை உடைத்துப் பின்பு, விரலைச்சூழ்ந்த ஆழியை அகற்றினாளென்க. (கூ௫௨)

352. பூப்பெய்செம்பொற்கோடிகமும்பொன்னாலவட்டமு
மாக்குமணிசெய்தேர்த்தட்டுமரவின்பையுமடுமல்குல்
வீக்கிமின்னுங்கலையெல்லாம்வேந்தன்போகியரம்பையரை
நோக்கிநும்மைநோக்கானீர்நோவாதொழிமினெனத்துறந்தாள்.

'நோக்கி' என்றார், மெய்யுறுபுணர்ச்சியின்றி நோக்கால் நுகர்தலின். நும்மைநோக்கான்-நும்மாலுள்ளபயனைக் கொள்ளான். இஃது, இரண்டன் மருங்கின் நோக்கனோக்கமாதலின், ஏதுவாயிற்று.

(இ - ள்.) தேவி, வேந்தன்போய் அரம்பையரைநுகர்தலாலே நும்மை நோக்கானுதலால் நீர் என்னைவெறுதே நீங்குவீராகவென்றுசொல்லி, பூந்தட்டையும் ஆலவட்டத்தையுந் தேர்த்தட்டையும் பையையும் அடுகின்றஅல்குலிலே வீக்கி இன்பத்தையாக்குங் கலைகளெல்லாவற்றையும் துறந்தாளென்க.

மணியாலேசெய்தமைக்குந்தேருமாம். (கூ௫௩)

353. பிடிக்கைபோலுந்திரள்குறங்கினணியுநீக்கிப்பிணையன்னா
ளடிக்கிண்கிணியுமஞ்சிலம்பும்விரன்மோதிரத்தோடகற்றியபின்
கொடிப்பூத்துதிர்ந்ததோற்றம்போற்கொள்ளத்தோன்றியணங்கலற
வுடுத்தாள்கற்றோய்நுண்கலிங்கமுரவோர்சிறுவனுயர்கெனவே.

கொடிப்பூத்துதிர்ந்த, ஒற்றுமையாற் சினைவினைமுதன்மேலேற்றினார். அலற- வருந்த. கல் - நற்செங்கல். உரவோன் - அறிவுடையோன். 'உயர்க' என்றார், நோன்பின்பயன் அதுவாகலின்.

(இ - ள்.) பிணையன்னாள், குரங்கிற்செறிந்த அணியையும்நீக்கி, கிண்கிணியையும் சிலம்பையும் காலாழியுடன் அகற்றியபின்பு, பூத்துதிர்ந்ததோற்றம்போல் தோன்றி, கூனிவருந்தச் சிறுவன் உயர்கவென்று கலிங்கத்தை உடுத்தாளென்க.

உரவோன்சிறுவனென்றாள், பகையைவெல்லப் பிறந்தமைகருதி. (௩௨௪)

வேறு.

354. பாலுடையமிர்தம்பைம்பொற்கலத்திடைப்பாவையன்ன
நூலடுநுசுப்பினல்லாரேந்தவுநேர்ந்துநோக்காச்
சேலடுகண்ணிகாந்தட்டிருமணித்துடுப்புமுன்கை
வாலடகருளிச்செய்யவனத்துறைதெய்வமானாள்.

அமிர்தம் - அடிசில். நேர்ந்தேந்தவும்-இவள் உணவொழிந்தாளென்று வலிய எடுக்கவும். உணவொழிந்து நுகர்ச்சியே நிகழ்ந்தமையின், நோக்காத என்றார். முன்பு திருமணியையுடைய கை. அருளி - அருள. செய்ய-சிவந்த.

(இ-ள்.) உடுத்தபின், நுசுப்பினையுடைய பாவையன்னநல்லார் நேர்ந்து கலத்தே அமிர்தத்தை ஏந்தவும் நோக்காத கண்ணி, காந்தட்டுடுப்புப்போலும் தன்கை தானே அடகையருளஅதனை நுகர்ந்து, இல்லுறைதெய்வமன்றி வனத்தேயுறைவதொரு செய்யதெய்வமானாளென்க. (௩௨௫)

355. மெல்விரன்மெலியக்கொய்தகுளநெல்லும்விளைந்தவாம்ப
லல்லியுமுணங்குமுன்றிலணில்விளித்திரியவாமான்
புல்லியகுழவித்திங்கட்பொழிகதிர்க்குப்பைபோலு
நல்லெழிற்கவரியூட்டநம்பியைநினைக்குமன்றே.

மெலிய என்றார், தவமகளிர்கொய்தலின். விளித்திரிய - கத்திக்கெட. கதிர்க்குப்பைபோலுமெழிலென்றார், சாமரத்தால்.

(இ - ள்.) நெல்லும் அல்லியும் உணங்கும் முன்றிலிலே அணில் இரியும்படி ஆமான்குழவியைப் புல்லிய கவரிமா, அதற்கு முலையையூட்டத் தேவி, நம்பி பிறர்முலையை உண்டு வளர்கின்றபடியை நினைக்குமென்க.

"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை" (தொல். மரபு. சூ. கசு) என்றதனுள், 'கொடை' என்றதனன், ஆமான் குழவியுங்கொண்டவாறுணர்க. (௩௨௬)

356. பெண்மைநாண்வனப்புச்சாயல்பெருமட்மாதுபேசி
னெண்மையினெருங்குகூடியுருவுகொண்டனையநங்கை
நண்ணியநுங்கட்கெல்லாமடைக்கலமென்றுநாடுங்
கண்ணியகுலனுந்தெய்வங்கரந்துரைத்தெழுந்ததன்றே.

பெண்மை-அமைதித்தன்மை. மடம்-கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை. மாது - காதல்; உரிச்சொல் ஈறுதிரிந்தது. இவட்குள்ள அமைதித் தன்மைமுதலியவற்றைக் கூற நினைத்தேமாயின், அவை தமக்கு விளக்

கவ் காரணமாகச்சேரக்கூடி ஒருவடிவுகொண்டாற்போலும் நங்கை, எல்லாம் நண்ணிய நுங்கட்கு - நற்குணமெல்லாம்பொருந்திய நுமக்கு.

(இ - ள்.) அவ்வளவிலே தெய்வம், நங்கை நுங்கட்கு அடைக்கலம் ; இவளைக் காத்தல்வேண்டுமென்றுகூறிப் பின்பு, நாட்டையும் குலத்தையும் வேறுபெயர்படக் கூறிப் போதற்கு ஒருப்பட்டதென்க. (நுஉஎ)

வேறு.

357. உறுதிசூழ்ந்தவளோடையினுயிடை
மறுவில்வெண்குடைமன்னவன்காதலஞ்
சிறுவன்றன்மையைச்சேர்ந்தறிந்திவ்வழிக்
குறுகவம்மெனக்கூனியைப்போக்கினாள்.

ஆயிடை-இராசமாபுரத்திடை. சேடியை வம்மென்று உயர்த்துக்கூறினாள் ; தான் நிற்கின்ற தவநிலைக்கேற்ப.

(இ-ள்.) அங்ஙனம் போதற்கு ஒருப்பட்ட தெய்வத்தின்நெஞ்சம் இவ்விடத்து இவட்கு ஆம் உறுதிகளைச்சூழ்ந்து தான் உறைகின்ற இடத்தே சேறலான் அதற்கேற்பத் தெய்வம் தன்தெய்வத்தன்மையால், தேவிக்கும் அக்கருத்தேபிறப்பிக்கத்தேவியும் ஆயிடைச்சேர்ந்து சிறுவன்செய்தியை அறிந்து இவ்விடத்தே அணித்தாக வம்மென்று அத்தெய்வத்தைப் போகவிட்டாளென்க. (நுஉஅ)

358. நெஞ்சினொத்தினியாளையென்னீர்மையால்
வஞ்சித்தேனெனவஞ்சியங்கொம்பனாள்
பஞ்சிமெல்லடிப்பல்கலனார்ப்பச்சென்
றிஞ்சிமாநகர்த்தன்னிடமெய்தினாள்.

நெஞ்சினொத்து - யான்கருதியதே தானுங்கருதி. வஞ்சித்தல், அறிந்து வருகின்றேனென்றது.

(இ - ள்.) அப்பொழுது கொம்பனாள், இனியாளை எனதுதெய்வத்தன்மையாலே வஞ்சித்தேனென்றுவருந்தி, கலன் ஆர்ப்பச்சென்று இராசமாபுரத்திற் புறங்காட்டைச்சேர்ந்தாளென்க. (நுஉகூ)

359. தானுந்தன்னுணர்விற்றளர்ந்தாற்றவு
மானினோக்கிவரும்வழிநோக்கிநின்
றூனியம்பலவாசையிற்செல்லுமே
தேனியம்புமொர்தேம்பொழிற்பள்ளியே.

மானின் : இன், சாரியை.

(இ-ள்.) மானோக்கிதானும், தெய்வமென்றறியாத பெண்ணுணர்வாலே மிகவுந்தளர்ந்து, பள்ளியிடத்தே, அவள்வரும்வழியை நோக்கிநின்று, பல இரவும்பகலும் இன்றுவரும் இன்றுவருமென்னும் ஆசையிலே நடவாநிற்குமென்க. (நுநுo)

வேறு.

360\. மட்டவிழ்கோதைவாளனவுண்கண்மயிலன்னாள்
கட்டழலெவ்வங்கைம்மிகநீக்கிக்களிகூர
விட்டகல்வாற்றாவேட்கையினோடும்பொழுதிப்பாற்
பட்டதையெல்லாம்பல்லவர்கேட்கப்பகர்குற்றேன்.

அழல்போலெவ்வம். அகல்வு - அகற்சி. இன், சாரியை. பகர்கு, தன்மைச்சொல்.

(இ - ள்.) சுநந்தை, பிள்ளையையிழந்த துன்பத்தைச் சிறிதும் நில்லாதபடி போக்கிக் களிப்புமிகுதலாலே ஒழிந்தோர்க்கும் பிள்ளையை விட்டு நீங்க மாட்டாத வேட்கைநடக்கின்ற இராப்பொழுதிற்குப்பின்பு, பிள்ளையுற்ற காரியங்களையெல்லாம், பலருங்கேட்கும்படி கூறவேனாகத் தொடங்கினேனென்றாரென்க.

என்றது, தம்மாற் சரிதங்கூறுதல் அரிதாகலின். இனி வேட்கையாற் கடுகக்கழியும்பொழுதென்றுமாம். (௩௬௧)

361\. கூற்றம்மஞ்சங்கொன்னுனையெஃகின்னிளையானு
மாற்றம்மஞ்சும்மன்னியகற்பின்மடவாளும்
போற்றித்தந்தபுண்ணியர்கூடிப்புகழோனைச்
சீற்றத்துப்பிற்சீவகனென்றேபெயரிட்டார்.

கொன்னுனை, வினைத்தொகை. சொல்லப்புகின், சொல்லும் அஞ்சும் கற்பு. சீவகன், சீவித்தலையுடையவனென்று தெய்வம் வாழ்த்தினமையின், அப்பெயரேயாயிற்று.

(இ - ள்.) இளையானும் மடவாளும் விரும்பிக்கொண்டுவந்த பார்ப்பார் சான்றோருள்ளிட்டோருங்கூடிச் சீற்றத்துப்பிற்புகழோனைச் சீவகனென்றே பெயரிட்டாரென்க. (௩௬௨)

362\. மேகம்மீன்றமின்னனையாடன்மிளிர்பைம்பூ
ணாகம்மீன்றவம்முலையின்பாலமிர்தேந்தப்
போகம்மீன்றபுண்ணியனெய்தகணையேபோன்
மாகம்மீன்றமாமதியன்னான்வளர்கின்றான்.

முலை, எழுவாய். போகமீன்ற - தான் சத்தியுஞ் சிவனுமாய் உலகத்துக்கெல்லாம் போகத்தை உண்டாக்கின. 'புண்ணியன்'என்றார், திரிபுரத்தையழித்தும் நஞ்சுண்டும் பல்லுயிர்களையுங்காத்தலின். எய்தகணை - திருமால். கணை வளருமாறுபோல வளர்கின்றானெனவே, அவன் ஆய்ப்பாடியிலே நந்தகோன்மனையிலே மறையவளர்ந்தது உவமையாம்.

(இ - ள்.) மதியன்னான், மின்னனையாளது ஆகமீன்றமுலை இனிய பாலமுதத்தையேந்தப் புண்ணியனெய்தகணை நந்தகோன்மகனாய்வளருமாறு போலக் கந்துகன்மகனாய் வளர்கின்றானென்க.

மா - ஈண்டு அழகு. மதி - பிறை. (௩௬௩)

363. அம்பொற்கொம்பினுயிழையைவர்நலனேம்பப்
பைம்பொற்பூமிப்பல்கதிர்முத்தார்சகடம்முஞ்
செம்பொற்றேரும்வேழமுமூர்ந்துநிதிசிந்தி
நம்பன்செல்லுநாளினுநாளுநலமிக்கே.

ஐவர்: ஆட்டுவாள், ஊட்டுவாள், ஓலுறுத்துவாள், நொடிபயிற்றுவாள், கைத்தாய். நிதிசிந்தி: குழவிப்பருவத்தும் கொடையியல்பு. நாளின்: இன், சாரியை.

(இ - ள்.) நம்பன், ஐவர் எல்லாநலத்தையும் பேணுசிற்க, அவ்விடத்தே சகடத்தையும் தேரையும் வேழத்தையும் தன்கையாற்செலுத்திச் சிந்தி நாடோறும் நாடோறும் நலமிக்குச்செல்லுமென்க. (ஙஙச)

364. பல்பூம்பொய்கைத்தாமரைபோன்றும்பனிவானத்
தெல்லார்கண்ணுமின்புறவூரும்மதிபோன்றுங்
கொல்லுஞ்சிங்கக்குட்டியும்போன்றிவ்வுலகேத்தச்
செல்லும்மன்னேசீவகன்றெய்வப்பகைவென்றே.

ஒழிந்தோரிற்சிறந்தமையின், தாமரையுவமம். வானிடத்துத் தேவர்முதலாயினாரிடத்தும் இன்பமுறப் பரக்கின்ற மதியாவது, அறிவு; அதுதான் ஒரு வடிவுகொண்டாற்போன்றும். "குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்" (தொல். மரபு. சூ. ௪௦) என்றதனுள் 'கூற்று' என்றதனால், புலிமுதலியவற்றிற்குக் கூறிய இளமைப்பெயர் சிங்கத்திற்குக்கொண்டார். தெய்வப்பகை- வாலசிகிற்சையிற் கூறுகின்ற தெய்வப்பகை. ஓ, அசை.

(இ-ள்.) சீவகன் பகையை மிகவும் வென்று உலகேத்தும்படி தாமரை முதலியனபோன்று செல்லுமென்க. (ஙஙரு)

365. மணியும்முத்தும்மாசறுபொன்னும்பவளம்மு
மணியும்பெய்யும்மாரியினேற்பார்க்கவைநல்கிக்
கணிதம்மில்லாக்கற்பகங்கந்துக்கடனொத்தா
னிணைவேலுண்கணந்தையுமின்பக்கொடியொத்தாள்.

(இ-ள்.) தமக்கு வேண்டும்பொருள்களை வேண்டாமல் ஏற்பார்க்கு அப் பொருள்களைப்பெய்கின்றமாரிபோலே நல்கி ஓரளவிற்படாத கந்துகன், பின்பு, வேண்டியேற்பார்க்கு நல்கிக் கற்பகமொத்தான்; சுநந்தையும் அதன்மேற் படர்ந்த காமவல்லியையொத்தாளென்க.

கார் வேண்டாமைக்கொடுத்தலும் கற்பகம் வேண்டக்கொடுத்தலு மியல்பு. நல்கி இல்லாவென்க. நந்தை, தலைக்குறை. இது சௌளத்திற்கு முன்புள்ள கருமங்களிலும் நாடோறும்நடத்தும் கருமங்களிலும் கொடைக் கடன் அமர்ந்தமைகூறினார். (ஙஙசு)

366. சாதிப்பைம்பொன்றன்னொளிவௌவித்தகைகுன்று
நீதிச்செல்வம்மேன்மேனீந்திநிறைவெய்திப்

போதிச்செல்வம்பூண்டவரேத்தும்பொலிவின்னு
லாதிக்காலத்தந்தணன்காதன்மகனெத்தான்.

சாதிப்பைம்பொன் றன்னொளிவெளவி: இதனல் நிறம்பிறந்தமை கூறினார். நீதிச்செல்வம் - சௌளம். மேன்மேல்நிறைவெய்தி - முறையே நாமகளைப்புணரும்பருவம்நிறைந்து. அந்தணன்மகன்-சுவாயம்புமனு; இயல்பான அறிவிற்குவமை. இனித் தீர்த்தங்கரரில் ரிஷபஸ்வாமிமகன் பரத ராச சக்கரவர்த்தியென்றுமுரைப்பர்.

(இ - ள்.) ஒளியைவெளவிச் செல்வநீந்தி நிறைவெய்துதலின், அறிவாகிய செல்வத்தைப் பூண்டவரேத்தும் பொலிவாலே அந்தணன்மகனெத்தானென்க.

க்ஷத்திரியனுக்கு வைதிகம்வேண்டுதலின், சௌளத்திற்குமுன்புள்ள கன்மமும் சௌளமுங்கூறினமையான், மேலும் உபநயனமுதலியனவும் விரியக்கூறுராயினும் அவ்விடங்களிலே குறிப்பானுணர்க. (௩௬௭)

வேறு.

367. நனந்தலையுலகின்மிக்கான் னுதன்மகளிர்தங்கண்
மனந்தளைபரியநின் றமதலைமையாடுகென்றே
பொனங்கொடியிறைஞ்சிநின் றுபூமகள்புலம்பிவைக
வனங்கனுக்கவலஞ்செய்யுமண்ணனற்ருயுரைத்தாள்.

மிக்க மகளிராவார் - விறன்மடந்தையும் புகழ்மடந்தையும். தளை-குவிதல். மனத்தினின்ற தளைப்பரிய - இவனைப் பெறுமாறு நினைந்துவருந்துகின்ற மனத்தினின்ற வருத்தம்நீங்க. நின்றமையாடுக-முறையேநின்ற மையோலை பிடிக்க.

(இ - ள்.) அண்ணல் நற்றாய், கொடிபோல இறைஞ்சிநின்று, மகளிர் தளைபரியத் திருமகள் சிறிதுநாள் தனித்துவைக மதலை மையாடுகவென்று உரைத்தாளென்க.

இது தன்றொழிலாதலிற் கூறினாள். தளைபரிய மையாடுகவென்றது, பல நூல்களைக்கற்கவே வெற்றியும்புகழுமுண்டாமென்று. செல்வச்செருக்கின்றி வழிபாட்டோடு கற்றலின் 'திருமகள்புலம்ப' என்றார். (௩௬௮)

368. முழவெனத்திரண்டதிண்டோண்மூரிவெஞ்சிலையினானு
மழலெனக்கனலும்வாட்கணவ்வளைத்தோளினாளு
மழலையாழ்மருட்டுந்தீஞ்சொன்மதலையைமயிலஞ்சாயற்
குழைமுகஞானமென்னுங்குமரியைப்புணர்க்கலுற்றார்.

யாழைமருட்டும் மழலைத்தீஞ்சொல். சாயற்குமரி; குழைமுகம், பூணையுந்தோற்றுவித்தது; குழையப்பண்ணுகின்ற முகமுடைய ஞானமென்னுங் குமரி. வேறு தன்கருத்தறிவாரின்றி இவனே தன்கருத்தறியத் தான் அழியாதிருத்தலின் 'குமரி' என்றார்.

(இ - ள்.) கந்துகனும் சுநந்தையும் மதலையை ஞானமென்னுங்குமரியைப் புணர்க்கக் கருதினரென்க.

'சாத்தனை நூலைக் கற்பிக்கலுற்ரூர்' என்ருற்போல. (௩௬௯)

369. அரும்பொனுமணியுமுத்துங்காணமுங்குறுணியாகப்
பரந்தெலாப்பிரப்பும்வைத்துப்பைம்பொன்செய்தவிசினுச்சி
யிருந்துபொன்னோலைசெம்பொனூசியாலெழுதியேற்பத்
திருந்துபொற்கண்ணியாற்குச்செல்வியைச்சேர்த்தினரே.

பரந்த, விகாரம். வைத்து - வைக்க.

(இ - ள்.) அவர்கள், பொன்முதலியன குறுணியென்கின்ற அளவாகப் பரந்த எல்லாப் பிரப்பரிசியையும் வைக்க, உவாத்திமுதலியோர் தவிசின் மேலேயிருந்து கண்ணியாற்குச் செல்வியை, மகளிரைச்சேர்த்துமாறன்றியே பொன்னோலையிலே அவள்பொருந்தும்படி எழுத்தாணியாலெழுதிச் சேர்த்தினரென்க. (௩௭௦)

370. நாமகணலத்தையெல்லாநயந்துடன்பருகிநன்னூ
லேமுதலாயவெல்லாப்படைக்கலத்தொழிலுமுற்றிக்
காமனுங்கனியவைத்தபுலங்கரைகண்டுகண்ணார்
பூமகள்பொலிந்தமார்பன்புவிமிசைத்திலகமொத்தான்.

சொல்லாற் கூறுவனவெல்லாம்அடங்குதற்கு 'எல்லாம்' என்ரூர். 'பருகி' எனவே தன்குலத்திற்குரிய வேதமும் அதிகரிக்கவேண்டுதலின், ஈண்டே உபநயனமுங்கூறினர். இது, "சாம கீதமற்றுமொன்று சாமி நன்கு பாடினன்" (சீவக. ௨0௩௮) என்பதனானும் பிறவாற்ருனுமுணர்க. ஏமுதலாய படைக்கலத்தொழிலுமுற்றி, எல்லாத்தொழிலும் முற்றியென்க. புலம், ஆகுபெயர்.

(இ - ள்.) மார்பன், நாமகள்நலத்தையெல்லாம் தான்விரும்பிச் சேரக் கற்று, தானோதிய தனுவேதத்திற்கூறிய அம்புமுதலிய படைக்கலங்களின் தொழில்களையும் எல்லாத்தொழில்களையும் முடித்து, காமனும் மனமுருகும்படி அந்நூலிற்கூறிவைத்த பாட்டினையும் கரைகண்டு, மண்மகளுக்கு நெற்றியிலிட்ட திலகத்தையொத்தானென்க.

இசைகூறவே கூத்தும் அடங்கும். முன் நூல்களைக் கற்றதற்கேற்பத் தொழில்களைக்கற்ருனென்ரூர். (௩௭௧)

371. மின்றெளித்தெழுதியன்னவிளங்குநுண்ணுசுப்பினல்லார்
பொன்றெளித்தெழுதியன்னபூம்புறப்பசலைமூழ்கிக்
குன்ருளித்தொழியநின்றகுங்குமத்தோளினுற்குக்
கன்ருளித்தகலவைத்தகறவையிற்கனிந்துநின்ரூர்.

மின்னை நிலைபெறநிற்கத் தெளிவித்து அதனிடத்தே மகளிர் அவயவங்களை எழுதியன்ன நல்லாரென்க; "தெளித்தசொற், றேறியார்க்கு" (குறள். ககுஅச) என்ருற்போல. இனி மின்னைக் கரைத்தெழுதியன்ன நல்லாருமாம்.

புறம் - தம்மெய்யிடம். ஒளித்து ஒழிய - ஒளித்துப்போக. கன்றைமறைத்து முலையுண்ணுதபடி வைக்கப்பட்ட கறவை.

(இ - ள்.) தோளினற்குத் தமது பூம்புறத்தில் தோன்றிய பொன்னைக் கரைத்தெழுதியன்ன பசலையிலே நல்லார் முழுகிக் கறவைபோல வேட்கை செறிந்துநின்றாரென்க.

இத்துணைற் குலக்கன்னியரைக் கூறினர். (ருசஉ)

372. விலைபகர்ந்தல்குல்விற்கும்வேலினும்வெய்யகண்ணார்
முலைமுகந்திளையர்மார்பமுரிவிலரெழுதிவாழுங்
கலையிகந்தினியசொல்லார்கங்குலும்பகலுமெல்லாஞ்
சிலையிகந்துயர்ந்ததிண்டோட்சீவகற்கரற்றியாற்ருர்.

அல்குல்விற்குங்கண் - அல்குலைவிற்றற்குக் காரணமான கண்; களவுகுடி கொள்ளுங்கண். இவர் பரத்தையரிற் கன்னியர். மார்பை முலையாலே முகந்து நீங்காது எழுதிவாழும் இனியசொல்லார் - போகநுகரும் பரத்தையர். சிலையிகந்து - சிலைக்குக்கூறுகின்ற நிலையைக் கடத்தலாலே.

(இ - ள்.) சீவகற்குக் கண்ணார், சொல்லார் எல்லாரும் இரவும்பகலும் அரற்றி ஆற்ருராயினரென்க.

இற்பரத்தையரும் சேரிப்பரத்தையருமாம். (ருசங)

373. வான்சுவையமிர்தவெள்ளம்வந்திவட்டொக்கதென்னத்
தான்சுவைக்கொண்டதெல்லாந்தனப்பறக்கொடுத்தபின்றைத்
தேன்சுவைத்தரற்றும்பைந்தார்ச்சீவககுமரனென்ற
வூன்சுவைத்தொளிரும்வேலாற்குறுதியொன்றுரைக்கலுற்ருன்.

கொண்டதெல்லாம், ஒருமைபன்மை மயக்கம்.

(இ - ள்.) சீவககுமரனென்ற வேலாற்கு ஆசிரியன் தான் நுகர்ந்த கலைகளையெல்லாம் தட்டறக் கொடுத்தபின்பு, வானிடத்தமிர்தக்கடல் வந்து நிறைந்ததென்னும்படி ஓர் உறுதிகூறலுற்ருனென்க.

தொக்கதென்னக் கொடுத்தபின்றையென்றுமாம். (ருசச)

374. நூனெறிவகையினேக்கிநுண்ணிதினுழைந்துதீமைப்
பானெறிபலவுநீக்கிப்பருதியங்கடவுளன்ன
கோனெறிதழுவிநின்றகுணத்தொடுபுணரின்மாதோ
நானெறிவகையினின்றநல்லுயிர்க்கமிர்தமென்ருன்.

ஆகமங்கூறிய வழியினது கூறுபாட்டாலே நன்மைதீமையை ஆராய்ந்து. கூரியபொருளிடத்தே நெஞ்சுசென்று. தீமைப்பானெறி - துன்மார்க்கம். நிறத்தாலும் இருணீக்கத்தாலும் ஞாயிறு உவமை. கோன் - அருகன். குணம் - இரத்தினத்திரயம்; அவையாவன: நன்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம். நானெறி - சதுர்க்கதி; அவையாவன: நரககதி, விலங்குகதி, மக்கட்கதி, தேவகதி. நல்லுயிர் - பவ்வியசீவன்.

(இ-ள்.) அவ்வன் நோக்கி நுழைந்து நீக்கிப் புணரின், நல்லுயிர்க்கு ஆக்க மென்றானென்க. (௩௪௫)

375. அறிவினாற்பெரியநீரா ரருவினைகழியநின்ற
நெறியினைக்குறுகியின்பநிறைகடலகத்துநின்றார்
பொறியெனும்பெயரவைவாய்ப்பொங்கழலரவின்கண்ணே
வெறிபுலங்கன்றிநின்றார்வேதனைக்கடலுணின்றார்.

தீவினை கழியநின்றநெறி - சன்மார்க்கம். இன்பநிறைகடல் - அனந்த சுகம். நிறைக்கடல் பாடமாயின், இன்பப்பெருக்கினையுடைய கடலென்க. வேட்கையாகிய நஞ்சையுடைய உடம்பென்னும் பாம்பிடத்திற் பொறியென் னும் பெயரையுடையவாகிய ஐந்துவாயிடத்தே களிப்பைச்செய்கின்ற விட யங்களிலே அடிப்பட்டுநின்றார்.

(இ - ள்.) பெரியநீரார் குறுகி இன்பக்கடலகத்தேநின்றார் ; கன்றிநின் றார் துன்பக்கடலிலே நின்றாரென்க. (௩௭௬)

376. கூற்றுவன்கொடியனாகிக்கொலைத்தொழிற்கருவிசூழ்ந்து
மாற்றரும்வலையைவைத்தான்வைத்ததையறிந்துநாமு
மோற்றவன்வலையைநீங்கிநுகர்ச்சியிலுலகநோக்கி
யாற்றுறப்போதறேற்றாமளியமோஒபெரியமேகாண்.

கருவி - ஐயும் பித்தும் வளியுமாகிய வார்கள். வலை - ஆயுக்கன்மம். நுகர்ச்சியிலுலகம் - இதற்குமுன்பு அனுபவியாத உலகம் ; வீடு. ஓஒ பெரி யம், இகழ்ச்சி.

(இ - ள்.) கூற்றுவன் கொடியனாய்ச் சூழ்ந்து வலையை விசிவைத்தான்; அதனை அறியத்தக்கநாமும் அறிந்து தவஞ்செய்து தப்பி உலகநோக்கி வழிப் படப்போதலைத் தெளிகிலேம் ; பெரியேங்காணென்க. (௩௭௭)

377. பேரஞரிடும்பையெல்லாம்பிளந்திடும்பிறப்புநீக்கு
மாரமிர்தரிதிற்பெற்றாமதன்பயன்கோடறேற்றா
மோருமைம்பொறியுமோம்பியுளபகல்கழிந்தபின்றைக்
கூரெரிகவரும்போழ்திற்கூடுமோகுறித்தவெல்லாம்.

(இ-ள்.) இடும்பையெல்லாம்நீக்குதற்குக் காரணமான, பிறப்பறுக்கும் மக்கள்யாக்கையைத் தவப்பயனாற்பெற்றாம்; பெற்றுவைத்தும் அதன்பயனைக் கொள்ள அறிகின்றிலேம்; ஐம்பொறிகளையும் ஐம்புலன்களாலே பேணி உள்ள நாள்சென்றால் எரிகவரும்பொழுது நினைத்த அறமெல்லாம் செய்யக்கூடு மோ ! ஓர்ந்துபாருமென்க. (௩௭௮)

378. தழங்குரன்முரசிற்சாற்றித்தத்துவந்தழுவல்வேண்டிச்
செழுங்களியாளர்முன்னரிருளறச்செப்பினானு
மழுங்கழனரகின்மூழ்குமுயற்சியராகிநின்ற
கொழுங்களியுணர்வினாரைக்குணவதங்கொளுத்தலாமோ.

தழங்குரல், விகாரம். செழுங்களி - தரிசன மோகனீயப் பிரகிருதி ஏழும். குணவதம் : வதம் - விரதம் ; இது பகுதிப்பொருள்விகுதி.

(இ - ள்.) எல்லாரும் தத்துவந்தழுவல்வேண்டிக் களியாளர்முன்னே முரசிற்சாற்றிச் செப்பினும் அதுகொள்ளாதபடி நரகின்மூழ்கும்பாவத்தினை முன்னே உடையராகின்ற உணர்வினரைக்குணங்கொளுத்தலாமோவென்க.()

379. பவழவாய்ச்செறுவுதன்னுணித்திலம்பயிலவித்திக்
குழவிநாறெழுந்துகாளைக்கொழுங்கதிரீன்று பின்னைக்
கிழவுதான்விளைக்கும்பைங்கூழ்கேட்டிரேற்பிணிசெய்பன்மா
வுழவிர்காண்மேவுஞ்சீலவேலியுய்த்திடுமினென்றான்.

பவழவாய் - கருத்தங்கும் பை. நித்திலம்போலுஞ்சுக்கிலம்.

(இ - ள்.) உழவிர்காள், கேட்பீராயின், பவழவாயாகியசெய்யிலே நித்திலத்தை வித்துதலாலே முளைதோன்றிக் கதிரையீன்று பின்னே தான் மூப்பை விளைக்கும் ; அப்பயிரை நோயைச்செய்யும் தீவினைகளாகிய விலங்குகள் மேயும்; அவை மேயாதபடி சீலமாகியவேலியைக் கொண்டு சென்றிடுவீராக வென்றானென்க. (௩௭௦)

380. சூழ்கதிர்மதியமன்னசுடர்மணிப்பூணினானும்
வீழ்தருகதியினீங்கிவிளங்குபொன்னுலகத்துய்க்கு
மூழ்வினைதுரத்தலானுமுணர்வுசென்றெறித்தலானு
மாழ்கடற்புணையினன்னவறிவரன்சரணடைந்தான்.

சீவகனுக்கு மதியுவமை, கலைகள்நிறைதலால் ; உம்மை, சிறப்பும்மை. வீழ்தருகதி - நரகத்தேவிழுதற்குக் காரமாணமான தீவழி. பொன்னெயில் வட்டத்திற்செலுத்து மூழ்வினை - சாதுசரணவதற்கு முன்செய்த நல்வினை. அத்தவத்தே பயின்றமையால், உணர்வு மீண்டும் அதன்மேற்சென்றுபரத்த லானும்.

(இ - ள்.) அதுகேட்டுப் பூணினானும், ஊழ்வினை செலுத்துதலானும் உணர்வு எறித்தலானும் கதியினீங்கிப் பிறவிக்கடலை நீந்துதற்குத் தெப்ப மன்ன அறிவனைச் சரணாக அடைந்தானென்க. (௩௭௧)

381. காட்சிநன்னிலையின்ஞானக்கதிர்மணிக்கதவுசேர்த்திப்
பூட்சிசாலொழுக்கமென்னும்வயிரத்தாழ்கொளுவிப்பொல்லா
மாட்சியில்கதிகளெல்லாமடைத்தபின்வரம்பிலின்பத்
தாட்சியினுலகமேறத்திறந்தனனலர்ந்ததாரான்.

நிலைபேறுடைமையின் நிலை. பொருள்களைக் காத்தற்கு உலாவுதலிற் கதவு. காட்சியையும் ஞானத்தையும் விட்டுநீங்காமல் தகைத்தலின், தாழ். மாட்சியில் பொல்லாக்கதி - பிறவி கெடுதலில்லாத தீக்கதி ; மாட்சிமையுமாம். ஆட்சியில் உலகம் - இதற்குமுன்பு ஆளாதவுலகம்; வீடு. அலர்ந்த - புகழாற்பரந்த.

(இ - ள்.) தாரான், காட்சியாகியநிலையிலே ஞானமாகிய கதவைச் சேர்த்தி ஒழுக்கமாகிய தாழைக்கொளுவிக் கதிகளெல்லாம், அடைத்தபின் வீட்டுலகத்தேசெல்ல வழிதிறந்தானென்க. (ருஙஉ)

382. நல்லறத்திறைவனுகிநால்வகைச்சரணமெய்தித்
தொல்லறக்கிழமைபூண்டதொடிகழற்காலினுற்குப்
புல்லறநெறிக்கணின்றுபொருள்வயிற்பிழைத்தவாறு
மில்லறத்தியல்புமெல்லாமிருளறக்கூறியிட்டான்.

நால்வகைச்சரணம்: அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தன்மசரணம். தொல்லறம் - தன்குலத்திற்கெல்லாம் உரிய அறம். புல்லறநெறிக்கணின்று பொருள்வயிற்பிழைத்தவாறும் - தீக்கதியினின்றோர் தாம் நடாத்துகின்ற புல்லிய இல்லறத்தினெறியிலே நிற்றலால் வீடுபேற்றில் தப்பியவாறும். இல்லறத்தியல்பும் - வீடுபேறு தப்பாதபடி இல்லறம் நடாத்துமியல்பும். எல்லாம் - ஒழிந்தனவும்.

(இ - ள்.) சரணமெய்திப் பூண்ட காலினுனுக்கு உலகம்பிழைத்தபடியையும் நல்லோர்நடாத்தும் அறத்தியல்பையும் ஒழிந்தவற்றையும் மயக்கமறக்கூறினனென்க. (ருஙங)

383. எரிமுயங்கிலங்குவைவேலிளையவர்குழாத்தினீங்கித்
திருமுயங்கலங்கன்மார்பிற்சீவகற்கொண்டுவேறு
விரிமலர்க்கண்ணிகட்டிவிழைதகவேய்ந்தபோலுந்
தெரிமலர்க்காவுசேர்ந்துபிறப்பினைத்தெருட்டலுற்றான்.

இளையவர் - தம்பிமாரும் தோழன்மாரும். கொண்டுவேறு - வேறாகக் கொண்டு.

(இ-ள்.) ஆசிரியன், குழாத்தினின்றும் தானீங்கிச் சீவகனைத் தனியே கொண்டுபோய், கண்ணிகட்டி விதானித்தபோலும் காவைச்சேர்ந்து, அவனுக்குப் பிறப்பினைத் தெளிவிக்கலுற்றானென்க. (ருஙச)

384. பூவையுங்கிளியுமன்னரொற்றெனப்புணர்க்குஞ்சாதி
யாவையுமின்மையாராய்ந்தந்தளிர்ப்பிண்டிநீழற்
பூவியற்றவிசினுச்சிப்பொலிவினேடிருந்தபோழ்தி
லேவியல்சிலையினுனையிப்பொருள்கேண்மோவென்றான்.

(இ - ள்.) ஆசிரியன், பிண்டிநிழலிடத்திட்ட தவிசின்மேல் இருந்தவளவிலே, பூவையும் கிளியுமுதலாகக்கொண்டு வேறும் அரசர் ஒற்றாகவிடும் சாதிகளெல்லாம் இல்லாதபடியை ஆராய்ந்து, சிலையினுனை இக்கதையைக் கேட்பாயாகவென்றானென்க. (ருஙரு)

385. வையகமுடையமன்னன்சச்சந்தனவற்குத்தேவி
பைவிரிபசும்பொனல்குற்பைந்தொடிவிசயையென்பாள்

செய்கழன்மன்னன்றேர்ந்துதேவியைப்பொறியிற்போக்கி
மையல்கொணெஞ்சிற்கல்லாமந்திரிவிழுங்கப்பட்டான்.

பொன் - மேகலை. தேர்ந்து - கனவிற்குப்பின்பு இவளைப்போகவிடுமாறுதேர்ந்து. மையல் - தன்னை ஆக்கினவனைக்கொல்லுதல்.

(இ - ள்.) இவ்வையகமுடைய அரசன் சச்சந்தன்; அவனுக்குத்தேவி விசயை; அவன் தேர்ந்து அவளைப்போக்கி மந்திரியாலே கொல்லப்பட்டானென்க. (ஙடுசு)

386. புலம்பொடுதேவிபோகிப்புகற்கருங்காடுநண்ணி
வலம்புரியுலகம்விற்குமாமணியீன்றதென்ன
விலங்கிழைசிறுவன்றன்னைப்பயந்துபூந்தவிசினுச்சி
நலம்புரிநங்கைவைத்துநல்லறங்காக்கவென்றாள்.

வலம்புரி உவமைகூறவே தேவிமறைந்தமையும் உணர்த்தினர். இலங்கிழை - தேவி; இது சுட்டு. நலம்புரிநங்கை - அறத்தைவிரும்பிய கூனியாகிய தெய்வம். வைத்து - வைக்க. அறம் - நோன்பு.

(இ - ள்.) தேவி போய், நண்ணி, வலம்புரி மணியையீன்றாற்போலச் சிறுவனைப் பயக்கையினாலே, அவனைத் தெய்வம் தவிசின்மேலேவைக்க, அத்தேவி, யான் மேற்செய்கின்ற அறம் நின்னைக்காக்கவென்று உட்கொண்டாளென்க.

இத்தெய்வம் நம்பியைப் பள்ளிசேர்த்தினபொழுதே தேவி கருதியதனை ஆசிரியனுணர்ந்து ஈண்டுக்கூறினான். எனவே தேவி நோன்பிலேயிருந்தமை சீவகனுணர்ந்து, அது கருமமென்று உட்கொண்டான் பின்பு, "அடிகளுமுளரோ" (சீவக. கஅஅச) என்றது, இதற்குப்பின்பு நீங்கின்றியிருந்தமை கருதி. (ஙடுஎ)

387. வானத்தின்வழுக்கித்திங்கட்கொழுந்துமீன்குழாங்கள்சூழக்
கானத்திற்கிடந்ததேபோற்கடலகமுடையநம்பி
தானத்துமணியுந்தானுமிரட்டுறத்தோன்றினானே
யூனத்திற்றீர்ந்தசீர்த்தியுத்தரட்டாதியானே.

கொழுந்தென்றார், நாடோறும் வளர்தலின். தானத்துமணி - சுடுகாட்டு மணி. ஊனம் - நாளுக்குள்ள திங்கு.

(இ - ள்.) நம்பி, உத்தரட்டாதிநாட்பிறந்தவன், பிறை மீன்குழாங்கள் சூழக்கிடந்ததுபோலே மணியும் தானும் மாறுபடத் தோன்றினானென்க. ()

388.(க) அருந்தவன்முந்துகூறவலங்கல்வேனாய்கன்சென்று
பொருந்துபுசிறுவற்கொண்டுபொலிவொடுபுகன்றுபோகத்
திருந்தியநம்பியாரத்தும்மினன்றெய்வம்வாழ்த்திற்
றரும்பொனாய்கொண்மோவென்றனலைகடல்விருப்பிற்கொண்டாள்

389.(உ) கரியவன்கன்னற்கன்றுபிறப்பினைத்தேற்றியாங்கப்
பெரியவன்யாவனென்னநீயெனப்பேசலோடுஞ்

சொரிமலர்த்தாரும்பூணுமாரமுங்குழையுஞ்சோரத்
திருமலர்க்கண்ணிசிந்தத்தெருமந்துமயங்கிவீழ்ந்தான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) முனிவன் நிகழும்பொருளெல்லாம் கந்துகற்குக்கூறலின், அது தப்பாதென்றுகருதிச்சென்று. கொண்டு - கொள்ள. திருந்திய - தவம்திருந்திய. பொன்னாய் - திருவையுடையாய்.

(உ) கரியவன் - கண்ணன். பெரியவன் - அறிவுபெரியவன். பேசலோடும், உடனிகழ்ச்சி. தேன்சொரிமலர்.

(இ - ள்.) நாய்கன், அவ்வொளியோடியவழியேசென்று பொருந்தாநின்று சிறவ்வினையெடுக்க, அந்தநம்பி, நன்னிமித்தம்பெற்றேமென்று நாய்கன் மகிழ்ந்துபோம்படி நிறையத் தும்மினான்; அப்பொழுது தெய்வம் வாழ்த்திற்று; அம்மகிழ்ச்சியுடனேபோய், அரும்பொன்னாய், கொள்ளென்றான்; அவளும் கொண்டாளென்று ஒருகதைமுகத்தாலே, கரியவன் கன்னனுக்குப் பிறப்புணர்த்தியாங்கு உணர்த்தினானாக; அதுகேட்ட சீவகன், நீ கூறியவன்யாரென்றுகேட்ப, நீயெனக்கூறினானாக, தார்முதலியனசோரச் சிந்தக் கலங்கி மூர்ச்சித்து வீழ்ந்தானென்க.

'என்று' எனவும், 'உணர்த்த' எனவும் வருவிக்க; அன்புமிகுதியால் மூர்ச்சைமூந்திற்று. (ஙருகூ - ஙூ௦)

390. கற்பகங்கலங்கிவீழ்ந்தவண்ணம்போற்காளைவீழச்
சொற்பகர்புலவன்வல்லேதோன்றலைச்சார்ந்துபுல்லி
நற்பலகுழீஇயதம்மானவைபறத்தேற்றத்தேறிக்
கற்புனைதிணிதிண்டோளான்கவலைநீர்க்கடலுட்பட்டான்.

(இ - ள்.) காளை, கற்பகம் நிலைகுலைந்து விழுந்ததன்மைபோல விழுதலாலே, சொல்லை விரகாற்கூறிய ஆசிரியன், அத்தோன்றலை விரையச்சேர்ந்து தழுவிச் சந்தனுதிக்கூட்டாற்செய்த குழம்பால்தேற்ற, அத்தோளான் தெளிந்து கையாற்றைவிட்டுச் சோகக்கடலிலே விழுந்தானென்க. (ஙகூக)

391. இனையைநீயாயதெல்லாமெம்மனோர்செய்தபாவ
நினையனிநம்பியென்றுநெடுங்கணீர்துடைத்துநீவிப்
புனையிழைமகளிர்போலப்புலம்பனின்பகைவனின்று
னினைவெலாநீங்குகென்னநெடுந்தகைதேறினானே.

புலம்பல் - அழுதல்; தொழிற்பெயர்.

(இ - ள்.) நம்பி, நீ இனையையாயதெல்லாம் எம்போல்வார்செய்தபாவம் நீங்குகை காரணமாக; இனி, நின்பகைவன் நின்றானாதலின், மகளிர் போலப் புலம்பலை நீ நினையலென்று கண்ணீர்துடைத்துப் பின்பு உடம்பைத் தடவி நினைவுநீக்குகவென்ன, அவன் தெளிந்தானென்க.

'நீர்துடைத்து' என்றது அரற்று. 'நினைவெலாம்' என்றது அவலம். அவலமுதலிய நான்குங்கூறினர். எம்மனோர்செய்தபாவம் நீங்குகை காரண மாகவென்றுமாம். (ஙகூஉ)

392. மலைபக்விடிக்குஞ்சிங்கமடங்கலின்முழங்கிமாநீ
ரலைகடற்றிரையிற்சீறியவனுயிர்பருகலுற்றுச்
சிலையொடுபகழியேந்திக்கூற்றெனச்சிவந்துதோன்று
மிலையுடைக்கண்ணியானையின்னணம்விலக்கினனே.

(இ - ள்.) அவனுயிரைப்பருகலுற்று, திரையின்முழங்கிச் சிங்கக்குட்டி போலச் சீறி வில்லோடும்பகழியேந்திக் கூற்றெனத்தோற்றுங்கண்ணியானை விலக்கினனென்க.

தந்தையைக்கொன்றவனைக் கொல்லாமைவிலக்கல் அருமையின், மேற் கூறுகின்றகூற்றான் விலக்கினமைதோன்ற 'இன்னணம்' என்றார். (ஙகூங)

393. வேண்டுவனம்பியானோர்விழுப்பொருளென்றுசொல்ல
வாண்டகைக்குரவிர்கொண்மின்யாதுநீர்கருதிற்றென்ன
யாண்டுநேரெல்லையாகவவன்றிறத்தழற்சியின்மை
வேண்டுவலென்றுசொன்னான்வில்வலானதனைநேர்ந்தான்.

வேண்டுவல்: அல்லீற்றுத் தன்மைச்சொல்; சந்தியால்னகரம்வந்தது. இர் ஈறு, "கேளிர்வாழியோ" (குறுந். உ௮0) எனநின்றாற்போல இயல்பாய் நின்றது. ஆண்டகைமைகூறிற்று, கொலையை விலக்குவரோவென்று அஞ்சிக் கற்பித்தமுகத்தான்; அரசனென்றுணர்ந்தான். திறம் - குலம். வல்லான்: செய்யுளாய் மறையாகாது வழக்காய் உடன்பாடுணர்த்திற்று. இது மேலும் கொள்க.

(இ - ள்.) நம்பி, யான் ஒரிடும்பையையுடையதொருகாரியத்தை வேண் டுவலென்றுகூற, குரவிர், நீர்கருதிற்று யாது ? அதனைக்கொண்மினென, அவன்குலத்தளவில் ஓர்யாண்டிறுதியளவாக அழற்சியின்மைவேண்டுவலெ ன்று விலக்கிச்சொன்னான்; வில்வல்லானும் நேர்வரியதனை நேர்ந்தானென்க.

என்றுகூறவும் பாடம். (ஙகூச)

394. வெவ்வினைவெகுண்டுசாராவிழுநிதியுயிர்தமின்னீர்
கவ்வியவெஃகினின்றகயக்கமினிலைமைநோக்கி
யவ்வியமகன்றுபொங்குமழல்படுவெகுளிநீக்கி
யிவ்வியலொருவற்குற்றதிற்றெனக்கிளக்கலுற்றான்.

வினையைத் தான் வெகுளுதலாலே அது சாரப்படாத அமிர்து - இரத் தினத்திரயம். கயக்கம் - கலக்கம். அவ்வியமகன்று - மனக்கோட்டமின்றி. 'இவ்வியலொருவன்' என்று தன்னைப் பிறன்போற்கூறினான், தன்மேலன் பால் வருந்துவனென்று.

(இ - ள்.) ஆசிரியன், சீவகனுக்கெழுந்த வெய்தான கோபத்தைப் போக்கி, அவனுக்கு அமிர்தம் இரும்புண்டநீர்போலநின்ற நிலையைநோக்கி, ஒருவற்கு வந்த துன்பத்தை இற்றெனச் செப்பாநின்றானென்க.

தான்மெய்யுணர்தலின், என்னைவிலக்கானென்று இக்கதை கூறுகின்றான். (ஙகூரு)

395.(க)வானுறைவெள்ளிவெற்பின்வாரணவாசிமன்ன
னானுறைபருதிவெள்வேலுலோகமாபாலனென்பான்
றேனுறைதிருந்துகண்ணிச்சிறுவனுக்கரசுநாட்டிப்
பானிறக்குஞ்சிளையந்துபண்ணவர்படிவங்கொண்டான்.

396.(உ)வெஞ்சினங்குறைந்துநீங்கவிழுத்தவந்தொடங்கிநோற்கும்
வஞ்சமில்கொள்கையாற்குப்பாவம்வந்தடைந்ததாகக்
குஞ்சரமுழங்குதீயிற்கொள்கையின்மெலிந்திம்மூதூர்
மஞ்சுதோய்குன்றமன்னமாடவீட்டகம்புகுந்தான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) வெள்ளிமலையில் வாரணவாசியென்னுமூரின்மன்னன். பருதிபோற் பகையாகிய இருளைக்கெடுக்கும்வேல். மா, வியங்கோளசையன்றி இசைநிறைத்து நின்றது ; புறனடையால்வந்தது ; "ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே" (புறநா. கசுஙு) என்றாற்போல. அன்னம்போல் நல்லன்கொண்டு.

(உ) கொள்கை - விரதம்;

(இ - ள்.) மன்னனாகிய உலோகபாலனென்பான், புதல்வனுக்கு அரசை நிறுத்தி ஆய்ந்து தவவேடங்கொண்டான் ; கொண்டு தவத்தைத்தொடங்கிச் சினம்போகநோற்குங்கொள்கையாற்குப் பாவம் வந்துசேர்ந்ததாக, யானைத்தீயாலே உணவிடத்தேவருந்தி இவ்வூரில் மாடத்திரளிடத்தே புகுந்தானென்க. (ஙகூசு - எ)

397. உரைவிளையாமைமைந்தன்கேட்கியவுவந்துநோக்கி
வரைவிளையாடுமார்பன்யாரவன்வாழியென்ன
விரைவிளையாடுந்தாரோயானெனவிரும்பித்தீம்பாற்
றிரைவிளையமிர்தமன்னகட்டுரைசெல்கவென்றான்.

வரை தனக்கு நிகராகக் கருதி விளையாடும். விரைவிளையாடும் - விரையுலாவும்.

(இ - ள்.) மைந்தன், கதை முடிவதற்குமுன்னே கேட்டற்கு மகிழ்ந்து நோக்கி, நீ கூறியமார்பன்யார் ? அவன்றான் வாழ்வானாகவெனக்கூற, அது கேட்டு, தாரோய், அவன்யானென்று ஆசிரியன்கூற, மேல்கேட்பதாக விரும்பி, அமிர்தமன்ன புனைந்துரை முடிவுபோக நடப்பதாகவென்றானென்க.()

398. பூத்தின்றுபுகன்றுசேதாப்புணர்முலைபொழிந்ததீம்பா
லீத்தறச்செல்லவேவித்தட்டவின்னமிர்தமுண்பான்

பாத்தரும்பசும்பொற்றாலம்பரப்பியபைம்பொற்பூமி
யேத்தருந்தவிசினம்பிதோழரொடேறினானே.

சேதா, பண்புத்தொகை. பால் பெருக்கறுதலாலே அங்கிலேயறிந்து அதிலிட்ட அரிசியைப் பால்செல்ல வேவப்பண்ணிச் சமைத்த பாலடிசில். ஓடின பொன்.

(இ - ள்.) கந்துகன், அமுதமுண்ணவேண்டித் தாலம் பரப்பிய பூமியிலே தவிசின்மேலே தோழரோடு ஏறினானென்க. (௩௬௯)

399. புடையிருகுழையுமின்னப்பூந்துகில்செறிந்தவல்கு
னடையறிமகளிரேந்தநல்லமிர்துண்ணும்போழ்தி
னிடைகழிநின்றவென்னைநோக்கிப்போந்தேறுகென்றான்
கடல்கெழுபருதியன்னபொற்கலத்தெனக்குமிட்டார்.

நடை - சோறிடுமுறைமை.

(இ - ள்.) மகளிர், இருகுழையுமின்னுநிற்க அமுதமேந்தத் தான் அதனையுண்ணுங்காலத்தே, என்னைப்பார்த்து இங்ஙனேபோந்து ஏறுவீராகவென்றான்; யான் ஏறினவளவிலே, பொற்கலத்தே எனக்கும் அமுதமிட்டாரென்க. ()

400. கைகவிநறுநெய்பெய்துகன்னலங்குடங்கள்கூட்டிப்
பெய்பெயென்றுரைப்பயானும்பெருங்கடல்வெள்ளிக்குன்றம்
பெய்துதூர்க்கின்றவண்ணம்விலாப்புடைபெரிதும்வீங்க
வையனதருளினால்யானந்தணர்தொழிலேனானேன்.

விரைவின்கண் இருகாலடுக்குதல், இக்காலவழக்கு.

(இ - ள்.) இவற்குக் கைகவித்தற்குக் காரணமான நெய்யைப்பெய்து குடங்களையும் ஒன்றோடொன்றுசேர்த்திப் பெய்பெய்யென்று கந்துகன்கூற, அவர்சொரிதலின், யானும் வெள்ளிமலையைப்போகட்டுக் கடலைத்தூர்க்கின்ற வண்ணம் விலாப்புடை வீங்கத்தூர்த்து உன்னருளாலே அறவோர்தொழிலனானேனென்க.

திருத்தியை யடைந்தேனென்றான். (௩௭௧)

401. சுரும்புடையலங்கன்மாலைச்சுநந்தையுந்துணைவன்றானும்
விரும்பினரெதிர்கொண்டோம்பவேழவெந்தீயினீங்கி
யிருந்தனெனேமமுந்நீரெறிசுறவுயர்த்தோன்றற்
கரும்புடைக்காளையன்னகாளைநின்வலைப்பட்டென்றான்.

அலங்கன்மாலை - அசையுமாலை. சுறவுயர்த்த - சுறவை மேம்படுத்தின.

(இ - ள்.) தலைமையையுடைய காமனையொத்த காளாய், நின்வலைப்படுதலாலே, சுநந்தையும் துணைவனும் விரும்பினராய் வழிபட்டுப் பேண, யானைத்தீயினின்றும் நீங்கியிருந்தேனென்றானென்க.

பின்னர்ப் பசிதோன்றாதிருத்தலின், நீங்கியென்றான். இவன் நோய்தீர்த்ததில்லையை வலையென்றான். இதுவிளக்கிப்போகக் கருதலிற் பட்டென்றான். ()

402. நிலம்பொறுக்கலாதசெம்பொனீணிதிநுந்தையில்ல
நலம்பொறுக்கலாதபிண்டிநான்முகன்றமர்கட்கெல்லா
மூலம்பொறுக்கலாததோளாயாதலாலூடுபுக்கேன்
கலம்பொறுக்கலாதசாயலவருண்மைநின்னைக்கண்டேன்.

நிதி - திரள். தன் நலம் தான் பொறுக்கமாட்டாத. எல்லார்மூர்த்தமும் இவனுதலின், 'நான்முகன்' என்றார் ; "ஆதிவேதம் பயந்தோய்நீ" (சீவக. கஉசஉ), "மலரேந்து சேவடியமாலென்ப" (ஷை கக௬௦) என்ப மேலும்.

(இ - ள்.) தோளாய், நிதியையுடைய நுந்தையில்லம் துறந்தவர்க்கெல்லாம் இல்லமாதலால், உள்ளேசென்றேன் ; மகளிரிடத்தே நின்னைக் கண்டேனென்றானென்க. (௩௭௩)

403. ஐயனைக்கண்ணிற்காணயானைத்தீயதகங்கண்ட
பையணுகம்போலவட்கயான்பெரிதுமுட்கித்
தெய்வங்கொலென்றுதேர்வேற்கமிர்துலாய்நிமிர்ந்ததேபோன்
மொய்குரன்மூரசநாணுந்தழங்குரன்முழங்கக்கேட்டேன்.

நாகம், ஆகுபெயர்.

(இ - ள்.) நின்னைக் கண்ணுற்கண்டேனுக, யானைத்தீ, மருந்துகண்ட நஞ்சுபோலக்கெடுதலாலே, யான் அஞ்சித் தெய்வமோவென்று ஆராய்வேற்கு அமிர்துநிமிர்ந்ததேபோல் உலாவப்பட்டு மூரசநாணும் வார்த்தை அவ்விடத்தேமுழங்க, அதனைக் கேட்டேனென்றானென்க.

'ஐயநிற்கண்ணின்' என்றும் பாடம். இவனிருக்கின்ற மனையாதலின் இவனைக் காண்பதற்குமுன்னே குறைந்து இவனைக்கண்டபின் பொன்றக் கெட்டது. (௩௭௪)

404. கோட்டிளந்திங்கள்சூழ்ந்துகுலவியதிருவிற்போல
மோட்டொலிமுத்தஞ்சூழ்ந்துமுருகுகொப்புளிக்குந்தாரோய்
கேட்டளப்பரியசொல்லுங்கிளரொளிவனப்புநின்னைச்
சேட்டிளஞ்சிங்கமன்னாய்சாதகஞ்செய்தவென்றான்.

திங்களை வளைத்திட்டவிற்போல முத்தைச்சூழ்ந்து தேன்கொப்புளிக்கும் தார். சேடு - பெருமை.

(இ - ள்.) தாரோய், சிங்கமன்னாய், அங்ஙனங்கேட்டு அளவிடுதற்கரிய வார்த்தையும் வனப்பும் நின்னைப் பிறப்பை அறிவித்தனவென்றானென்க. ()

405. கோளியங்குழுவையன்னகொடுஞ்சிலையுழவன்கேட்டே
தாளியறவங்கடாயாத்தந்தைநீயாகியென்னை
வாளியங்குருவப்பூணேய்படைத்தனைவாழியென்ன
மீளியுங்களிறனையான்மெய்ந்நெறிநிற்பவென்றான்.

கோளியங்கு - கொலைத்தொழிலிலே நடக்கின்ற.

(இ - ள்.) சீவகன், அதனைக்கேட்டு ஒளியியங்காநின்ற உருவமாகிய பூணையுடையோய், முயற்சியாற்பிறந்த தவங்கள் தாயாக, நீ தந்தையாகி

என்னைப்படைத்தனையென்ன, ஆசிரியன் களிறனாய், யான் தவநெறியிலே நிற்பேனென்றானென்க.

நல்வினையால், இக்கலைகளைக்கற்றுத் தான் வேறொருபிறப்பானமைகூறினான். (௩௭௬)

406. மறுவறமனையினீங்கிமாதவஞ்செய்வலென்றாற்
பிறவறமல்லபேசார்பேரறிவுடையநீரார்
துறவறம்புணர்கவென்றேதோன்றறாடொழுதுநின்றா
னறவறமலர்ந்தகண்ணிநன்மணிவண்ணனன்னான்.

அறமல்லவாகியபிற - விலக்குஞ்சொற்கள். நறவு அற - நறுநாற்றம் தன்னிடத்தேதங்க.

(இ - ள்.) மணிவண்ணனன்னான், அறிவுடையோர் இல்லறத்தினின்று நீங்கி மறுவறத் தவஞ்செய்வலென்றாற் பிறபேசார், உலகத்தார்; ஆதலால், யானும் அதுவே கூறுவேன் ; துறவறத்தைக்கூடுகவென்று அவனுடையதாளைத் தொழுதுநின்றானென்க.

ஒருவன் துறப்பேனென்றால் அறிவுடையோர் விலக்காராதலின், இவனும் அதற்கு உடன்பட்டானெனத் தேவர்கூற்றுமாம். (௩௭௭)

407. கைவரையன்றிநில்லாக்கடுஞ்சினமடங்கலன்னான்
றெவ்வரைச்செகுக்குநீதிமனத்தகத்தெழுதிச்செம்பொற்
பைவிரியல்குலாட்கும்படுகடனிதியின்வைகு
மைவரைமார்பினாற்குமனமுறத்தேற்றியிட்டான்.

கை வரையன்றிநில்லா - ஒழுக்கத்தின் எல்லைகடவாத ; யானையைமாறுபட்டு நில்லாதவென்றுமாம். பைபோலவிரிந்த. கடல்போல்நிதி.

(இ - ள்.) மடங்கலன்னான், தன்பகைவரைக் கொல்லுமுறைமையை அவன்மனத்தேநிலைபெறுத்தி, சுநந்தைக்கும் கந்துகனுக்கும் சீவகன்கல்வியையும் நிக்கையையும் தன்துறவையும் மனங்கொள்ளும்படி தெளிவித்தானென்க. (௩௭௮)

408. அழலுறுவெண்ணெய்போலவகங்குழைந்துருகியாற்றாள்
குழலுறுகிளவிசோர்ந்துகுமரனைத்தமியனாக
நிழலுறுமதியமன்னாய்நீத்தியோவெனவுநில்லான்
பழவினைபரியநோற்பான்விஞ்சையர்வேந்தன்சென்றான்.

(இ - ள்.) சுநந்தை, ஆற்றாளாய்ச் சோர்ந்து, கலைகணிறைந்தவனே, குமரனைத் தமியனாம்படி நீத்தியோவென்றுகூறவும் நில்லானாய், வேந்தன் பழவினைகெடும்படி தவஞ்செய்வதற்குச் சென்றானென்க.

இது நாமகளைக்கூடின இலம்பகமென்க ; இலம்பகம், வடசொல். ()

க.—நாமகளிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ௪௦௮.

## இரண்டாவது

# கோவிந்தையாரிலம்பகம்.

---

409. ஆர்வவேரரிந்தச்சணந்திபோய்
வீரன்ருணிழல்விளங்கநோற்றபின்
மாரிமொக்குளின்மாய்ந்துவிண்டொழச்
சோர்வில்கொள்கையான்ருேற்றநீங்கினுன்.

ஆர்வவேர் - ஆசையென்கிற பிறவிவேர். அச்சணந்தி - ஆரியநந்தி. வீரன் ருாள்நிழல்-ஸ்ரீவர்த்தமானஸ்வாமிகள் சமவ சரணத்தே. மொக்குளின் மாய்தல் - வீடுபெறுங்கால் திருமேனியுடனே மறைதல்.

(இ - ள்.) அச்சணந்தி, இவ்விடத்துநின்றும்போய், தாள்நிழலிலே விளங்கும்படி வேரையரிந்து நோற்றபின்பு, அக்கொள்கையான், விண்டொழ மொக்குளின்மாய்ந்து பிறவிநீங்கினுனென்க. (க)

410. நம்பனித்தலைநாகநன்னகர்ப்
பைம்பொனுடைசூழ்பருமயானையுஞ்
செம்பொனீள்கொடித்தேரும்வாசியும்
வெம்பவூர்ந்துலாம்வேனிலானினே.

(இ - ள்.) பிள்ளையார், இவ்வுலகில் நாகம்போலும் இராசமாபுரத்தே யானை முதலியவற்றைக் கண்டார்விரும்ப ஏறி,வேனிலானேபோல மகளிர்க்கு வேட்கைவிளைத்து நடக்குமென்க. (உ)

வேறு.

411. கலையினதகலமுங்காட்சிக்கின்பமுஞ்
சிலையினதகலமும்வீணைச்செல்வமு
மலையினினகலியமார்பனல்லதில்
வுலகினிலிலையெனவொருவனுயினுன்.

இதனுல்,சீவகற்குப் பதினையாண்டுசென்றபின் நல்வினையாற்பிறக்கின்ற குணங்கள் கூறுகின்ருர்.

கலையினதகலம் - கல்விகாரணமாகப் பிறப்பதொரு ஞானம். காட்சிக் ...பம் - அப்பருவத்திலே பிறப்பதோர் அழகு. சிலையினதகலம் - படைக் ...ப் பயின்றவாற்ருல் அப்பருவத்துப்பிறக்கும் வீரம். வீணை-தாளத்தோடே ...னடத்திலும்கருவியிலும் பிறக்கும் பாட்டு; இசை நாடகம் காமத்தை விளைத்தலின், அவற்ருற் பிறக்குங்காமத்தை, 'வீணைச்செல்வம்' என்ருர்.

(இ - ள்.) ஞானமும் அழகும் வீரமும் காமமுமாகின்றான் சீவகன்; இவனல்லாது இவ்வுலகில் ஞானமுதலியன இல்லையென்னும்படி தான் ஒருவனேயாயினனென்க.

அரசர்க்குச்சிறந்தன இந்நான்கென்றார்.

இனி, கலையினதகலம் - நாமகள்; காட்சிக்கின்பம் - வீற்றுத்தெய்வம்; சிலையினதகலம் - வீரமகள்; வீணைச்செல்வம் - மாதங்கி. இவர்கள்தாம் இவனல்லது வேறு யாங்களென்று இல்லையென்னும்படி ஆயினனென்றுமாம். (ங)

வேறு.

412\. நாமவென்றிவேனகைகொண்மார்பனைக்
காமனேயெனக்கன்னிமங்கையர்
தாமரைக்கணுற்பருகத்தாழ்ந்துலாங்
கோமகன்றிறத்துற்றகூறுவாம்.

நகை - முத்துவடம்.

(இ - ள்.) அங்ஙனம் ஒருவனாகிய மார்பனை மங்கையர் காமனேயென்று தாழ்ந்து கண்ணாற் பருகும்படி நடக்கும் சீவகனிடத்துப் பிறந்த காரியங்களைக் கூறுவாமென்றாரென்க. (ச)

413\. சில்லம்போதின்மேற்றிரைந்துதேனுலா
முல்லைகாரெனப்பூப்பமொய்ந்நிரை
புல்லுகன்றுளிப்பொழிந்துபால்படுங்
கல்லென்சும்மையோர்கடலின்மிக்கதே.

பின்பனிக்கழிகின்றமையின், சிலவான அழகிய போதின்மேலே தேனினம் சாய்ந்துலாவுமுல்லையென்று அடை கூறியது. இப்பொழுது காரெனப் பூக்கும்படியாகவென்க. பால்படும் சும்மை - பசுக் கறக்கிற ஒலி.

(இ - ள்.) நிரை, தான்புல்லுங் கன்றைநினைத்து, முல்லை காரெனப் பூப்பத் தானே பாலைப்பொழிதலாற் படுமொலி ஒருகடலினுமிக்கதென்க. (ரு)

414\. மிக்கநாளினுல்வேழமும்மத
முக்கதேனினோடுறிவார்சுனை
யொக்கவாய்நிறைந்தொழுகுகுன்றின்மேன்
மக்களீண்டினார்மடங்கன்மொய்ம்பினார்.

உக்க தேனுடனே மும்மதம் ஊறுதலாலே சுனைகளெல்லாம் தம்மில் ஒக்க வாய்நிறைந்து ஒழுகுங்குன்று.

(இ - ள்.) இங்ஙனம் ஒலிமிக்கநாளிலே குன்றின்மேல் மொய்ம்பினராகிய வேடரெல்லாரும் வந்து தங்களிலே திரண்டாரென்க. (சு)

415\. மன்னவன்னிரைவந்துகண்ணுறு
மின்னநாளினுற்கோடுநாமெனச்

சொன்னவாயுளேயொருவன்புட்குரன்
முன்னங்கூறினன்முழுதுணர்வினன்.

இன்னநாள் - இளவேனிற்குரியநாள்.

(இ - ள்.) அம்மனம் ஈண்டினவர்கள், இத்தன்மைத்தாகிய நாளிலே நிரை வந்துசேரும்; அதனை நாம் கொள்ளுதுமெனக் கூறிய அப்பொழுதே, புட்கூறிய குரலின் குறிப்பை, நிமித்தமெல்லாவற்றினும் அறிவுடையானொருவன் கூறினனென்க.

அது மேற்கூறுகின்றார். (எ)

416. (க) அடைதுநாநிரையடைந்தகாலையே
குடையும்பிச்சமுமொழியக்கோன்படை
யுடையும்பின்னரேயொருவன்றேரினா
லுடைதுஞ்சுடுவிற்றேனுடைந்தவண்ணமே.

417. (உ) என்றுகூறலுமேழைவேட்டுவீ
ரொன்றுதேரினாலொருவன்கூற்றமே
யென்றுகூறினுமொருவனென்செயு
மின்றுகோடுநாமெழுகென்றேகினர்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) பிச்சம் - பீலியாற்கட்டுவன. சுடுவில் -சுடுவோல்; சுடுதலென வினை மேனின்ற வினைப்பெயரன்றி வினைமாத்திரையுணர்த்திநின்று உருபேற்றது; தேனினம்போலக் கெடுதுமெனவே தமக்குப் பாடின்மைகூறினன்.

(இ - ள்.) நாம் நிரையை அடிப்போம்; அடித்த பொழுதே, அரசன் படைவந்துபொருது குடையும் பிச்சமும் அவ்விடத்தேகிடக்கத் தான்கெடும்; அது கெட்டபின்பு சுடுதலால் தேனினம் கெட்டாற்போல ஒருவன்தேரால் கெடுவேமென்று நிமித்திகன் கூறினன்; அவன்கூறினவளவிலே, அவனை வேட்டுவீரென இகழ்ந்து, ஒருவனைக் கூற்றமேயென்று உலகங்கூறினும், அவ்வொருவன் ஒருதேரால் ஒன்றுஞ்செய்யமாட்டான்; ஆகலின், இன்று கொள்ளக்கடவேம்; எழுந்திருப்பீராகவென்றுகூறி நிரைநிற்கிற இடம்நோக்கிப் போனரென்க. (அ - கூ)

418. வண்டுமூசருநறவமார்ந்தவர்
தொண்டகப்பறைதுடியொடார்த்தெழ
விண்டுதெய்வதம்வணங்கிவெல்கென
மண்டினார்நிரைமணந்தகாலையே.

மூசரு, விகாரம். தொண்டகப்பறை-[illegible]கோட்பறை. விண்டு - அரசனுடன் பகைத்து.

(இ - ள்.) அம்மனம் ஏகினவர், நறவமார்ந்து, பறை துடியோடு ஆர்த்தெழ முருகனைவணங்கி, விண்டு, நிரைவந்துகூடின அளவிலே வெல்கவெனக் கூறி மிக்குச்சென்றாரென்க. (கo)

419. (க) பூத்தகோங்குபோற்பொன்சுமந்துளா
ராய்த்தியர்நலக்காசெறுாணனன்
கோத்தநித்திலக்கோதைமார்பினன்
வாய்த்தவந்நிரைவள்ளுவன்சொனன்.

420. (உ) பிள்ளையுள்புகுந்தழித்ததாதலா
லெள்ளன்மின்னினிரையின்றுநீரென
வெள்ளிவள்ளியின்விளங்குதோணலார்
முள்குமாயருமொய்ம்பொடேகினர்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(க) சுமந்திருப்பாராகிய ஆய்த்தியர். கோதை - பூமாலை. நித்திலத்தை யுடையமார்பினன் - நந்தகோன். வாய்த்த - தப்பாத.

(உ) வெள்ளியாற்செய்த வளையினையுடைய தோள்.

(இ - ள்.) ஆய்த்தியர் நலஞ்சேர்தற்கு ஆநீண்டுகுற்றியை ஒப்பானாகிய நந்தகோனுடைய அந்நிரையிலே வாய்த்தநிமித்திகன், நிரைக்குள்ளே புகுந்து காரி அழித்ததாகலால், இன்று நீர் நிரையைக் காவல் இகழாதொழிமினெனச்சொன்னன்; அதுகேட்டுப் புதுமணவாளப்பிள்ளைகளும் மொய்ம்புடனே காத்தற்கு ஏகினரென்க. (கக - உ)

421. காயமீனெனக்கலந்துகானிரை
மேயவெந்தொழில்வேடரார்த்துடன்
பாயமாரிபோற்பகழிசிந்தின
ராயர்மத்தெறிதயிரினயினர்.

(இ - ள்.) ஆகாயமுமீனுமெனனும்படி காட்டிலே கலந்து நிரைமேய்கிற அளவிலே, வேடர் ஆர்த்துப் பரந்த மழைபோலப் பகழியை உடனே சிந்தினராக, போரிற்கு ஆற்றாராய் ஆயர், மத்தாற் கடைந்த தயிர்போலச் சிதறினரென்க. (கங)

422. (க) குழலுநவியமுமொழியக்கோவலர்
கழலக்காடுபோய்க்கன்றுதாம்பரிந்
துழலைபாய்ந்துலாமுன்றிற்பள்ளியுண்
மழலைத்தீஞ்சொலார்மறுகவாய்விட்டார்.

423. (உ) யத்தம்புல்லியகயிற்றின்மற்றவ
ரத்தலைவிடினித்தலைவிடா
ருய்த்தனரெனவுடைதயிர்ப்புளி
மொய்த்ததோணலார்முழுதுமீண்டினர்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(உ) மற்று, அசை.

(இ - ள்.) அம்மனம் சிதறின கோவலர், குழலும் கோடாலியும் அங்கே கிடக்கக் காட்டைக் கழலப்போய், இடைச்சேரியில் மகளிர்நின்று சுழலும் படி, அவ்வேடர் கயிறுபோல அத்தலையை நெகிழவிட்டாராயின் இத்தலையை நெகிழவிடார்; ஆதலால், இனி அந்நிரையைக் கொண்டேபோயினரென வாய்விட்டார்; அதுகேட்டுத் தோள்முழுதும் தயிர்ப்புள்ளிசெறிந்தநல்லார் திரண்டாரென்க.

'உய்த்தனர்' என இறந்தகாலத்தாற்கூறினர், தெளிவுபற்றி. (கச - ௫)

வேறு:

424. வலைப்படுமானெனமஞ்ஞையெனத்தம்
முலைப்படுமுத்தொடுமொய்குழல்வேய்ந்த
தலைப்படுதண்மலர்மாலைபிணங்க
வலைத்தவயிற்றினராயழுதிட்டார்.

(இ - ள்.) அவர்,முத்தோடே குழலிலேவேய்ந்த தலையின்மாலை பிணங்கும்படி மயிர்குலைய அலைத்த வயிற்றினராய், வலைப்படு மானென வலைப்படு மயிலென வருந்தினரென்க. (கரு)

425. எம்மனைமாரினியெங்ஙனம்வாழ்குவிர்
நும்மனைமார்களைநோவதுக்கி
வெம்முனைவேட்டுவருய்த்தனரோவெனத்
தம்மனைக்கன்றொடுதாம்புலம்புற்றார்.

(இ- ள்.) அவர், பின்பும், வேட்டுவர் நும்முடையதாய்மாரைநோம்படி அடித்துக் கொண்டுபோயினர்; இனி எம்முடைய தாய்மார், எங்ஙனம் உயிர் வாழ்வீர்? ஓஒவெனக்கூப்பிட்டுக் கன்றொடு புலம்புற்றாரென்க.

உவப்பின்கண் அஃறிணையை உயர்திணையாகக்கூறினர். (கள)

426. (க) பாறைபடுதயிர்பாலொடுநெய்பொரு
தாறுபடப்பள்ளியாகுலமாக
மாறுபடமலைந்தாய்ப்படைநெக்கது
சேறுபடுமலர்சிந்தவிரைந்தே.

427. (உ) புறவணிபூவிரிபுன்புலம்போகி
நறவணிதாமரைநாட்டகநீந்திச்
சுறவணிசூழ்கிடங்காரெயின்மூதூ
ரிறையணிக்கேட்கவுய்த்திட்டனர்பூசல்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) ஆய், 'வேடு'போலச் சாதியையுணர்த்திற்று. சேறு - மது.

(உ) புறவு - முல்லைநிலம்.

(இ - ள்.) கற்போற்றோய்ந்த தயிரும் பாலும் நெய்யுடனே கலந்து ஆறுண்டாம்படி பள்ளியிலேவருத்தம் நிகழாநிற்க,கெடாதநின்ற ஆய்ப்படை

மாறுபாடுண்டாகப் பொருதுகெட்டது ; கெட்டபின்பு, ஆயர், மலர் சிந்தும்படி விரைந்து புன்புலத்தைப்போய் நாட்டகத்தைநீந்தி மூதூரில் இறை அணித்தாகக் கேட்கும்படி நிரையையடித்த பூசலைக் கொண்டுபோய்ப் போகட்டாரென்க.

'இட்டனர்' என்றார், இப்பழியை அரசன்றலையிலே போகடுதலால் ; உய்த்திட்டனர், ஒருசொல்லுமாம். 'மூதூர்' எனவே இது கேட்டறியாத தென்பதுகருத்து. இதனால், வாயிலோனுக்கு இசைத்தமை கூறினர்.(௧௮-௯)

வேறு.

428. கொடுமரவெயினரீண்டிக்கோட்டிமிலேறுசூழ்ந்த
படுமணிநிரையைவாரிப்பைந்துகிலருவிநெற்றி
நெடுமலையத்தஞ்சென்றாரென்றுநெய்பொதிந்தபித்தை
வடிமலராயர்பூசல்வளநகர்பரப்பினாரே.

துகில்போலருவி. நெய்யைவார்த்த மயிரிலே மலரையுடைய ஆயர்.

(இ - ள்.) மறவர் திரண்டு நிரையைச் சேரக் கைக்கொண்டு மலையில் அருஞ்சுரத்தே போயினாரென்று பூசலை நகரிலே பரப்பினாரென்க.

"பல்லாக் கொண்டா ரொல்லா ரென்னும், பூசல் கேட்டுக் கையது மாற்றி" (பன்னிருபடலம்) என்றும், " நிரைகோட் கேட்டுச் செய்தொழி லொழிய" (பு - வெ. ௨ : ௨) என்றும் துறைகூறுதலின், இவரும் கேட்டோ ரெல்லாம் சென்று மீட்பரெனக்கருதி நகர்க்குணர்த்தினர். (௨௦)

வேறு.

429. காசின் மாமணிச்சாமரைகன்னியர்
வீசமாமகரக்குழைவில்லிட
வாசவான்கழுநீர்பிடித்தாங்கரி
யாசனத்திருந்தானடன்மொய்ம்பினான்.

காசு - குற்றம். மொய்ம்பினான், இகழ்ச்சி.

(இ - ள் .) மொய்ம்பினான், கன்னியர் சாமரை வீசுந்தோறும் மகரக் குழை வில்லிடக் கழுநீரைப் பிடித்து, சச்சந்தனிருந்தமண்டபத்தே அவனிருந்த சிங்காசனத்தே இருந்தானென்க. (௨௧)

430. கொண்டவாளொடுங்கோலொடுங்கூப்புபு
சண்டமன்னனைத்தாடொழுதாயிடை
யுண்டொர்பூசலென்றாற்குரையாயெனக்
கொண்டனர்நிரைபோற்றெனக்கூறினான்.

(இ-ள்.) எடுத்தவாளொடும் பிரம்பொடும் கையைக் குவித்துக் கொடிய அரசனைத் தாளைத்தொழுது, அக்காட்டிலே ஒரு பூசலுண்டென்று கூறிய ஆசாரவாசிக்கு,'அதுயாது? கூறாய்' என்று அரசன்கூற,அவனும், 'யான்கூறுகின்றதனைத் திருவுளம்பற்று; நிரையை அடித்துக்கொண்டார்' என்றுகூறினானென்க. (௨௨)

431. செங்கட்புன்மயிர்த்தோறிரைசெம்முக
வெங்கணேக்கிற்குப்பாயமிலேச்சனைச்
செங்கட்டீவிழியாத்தெழித்தான்கையு
ளங்கட்போதுபிசைந்தடுகூற்றனன்.

(இ - ள்.) அடுகூற்றனன், அதனைக்கேட்டுப் பூவைப்பிசைந்து, கண் முதலியவற்றையுடைய மிலேச்சனைக் கண்ணாலே தீப்புறப்பட விழித்துக் கோபித்தானென்க.

அவன் அரசனன்மையின், கோபம் எளியார்மேற்றாயிற்று. (உ௩)

வேறு.

432. கூற்றின்னிடிக்குங்கொலைவேலவன்கோவலர்வாய்
மாற்றம்முணர்ந்துமறங்கூர்கடற்றானைநோக்கிக்
காற்றின்விரைந்துதொறுமீட்கெனக்காவன்மன்ன
னேற்றையரிமானிடிபோலவியம்பினனே.

"ஏறுமேற்றையும்" (தொல். மரபு. சூ. உ) என்றலின், ஏற்றையும் பெயர்.

(இ-ள்.) கூற்றுப்போற் கோபியாநின்ற வேலவனாகிய காவல்மன்னன், அக்கோபம் சிறிது தணிந்து, கோவலரையழைத்து அவர்கூறிய கூற்றிற் பொருளையுணர்ந்து, தனதுதானையைப்பார்த்து, காற்றினும்விரைந்துசென்று நிரையைமீட்பீராகவென்று அரிமானேறும்இடியும்போல இயம்பினனென்க.()

வேறு.

433. கார்விளைமேகமன்னகவுளழிகடாத்தவேழம்
போர்விளையவுளித்திண்டேர்புனைமயிர்ப்புரவிகாலாள்
வார்விளைமுரசம்விம்மவானுலாப்போந்ததேபோ
னீர்விளைசுரிசங்கார்ப்பநிலநெளிபரந்தவன்றே.

கார்காலத்துண்டான மேகமன்ன கவுள்மறைந்த கடாம். போருண்டாதற்குக் காரணமான குதிரை. வார்விளை-வாருண்டான. யானையும் பரியும் முழக்கமுமுண்மையின், மேகம் உவமை.

(இ-ள்.) வேழமும் தேரும் புரவியும் காலாளும், முரசம் விம்மச் சங்கு ஆர்ப்ப வான் உலாப்போந்ததேபோல் நிலம் நெளியப் பரந்தவென்க.

இனி, வானுலாப்போந்ததேபோலும் நீராவது கடல்; அதில் விளைந்த சங்குமாம். நெளிய, விகாரம். (உ௫)

434. காலகம்புடைப்பமுந்நீர்க்கடல்கிளர்ந்தெழுந்ததேபோல்
வேலகமிடைந்ததானைவெஞ்சினவெயினர்தாக்க
வால்வளையலறவாய்விட்டிரலையுந்துடியுமார்ப்பப்
பால்வளைந்திரவுசெற்றுப்பகலொடுமலைவதொத்தார்.

(இ-ள்.) காற்று உள்ளேயடித்தலாலே கடல் எழுந்ததேபோலக் கிளர்ந்து வேல் மிடைந்ததானையும் எயினரும் வளையலற இரலையும் துடியும் வாய்

விட்டு ஆர்ப்பத் தம்மில்தாக்குதலாலே கோவித்து ஒருபக்கத்திலே வந்து வளைந்து இரவும்பகலும் மலைவதொத்தாரென்க.

மூன்றுநீர்மையையுடைய கடல்; அது முற்கூறினும் (சீவக. ரு.) ஒடு, எண்ணொடு. வேடர்அரசர்க்கு எதிர்நிற்றலின், இரவும்பகலும் உவமையாயின. வளை தானைக்கும், துத்தரிக்கொம்பும் துடியும் வேடர்க்கும் நிரனிறை. (உசு)

435. விற்பழுத்துமிழ்ந்தவெய்யவெந்நுனைப்பகழிமைந்தர்
மற்பழுத்தகன்றமார்பத்திடங்கொண்டுவைகச்செந்நாச்
சொற்பழுத்தவர்க்குமாண்மைசொல்லலாந்தன்மைத்தன்றிக்
கொற்பழுத்தெரியும்வேலார்கொடுஞ்சிலைகுழைவித்தாரே.

பழுத்து - குழைந்து. வெய்ய - விரும்பின. மற்பழுத்து - மற்றொழிலிலே முற்றுப்பெற்று. செவ்வியநாவிலே சொல்லெல்லாம் கைவந்தவர்கள். கொற்றொழிலிலே அடிப்பட்டு. மைந்தரும்வேலாரும் அரசன்படை.

(இ-ள்.) வேடர்கையில் வில் வளைந்துகான்ற பகழி மைந்தர்மார்பத்தே தங்குதலாலே கவிகளுக்கும் ஆண்மைகூறலாந் தன்மைத்தன்றாக எரியும் வேலார் அவ்வேடர்வில்லைக் கெடுத்தாரென்க.

இனி, வேலார் தமது வில்லைவளைத்தார்; அவ்வளவிலே வேடர் மைந்தரை வீட்டினரென்றுமாம். (உஎ)

436. வாட்படையனுங்கவேடர்வண்சிலைவளையவாங்கிக்
கோட்புலியினத்தின்மொய்த்தார்கொதிநுனைப்பகழிதம்மால்
வீட்டினர்மைந்தர்தம்மைவிளிந்தமாகவிழ்ந்ததிண்டேர்
பாட்டரும்பகடுவீழ்ந்தபணிவரைகுனிவதொத்தே.

(இ - ள்.) தம்மைக்கெடுத்த வாட்படைகெடும்படி வேடர் வில்லைவளைத்துப் புலியினம்போல் எதிர்சென்று மொய்த்தவர்கள், தம்பகழியாலே வீரரானவர்களை வீட்டினர் ; அவ்வளவிலே மா வீழ்ந்தன ; தேர் கவிழ்ந்தன ; வரை குனிவதனையொத்துப் பகடுவீழ்ந்தனவென்க.

மொய்த்தார், தொழிற்பெயர். பட்டு, விகாரம். (உஅ)

437. வென்றிநாங்கொடுமின்னேவெள்ளிடைப்படுத்தென்றெண்ணி
யொன்றியுள்வாங்குகென்னவொலிகடலுடைந்ததேபோற்
பொன்றவழ்களிறுபாய்மாபுனைமயிற்குஞ்சிபிச்ச
மின்றவழ்கொடியொடிட்டுவேற்படையுடைந்தவன்றே.

வேற்படை - காலாள். குஞ்சி - சிற்றணுக்கன்.

(இ - ள்.) படாதமைந்தர், வேடரை வெளியிலே புறப்படவிட்டு, யாம் இப்பொழுதே வெற்றியைக்கொள்ளுதுமென்று எல்லாருமெண்ணி, அப்படையுடனே பொருந்தித் தள்ளிச் சிறிதுகுறைப்பீராகவென்று தம்படைக்குச் சொல்ல, களிறும் மாவும் வேற்படையும் குஞ்சத்தையும் பிச்சத்தையும் கொடியுடனே போகட்டுக் கடலுடைந்ததுபோல் உடைந்தவென்க. (உகூ)

438. பல்லினுற்சுகிர்ந்தநாரிற்பனிமலர்பயிலப்பெய்த
முல்லையங்கண்ணிசிந்தக்கால்விசைமுறுக்கியாய
ரொல்லெனவொலிப்பவோடிப்படையுடைந்திட்டதென்ன
வல்லலுற்றழுங்கிநெஞ்சிற்கட்டியங்காரனழ்ந்தான்.

(இ - ள்.) படை கெட்டவளவிலே, ஆயர், கண்ணிசிந்தும்படி காலை விசையுண்டாக முறுக்கி ஓடி ஒல்லெனவொலிப்பப் படையுடைந்ததென்று கூற, அதுகேட்டுக் கட்டியங்காரன் நெஞ்சிலே ஒருவருத்தமுற்று இரங்கி அதிலே அழுந்தினனென்க.

பல்லாற்கிழித்த நாரிலே பூ நெருக்கவைத்துக் கட்டப்பட்ட முல்லைக் கண்ணி. 'என்றார்க்கு' பாடமாயின், என்றுவருந்தினர்க்குத் தானும் எதிரே வருந்தினனென்க. (ஙo)

439. வம்புகொண்டிருந்தமாதர்வனமுலைமாலைத்தேன்சோர்
கொம்புகொண்டன்னநல்லார்கொழுங்கயற்றடங்கண்போலு
மம்புகொண்டரசர்மீண்டாராக்கொண்டுமறவர்போனர்
செம்புகொண்டன்னவிஞ்சித்திருநகர்ச்செல்வவென்றார்.

செம்பின் றன்மையைக் கொண்டாலொத்த மதில். உலகிற்கன்றி நக ரிற்கு அரசனாகிய ஸ்ரீமானேயென்றார், வெகுண்டு.

(இ - ள்.) நிரைபோனபின்வந்த ஆயர், செல்வனே, மாலையினது தேனொழுகுவதொரு கொம்பு க்ச்சைத் தம்மிடத்தே கொண்டு அடிபரந்த காதலையுடையமுலைகளைத் தனக்கு உறுப்பாகக் கொண்டாற்போலும் நல்லா ருடைய கண்போலத் தப்பாத அம்பை எதிர்கொண்டு அரசர்மீண்டார் ; மற வர் ஆவைக்கொண்டே போனரென்றாரென்க.

அரசர் - அவன்புதல்வரும் மதனனும். (ஙக)

440. மன்னிரைபெயர்த்துமைந்தர்வந்தனர்கொள்கவாட்கட்
பொன்னிழைசுடருமேனிப்பூங்கொடியனையபொற்பிற்
கன்னியைத்தருதுமென்றுகடிமுரசியம்பக்கொட்டி
நன்னகர்வீதிதோறுநந்தகோனறைவித்தானே.

(இ - ள்.) அதுகேட்டு அரசன் வாளாவிருத்தலின், நந்தகோன், கண் முதலியவற்றையுடைய கன்னியை மைந்தர் நிரைமீட்டுவந்தவர் கொள்வா ராக; யாமும் தருவேமென நகர்வீதிதோறும் மிக்கமுரசை முழங்கக்கொட் டிச் சாற்றுவித்தானென்க.

மன்னிரை - பெரியநிரை. பூண்விளங்குதற்குக் காரணமான மேனி. இரண்டுகுலத்தோரும் தாழ்வுயர்வு கருதாதிருத்தற்கு, 'கொள்க' என்றும், 'தருதும்' என்றுங்கூறினன். படைநான்குமிகப்படைத்துப்பல்லுயிர்க்கும் அருள்புரிந்தோருண்மையானும், கன்னியை விரும்புவாருண்மையானும் கொட்டி அறைவித்தானென்க. (ஙஉ)

441. வெதிர்ங்குதைச்சாபங்கான்றவெந்நூனைப்பகழிமூழ்க
வுதிர்ந்ததுசேனைமீட்டங்கூற்றொடுபொருதுகொள்ளுங்
கருந்தடங்கண்ணியன்றிக்காயமாறாகவேகு
மருமபெறலவளுமாகென்றாடவர்தொழுதுவிட்டார்.

மூங்கிலாற்செய்த குதையையுடைய வில்.

(இ - ள்.) ஆடவர், சேனைத்திரள் வேடரதுசாபங்கான்ற பகழிமூழ்குத லாலே கெட்டது; ஆதலால், இவளேயன்றி ஆகாயமே வழியாகச் செல்வா ளொருபெறுதற்கரிய தெய்வமகளுமாக, அவ்வேடராகியகூற்றொடு பொருது கொள்ளுங் கோளைவல்லார் இல்லையென்று தொழுதுவிட்டாரென்க.

இது சொல்லெச்சம். (ஙங)

442. கார்விரிமின்னனார்மேற்காமுகர்நெஞ்சினோடுந்
தேர்பரிகடாவித்தேந்தார்ச்சீவகனருளிற்போகித்
தார்பொலிபுரவிவட்டந்தான்புகக்காட்டுகின்றாற்
கூர்பரிவுற்றதெல்லாமொருமகனுணர்த்தினானே.

(இ - ள்.) சீவகன், மின்னையொக்குமகளிர்மேலே காமுகர் நெஞ்சு ஓடு மாறுபோல ஓடுந்தேரைச் செலவிலே கடாவிப் பின்பு புரவியை வட்டத்தே செல்லக் காட்டுகின்றவனுக்கு அவனருளாலே ஒருமகன்போய்வந்து ஊர் பரி வுற்றதெல்லாம் உணர்த்தினனென்க.

வட்டம் - வாளி. இனி, ஒருமகன் தேர்பரிகடாவிப்போய் வந்தென்று மாம்.

இதன்பின், *"என்றவன்", "சேட்டிளம்" என இரண்டுகவி கூறு வாருமுளர்; அவை பயிலவழங்கா. (ஙச)

வேறு.

443. தன்பான்மனையாளயலான்றலைக்கண்டுபின்னு
மின்பாலடிசிற்கிவர்கின்றகைப்பேடிபோலா
நன்பால்பசுவேதுறந்தார்பெண்டிர்பாலர்பார்ப்பா
ரென்பாரையோம்பேனெனின்யானவனாகவென்றான்.

தன்பகுதியாய்த்தங்கிய வீரமகளை. 'போலா' என்பது, செய்யாவென் னும் எச்சப்பொருட்கண்வந்த உவமைச்சொல். நன்பால் - நல்லொழுக்கம்;

---

*(க) என்றவனுரைப்பக்கேட்டே யெரிமணிக்கடகக்கையா
லொன்றியதோழர்கைம்மேலெறிந்துநக்குணர்வின்மிக்கான்
சென்றவற்கோகையாகச்சிறப்பொடுசெம்பொன்சிந்தி
நன்றிதேபோல்வதில்லைநாந்தொறுமீட்டுமென்றான்.

(உ) சேட்டிளம்பருதிபோலுந்திருமகிழ்மாலைமார்பன்
கேட்டலுங்கனன்றுவல்லேகிளரொளிநந்ததிண்டேர்
நீட்டமில்செய்கைதம்மாற்பண்ணெனநினைந்துசொன்னான்
றீட்டரும்பருதியன்னசீவகசாமியன்றே.

"பலவயினானும்" (தொல். கிளவி. சூ. ருக) என்றதனால், சிலவயின் திணை விராயெண்ணி உயர்திணையான் முடிந்தன.

(இ - ள்.) நல்லொழுக்கம், பசு, துறந்தார், பெண்டிர், பாலர், பார்ப்பாரென்பாரை ஓம்பேனெனின், யான் தன்வீரத்தை அயலாரிடத்தேகண்டு பொறுத்தான் ஆண்மகனன்மையிற் பேடியையொத்துப் பின்னும் பாலடிசிலுண்டற்கு மேற்கொள்கின்ற ஒழுக்கத்தையுடைய கட்டியங்காரனுவேனென்றானென்க.

இஃது உட்கோள். இனி, 'போலாம்' என மகரவீருக்கிப் பேடிபோலாம் அவனுகவென்றுமாம். 'போலா' என்றது, எச்சப்பொருளுணர்த்தினமையின், ஒப்பில்போலியாகாமையுணர்க. (ஙரு)

444. போர்ப்பண்ணமைத்துநுகம்பூட்டிப்புரவிபண்ணித்
தேர்ப்பண்ணமைத்துச்சிலைகோலிப்பகழியாய்ந்து
கார்க்கொண்மூமின்னினிமிர்ந்தான்கலிமான்குளம்பிற்
பார்க்கண்ணெழுந்ததுகளாற்பகன்மாய்ந்ததன்றே.

பண்ணமைத்தல் - சமைத்தல். கொண்மூ, விகாரம்.

(இ - ள்.) புரவியைப்பண்ணி, நுகத்தைப்பூட்டித் தேரைப்பண்ணமைத்துப் பின் தன்னைப் போருக்கீடாகப்பண்ணமைத்துக் கோலி ஆய்ந்து மின்போலத் தேரைச்செலுத்தினான்; அப்பொழுது, குதிரைக் குரத்தாற் பாரிடத்து எழுந்த புழுதியாலே பகற்பொழுது கெட்டதென்க. (ஙசு)

445. இழுதொன்றுவாட்கணிளையாரிளையார்கணோக்கிற்
பழுதின்றிமூழ்கும்பகழித்தொழில்வல்லகாளை
முழுதொன்றுதிண்டேர்முகஞ்செய்தவன்றன்னொடேற்கும்
பொழுதன்றுபோதுமெனப்புண்மொழிந்தான்மொழிந்தான்.

(இ - ள்.) முன்பு நிமித்தங்கூறினவன், அத்தேரைக்கண்டு, தோன்றின அவன் மகளிர் காமுகரிடத்து நோக்குகின்றநோக்குப்போலத் தப்பின்றாகத் தைக்கும் அம்பாற்செய்யுந் தொழிலைவல்ல காளை, தேரொன்றே திசைமுழுதும் முகஞ்செய்தற்குக் காரணமானவன் றன்னுடனே யாம் போரை எதிர்கொள்ளும் பருவமன்று, இப்பொழுது; போகக்கடவேமென்று கூறினானென்க. (ஙஎ)

446. மோட்டும்முதுநீர்முதலைக்குவலியதுண்டேற்
காட்டுண்ணமக்குவலியாரையுங்காண்டுமென்
றேட்டைப்பசியினிரைகவ்வியநாகமேபோல்
வேட்டங்கிரையைவிடலின்றிவிரைந்ததன்றே.

(இ - ள்.) அப்பொழுது, வேட்டுவச்சாதி, பெரிய முதலைக்கு முதுநீரிடத்து வலியதொன்று உண்டாயின், நமக்குக் காட்டிடத்து வலியாரையும் காண்டுமென்றுகூறி, இரைக்கிடைந்தபசியால் இரையைக் கவ்விய நாகம் போல் அங்கிரையைக் கைவிடுதலின்றாய்ப் போரிற்கு விரைந்ததென்க. (ஙஅ)

447. கடற்படையனுங்கவென்றகானவரென்னுங்கூற்றத்
திடைப்படாதோடிப்போமினுய்யவென்றிரலைவாய்வைத்
தெடுத்தனர்விளியுஞ்சங்கும்விளையும்பறையுங்கோடுங்
கடத்திடைமுழங்கக்காருங்கடலுமொத்தெழுந்தவன்றே.

(இ - ள்.) அங்ஙனம்விரைந்தவர், அரசன்படை கெடும்படி வென்ற வேடரென்னும் கூற்றத்திடையில் அகப்படாதே பிழைக்க ஓடிப்போங்கோ ளென்று வார்த்தைகூறித் துத்தரிக்கொம்பையூதிக் கொக்கரிப்பையும் சீழ்க் கையையுமெழுப்பினர் ; அதற்கு எதிரே பிள்ளையாருடைய சங்கும் பறையும் கொம்பும் காட்டிலேமுழங்க, இரண்டுபடையின் ஒலியும் காரையும் கடலை யுமொத்து எழுந்தவென்க.

"வில்லுடை விளையர் கல்லிடு பெடுத்த" (குறுந். உஎஉ) என்றார் பிறரும். (ருகூ)

448. கைவிசைமுறுக்கிவீசங்கொள்ளியுங்கறங்குமேய்ப்பச்
செய்கழற்குருசிறிண்டேர்விசையொடுதிசைகளெல்லா
மையெனவளைப்பவீரசார்த்தனரவருமார்த்தார்
மொய்யமர்நாட்செய்தையன்முதல்விளையாடினானே.

விசையுண்டாகமுறுக்கி. ஐயென - விரைய. பின்புசெய்யும் மொய்யம ருக்கு முதலேநாட்கொண்டு என்றது, தான்செய்யுந்தொழில்நிகழ்த்துவதற்கு முன்பே அதனைத் தொடங்கிவைத்தலை. இது தம்மிற்றும்படை வகுத்து விளையாடுந் தன்மைத்தென்று, 'விளையாடினான்' என்றார். தனக்கு அவர் நிக ரன்மையானும், அரசாட்சியின்மையிற் பகையின்மையானும், தனது அருளும் வீரமும் மேம்படுத்துதற்குச் சென்றானாகலானும், அவரை அஞ்சப்பண்ணி நிரை மீட்டானென்பதே தேவர்கருத்து ; அது மேற்காண்க.

(இ-ள்.) அவரெதிர்த்தலிற் குருசில் தேர் கொள்ளிவட்டத்தையும் காற் றாடியையுமொப்ப விசையோடே வளையாநிற்க, தன்வீரர் ஆர்த்தார் ; அது கேட்டு வேடரும் ஆர்த்தார் ; அப்பொழுது ஐயன் நாட்செய்து விளையாடினா னென்க. (சo)

449. ஆழியானூர்திப்புள்ளினஞ்சிறகொலியினாக
மாழ்கிப்பையவிந்தவண்ணம்வள்ளறேர்முழக்கினானுஞ்
சூழ்துகண்மயக்கத்தானும்புளினருள்சுருங்கிச்சேக்கைக்
கோழிபோற்குறைந்துநெஞ்சினறமெனமறமும்விட்டார்.

(இ-ள்.) திருமால்ஏறப்படுவதாகிய கருடனது சிறகொலியினாலே பாம்பு மயங்கிப் படமொடுங்கினாற்போல, வள்ளல் தேரொலியாலும் தம்மைச்சூழ் ந்த துகளின்மயக்கத்தாலும், வேடர், மனவெழுச்சி சுருங்கி, வலைப்பட்ட கோழிபோலே செயல்குறைந்து தமதுநெஞ்சில் அறம் புகுதாமற் கைவிட் டாற்போல ஈண்டு மறத்தையும் கைவிட்டாரென்க.

அவருயிரைக்கொடுத்தலின், 'வள்ளல்' என்றார். பொராதே தேரொலி யாலே அவரை அஞ்சுவித்து நிரைமீட்கின்றான். (சுக)

450. புள்ளொன்றேசொல்லுமென்றிற்[1]புன்றலைவேடன்பொய்த்தான்
வெள்ளந்தேர்வளைந்தநம்மைவென்றியீங்கரிதுவெய்தா
வுள்ளம்போற்போதுநாமோரெடுப்பெடுத்துய்யவென்னா
வள்ளன்மேலப்புமாரியார்ப்பொடுசிதறினாரே.

(இ - ள்.) அங்ஙனம் மறம்விட்டவேடர், ஆந்தை ஒருதேர்வருமென்று சொல்லாநின்றதென்று நமக்குச்சொல்லி இந்தப்புன்றலைவேடன் நிமித்தத் தைத் தப்பினான்; நம்மைத் தேர் வெள்ளமாகவளைந்தன; ஆகலான், இவ்வி டத்து நிரைகோடலரிது; இனி நாம் கடிதாக ஒருகால் உற்றுப்பொருது தள்ளி உய்யப்போம்படி ஒருவருள்ளம்போலே எல்லாரும் செல்லக்கடவேமென்று கூறிச் சென்று, வள்ளன்மேலே அப்புமாரியைச் சிதறினாரென்க.

நீ நினைந்தாற்போலப் போவேமென்றுமாம். (சுஉ)

451. மால்வரைத்தொடுத்துவீழ்ந்தமணிநிறமாரிதன்னைக்
காலிரைத்தெழுந்துபாறக்கல்லெனப்புடைத்ததேபோன்
மேனிரைத்தெழுந்தவேடர்வெந்நுனையப்புமாரி
கோனிரைத்துமிழும்வில்லாற்கோமகன்விலக்கினானே.

(இ - ள்.) மாரிதன்னைக் காற்று, கல்லென இரைத்தெழுந்து சிதற அடித்த தன்மைபோல, தன்மேல் நிரைத்தெழுந்த வேடருடைய அம்பாகிய மழையை, கோமகன் தன் கைவில்லால் தான்சொரிகின்ற கோலை எதிரே நிரைத்து விலக்கினானென்க.

மால் - பெருமை. வரையிற்றொடுத்தென்றார், காலமழையென்றுணர் தற்கு. காற்றுத் தான்வேண்டியதிசையே மழையைப்போக்குமாறுபோல், இவனம்பு தன் விசையால் அவரம்பை மீளவிட்டதென்க; "நாமுறக், கணைக்காற் றெடுத்த கண்ணகன் பாசறை" (புறநா. ௩௭௩) என்றார்பிற ரும். இதனாற் கோமகனென்றார். (சுங)

452. கானவரிரியவில்வாய்க்கடுங்கணைதொடுத்தலோடு
மானிரைபெயர்ந்தவாயரார்த்தனரணிசெய்திண்டோ
டானொன்றுமுடங்கிற்றொன்றுநிமிர்ந்ததுசரம்பெய்மாரி
போனின்றவென்பமற்றப்பொருவருசிலையினார்க்கே.

(இ - ள்.) தனது வில்வாய்க் கடுங்கணையை அங்ஙனந்தொடுத்தவு டனே நிரைமீண்டன; அதுகண்டு ஆயர் ஆர்த்தனர்; அதன்பின்பு, நிரையை விட்டுக் குவிந்த கானவர் இரியும்படியாகத் தனதுதிண்டோள் தானொன்று முடங்கிற்று; ஒன்று நிமிர்ந்தது. அப்பொழுது அவ்வேடர்க்கு அம்புகள் பெய்மாரிபோலத் தாரையாய்நின்றவென்க.

---

(பி - ம்.)—1 'புருத்தலைவேடன்'

அந்நனந்தொடுத்த தொடைவிசேடங்கண்டு, இனிப் பொரலரிதென்று குறைந்து நிரையைக் கைவிடுதலால், 'தொடுத்தலோடுமாவிரைபெயர்ந்த' என்றார். இது, நிரைமீட்டபின்பு, அவ்வேடர்திரள் குலைந்துபோம்படியெய்த நிலைமைகூறிற்று. கொல்லாதிருத்தலின், 'மாரிபோல்' என்றார். (சச)

வேறு.

453. ஐந்நூறு நூறுதலையிட்டவாறுயிரவர்
மெய்ந்நூறுநூறுநுதிவெங்கணை தூவிவேடர்
கைந்நூறுவில்லுங்கணையும்மறுத்தான்கணத்தின்
மைந்நூறுவேற்கண்மடவார்மனம்போலமாய்ந்தார்.

தலையிட்ட - முதலிலேயிட்ட. வேடர் ஐம்பத்தாறுயிரவர். அவர்மெய் நூற்றை நூறவல்லகணையை இப்பொழுது அந்நனம்நூறுதபடி சொரிந்து; தூவுதல் - மிகச்சொரிதல். மையாகிய நூறு - அஞ்சனம். இனி, மையை அழித்தற்குக்காரணமான வேலென்றுமாம். நிலைநில்லாதுகெடுதலின், மனம் உவமை. மாய்தல்-மறைதல்; "களிறுமாய்க்குங்கதிர்க்கழனி" (மதுரை. உசஎ) என்றாற்போல. தம்முயிர்க்கு ஊறுசெய்யாது எய்தமைகண்டு போகடுதலின், தூவுதலான் அறுத்தான் என்றார்; தூவித் துணித்தானென்றுமாம்.

(இ - ள்.) அந்நனம் பெய்மாரிபோனிற்கும்படி கணையைத்தூவி, வேடர்கையிற பிறரை நூறுகின்ற வில்லையும் அம்பையும் அஞ்சிப் போகடப்பண்ணினான்; பின்பு அவர் மடவார்மனம்போலே ஒருகணத்திற் காட்டிலே மறைந்தாரென்க. (சரு)

454. வாள்வாயுமின்றிவடிவெங்கணைவாயுமின்றிக்
கோள்வாய்மதியநெடியான்விடுத்தாங்குமைந்தன்
றேள்வாய்சிலையினொலியாற்றெறுமீட்டுமீள்வா
னுள்வாய்நிறைந்தநகைவெண்மதிசெல்வதொத்தான்.

கோள் - இராகு. சிலையின் ஒலியால் - எய்கிறகாலத்து விசையிற்பிறந்த ஒலியாலே. இது, "கோனிரைத்துமிழும்வில்லால்" (சீவக. சடுக) என்றதனைக் கருதிக்கூறிற்று. நாடோறும் நிறைந்தமதி, உலகறியக் கலைநிரம்பினமை தோற்றுவித்தலின், உவமையாம். மேல் அரசர் தேற்றவுந்தேறுமற்பொருதுபட்டாரேனும், அவர் கட்டியங்காரனைப்போற் பகையன்மையிற் சிறிதுபாவமுளதென்ற, அதுதீர்த்தற்குப் பொன்னாற் பண்ணவனுருவமாக்கி விழாச்செய்து களத்துப்பாவம்போக்கினனென்றுகூறிய தேவர், ஈண்டுவேடர் எம்முறையானும் கொல்லத்தகாதவராதலிற் கொலையின்றென்பதுதோன்றக் களத்துப்பாவம்போக்கினனென்று கூறாராயினரென்க.

(இ-ள்.) கோள்வாய்மதியத்தைத் திருமால்விடுத்தாற்போல, மைந்தன் அவ்வேடர்மேல் வாட்டூழும்புமின்றாக அம்புத்தழும்புமின்றாகச் சிலையினொலியால் நிரைமீட்டுமீள்வான், மதிபோவதனையொத்தானென்க. (சசு)

455. ஆளற்றமின்றியலர்தாரவன்றோழரோடுங்
கோளுற்றகோவனிரைமீட்டனனென்றுகூற
வாளுற்றபுண்ணுள்வடிவேலெறிந்திற்றதேபோ
னாளுற்றுலந்தான்வெகுண்டானகரார்த்ததன்றே.

தோழர்க்குப் போரின்றேனும் கூடநின்றநிலையால், 'தோழரோடும்' என்றார். கோளுற்ற - வேடராற்கொள்ளப்பட்ட. கோவன்-நந்தகோன்; அரசனுமாம். தான் தோற்றதன்மேல் இவன்வெற்றி நிலைநின்றது, புண்ணிலே வேல் எறியப்பட்டு அது முரிந்துநின்றாற்போன்றது. நிரைமீட்டற்கு வெகுண்டமையால், தேவர், 'நாளுற்றுலந்தான்' என்று ஒரு பெயரிட்டார்; சீவகன் அரசவுரிமை எய்துநாள்வந்துறுதலின், தனக்கிழைத்த நாளுற்றுலந்தவனென்றுமாம்.

(இ-ள்.) தாரவன், தோழருடனே இரண்டுபடையிலும் ஓராளுக்கும் குற்றமின்றாக நிரைமீட்டானென்றுகூற, அதுகேட்டு நாளுற்றுலந்தவன், இற்றதுபோல வெகுண்டான்; நகர் உவந்து ஆர்த்ததென்க. (சஎ)

வேறு.

456. இரவிதோய்கொடிகொண்மாடத்திடுபுகைதவழச்சுண்ணம்
விரவிப்பூந்தாமநாற்றிவிரைதெளித்தாரந்தாங்கி
யரவுயர்கொடியினான்றனகன்படையனுங்கவென்ற
புரவித்தேர்க்காளையன்னகாளையைப்பொலிகவென்றார்.

(இ-ள்.) சீவகன் செல்லுகின்றதெருவிலே கற்புடைமகளிர், மாடத்தே சுண்ணத்தோடேகலந்து புகைதவழாநிற்கத் தாமத்தைநாலப்பண்ணி விரையை எங்குந்தெளித்து அதனை இங்ஙனங்கோடித்து, தாமும் மங்கலமாக ஆரத்தையணிந்து, துரியோதனன்படைகெடும்படிவென்ற அருச்சுனனையொத்த காளையைப் பொலிகவென்றாரென்க.

வில்லும் தேரும் நிரைமீட்டலும் உவமம். (சஅ)

457. இன்னமுதனையசெவ்வாயிளங்கிளிமழலையஞ்சொற்
பொன்னவிர்சுணங்குபூத்தபொங்கிளமுலையினார்த
மின்னிவர்நுசுப்புநோவவிடலையைக்காணவோடி
யன்னமுமயிலும்போலவணிநகர்வீதிகொண்டார்.

(இ-ள்.) செவ்வாயினையும் சொல்லினையுமுடைய, வளர்கின்ற இளைய முலையினையுடையார், விடலையைக்காண்பதாக நுசுப்புநோவ ஓடி, அன்னமும் மயிலும் நின்றாற்போல நகரில் தெருவைக் கைக்கொண்டுநின்றாரென்க.

இது, கற்புடைமகளிரொழிந்தோரைக் கூறிற்று. (சக)

458. சில்லரிச்சிலம்பின்வள்வார்ச்சிறுபறைகறங்கச்செம்பொ
னல்குற்றேரணிந்துகொம்மைமுலையெனும்புரவிபூட்டி

நல்லெழினெடுங்கணம்பாப்புருவவில்லுருவக்கோலிச்
செல்வப்போர்க்காமன்சேனைசெம்மன்மேலெழுந்ததன்றே.

இன், அசை. 'முலையெனும்புரவி' என்றார், புரவியின்பின் தேர்செல்லுமாறுபோல முலைசென்று வசீகரித்தபின்பு அல்குற்பயன்கோடலின்.

(இ-ள்.) செல்வத்தேநின்று போர்செய்யுங் காமன்சேனை, சிலம்பாகிய பறைகறங்காநிற்க அல்குலாகிய தேரைச்சமைத்து, முலையாகிய புரவியைப் பூட்டி, கண் அம்பாகக்கொண்டு, புருவமாகிய வில்லை முடியவளைத்து, தலைவன்மேலே மறுபடையாக எழுந்ததென்க.

இதனால், அவர் வேட்கைசெலுத்தினமை கூறினார். (ருo)

459. நூல்பொரவரியநுண்மைநுசுப்பினையொசியவீங்கிக்
கால்பரந்திருந்தவெங்கட்கதிர்முலைகச்சின்வீக்கிக்
கோல்பொரச்சிவந்தகோலமணிவிரற்கோதைதாங்கி
மேல்வரல்கருதிநின்றார்விண்ணவர்மகளிரொத்தார்.

நூலெதிர்த்தற்கரிய. இன்னும், ஐயும் அசைச்சொல். கோல் - நரம்பு.

(இ - ள்.) இடை தளரும்படிவீங்கி அடிபரந்து தளராதிருந்தமுலையைக் கச்சாற்கட்டி, விரலாற்கோதையைத்தாங்கி, சீவகன்வரவைக்கருதி, இமையாதேபார்த்து மேனிலத்துநின்றவர் தெய்வமகளிரையொத்தாரென்க. (ருக)

460. ஆகமுமிடையுமஃகவடிபரந்தெழுந்துவீங்கிப்
போகமும்பொருளுமீன்றபுணர்முலைத்தடங்கடோன்றப்
பாகமேமறையநின்றபடைமலர்த்தடங்கணல்லார்
நாகம்விட்டெழுந்துபோந்தநாகர்தம்மகளிரொத்தார்.

அஃக - சுருங்கும்படி. பொருள் - சுணங்கு. புணர்முலை - நெருங்கின முலை. வேல்போலுங்கண். எழுந்து - உயர்ந்து.

(இ - ள்.) எழுந்து வீங்கி ஈன்ற முலைத்தடம், ஒருபாதியேதோன்ற ஒரு பாதிமறைய, ஒருவர்பின்பு ஒருவர்நின்றநல்லார், நாகருலகத்தைவிட்டுப் போந்த நாகர்மகளிரையொத்தாரென்க. (ருஉ)

461. வாளரந்துடைத்தவைவேலிரண்டுடன்மலைந்தவேபோ
லாள்வழக்கொழியநீண்டவணிமலர்த்தடங்கணெல்லா
நீள்சுடர்நெறியைநோக்குநிரையிதழ்நெருஞ்சிப்பூப்போற்
காளைதன்றேர்செல்வீதிகலந்துடன்றெருக்கவன்றே.

வாளரம் - அரவிசேடம்.

(இ - ள்.) அராவினவேல் இரண்டு தம்மின்மலைந்தனபோல் ஆள்வழக்கற மலைந்துநீண்ட கண்ணெல்லாம், கொடுமைசெய்யமாட்டாது தம்மிற் கலந்து, ஞாயிறுபோம்நெறியைநோக்கும் பூப்போலே காளைதேர் செல்கின்ற வீதியிலே சேரநெருங்கினவென்க. (ருங)

462. வடகமுந்துகிலுந்தோடுமாலையுமணியுமுத்துங்
கடகமுங்குழையும்பூணுங்கதிரொளிகலந்துமூதா
ரிடவகையெல்லையெல்லாமின்னிரைத்திட்டதேபோற்
படவரவல்குலாரைப்பயந்தனமாடமெல்லாம்.

வடகம் - அத்தவாளம் ; உடைவிசேடம். கதிரொளி - திங்களும்ஞாயிறும்போலுமொளி. கலந்து - கலப்ப. வகை - குறுந்தெரு. நிரைத்திட்டது, ஒருசொல்.

(இ-ள்.) வடகமுதலியன ஒளி தம்மிற் கலக்கும்படி சிலமின்னைநிரைத்தாற்போல மூதூரிடத்தினது கூறுபாட்டின் எல்லையெல்லாவற்றிலுமுள்ள மாடமெல்லாம் அல்குலாரைப் பெற்றனவென்க.

இனி, மூதூரெல்லையெல்லாம் வடகமுதலியன ஒளி தம்மிற்கலக்கும் படி சிலமின் நிரைத்தாற்போலவென்றுமாம். (ருச)

463. (க)மாதுகுமயிலினல்லார்மங்கலமரபுகூறிப்
போதகநம்பியென்பார்பூமியும்புணர்கவென்பார்
தோதகமாகவெங்குஞ்சுண்ணமேற்சொரிந்துதண்ணென்
றூதுகுபிணையல்வீசிச்சாந்துகொண்டெறிந்துநிற்பார்.

இதுமுதல், "வட்டுடை" (சகூஅ) அளவும் ஒருதொடர்.

(க) காதலொழுகுகின்ற மயிலிற்காட்டின் நல்லார்-பரத்தையர். போதக-போதுக ; "திருவேபுகுதக" (சீவக. உகஉக) என்றாற்போல. இவன் அரசனென்றறியாதிருந்தும் உலகங்காத்தற்குரியனென்று, 'பூமியும்புணர்க' என்றார். தோதகமாக - வருத்தமாக. நல்லார், மங்கலங்கூறி, நம்பி; போதுக வென்பாரும், புணர்கவென்பாரும், எவ்விடமும் சொரிந்து வீசி எறிந்துநிற்பாரும்.

464. (உ)கொடையுளுமொருவன்கொல்லுங்கூற்றினுங்கொடியவாட்போர்ப்
படையுளுமொருவனென்றுபயங்கெழுபனுவனுண் ணூ
னடையுளார்சொல்லிற்றெல்லா நம்பிசீவகன்கட்கண்டாங்
தொடையலங்கோதையென்றுசொல்லுபுதொழுதுநிற்பார்.

(உ)உம்மையிரண்டும் சிறப்பு. வாட்போரையுடையபோரென்று போரிற்கு விசேடம். பனுவல்-ஆராய்ச்சி. நடை-ஒழுக்கம். தொடையலங்கோதை-கட்டுதலையுடைய அழகிய மாலை. கோதாய், நுண்ணூல்வல்லார் கூறிற்று, கொடையிலும் ஒருவன்கொடுப்பான் ; படையிலும் ஒருவன்கெடுப்பான் ; இவ்விரண்டும் ஒருவனிடத்தே நில்லாவன்றே ; ஆயினும், இவ்விரண்டும் சீவகனிடத்தே கண்டேமென்று தம்மிற்கூறி, அவனைத்தொழுதுநிற்பாரும். ஒன்றல்லவெல்லாம் பலவாதலின், இரண்டையும் 'எல்லாம்' என்றார். இவற்றிற்குக் கன்னனும் அருச்சுனனுங்கொள்க. இனி, நிலையாமையையுணர்ந்து கொடைக்குநிகரில்லாதவன், அதன்றிப் படைக்கு நிகரிலனுவனென்று சொல்லிற்றுமாம்.

465. (ரு) செம்மலைப்பயந்தநற்றாய்செய்தவமுடையளென்பா
ரெம்மலைத்தவஞ்செய்தாள்கொலெய்துவம்யாமுமென்பா
ரம்மலையமுதமன்னாரகம்புலர்ந்தமர்ந்துநோக்கித்
தம்முறுவிழுமவெந்நோய்தந்துணைக்குரைத்துநிற்பார்.

(ரு) இவனைப்பயந்தமையால் தவமுடையளென்பாரும், இவனைப்பெற விருக்கின் றவள் எம்மலையிலேநின்று தவஞ்செய்தாளோ! யாமும் அதனைச் சேர்வேமென்பாரும். 'தவஞ்செய்தார்கொல்' என்றும் பாடம். அகம்புலர்ந்து - நெஞ்சுலர்ந்து. தம்முடைய மிக்க சீரிய காமநோயைத் தம்தோழிக்குக்கூறி நிற்பாரும்.

466. (சு) சினவுநர்க்கடந்தசெல்வன்செம்மலரகலநாளைக்
கனவினிலருளிவந்துகாட்டியாங்காணவென்பார்
மனவிரியல்குலார்தம்மனத்தொடுமயங்கியொன்றும்
வினவுநரின்றிநின்றுவேண்டுவகூறுவாரும்.

(சு) நாளையென்றார், இற்றைக்குக் காட்சியால் ஆற்றுதலின். காட்டி, இகரவீற்றுவியங்கோள். செல்வனே, எம்மையருளி நாளைக் கனவிடத்தேவந்து நின் அகலத்தை யாம்காணக்காட்டுவாயாகவென்பாரும். மனவு - மணி. தாம் கூறுவன ஒன்றும் கேட்பாரின்றாகவும் மயங்கிநின்று தாம் இவனிடத்து விரும்பும்நுகர்ச்சிகளைத் தம்மனத்தோடு கூறுவாரும். அல்குலார், இரண்டிடத்துங்கூட்டுக.

467. (ரு) விண்ணகத்துளர்கொன்மற்றிவ்வென்றிவேற்குருசிலொப்பார்
மண்ணகத்திவர்களொவ்வார்மழகளிறனையதோன்றல்
பண்ணகத்துறையுஞ்சொல்லார்நன்னலம்பருகவேண்டி
யண்ணலைத்தவத்திற்றந்தார்யார்கொலோவளியரென்பார்.

(ரு) மற்று, வினைமாற்று. தோன்றலை யண்ணிடத்து இம்மக்கள் ஒவ்வாராதலால், பின்னை இக்குருசிலையொப்பார் விண்ணகத்துளரோ? அஃது அறிகின்றிலேமென்பாரும்; இவ்வுலகின் மகளிர் ஈங்கில்லாததொருநலத்தைநுகர வேண்டி இவ்வண்ணலைத் தாம்செய்த தவத்தாற்றந்தவர் தேவரோ? மக்களோ? அவர் யாவராயினும் எல்லாராலும் அளிக்கத்தக்காரென்பாரும்.

468. (சூ) வட்டுடைப்பொலிந்ததானைவள்ளலைக்கண்டபோழ்தே
பட்டுடைசூழ்ந்தகாசுபஞ்சிமெல்லடியைச்சூழ
வட்டரக்கனையசெவ்வாயணிநலங்கருகிக்காமக்
கட்டழலெறிப்பநின்றார்கைவளைகழலநின்றார்.

(சூ) வட்டுடை - முழந்தாளள்வாக வீரருடுக்கும் உடைவிசேடம். காசு புறத்தின் மேகலை. அட்ட அரக்கு.

(இ - ள்.) மயிலினல்லார், அமுதமன்னூர், அல்குலாராகிய இவர்கள் என்பாரும் என்பாருமாய், வள்ளலைக்கண்டபொழுதே காமத்தீயெரிய வாய் கருகுகின்றவர்கள், பின்பு மேகலைசூழ வளைகழல நின்றாரென்க. (ருரு - சுo)

469. வார்செலச்செல்லவிம்மும்வனமுலைமகளிர்நோக்கி
யேர்செலச்செல்லவேத்தித்தொழுதுதோடேக்கவிப்பாற்
பார்செலச்செல்லச்சிந்திப்பைந்தொடிசொரிந்தநம்பன்
றேர்செலச்செல்லும்வீதிபேர்செலச்செல்லுமன்றே.

வார்செலச்செல்ல - கச்சு மேலேபோகப்போக. இப்பால்-பின்பு. நிலத்திலே செல்லும்படி செல்லும்படி சிதறிச் சொரிந்தன; தொடி பலவாதலிற் கூறினர். செல்லுமென்பது, நிகழ்காலமேயுணர்த்தும்.

(இ - ள்.) நம்பன்தேர்செல்லுதலாலே இப்பாலுள்ளமகளிர், மறையுமளவுநோக்கின்று, அழகுபோகாநிற்கப் போகாநிற்க ஏத்தித் தொழுது தோளை நாற்ற, அத்தோள்கள் செருகிக் காத்தற்குரிய தொடிகளையும் சொரிந்தன. பின்பு அவனதுதேர், செல்கின்றவீதியின் மகளிர்க்குப் பசப்புப்பரக்கத் தான் செல்லாநிற்குமென்க.

"நீப்ப நீங்காது வரின்வரை யமைந்து, தோட்பழி மறைக்கு முதவிப், போக்கில் பொலந்தொடி" (நற். கஙசு) என்பர். முன் வளைகழலநின்றார்க்கு வருத்தமிகுதியால், தொடியும் கழன்றனவென்க. (சுக)

470. வாண்முகத்தலர்ந்தபோலுமமைமலர்த்தடங்கண்கோட்டித்
தோண்முதற்பசலைதீரத்தோன்றலைப்பருகுவார்போ
ரூண்முதற்பாசந்தட்பநடுங்கினூர்நிற்பநில்லான்
கோண்முகப்புலியொடொப்பான்கொழுநிதிப்புரிசைபுக்கான்.

ஒளியையுடையமுகத்தே பூத்த மலர்போலும் குளிர்ந்த கண். புரிசை-தன்மனையைச்சூழ்ந்த மதில்.

(இ - ள்.) அங்ஙனம்பசந்தவர், தம் தோளிற்பசலைதீரும்படி தோன்றலைப் பருகுவார்போலே கண்ணாலே வளைத்துப்பார்த்து நடுங்கினூராய் நாணுகிய முதற்றளை தடுத்தலாலே செல்லமாட்டாது நிற்ப, தான் நில்லானுய்க் கொல்லுமுகத்தையுடையபுலிபோல்வான் புரிசைக்குள்ளே புக்கானென்க.()

471. பொன்னுகம்புரவிபூட்டுவிட்டுடன்பந்திபுக்க
மன்னுகவென்றியென்றுமணிவள்ளநிறையவாக்கி
யின்மதுப்பலியும்பூவுஞ்சாந்தமும்விளக்குமேந்தி
மின்னுருசெம்பொற்கொட்டில்விளங்குதேர்புக்கதன்றே.

(இ-ள்.) புரவி, நுகம்பூட்டுதல்விட்டுப் பந்தியிலே புக்கன; பின்பு தேருக்கு மதுவைவட்டில் நிறையவார்த்து, அம்மதுவாகியபலிமுதலியவற்றை வென்றிமன்னுகவென்றேந்த, அத்தேர் மகிழ்ந்து கொட்டிலிலேபுக்கதென்க.()

472. இட்டவுத்தரியமெல்லென்றிடைசுவல்வருத்தவொல்கி
யட்டமங்கலமுமேந்தியாயிரத்தெண்மரீண்டிப்
பட்டமுங்குழையுமின்னப்பல்கலனொலிப்பச்சூழ்ந்து
மட்டவிழ்கோதைமாதர்மைந்தனைக்கொண்டுபுக்கார்.

ஒல்கி - எதிர்கொண்டு.

(இ-ள்.) மாதர் ஆயிரத்தெண்மர் ஈண்டி, எட்டுமங்கலத்தையுமேந்தி, மின்னஒலிப்ப உத்தரியம் இடையையும் சுவலையும் வருத்த எதிர்கொண்டு சூழ்ந்து மைந்தனை உள்ளேகொண்டுபுக்காரென்க.

"சாமரை தீபந் தமனியப் பொற்குடங், காமர் கயலி னிணைமுதலாத்-தேமருவு, கண்ணுடி தோட்டி கதலிகை வெண்முரச, மெண்ணிய மங்கலங்க ளெட்டு." (சுச)

473. தாயுயர்மிக்கதந்தைவந்தெதிர்கொண்டுபுக்குக்
காய்கதிர்மணிசெய்வெள்வேற்காளையைக்காவலோம்பி
யாய்கதிருமிழும்பைம்பூணுயிரச்செங்கணுன்றன்
சேயுயருலகமெய்தியன்னதோர்செல்வமுற்றார்.

பிள்ளை உயர்ச்சிமிகுதற்குக் காரணமான தந்தை; "சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே" (புறநா, கஅ௨) என்றார் பிறரும். காய்தல்-எறித்தல்.

(இ - ள்.) தாயுந் தந்தையும் பிள்ளையை எதிர்கொண்டுபுக்கு, ஆலத்தி முதலியவற்றாலே பரிகரித்து, உலகைப் பெற்றாலொத்ததொரு செல்வத்தைத் தாமுற்றாரென்க. (சுரு)

474. (க) தகைமதியெழிலைவாட்டுந்தாமரைப்பூவினங்கட்
புகைநுதியழலவாட்கட்பொன்னனாள்புல்லநீண்ட
வகைமலிவரைசெய்மார்பின்வள்ளலைக்கண்டுவண்டார்த்
தொகைமலிதொழுவையாளுந்தோன்றன்மற்றின்னகூறும்.

475. (உ) கேட்டிதுமறக்கநம்பிகேண்முதற்கேடுசூழ்ந்த
நாட்டிறைவிசயையென்னுநாறுபூங்கொம்பனாளை
வேட்டிறைப்பாரமெல்லாங்கட்டியங்காரன்றன்னைப்
பூட்டிமற்றவன்றனாலேபொறிமுதலடர்க்கப்பட்டான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) தான்மதிக்குக்கெடாதே மதியைத்தான்கெடுக்கும் பொற்றாமரையில் திருப் பொருந்தும்படி பெருத்த மார்பினையுடைய வள்ளலைக்கண்டு சில மொழிகளைக்கூறாநிற்கும் நிரையையாளும் வண்டாரையுடைய நந்தகோனென்க. மற்று, வினைமாற்று. இன்ன-இத்தன்மையவாகியமொழிகளை; இன்ன கேளென மேலேகூட்டுக.

(உ) பொறிமுதல்-இருவினையும் செய்தற்குக்காரணமான உயிர்;"தொழின்முத னிலையே" (தொல். வேற்றுமைமயங்கு. சூ. உக) என்றாற்போல நின்றது.

(இ - ள்.) வள்ளலைக்கண்டுகூறுங்தோன்றல், நம்பி, இதனைக்கேட்டு மறப்பாயாக; பின்னை இன்னகேட்பாயாக; அவ்விரண்டும்யாவையெனின், கொம்பனாளைவிரும்பிப் பல்லுயிரைக்காக்கின்ற பாரத்தையெல்லாம் கட்டியங்காரனைப்பூட்டித் தனக்குமுன்னேநாட்டிற்குக் கேடுசூழ்ந்த இறை அவனாலே உயிர்போக்கப்பட்டானென்க. (சுசு-எ)

476. கோலிழுக்குற்றஞான்றேகொடுமுடிவரையொன்றேறிக்
காலிழுக்கு்ற்றுவீழ்ந்தேகருந்தலைகளையலுற்றேன்
மால்வழியுளதன்றாயின்வாழ்வினைமுடிப்பலென்றே
யாலம்வித்தனையதெண்ணியழிவினுளகன்றுநின்றேன்.

காலோடி வீழ்ந்தேனாக வீழ்ந்தென்றது, கட்டியங்காரன் இவன் அரசனோடிறந்தானென்று தன்சுற்றத்தையழிப்பனென்றுகருதி.

(இ - ள்.) அவனால் உயிர் போக்கப்பட்டஅன்றே வரையேறி வீழ்ந்து உயிரைப்போக்கலுற்ற யான், மால்வழி ஆலம்வித்தும்போலத் தெறித்துப் போய் மறைந்தது பின்தோன்றினதில்லையாயின் உயிரைப்போக்குவலென்றே எண்ணி, வருத்தத்தே மிக்குநின்றேனென்றானென்க.

தேவிக்குப் பிள்ளையுண்மையறிதலிற் கூறினானென்க. இது, 'கேட்டு மறக்க' என்றமொழி. (சுஅ)

477. குலத்தொடுமுடிந்தகோன்றன்குடிவழிவாராநின்றே
னலத்தகுதொறுவினுள்ளேனுமங்கோவிந்தனென்பே
னிலக்கணமமைந்தகோதாவரியெனவிசையிற்போந்த
நலத்தகுமனைவிபெற்றநங்கைகோவிந்தையென்பாள்.

குலம் தோன்றுதலருமைபற்றிப் பின்னும் 'முடிந்த' என்றான். தன்குலமெல்லாம் இப்பொழுது தானாய்நிற்றலின் வாராநின்றேனென்றான். நலத்துக்குத் தக்க.

(இ - ள்.) யான் கோன்குடிவழி வாராநின்றேன்; இடையிடத்தேன்; பெயர்கோவிந்தனென்றுகூறப்படுவேன்; கோதாவரியென்றுகூறிப் புகழால் எங்கும்பரந்த இலக்கணமமைந்த என்மனைவி பெற்றநங்கை கோவிந்தையென்று பெயர் கூறப்படுவாளென்க. (சுகூ)

478. வம்புடைமுலையினாளென்மடமகண்மதர்வைநோக்க
மம்படியிருத்திநெஞ்சத்தழுத்தியிட்டனையதொப்பக்
கொம்படுநுசுப்பினாளைக்குறையிரந்துழந்துநின்ற
நம்படைதம்முளெல்லாநகைமுகமழிந்துநின்றேன்.

(இ-ள்.) முலையினாளாகிய என்மகள்நோக்கம், எல்லார்க்கும் அம்பைத் தோளடியிலேசெல்ல வலித்து நெஞ்சிலே அழுத்தியதன்மையை ஒத்தலாலே

அந்நுசுப்பினளைப் பெறவேண்டுமென்று வருந்திநின்ற நம் ஆயரிடத்தெல்லாம் முகச்செவ்வியின்றி மறுத்துநின்றேனென்க.

தான்மகட்கொடுத்தலின் நம்படையென்றான். சீவகன்விரும்பிக் கோடற்கு மகளை இங்ஙனம் சிறப்பித்துக்கூறினன். (எ௦)

479. பாடகஞ்சுமந்தசெம்பொற்சீறடிப்பரவையல்குற்
சூடகமணிந்தமுன்கைச்சுடர்மணிப்பூணினாளை
யாடகச்செம்பொற்பாவையேழுடன்றருவலைய்
வாடலில்வதுவைகூடிமணமகனுகவென்றான்.

(இ - ள்.) ஐயனே, அடிமுதலியவற்றையுடைய கோவிந்தையைப் பாவை ஏழுடனேதருவேன்; குறைவற்றமணம்பொருந்தி மணமகனுவாயாக வென்றானென்க.

இஃது இன்னவாகியமொழியைக்கேளென்றது. 'என்றான்' என்பதனை, 'அகன்றுநின்றேன்' (சீவக. சஎசு) என்பதனோடுங்கூட்டுக. (எக)

வேறு.

480.(க)வெண்ணெய்போன்றாறினியண்மேம்பால்போற்றீஞ்சொல்ல
ளுண்ணவுருக்கியவானெய்போன்மேனியள்
வண்ணவனமுலைமாதர்மடநோக்கி
கண்ணுங்கருவிளம்போதிரண்டேகண்டாய்.

481.(உ)சேதாநறுநெய்யுந்தீம்பால்சுமைத்தயிரும்
பாதாலமெல்லாநிறைத்திடுவல்பைந்தாரோய்
போதார்புனைகோதைசூட்டுன்னடித்தியை
யாதாவதெல்லாமறிந்தருளியென்றான்.

482.(ங)குலநினையனம்பிகொழுங்கயற்கண்வள்ளி
நலனுகர்ந்தானன்றேநறுந்தார்முருக
னிலமகட்குக்கேள்வனுநீணிரைநப்பின்னை
யிலவலர்வாயின்னமிர்தம்மெய்தினனன்றே.

இவை மூன்றும் ஒருதொடர்.

(க) மேம்பால்-உண்டற்குமேவும்பால்; ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெட்டது. உண்ண - நிய. உம்மை, சிறப்பும்மை.

(உ) சுமைத்தயிர்-அடைத்தயிர். யாதாவது-இத்தால்வரும் தீங்கென்?

(ங) பின்னை, அவள்பெயர்; ந, சிறப்புப்பொருளுணர்த்துவதோரிடைச்சொல்.; நச்செள்ளை, நப்பாலத்தன், நக்கீரன் என்றாற்போல; நம்பின்னை விகாரமுமாம்.

(இ - ள்.) பைந்தாரோய், நம்பி, முலையினையும் காதலினையுமுடைய மடநோக்கி, வெண்ணெய்போற்குழைந்த இனியள்; சொல்லள்; மேனியள், அவையன்றி அவள் கண்களும் பூவிரண்டேகாண்; அவளை வரைந்தால் யாது

ஆவது? யாமறிய முருகன் வள்ளிநலம் நுகர்ந்தானன்றே; திருமால் பின்னை யைப் புணர்ந்தானன்றே ; ஆதலால்,குலத்தின் தாழ்வு கருதாதொழிக ; இனி யான்கூறினவெல்லாந் திருவுள்ளம்பற்றி நின்னடித்தியைக் கோதைசூட்டுவா யாக ; சூட்டுமிடத்துக் கலியாணஞ்செய்தற்குச் சிறியேனல்லேன்; நெய்யும் பாலும் தயிரும் பாதாளமெல்லாம் நிறைப்பேனென்றுனென்க.

மணமகனுகவென்றவிடத்து முகச்செவ்விகாணுமையின், பின் இது கூறி உடம்படுத்தினுன். (எஉ-ச)

வேறு.

483. கன்னியர்குலத்தின்மிக்கார்கதிர்முலைக்கன்னிமார்ப
முன்னினர்முயங்கினல்லான்முறிமிடைபடலைமாலைப்
பொன்னிழைமகளிரொவ்வாதவரைமுன்புணர்தல்செல்லா
ரின்னதான்முறைமைமாந்தர்க்கெனமனத்தெண்ணினுனே.

(இ - ள்.) நம் குலத்தோர், வகைமாலையினையும் இழையினையுமுடைய மகளிரை வரையுமிடத்து, கன்னியரிற் குலத்தின்மிக்கருடைய அழியாத மார்பத்தை எதிர்ப்பட்டாராய்முயங்கினல்லது,தம் குலத்திற்கு ஒவ்வாதவரை முற்படவரையார் ; அதுவுமன்றித் தேவரையொழிய மக்கட்கு முறைமை இத்தன்மையதாயிருந்ததெனக் கருதி, பின்பு, தன்மனத்தே பதுமுகனுக்குக் கொடுப்பதாகவெண்ணினுனென்க. (எரு)

484. கோட்டிளங்களிறுபோல்வானந்தகோன்முகத்தைநோக்கி
மோட்டிளமுலையினுணின்மடமகளெனக்குமாமான்
சூட்டொடுகண்ணியன்றேயென்செய்வானிவைகள்சொல்லி
நீட்டித்தல்குணமோவென்றுநெஞ்சகங்குளிர்ப்பச்சொன்னுன்.

'சூட்டொடு கண்ணியன்றே' என்றது, இடுந்தன்மையன்றிச் சூட்டுந் தன்மையோடுகூடிய கண்ணியல்லவோவென்றும் நெற்றிச்சூட்டும் கண்ணியு மல்லவோவென்றும் இரண்டுபொருளுணர்த்தும் ; உணர்த்தவே மார்பிற்கு மாலையிடுகவென்றும், தலைக்கு மாலைசூட்டுகவென்றும் பெரும்பான்மையும் வழக்குநடத்தலின், தலைமேல் வைக்கப்படும் கண்ணியென்றுனுக நந்த கோன் கருதினுனும். நெற்றிச்சூட்டு ஆடவர்க்காகாத தன்மையும், கண்ணி ஆடவர்க்கு ஆம்தன்மையும்போல,தன்குலத்திற்கு ஆகாமையிற் சூட்டின் தன் மையும், பதுமுகன்குலத்திற்குச்சிறிது பொருந்துதலிற் கண்ணியின் தன்மை யுமுடையளென்று சீவகன் கருதினுனும்; கோபாலரினும் வாணிகஞ் செய்வா ருளராதலின்.

(இ- ள்.) களிறுபோல்வான் நந்தகோன்முகத்தைப்பார்த்து, முலையினு ளாகிய நின்மகள், மாமான், எனக்குச் சூட்டொடுகண்ணியல்லவோ, இவை கள்சொல்லி நீட்டித்தல் செய்வானேன் ? இதுகுணமோவென்று நெஞ்சிடங் குளிரும்படிகூறினுனென்க.

இனி, மாமான் எனக்குச் சூட்டொடுகண்ணியன்றேயென்றது: தனக்கு ஆகாமையிற்புலாலும், பதுமுகற்கு ஆதலிற் பூவுமாகக்கருதினனென்றுமாம். இனி, ஆமான்சூட்டுமாம்; இனி, மா வடசொல்லாக்கி ஆகாதென்றும் உரைப்பர். (எசு)

485. தேன்சொரிமுல்லைக்கண்ணிச்செந்துவராடையாயர்
கோன்பெரிதுவந்துபோகிக்குடைதயிர்குழுமப்புக்கு
மான்கறிகற்றகூழைமௌவல்சூழ்மயிலைப்பந்தர்க்
கான்சொரிமுல்லைத்தாரர்ன்கடிவினைமுடிகவென்றான்.

துவரூட்டின ஆடை. தயிர்முழங்கப்புகுதல் நன்னிமித்தம். கறிகற்ற - கடித்தலைக்கற்ற. மௌவல் - மல்லிகைவிசேடம். மயிலை - இருவாட்சி. கடிவினை - சமர்வர்த்தனம்.

(இ-ள்.) முல்லைத்தாரானாகிய ஆயர்கோன் உவந்துபோய்ப் புக்குப் பந்தரிலே கடிவினை முடிவதாகவென்றானென்க. (எஎ)

486. கனிவளர்கிளவிகாமர்சிறுநுதல்புருவங்காமன்
குனிவளர்சிலையைக்கொன்றகுவளைக்கண்கயலைக்கொன்ற
வினியுளரல்லராயரெனச்சிலம்பரற்றத்தந்து
பனிவளர்கோதைமாதர்பாவையைப்பரவிவைத்தார்.

குனிவு, விகாரம்.

(இ - ள்.) மாதர், கனிந்தமைதோற்றுகின்ற கிளவியையுடையாளுடைய நுதலும் புருவமும் சிலையைக்கெடுத்தன ; கண் கயலைக்கெடுத்தன. இப்பருவங்கண்டு ஆயர் உயிர்கொண்டிருப்பாரல்லரென்று சிலம்பு ஒலியாநிற்கப் பாவையைத்தந்து பரவிவைத்தாரென்க. (எஅ)

487. நாழியுளிழுதுநாகான்கன்றுதின்றொழிந்தபுற்றோய்த்
தூழிதொறுவுந்தோழும்போன்றுடன்மூக்கவென்றூ
தாழிருங்குழலினாளைநெய்தலைப்பெய்துவாழ்த்தி
மூழைநீர்சொரிந்துமொய்கொளாய்ச்சியராட்டினாரே.

(இ - ள்.) ஆய்ச்சியர் குழலினாளைப் பசுவும் தொழுவும்போன்று ஊழிதோறும் நீயும் நின்கணவனும் சேர மூப்பீராகவென்று வாழ்த்தி, நாழியுளிருந்த நெய்யிழுதை நாகாகிய பசுவின்கன்று தின்றொழிந்த புல்லாலே தோய்த்து அந்நெய்யைத் தலையிலேவார்த்து மூழையாலே நீரைச்சொரிந்து ஆட்டினாரென்க. (எகூ)

488. நெய்விலைப்பசும்பொற்றோடுநிழன்மணிக்குழையுநீவி
மைவிரிகுழலினாள்மங்கலக்கடிப்புச்சேர்த்திப்
பெய்தனர்பிணையன்மாலையோரிலைச்சாந்துபூசிச்
செய்தனர்சிறுபுன்கோலந்தொறுத்தியர்திகைத்துநின்றார்.

(இ - ள்.) கருமை விரிந்த குழலினளை, நெய்விலையாலுண்டான பொற்றோட்டையும் குழையையும்நீக்கி மங்கலமான கடிப்பிணையையிட்டு மாலையை இட்டனராய் ஓரிலையில் இடுவித்துவந்த சந்தனத்தையும் பூசிக் கோலஞ்செய்தார்; அதுகண்டு ஆய்ச்சியர் திகைத்துநின்றாரென்க. (அ0)

489. ஏறங்கோண்முழங்கவாயரெடுத்துக்கொண்டேகிமூதூர்ச்
சாறெங்குமயரப்புக்குநந்தகோன்றன்கையேந்தி
வீறுயர்கலசநன்னீர்சொரிந்தனன்வீரனேற்றான்
பாறுகொள்பருதிவைவேற்பதுமுககுமரற்கென்றே.

(இ - ள்.) ஆயர், ஏறுகோட்பறை முழங்காநிற்க அவனை எடுத்துக் கொண்டு மூதூரெங்கும் சாறயர ஏகிப் பின்பு நந்தகன் மனையிலேபுகுதலின், நந்தகோன் தன்கையிலே கலசத்தையேந்தி நீரைச் சொரிந்தான்; வீரனும் பதுமுகனுக்கென்றுகூறி ஏற்றானென்க.

வீறு - வேறொன்றற்கில்லா அழகு. மணஞ்செய்தமை கூறினர். (அக)

490. நலத்தகையவட்குநாகாணுயிரத்திரட்டிநன்பொ
னிலக்கணப்பாவையேழுங்கொடுத்தனன்போகவிப்பா
லலைத்ததுகாமன்சேனைபருநுனையம்புமூழ்க
முலைக்குவட்டிடைப்பட்டாற்றான்முத்துகமுயங்கினனே.

நலத்தகை - நன்மையையுடைய அழகு. காமன்சேனை - கண்ணும் முலையும்.

(இ - ள்.) கோவிந்தைக்குப் பசு இரண்டாயிரமும், பொற்பாவையேழும் கொடுத்தனனாய் நந்தகோன்போக, இவ்விடத்தே பதுமுகனைக் காமன்சேனை வருத்திற்று; அவ்வளவிலே அவன் அம்பு தைத்தலாலே ஆற்றானாய் முலைச் சிகரங்களுக்குநடுவே முத்துக வீழ்ந்து முயங்கினானென்க. (அஉ)

வேறு.

491. கள்வாய்விரிந்தகழுநீர்பிணைந்தன்னவாகி
வெள்வேன்மிளிர்ந்தநெடுங்கண்விரைநாறுகோதை
முள்வாயெயிற்றூறமுதம்முனியாதுமாந்திக்
கொள்ளாதவின்பக்கடற்பட்டனன்கோதைவேலான்.

கள் வாய் விரிந்த - தேன் வாயிலே பரந்த.

(இ- ள்.) வேலான், இன்பத்தைச்செய்தலின் அலர்கின்ற கழுநீரிரண்டு சேர்ந்தாற்போன்ற தன்மையவாய்த் துன்பத்தைச்செய்தலின் வேல்போற் சூழ்ந்த கண்ணிணையுடைய மணந்தோற்றுகின்ற கோதையுடைய எயிற்றின் மாறாதஅமுதத்தை வெறுமல் உண்டு கரைபுரண்ட இன்பக்கடலிலே அழுந்தினானென்க. (அங)

செய் - புழுகு. சிவந்து - சிவக்க. கடுத்து - கடுக்க.

(இ - ள்.) மங்கையர், குழல் ஒளியைவீசிக் கழுத்திலேயலைய முலை முகம் சிவக்க முத்துஅலைத்தசையக் கைகடுக்க விசையோடேயடித்த பந்தை நீக்கி அவ்விடத்தேவந்து மயங்கினரென்க. (௨௬௧)

1102. கோதைகொண்டபூஞ்சிகைக்கொம்மைகொண்டவெம்முலை
மாதுகொண்டசாயலம்மடந்தையர்மனங்கசிந்
தோதமுத்துகுப்பபோலுண்கண்வெம்பனியுகுத்
தியாதுசெய்கமையவென்றன்புமிக்கரற்றினர்.

(இ - ள்.) முடிமுதலியவற்றையுடைய மடந்தையர், மனமுருகிக் கடலின்முத்துச்சிந்துவனபோலே கண்ணீரையுகுத்து, ஐயனே ! யாங்கள் யாது செய்வேமென்று அவற்கு அன்புற்று அழுதாரென்க. (௨௬௨)

1103. செம்பொனோலைவீழவுஞ்செய்கலங்கள்சிந்தவு
மம்பொன்மாலையோடசைந்தவிழ்ந்துகூந்தல்சோரவு
நம்பனுற்றதென்னெனுநாடகம்மடந்தையர்
வெம்பிவீதியோடினார்மின்னினன்னநுண்மையார்.

(இ - ள்.) மின்னின்யொத்த நுண்மையாராகிய நாடகமடந்தையர், நம்பனுற்றது என்னென வெம்பி, வீழவும் சிந்தவும் கூந்தல் மாலையோடே அவிழ்ந்து அசைந்து சோரவும் வீதியிலே ஓடினரென்க. (௨௬௩)

1104. பூவலர்ந்ததாரினான்பொற்புவாடுமாயிடிற்
போவுடம்புவாழுயிர்பொன்றுநீயுமின்றெனா
வீகலந்தமஞ்ஞைபோல்வேனெடுங்கணீர்மல்க
வாகுலத்தரிவையரவ்வயிறதுக்கினார்.

(இ - ள்.) கேடுகலந்தமயில்போலே ஆகுலத்தையுடைய அரிவையர், கண்ணீர் மல்காநிற்க, தாரினான் பொற்புக்கெடுமாயின், வாழுயிரே ! நீபோவாயாக ; உடம்பே ! நீயும் இன்று பொன்றுவாயாகவென்றுகூறி வயிற்றிலே அடித்துக்கொண்டாரென்க. (௨௬௪)

1105. தேன்மலிந்தகோதைமாலைசெய்கலம்முகுத்துராய்க்
கான்மலிந்தகாமவல்லியென்னதன்னராயரோ
பான்மலிந்தவெம்முலைப்பைந்துகிலரிவையர்
நூன்மலிந்தநுண்ணுசுப்புநோவவந்துநோக்கினார்.

(இ - ள்.) பானிறைந்தமுலையினையும் துகிலினையுமுடைய அரிவையர், கோதை நெற்றிமாலை கலம் இவற்றைச்சிந்திப் பரந்து காற்றுமிக்க காமவல்லிபோலே அசைந்து நூல் பெருத்தலென்றதற்குக்காரணமான நுசுப்பு நோம்படி வந்து நோக்கினரென்க. (௨௬௫)

1106. மாதரார்கள்கற்பினுக்குடைந்தமாமணிக்கலைத்
தீதிலாரநூற்பெய்வார்சிதர்ந்துபோகச்சிந்துவார்
போதுலாமலங்கலான்முன்போந்துபூந்தெரிவைய
ராதகாதெனக்கலங்கியவ்வயிறதுக்கினர்.

(இ - ள்.) முத்துக்கோக்கக்கற்ற கல்விக்குத்தோற்ற மாதரார்கள், கையில் ஆரங்களைவாங்கிக் கோப்பாராகிய தெரிவையர், அவற்றைச் சிதறிப்போம்படி சிந்துவாராய் அலங்கலான்முன்னேபோந்து, ஆ ! உனக்கு இது தகாதெனக்கூறிக் கலங்கி வயிற்றிலே அடித்துக்கொண்டாரென்க. (௨௫௬)

1107. வட்டிகைமணிப்பலகைவண்ணநுண்டுகிலிகை
யிட்டிடைநுடங்கநொந்திரியலுற்றமஞ்ஞையிற்
கட்டழலுயிர்ப்பின்வெந்துகண்ணிதீந்துபொன்னுக
மட்டவிழ்ந்தகோதையார்கள்வந்துவாயில்பற்றினர்.

(இ-ள்.) நொந்து கெடுதலுற்றமயில்போலே கோதையார்கள் கரைத்த வண்ணத்தையும் எழுதுகோலினையும் வட்டிகைப்பலகையிலேபோகட்டு அழல்போன்ற நெட்டுயிர்ப்பாலேவெந்து கண்ணிதியப் பூண்கள் சிந்தாநிற்க இடைநுடங்கவந்து வாயிலைப் பிடித்தாரென்க.

தீந்து - தீய. இது கற்புடைமகளிரைக்கூறிற்று. (௨௫௭)

வேறு.

1108. வினையதுவிளைவுகாண்மினென்றுகைவிதிர்த்துநிற்பா
ரினையனுய்த்தெளியச்சென்றாலிடிக்குங்கொலிவனையென்பார்
புனைநலமழகுகல்விபொன்றுமாவின்றுடென்பார்
வனைகலத்திகிரிபோலமறுகுமெம்மனங்களென்பார்.

(இ - ள்.) தீவினையினதுவிளைவைக் காண்மினென்று கைநடுங்கிநிற்பீர்; தன்வீரர்கையிலே இவன் அகப்பட்டுப்போந்தன்மையனுய்த் தன்மனந்தெளியச்சென்றால் இவனைக் கொல்லுமோவென்பார் ; கொல்லுமாயின், இவனோடே செயற்கையழகும் இயற்கையழகும் கல்வியுங்கெடுமென்பார் ; எம்மனம் திகிரிபோலே மறுகுமென்பாரென்க. (௨௫௮)

1109. நோற்றிலர்மகளிரென்பார்நோக்கண்டீர்தோள்களென்பார்
கூற்றத்தைக்கொம்மைகொட்டிக்குலத்தொடுமுடியுமென்பா
ரேற்றதொன்றன்றுதந்தைசெய்தவிக்கொடுமையென்பா
ராற்றலள்சுநந்தையென்பாராதகாதறனேயென்பார்.

(இ-ள்.) இவனைப்பெற்றவைத்தும் நெடுங்காலம் நுகர்தற்கு மனைவியிருவரும் நோற்றிலரென்பார் ; யாமுளேமாகவும் எம்மாலுள்ளபயன்கொள்ளாது இவன் இங்ஙனம் சிறைவாய்ப்போவதேயென்று தோள்களும் தம்மிலே நோக்காணுங்கோளென்பார் ; கூற்றத்தைத் தட்டியழைத்துத் தன் குலத்தோடும் கெடுமென்பார் ; தந்தை காட்டிக்கொடுத்தது ஏற்றதொன்

நன்றென்பார்; சுநந்தை ஆற்றுளென்பார்; அறக்கடவுளே! ஆ! இது தகாதென்பாரென்க. (உ௱க)

1110. தூக்குமின்காளைசீறிற்றுற்றிவனுளனேவென்பார்
காக்குமால்வையமெல்லாங்காவலனாகியென்பார்
பாக்கியம்பெரிதுமேகாணிதுவுமோர்பான்மையென்பார்
நோக்கன்மினுனுங்கண்டீர்நுதிகொணுகரிகனென்பார்.

(இ-ள்.) ஆராய்ந்துபாருங்கோள்; காளை சிறிதுநெருங்கிச்சீறிக்கொண்டுபோகின்ற இம்மதனன் உள்னேவென்பார்; இவன் இன்னும் காவலனாகி வையமெல்லாம் காக்குமென்பார்; நல்வினையே இவனுக்குப்பெரிதுகாண்; இதுவும் ஒருநீயினைப்பயன்காணென்பார்; கூர்மைகொண்ட பலகலைவல்லோன் நோக்கின் நானுமாகலின், நோக்கன்மினென்பாரென்க.

பெரிதும்: உம்மை, இசைநிறை. (உ௱௰)

1111. பூவரம்பாயகோதைப்பொன்னனார்புலவிநீக்கி
நூபுரந்திருத்திச்சேந்தநுதிவிரனைந்தவென்பார்
யாவரும்புகழுமையனழகுகெட்டொழியுமாயிற்
கோபுரமாடமூதூர்கூற்றுணவிளிகவென்பார்.

பூவரம்பாய-பூக்களுக்கு எல்லையான. செம்பஞ்சுபட்டு விரல்சிவந்தன.

(இ-ள்.) விரல், வீரத்திற்கும் காமத்திற்கும் கொடைமுதலியவற்றிற்கும் தோற்றிய யாம்கண்டு இவன்வீரஞ்செய்யாமையின், வீரத்திற்குஉதவியாயிற்றிலேமென்று நொந்தனவென்பார்; ஐயனழகு கெட்டேவிடுமாயின், மூதூர்விளிகவென்பாரென்க. (உ௱௧)

1112. கருஞ்சிலைமறவர்கொண்டகணநிரைவிடுக்கவல்ல
விருஞ்சிலைபயின்றதிண்டோட்கிதுதகாதென்றுகுன்றிற்
கருங்கடறுளுப்பிட்டாங்குக்கல்லெனக்கலங்கிக்காம
ரருங்கடியாணமூதூராகுலமயங்கிற்றன்றே.

(இ-ள்.) என்பார் என்பாராய், கொடியவில்லையுடைய மறவர்கொண்ட நிரையை விடுவிக்கவல்ல தோளுக்கு இவர் கைக்கொண்டுபோகின்ற இதனைக்கண்டு பொறுத்துப்போதல் தகாதெனக் கூறுதலாலே, மூதூர், மலையாலே கடலைக்கலக்கினாற்போலே கலங்கி ஆகுலமயங்கிற்றென்க.

நிரைமீட்டதோளென்றார், ஆண்டுக் கொல்லாமைவென்றாற்போல ஈண்டும் கொல்லாமல் வெல்லவல்லவென்பதுகருதி. (உ௱௨)

1113. (க) இங்கனமிவர்களேகவெரியகம்வினைக்கப்பட்ட
வெங்கணைவிடலைதாதைவியனகரவலமெய்தி
யங்கவருகுத்தகண்ணீரடித்துகளவிப்பநோக்கிப்
பொங்கமருழக்கும்வேலான்புலம்புகொண்டழுதகவென்றான்.

1114. (உ) மின்னினுன்மலையைபீர்ந்துவேறிருகூறுசெய்வான்
றுன்னினுன்றுளங்கினல்லாற்றுளங்கலம்மலையிற்குன்றே
யன்னதேதுணிந்தநீதியருகவைநமனுமாற்ரு
னென்னேர்நின்றுவாழ்தலிருநிலத்தாவதுண்டே.

1115. (ரு) வளைகடல்வலையிற்சூழ்ந்துமால்வரைவேலிகோலி
யுளையரிபடிக்கலுற்றுன்படுப்பினும்படிக்கமற்றென்
கிளையழவென்னைவாள்வாய்க்கீன்றிடலுற்றுநின்முன்
றளையவிழ்கண்ணிசிந்தத்தன்றலைநிலத்ததன்றே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(க) எரியை உள்ளேவிளைத்த வெங்கணை. தாதைவியனகர் - கந்துகன் வீடு ; எனவே குணமாலைவாயிலினின்றும் போந்தான்.

(உ) என்னை : ஐ, இடைச்சொல்.

(ரு) உளை - கழுத்தின்மயிர். கடலாகிய வலையாற்சூழ்ந்த மலையாகிய வேலியைக்கோலி அரியைப் படுக்கலுற்றுனொருவன் அகப்படுப்பினும் அகப்படுக்க; அவற்றுனும் என்னை அகட்படுத்தலரிது; அதுவும் இவற்கில்லை. இதனுனும் சிறைசெய்தானென்று உணர்க.

(இ - ள்.) இப்படியே இவர்கள்போகாநிற்க, கந்துகன்மனையிலுள்ளார் வருத்தமுற்று அவ்விடத்து அவருகுத்தகண்ணீர் போகின்றவரடியிற்றுகளை அவித்தலாலே, வேலான், அவர்களைநோக்கி, என்கிளையழும்படி என்னை வாளாற்கொல்லுதலுற்று முடியாததற்குமுயன்றுநின்றான் தலையன்றே சில நாள் சென்றாற் கண்ணிசிந்த நிலத்திடத்தேவிழ்வதென்று உட்கொண்டு, மலையை மின்னினுலேயறுத்து இருகூறுகவேறுசெய்தற்குப் பொருந்தினவன் தான் நிலைகுலைதலன்றி அம்மலைக்கு நிலைகுலைதலில்லை ; அவன் துணிந்த நீதியும் அன்னதே ; நமனும் என்முன்னே பகைத்துநின்று உயிர்வாழ்தலாற்றுனுதலின், நிலத்திலுள்ளார் என்முன்னேநின்று உயிர்வாழ்தலுளதாந்தன்மை இல்லை. அரியைப் படுப்பினும்படுக்க ; யான் அத்தன்மையேனுமல்லேன் ; ஆகலால், நீங்கள் புலம்புகொண்டு அழாதொழிமினென்றானென்க.

சிலநாள்சென்றால் - ஓராண்டுசென்றால். (உ௬ரு - ரு)

1116. நீரகம்பொதிந்தமேகநீனிறநெடுநல்யானைப்
போர்முகத்தழலும்வாட்கைப்பொன்னெடுங்குன்றமன்னு
னுர்கலியாணர்மூதூரழுதுபின்செல்லச்செல்வான்
சீருறுசிலம்பினூலாற்சிமிழ்ப்புண்டசிங்கமொத்தான்.

(இ - ள்.) கரியமேகம்போன்ற நிறத்தையுடைய களிற்றையும் வாட்கையையுமுடைய குன்றமன்னன், அவர்களை அழேற்கவென்றகூறி, ஊரிலுள்ளார் அழுதுபின்னேபோக வீரர்க்குநடுவேபோகின்றவன், சிலம்பிவாய் நீராலுண்டானநூலால் அகப்படுத்திக்கொண்ட சிங்கத்தையொத்தானென்க.

நூல், வீரர்க்குவமை. "புதன்மறைந்து, வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று" (குறள், உஎச) என்றாற்போலக் கொள்க. (உகசு)

1117. மன்னர்தம்வெகுளிவெந்தீமணிமுகில்காணமின்னிப்
பொன்மழைபொழியினந்துமன்றெனிற்புகைந்துபொங்கித்
துன்னினார்தம்மையெல்லாஞ்சுட்டிடுமென்றுசெம்பொன்
பன்னிருகோடியுய்த்துக்கந்துகன்பணிந்துசொன்னான்.

(இ - ள்.) இவர்கள் இங்ஙனம்போகாசிற்க, கந்துகன், அரசர்வெகுளியாகியதீ மணியாகியமுகில் பழங்காசென்கின்றமின்னைமின்னிப் பொன்னாகிய மழையைப்பெய்யின் விளியும்; அம்முகில் அங்ஙனம்பெய்யாதாயிற் பொங்கித் தன்னைநெருங்கினாரெல்லாரையும் சுடுமென்றுகருதிப் பன்னிருகோடிபசும்பொன்னைக்குவித்துத் தாழ்ந்துகூறினானென்க.

இப்பொழுது வார்த்தை சிறிது தாழக்கூறினானென்க. (உகஎ)

1118. மன்னவவருளிக்கேண்மோமடந்தையோர்கொடியைமூதூர்
நின்மதக்களிறுகொல்லநினக்கதுவடுவென்றெண்ணி
யென்மகனதனைநீக்கியின்னுயிரவளைக்காத்தா
னின்னதேகுற்றமாயிற்குணமினியாதுவேந்தே.

(இ - ள்.) அரசனே! அருள்பண்ணிக்கேட்பாயாக, மடந்தையாகிய கொடிபோல்வாளைப் பெண்கொலைபிறந்தறியா இவ்வூரிலே நின்களிறுகொல்லாநிற்க, நினக்கு அதுவடுவாமென்றெண்ணி நின்கீழ்வாழ்கின்ற என்மகன் அக்கொலையைநீக்கி அவளை உயிரைக்காத்தான்; இவ்வடுநீக்கியதே குற்றமாய் முடியுமாயின், வேந்தே! இனி நன்மையென்கின்றது யாது? கூறுவாயாகவென்றானென்க. (உகஅ)

1119.(க)நாண்மெய்க்கொண்டீட்டப்பட்டார்நடுக்குறுநவையைநீக்க
லாண்மக்கள்கடனென்றெண்ணியறிவின்மைதணிந்தகுற்றம்
பூண்மெய்க்கொண்டகன்றமார்பபொறுமதியென்றுபின்னு
நீண்மைக்கணின்றுவந்தநிதியெலாந்தருவலென்றான்.

1120.(உ)வாழியரிறைவதேற்றான்மாநிரைபெயர்த்தகாளை
பிழைதான்பொறுக்கவென்னப்பிறங்கிணரலங்கன்மாலை
சூழ்கதிராரம்வீழ்நூல்பரிந்தறமியிர்ந்துதிண்டோ
ளூழ்பிணைந்துருமிற்சீறியுடல்சினங்கடவச்சொன்னான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) ஆண்மக்களென்றது அரசரை; உயிரைக்காத்தலும் அழித்தலுமவர் தொழிலாதலின்.

(உ) பிழை, விகாரம். வீழ்ந்த மாலைகட்டின நூல்பரிந்து முத்தாரமுமறவென்க. கையோடுகைமாறித் தோளிலேறத்தட்டி. பெயர்த்தமாநிரையென்றெண்ணியென முன்னேகூட்டுக; அது நமக்கு அறமுமாய் அரசுக்கு வடுவுநீக்கிற்று; அத்தன்மைத்த இதுவென்றெண்ணி.

(இ - ள்.) தான் முற்கூறியதற்கு முகமாகாமைகண்டு, மார்பனே! மகளிர்நடுக்கத்தைநீக்குதல் ஆண்மக்கள்கடனென்று,தேற்றுனைத் தான்பெயர்த்த மாநிரையென்றெண்ணி அறிவின்மையினாலே உயிரைக்காக்கத்துணிந்த குற்றத்தைப் பொறுப்பாயென்றான்; எம்நம்பின்றும் செவ்விபெறுமையின், எனக்குத் தொன்றுதொட்டுவந்த பொருளெல்லாந்தருவேன்; இக்நவனே! காளையதுபிழையை எனக்காகப் பொறுப்பாயாகவென்றானாக; நிரைமீட்டதென்றதனாற் கோபமிக்குப் பரிந்து அறநிமிர்ந்து தோள்பிணைந்து சீறி உடல் சினம் கடவாநிற்க ஒருவார்த்தைகூறினனென்க. (௨௬௯-௭௦)

**1121.** ஆய்களிற்றசனிவேகமதன்மருப்பூசியாகச்
சீவகனகன்றமார்பமோலையாத்திசைகள்கேட்பக்
காய்பவன்கள்வரென்னவெழுதுவித்திடுவலின்னே
நீபரிவொழிந்துபோய்நின்னகம்புகுநினையலென்றான்.

(இ - ள்.) சீவகன் யான்காயப்படுபவனாதலின், அவன்வென்ற அரசரும் வெள்ளிமலையும் கேட்கும்படி கள்வரைக்கொல்லுமாறுபோலே அவனால்வருந்திய அசனிவேகமாகிய அதன்மருப்பு எழுத்தாணியாக அவன் அகன்றமார்பமே ஓலையாக எழுதுவிப்பேன்; நீ வருத்தமொழிந்துபோய் நின்னகத்தே செல்; இதனை நினையாதேகொள்ளென்று கூறினனென்க.

கொல்லுதலை எழுதுவிப்பேனென்றான், இதனால் தனக்குப் புகழ் நெடுங்காலம் நிற்குமென்றுகருதி. (௨௭௧)

**1122.** நஞ்சனானுரைப்பக்கேட்டேநாய்கனுநடுங்கியுள்ளம்
வெஞ்சினவேழமுண்டவிளங்கனிபோன்றுநீங்கி
யெஞ்சினான்போலநின்றானேத்தருந்தவத்தின்மிக்க
வஞ்சமில்கொள்கையான்சொலமிர்தினாலவற்புற்றானே.

(இ-ள்.) கட்டியங்காரன் அங்ஙனம் கூறக்கேட்டுக் கந்துகன், உள்ளம் நடுங்கிக் களிறுண்டவிளங்கனிபோன்று வெறுவிதாக அறிவுமுதலியனநீங்கி இறந்தான்போலநின்றான்; நின்றவன் இருடி முன்கூறியசொல்லாகிய அமிர்தாலே ஆற்றினனென்க. (௨௭௨)

**1123.** மின்னிலங்கெஃகினானைப்பெறுகலான்றந்தைமீண்டு
தன்னிலங்குறுகலோடுந்தாயழுதாற்றுகின்று
ளென்னிலையையற்கென்னயாவதுங்கவலவேண்டா
பொன்னலங்கொடியனாயோர்பொருளுரைகேளிதென்றான்.

(இ - ள்.) கந்துகன், சீவகனை அரசனிடத்துப்பெறானாய் மீண்டு தன் மனையைஅணுகினவளவிலே, தாய்ஆற்றுகின்றவள், ஐயற்கு நிலை ஏதென்று கேட்க, நலத்தையுடைய பொற்கொடியன்னாய்! நீ சிறிதும்வருந்தவேண்டா; ஈதொரு காரியத்தையுடைய வார்த்தையைக் கேளென்றானென்க.

பழையநிலையிலேயோ சிறையிலேயோவென்றாள். (௨௭௩)

1124. மதுமடைதிறந்துதீந்தேன்வார்தருகோதைநீமுன்
செதுமகப்பலவும்பெற்றுச்சிந்தைகூர்மனத்தையாகி
யிதுமகவழியின்வாழேனிறப்பல்யானென்னுமாங்கட்
கதுமெனக்கடவுடோன்றிக்கடைமுகங்குறுகவந்தான்.

(இ-ள்.) இனிய தேனினத்துக்கு மடைதிறந்து மதுவொழுக்குகின்ற கோதைபோல்வாய்! நீ முன் சாபிள்ளைபலவும்பெற்றுச் சிந்தைமிக்க மனத்தினையுடையையாயிருந்து, இந்தமகவழியுமாயின், யான் உயிர்வாழேன்; இறந்துப்படுவேனென்றவளவிலே, ஒருகடவுள், கடுகத்தோன்றித் தலைவாயிலைக் குறுகவந்தானென்க. (௨௭௪)

1125. கறவைகாண்கன்றின்வெஃகிக்கண்டடிபணிந்துகாமர்
நறவயாவுயிர்க்குமாலைநாற்றியவிடத்துளேற்றி
யறவியாற்காறுமூன்றுமமைந்தநாலமிர்தமேந்தப்
பறவைதாதுண்டவண்ணம்பட்டினிப்பரிவுதீர்ந்தான்.

அறவியாற்கு - அறத்திலேநிற்கின்றவற்கு. ஆறும்மூன்றும் அமை[illegible] அமிர்து - ஒன்பதுவகையுமமைந்த அமிர்து; [1] ஒன்பதுவகை-நவபுண்[illegible]யக் கிரமம். நாலமிர்தாவன: உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.

(இ-ள்.) அவனைக் கறவையைக்காண்கின்ற கன்றுபோலே விரும்பிக் கண்டுபணிந்து மாலைநாற்றியவிடத்தே வைத்து அவற்கு அமிர்தத்தை ஏந்தினேமாக, வண்டு தாதுண்டாற்போலேயுண்டு பட்டினியாலுள்ள வருத்தத்தைத்தீர்ந்தானென்க. (௨௭௫)

1126. ஆய்மணிப்பவளத்திண்ணையரும்பெறற்கரகத்தங்கட்
டூய்மணிவாசநன்னீர்துளங்குபொற்கலத்துளேற்று
வேய்மணித்தோளிநிற்பவிழுத்தவனியமமுற்றி
வாய்மணிமுறுவறோன்றவந்தனைவிதியிற்செய்தேன்.

முற்றி - முற்ற.

(இ-ள்.) மணியழுத்தின பவளத்திண்ணையிலிருந்து கரகத்துநீரை நிலத்தில்வீழாமற் கலத்திலேஏற்று நீ நிற்க அவன் நியமங்களைமுற்றினானாக, யான் குறைகூறுதற்கு முத்துப்போலும் முறுவறோன்றும்படி நகைத்து வணங்குமுறையாலே வணங்கினேனென்றாளென்க. (௨௭௬)

1127. ஆறெலாங்கடலுள்வைகுமருந்தவத்திறைவனூலுள்
வேறெலாப்பொருளும்வைகும்விழுத்தவவறிதிநீயே
யூறிலாவுணர்வினோக்கியுரைமதியெவன்கொன்மக்கட்
பேறிலாளல்லள்பெற்றவுயிர்சென்றுபிறக்குமென்றேன்.

(இ-ள்.) வணங்கி, விழுத்தவனே! இவள் மக்கட்பேறில்லாதாளல்லள்; பெற்றமக்களுயிர் மற்றோரிடத்தே சென்றுபிறக்கும்; இனிப் பிள்ளை எத்த[illegible]

(பி - ம்.)—1 'அஃதாவது மனோவாக்குக் காயங்களாலே அவன்மே லுடன்பாடென்பதனோடு கூடிய அமிர்து'

மைத்து; அதன்தன்மையை, ஆறெலாம் கடலுள்வைகுமாறுபோலே இறை வனூலிலே வேறுவேறுபட்ட எல்லாப்பொருளும்வைகும்; அப்பொருளெல் லாம் நீயேஅறிகியாதலிற் கனிதலையும் தெரியாததன்று; நின்னுணர்வாலே பார்த்து உரைப்பாயாகவென்றேனென்றானென்க."

மக்களைப் பின்றுக்கூட்டுக, இரக்குமென்னமாட்டாது கூறினன். ()

1128. வம்பவிழ்கோதைதந்தவான்றுவர்க்காயைவீழ்த்தோர்
செம்பழுக்காயைவாங்கித்திருநிலத்தெடுத்துக்கொண்டாங்
கம்பழநீண்டவாட்கணலமருமணிசெயம்பூங்
கொம்படுநசப்பினுய்க்குத்தந்தனென்பேணிக்கொண்டாய்.

வீழ்த்து - வீழ்ப்ப.

(இ - ள்.) அங்ஙனங்கூறியகாலத்தே, கோதாய்! யான்தந்த துவர்க்கா யை நீவீழ்ப்ப, அவனைவழிபட்டநிலத்தே கிடந்ததொரு பழுக்காயை வாங்கி எடுத்து நசுப்பினுய்க்குத் தந்தேன்; நீ அதனைப் பின்பு பேணிக்கொண்டா யென்க. (௨௭௮)

1129. (௧) பெற்றவர்நிமித்தத்தானும்பிறந்தசொல்வகையினுனு
மற்றமின்மணியையங்கைக்கொண்டவர்கண்டுகாட்டக்
கற்பகக்காமவல்லியனையநீர்கேண்மினென்று
முற்றுபுகனிந்தசொல்லான்முனிவரன்மொழியுமன்றே.

1130. (௨) ஒன்றுநீர்கவலல்வேண்டாவுலகெலாமாளுஞ்சீர்த்திப்
பொன்றிகழுருவினுனோர்புண்ணியற்பெறுதிரென்ன
நின்றநீயுவந்துநீங்கநிகழ்பொருளெனக்குச்செப்பிப்
பின்றையுநிகழ்வதுண்டுபேசுவல்கேளிதென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(௧) நிமித்தம் - துவர்க்காயைவீழ்ப்பப் பழுக்காயைக்கொடுத்தது. பிற ந்தசொல்வகையாவது, இரக்குமென்னுது சென்றுபிறக்குமென்றதனுற் போ மதுவும் பிறக்குமதுவும் சொல்லியது. கொண்டவர் முனிவரனென்றது பன் மையொருமைமயக்கம்.

(௨) பெறுதிரென்றது சுநந்தைக்குப் பிள்ளைபெறுவையென்முற்போ லிருந்தது; அவன்கூறியது வளர்க்கப்பெறுவீரென்று.

(இ - ள்.) இறைவனை அங்கையிலேகொண்டிருக்கின்றவன், நிமித்தத் தாலும் சொல்லாலும் தான்கண்டு நமக்கு அறிவிக்கவேண்டி நீர் கேண்மி னென்று காரியமுற்றப்பெற்ற இனியசொல்லாலேமொழியும் அம்முனிக ளுக்கு வரனானவன், நீர் சிறிதும் வருந்தவேண்டா; உலகமெல்லாம் ஆள்வா னொரு புண்ணியனைப்பெறுவீரென்றுகூற, அதுகேட்டு நீ உவந்துபோனாயாக, பிறப்புத்தொடங்கி அவற்குத் துறவளவுநிகழும் நன்றாயபொருள்களை எனக் குக்கூறிப் பின்புநிகழ்வதொரு துன்பமுண்டு; அத்துன்பத்தைக் கூறுகின் றேன் கேளென்றானென்க. (௨௭௯ - ௮0)

1131. நிலவுறழ்பூணினானைநெடுநகரிரங்கக்கையாத்
தலபலசெய்துகொல்வானருளிலான்கொண்டபோழ்திற்
குலவியபுகழினானைக்கொண்டுபோமியக்கனஞ்சல்
சிலபகல்கழிந்துகாண்டிசிந்தியீதென்றுசொன்னான்.

(இ-ள்.) நீங்கள் அலபலசெய்து பூணினானைக் கையைத் தொழில்செய்யாதபடி பண்ணுதலாலே, அருளிலான் அவனைக்கொல்லக்கருதி நகரிரங்கும்படி கைக்கொண்டகாலத்தே அவனை ஓரியக்கன்கொண்டுபோம்; போனால் எட்டுத்திங்கள்சென்றாற் காண்பை; இவ்வார்த்தையை அக்காலத்தே சிந்தியென்று சொன்னானதலின், நீயும் அஞ்சாதேகொள்ளென்றானென்க. (உஅக)

1132. வசையறநிறைந்தகற்பின்மாலையுமாமிதானுந்
தசையறவுருகிவெந்துதம்முயிர்நீங்குமாங்க
ணசைதவன்சொற்களென்னுநோன்புணைதழுவிநெஞ்சி
கசிவெனுங்கடலைநீந்திக்கரையெனுங்காலைகண்டார்.

(இ - ள்.) குணமாலையும் சுநந்தையும் உருகி வெந்து உயிர்நீங்குகின்ற அளவிலே அதுகேட்டு, நண்ணிய தவத்தையுடையவன் வார்த்தையென்னும் 1 நோன்புணையைத்தழுவி வருத்தமென்கின்ற கடலைநீந்தி எட்டுத்திங்களென்கின்ற காலையாகிய கரையைக் கண்டாரென்க. (உஅஉ)

1133. திருக்குழன்மகளிர்நையச்சீவகசாமிதிண்டோள்
வரிக்கச்சிற்பிணிக்கப்பட்டான்மன்னனாலென்னக்கேட்டே
தருக்குடைவேழம்வாளார்னாட்பினுட்டகைமைசான்ற
மருப்புடனிழந்ததொத்தார்மன்னுயிர்த்தோழன்மாரே.

(இ-ள்.) மன்னவன் கைக்கொண்டுவரச்சொல்லுதலால், சீவகன், தன் தோளை இருமுதுகுரவராலே கச்சிட்டுக்கட்டினாற்போலத் தொழில்செய்யாதபடி பண்ணப்பட்டானென்று சிலர்கூறக்கேட்டு அவன்தோழர் யானை போரிலே மருப்பைச் சோரவிழந்ததன்மையையொத்தாரென்க. (உஅங)

1134. நட்டவற்குற்றகேட்டேபதுமுகனக்குமற்றோர்
குட்டியைத்தின்னலாமேகோட்புலிபுறத்ததாகக்
கட்டியங்காரனென்னுங்கழுதைநம்புலியைப்பாய
வொட்டியிஃதுணரலாமேயுரைவல்லையறிகவென்றான்.

(இ - ள்.) தான் நட்புப்பண்ணினசீவகனுக்குப் பிறந்ததுன்பத்தைக்கேட்டுப் பதுமுகன் நக்கு, புலி புறத்ததாக அதன்குட்டியை வேறொன்றினால் தின்னலாமோ, அதுபோல யாம் உளேமாக அவனால் என்செய்யலாம்? அதுவேயுமன்றிக் கட்டியங்காரனென்றுங்கழுதை நம்புலியைப்பாய்தற்கு உடம்பொருந்தி இவ்வார்த்தையை மெய்யென்ற உணர்தலாகாதென்று திரிந்.... க்கூறிப் பின்பு ஒற்றுப்போகின்றவனை நோக்கி, ஆண்டுப்பிறக்கின்ற.... த்தையைக் கடுகவறிவாயாகவென்றானென்க.

(பி - ம்.)—1 'நொய்யபுணை'

மற்று, வினைமாற்று. தான் பாதுகாத்தற்றொழிலுடைமையிற் குட்டியென்றான். அது, "மடங்கலாற்றற்பதுமுகன்காக்க" (சீவக. கஅ௬௬) என்பதனானுமுணர்க. இனிப் புலியென்றது சுதஞ்சணனைக் கருதியென்றமுரைப்ப.()

1135. சிலையொடுசெல்வனின்றாற்றேவரும்வணக்கலாற்றார்
மூலையுடைத்தாயொடெண்ணித்தந்தைபிக்கொடுமைசெய்தான்
கலைவல்லீரின்னுங்கேண்மினின்னதென்றுரைக்குமாங்கண்
விரைவொடுசென்றவொற்றாள்விளைந்தவாபேசுகின்றான்.

(இ-ள்.) அவன்போனபின்பு, பதுமுகன், கலைவல்லீர் ! ஆண்டுப் பிறந்தசெய்தி இத்தன்மைத்து ; யாதெனிற் சீவகன் சிலையோடுநின்றால் தேவரும் அவனைத் தாழ்வித்தலாற்றாராதலின், அவனைத் தாழ்வித்தலரிது ; இக்கொடுமைசெய்தான், நற்றாயோடெண்ணித் தந்தையே ; இன்னமும் ஒற்றன் றந்தாலும் கேண்மினென்று உரைக்கின்றவளவிலே ஓடிவந்தவொற்றன் செய்திசொல்லாநின்றானென்க. (உஅரு)

1136. இட்டிவேல்குந்தங்கூர்வாளிருஞ்சிலையிருப்புச்சுற்றார்
நெட்டிலைச்சூலம்வெய்ய[1]மூளைத்தண்டுநெருங்கவேந்தி
யெட்டெலாத்திசையுமீண்டியெழாயிரத்திரட்டிமள்ளர்
கட்டழற்கதிரையூர்கோள்வளைத்தவாவளைத்துக்கொண்டார்.

ஈட்டி, விகாரம். இருப்புச்சுற்று - பூண். மூளைத்தண்டு - மூளையினையுடைய தண்டாயுதம்.

(இ - ள்.) பதினாலாயிரமள்ளர், ஈட்டி முதலியவற்றை நெருக்கவேந்தி எட்டாகிய எல்லாத்திசைகளிலுமீண்டிக் கதிரைப் பரிவேடிப்பு வளைத்தாற்போல வளைத்துக்கொண்டாரென்க. (உஅசு)

1137. பிடியொடுநின்றவேழம்பெருவளைப்புண்டவண்ணம்
வடிமலர்க்கோதையோடும்வளைத்தலின்மைந்தன்சீறி
விடுகணைசிலையொடேந்திவெருவரத்தோன்றலோடு
மடுபுலிகண்டமான்போலாறலவாயினாரே.

(இ - ள்.) பிடியோடுநின்றபெருவேழம் வளைப்புண்டாற்போலே குணமாலையோடேகூட மனையிடத்தே வளைத்தலாலே மைந்தன்சீறிக் கணையைச் சிலையுடனேயேந்தித் தோன்றினவளவிலே அம்மள்ளர் புலியைக்கண்டமான் போலே வழியல்லாவழிகளிலே போனாரென்க. (உஅஎ)

1138.(க)சூழ்கழன்மள்ளர்பாறச்சூழ்ச்சியிற்றந்தைபுல்லி
வீழ்தருகண்ணடம்மோய்விளங்குதோள்பிணிப்பமற்றென்
றோழரைவடுச்செய்திட்டேனென்றுதான்றுளங்கின்று
னாழ்திரைப்பாம்புசேர்ந்தவெரளிமிகுப்ருதியொத்தான்.

---

(பி - ம்.)—1 'முனைத்தண்டு'

1139.(உ) ஒற்றன்வந்துரைப்பக்கேட்டேயொத்ததோவென்சொலெ
சுற்றினார்முகத்தைநோக்கிச்சூழிமால்யானையன்னா [ன்னச்
னுற்றவிவ்விடரைத்தீர்க்குமுபாயநீருரைமினென்றான்
பொற்றிரட்குன்றம்போலப்பொலிவுகொண்டிருந்ததோளான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) வருத்தத்தாற் கழன்று நீர்வீழ்கின்ற கண்ணுளாகிய தம்மோய் - தாய் ; சுநந்தை. புல்லி - அணுகி. ஊழித்திரைப்பருதி; ஊழி, விகாரம். இனி, யொய்விளங்குதோள்பாடமாயின், 'தம்' என்பது ஒருமைபன்மை மயக்கமாம். திரைப்பரப்புச்சேர்ந்தவும் பாடம்.

(உ) சூழி - முகபடாம். தோளான் - பதுமுகன்.

(இ - ள்.) மள்ளர் அங்ஙனம் கெட்டார்களாக, இது காரியமன்றென்று கருதித் தந்தை தாய் இவர்கள்புல்லி விளங்குதோளைச் சூழ்ச்சியாலே போர்த் தொழில்செய்யாதபடிசெய்ய, அவன் இவர்கள் வேண்டிக்கோடலின், எனக்கு வடுவில்லை ; என்தோழர்க்கு வடுவுண்டாக்கினேனென்று கலங்குகின்றான்; அப்பொழுது மள்ளர்சென்று கைக்கொள்ளுதலாற் பாம்புமறைத்த பருதியை யொத்தானென்று ஒற்றன்வந்துகூறக்கேட்டு, என்சொல் ஒத்ததோவென்று கூறிப் பதுமுகன் தன்னைச்சூழ்ந்துநின்றவர்கள்முகத்தை நோக்கிச் சீவகனுக் குற்ற இவ்விடரைத்தீர்க்குமுபாயத்தை நீங்கள் உரைமினென்றானென்க. ()

1140. நிறைத்திங்களொளியொடொப்பான்புத்திசேனினைந்துசொ
மறைத்திங்கணகரைவல்லேசுடுதுநாஞ்சுடுதலோடு [ல்லு
மிறைக்குற்றேவல்செய்தலின்றியெரியின்வாய்ச்சனங்கணிங்கச்
சிறைக்குற்றநீங்கச்சென்றுசெகுத்துக்கொண்டெழுதுமென்றான்.

(இ - ள்.) நிறைந்த திங்களொளியோடொப்பனாகிய புத்திசேனன் நினைந்துசொல்லும் ; நாம் இப்பொழுதே மறைந்து ஊரைச்சுடுவேம்; சுட்ட வளவிலே சனங்கள் இறைக்குக் குற்றேவல்செய்தலின்றி எரியையவித்தற்கு நீங்கினார்களாக, மதனனைக்கொன்று சீவகனுக்குச் சிறையாகிய குற்றத்தை நீக்கிக் கொண்டுபோவேமென்றானென்க.

மறைந்து, விகாரம். இவன், அந்தணனாதலின் முற்கூறினான். (உகo)

1141. காலத்தீநகரைமேயக்கடியரண்கடிந்தவம்பிற்
சாலத்தீச்சவரர்கோலஞ்செய்துநம்மறவரீண்டிக்
கோலத்தீவேலினானைக்கோயிலுள்வளைப்பவிப்பா
லாலத்தீயிடங்கடோறுமாகுலஞ்செய்துமென்றான்.

இக்கவிமுதல் பதுமுகன்கூற்று.

(இ-ள்.) நீகூறியவாறே விரைய ஊழித்தீப்போலுந்தீயால் ஊர்முழுதும் சுடாதே முப்புரத்தைக்கடிந்த அம்புபோலே சிலவிடங்களைவிட்டுச்சுட நம்

மறவரீண்டித் தீய வேடர்கோலத்தைச்செய்து கட்டியங்காரனைக் கோயிலிலே வளைத்துக்கொள்ள இப்பகுதியிலே ஆலையிற் பாகடுந் நியையுடைய நாடெங்கும் அழிக்கக்கடவோமென்றானென்க.

"உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண், டெய்யவல் லானுக்கே யுந்தீபற" (திருவா. திருவுந்தி. ௪) என்றாற்போல. (௨௧௧)

**1142.** சிறைப்புறங்காத்துச்செல்லுமதனனைத்தெருவில்வீழப்
பிறைத்தலையம்பிற்சென்னிபெருநிலத்திடுவலிட்டான்
மறுக்குற்றுமள்ளர்நீங்கமைந்தனைக்கொண்டுபோகி
யறைத்தொழிலார்க்குஞ்செல்லாவருமிளைபுகுமினென்றான்.

(இ-ள்.) அங்ஙனஞ்செய்தால், யான் அம்பாலே சிறையைப் பாதுகாத்துத் தெருவிலேசெல்லுமதனனைத் தலையை நிலத்தேவிழஇடுவேன்; இட்டால் மறுகுதலுற்று மள்ளர்நீங்கினவளவிலே சீவகனைக்கொண்டுபோய்க்கிழாக்குந்தொழிலுடைய அமைச்சர்க்கும் நினைக்கவொண்ணாத காவற்காட்டிலே செல்லுமினென்றானென்க. (௨௧௨)

**1143.** மாற்றவர்மலைப்பினுங்கேவாட்கடாக்கொண்டுநொய்தா
வேற்றுலகேற்றிநும்பின்விரைதர்வேனுலகிற்கெல்லா
மாற்றியநட்புவல்லேவலிப்புறீஇயிடுமினென்றான்
கூற்றங்கள்பலவுந்தொக்ககூற்றத்திற்கூற்றமொப்பான்.

கூற்றங்கள்பலவுந்திரண்டகூறுபாட்டிலே விசேடித்த கூற்றத்தையொப்பான்; "முத்தூற்றுக்கூற்றம்" (புறநா. ௨௪) என்றாற்போல. தோழரிற் பதுமுகனுக்கு விசேடமுண்டென்றார். இனி, கூற்றத்தில் உவமைகூறுமிடத்துப் பலகூற்றங்களாலேபண்ணினதொருகூற்றமொப்பானென்றுமாம்.

(இ-ள்.) கூற்றமொப்பான், அங்ஙனஞ்செய்தாற் பகைவர்மலைந்ததுண்டாயின் வாளாலே கடாவிட்டு வல்லே விண்ணுலகேற்றி நும்பின்னே கடுக வருவேன்; நீங்கள் நடத்தியநட்பை உலகெல்லாம் நிலைபெறுத்தியிடுமினென்றானென்க. (௨௧௩)

**1144.** காலனைச்சூழ்ந்தநோய்போனபுலமாவிபுலர்சூழ
வேலினையேந்திநந்தன்வெருவரத்தோன்றலோடு
மாலைதன்றாதைதானுமக்களும்வந்துகூடிப்
பாலவர்பிறருமீண்டிப்பாய்புலியினத்திற்சூழ்ந்தார்.

(இ-ள்.) காலன் ஏவினவிடத்தேசேறற்கு அவனைச்சூழ்ந்தநோய்போல மாவின்மேலே நபுலவிபுலர் சூழ்ந்துவர நந்தட்டன்தோன்றினவளவிலே அவனுடனே குபேரமித்திரனும் அவன்மக்களும் தம்பகுதியிலுள்ளாரொழிந்தவரும் ஈண்டிவந்து தோழருடனேகூடி எல்லாரும் புலியினம்போலே பதுமுகனைச்சூழ்ந்தாரென்க.

நபுலவிபுலர், 'கபிலபரணர்' போலக்கொள்க. (௨௧௪)

1145. மட்டுவாயவிழ்ந்ததண்டார்த்தாமரைநாமன்சொன்ன
கட்டமைநீதிதன்மேற்காப்பமைந்திவர்கணிற்பப்
பட்டுலாய்க்கிடந்தசெம்பொற்கலையணிபரவையல்கு
லிட்டிடைப்பவளச்செவ்வாய்த்தத்தையுமிதனைக்கேட்டாள்.

(இ - ள்.) பதுமுகன்கூறிய வகுப்பமைந்தமுறையிலே இவர்கள் காவலமைந்து நிற்ப, அல்குன்முதலியவற்றையுடைய தத்தையும் இச்செய்தியைக்கேட்டாளென்க. (௨௪௫)

1146. மணியியல்யவனச்செப்பின்மங்கலத்துகிலைவாங்கிக்
கணைபுரைகண்ணியேற்பவுடுத்தபின்செம்பொற்செப்பிற்
பிணையலுநறியசேர்த்திப்பெருவிலையாரந்தாங்கித்
துணைவனுக்குற்றதுன்பஞ்சொல்லியதொடங்கினாளே.

(இ-ள்.) அதுகேட்டகண்ணி, தியானத்துக்கேற்ப வெண்துகிலையுடுத்த பின்பு நறியமாலைகளையுமணிந்து முத்தாரத்தையுந்தாங்கிக் கணவனுக்குற்ற வருத்தத்தைத் தீர்த்தற்குத் தியானத்தைத் தொடங்கினாளென்க. (௨௪௬)

1147. பொன்னணிமணிசெயோடைநீரின்வெண்சாந்துபூசித்
தன்னுடைவிஞ்சையெல்லாந்தளிரியலோதலோடு
மின்னடுவாளும்வேலுங்கல்லொடுதீயுங்காற்று
மன்னுடனேந்தித்தெய்வமாதரைச்சூழ்ந்தவன்றே.

(இ - ள்.) அங்ஙனந்தொடங்கியதளிரியல், மடலிலிருந்தசாந்தைப் பனிநீருடனேபூசித் தன்னுடையமந்திரங்களெல்லாவற்றையும் ஓதினவளவிலே அவள்வழிபாட்டிற்கு விரும்பிவருந்தெய்வங்கள், வாள் வேல் முதலியவற்றை மிகுதியுடனே ஏந்திவந்து அவளைச்சூழ்ந்தவென்க.

இதனானும், பின், "விண்ணோர்களைவாழ்த்தி" (சீவக. ௧௧௬0) என்றதனானும் ஈண்டு விஞ்சையர் வாராமையுணர்க. சாந்துபூத்த, தன்னிடைவிஞ்சையும் பாடம். (௨௪௭)

வேறு.

1148. ஆரமின்னும்பணைவெம்முலையாடமைத்தோளினாள்
வீரனுற்றதுயர்மின்னெனநீக்கியமெல்லவே
நேரமன்னும்வருகென்றுநின்றாணினைந்தாளரோ
பாருண்மன்னும்பழிபண்பனுக்கின்றுவிளைந்ததே.

(இ - ள்.) முலையினையுடையதோளினாள், தன்கணவனுக்குற்றதுயரை மின்போற் கடிதுமறையும்படி நீக்குதற்கு இவ்வாயிலிலே மிகவும் அணுகத் வருவார்களாகவென்றுநின்றவள், பண்பனுக்கு இன்றுவிளைந்ததொரு பாரிலேத் மன்னுகின்றபழியை மெல்லவே நினைந்தாளென்க.

அது மேற்கூறுகின்றார். (௨௪௮)

1149. மன்னன்செய்தசிறைமாகடலுட்குளித்தாழ்வுழித்
தன்னையெய்திச்சிறைமீட்டனடன்மனையாளெனி
னென்னையாவதிவனாற்றலுங்கல்வியுமென்றுடன்
கொன்னும்வையங்கொழிக்கும்பழிக்கென்செய்கோதெய்வமே.

சிறையெனவே கட்டில்லாமையுணர்க. என்னை : ஐ, அசை. ஆவது, ஒருமைபன்மைமயக்கம். கொன்னும் - பெரிதும்.

(இ-ள்.) அரசன்செய்தசிறைக்கடலிலே தான் முழுகியழுந்துகின்றவளவிலே தன்மனையாள் தன்னைச்சேர்ந்து சிறைநீக்கினாளென்றால், இவன் ஆற்றலும் கல்வியும் என்னாகக்கடவனவென்றுகூறி உலகம் எடுத்துச்சொல்லும் பழிக்குத் தெய்வமே, யான் என்செய்வேனென்று நினைந்தாளென்க. ()

1150.(க)செல்வனூற்றசிறைசெய்யவணீக்குமென்றாற்பழி
யில்லையாயின்னவள்யானெனும்வேற்றுமையில்லையே
சொல்லின்வெள்ளிம்மலைதோடவிழ்தாமரைப்பொன்மல
ரெல்லையாகும்பொதுப்பெண்ணவள்யான்குலமங்கையே.

1151.(உ)ஆவதாகபுகழும்பழியும்மெழுநாளவை
தேவர்மாட்டும்முளமக்களுளில்வழித்தேர்கலே
னோமெனெஞ்சம்மெனநோக்கினின்றாள்சிறைப்பட்டதன்
காவற்கன்றிற்புனிற்றாவனகார்மயிற்சாயலே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) திருப்பார்க்கத் தீங்கெலாநீக்குமென்று உலகங்கூறுதலின், தானும் அதனாற்கூறுகின்றாள். ஏகாரம், தேற்றேகாரம்.

(உ) காவற்கன்று - தன்காவலையுடைய கன்று.

(இ-ள்.) செல்வனூற்றசிறையைத் திருமகள்நீக்குமென்றுகூறியவதனாற் பழி இல்லையாய்முடியுமாயின், அவளென்றும் யானென்றும் வேறுபாடில்லையே; வேறுபாடுசொல்லின், எனக்கெல்லை வெள்ளிமலையாகும்; அவளுக் கெல்லை தாமரைப்பொன்மலராகும். அவள் பொதுமகள்; யான் குலமங்கை. அதனாலும் பழியில்லையாம். அதுவுமன்றி ஈண்டுப் புகழும் பழியும் ஆவதாக; அவை தோன்றுநாள் தேவர்பக்கலுந்தோன்றும்; மக்களில் அவையில்லாத இடம் கண்டறியேன்; இவையெல்லாம் நினைக்குங்காலமுமன்று; என் நெஞ்சமும் நோமெனக்கூறி, மயிற்சாயல், ஒருசிறைப்பட்ட தன்கன்றிடத்துப் புனிற்றாநோக்குதலொத்த நோக்கினைநோக்கிநின்றாளென்க.

ஆ விடுவிக்கநோக்கிநின்றாற்போலேநின்றாள்; இது பயனுவமம். ()

வேறு.

152.(க)மாநகர்சுடுதலொன்றேமதனனையழித்தலொன்றே
வானிகரில்லாமைந்தர்கருதியததுவுநிற்க
வேய்நிகரில்லதோளிவிஞ்சையால்விடுத்துக்கொள்ளப்
போயுயிர்வாழ்தல்வேண்டேனெனப்பொருள்சிந்திக்கின்றான்.

1153. (உ) கச்சறநிமிர்ந்துமாந்தர்க்கடாவிடுகளிறுபோல
வுச்சியுமருங்கும்பற்றிப்பிளந்துயிர்பருகிக்கோண்மா
வச்சுறவழன்றுசீறியாட்டினம்புக்கதொப்பக்
குச்சென‌நிரைத்தயானைக்குழாம்பிரித்திடுவலென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ-ள்.) வாளும் நிகரில்லா மைந்தர் கருதியது: ஒன்று மாநகரைச்சுடுதல்; ஒன்று மதனனைக்கொல்லுதலாயிருக்கும். அதுவும் தாழ்வில்லை; தத்தை தன்விஞ்சையால் என்னைவிடுவித்துக்கொள்ள யான்பிழைத்துப்போய்ப் பின்பு உயிர்வாழ்தலை வேண்டேனென்றுகருதிக் காரியத்தை நினைக்கின்றவன், தன்வயிற்றிற்கட்டின கச்சறும்படிநிமிர்ந்து பின் மாந்தரை உச்சியையு மருங்கையும் பற்றிப்பிளந்து உயிரைக் கடாவிடுகளிறுபோலே மதனனைக் கொன்று, புலி சீறி ஆட்டினத்தே புக்கதொப்பப் பாவாற்றியுன்னும்படி நெருங்கவளைத்த யானைத்திரளையும் கெடுத்திடுவேனென்று கருதினானென்க.

ஆய்நிகரும் பாடம். ஆசிரியற்குநேர்ந்ததற்குத் தாழ்வாகாதென்று இத்திரளைக் கொல்லக்கருதினன். (௩௦௨ - ௩)

1154. மின்னிலங்கெயிற்றுவேழம்வேழத்தாற்புடைத்துத்தின்டேர்
பொன்னிலங்கிவுளித்தேராற்புடைத்துவெங்குருதிபொங்க
வின்னுயிரவனையுண்ணுமெல்லைநாள்வந்ததில்லை
யென்னையிக்கிருமிகொன்றென்றேழனைநினைப்பலென்றான்.

(இ - ள்.) அங்ஙனம் கருதினவன், பின்பு குருதிபொங்கும்படி வேழத்தை வேழத்தாலேபுடைத்துத் தின்டேரைப் பொன்னிலங்கு இவுளித்தேராலேபுடைத்த நம்பகைவனுயிரை உண்ணுநாளெல்லை வந்ததில்லை; இக்கிருமிகளைக்கொன்று பெறும்பயன் யாது? என்றேழனை நினைப்பேனென்று நினைத்தானென்க.

மக்களாகியகருத்தின்மையின், 'கிருமி' என்றான். (௩௦௪)

1155. தோழனுந்தேவிமார்தங்குழாத்துளான்றுளும்புமுந்நீ
ரேழ்தருபருதிதன்மேலிளம்பிறைகிடந்ததேபோற்
றாழ்தகையாரமார்பிற்சீவகன்குணங்கடம்மை
யாழெழீஇப்பாடக்கேட்டோரரம்பையைச்சேர்ந்திருந்தான்.

எழுதரும் இளங்கதிர்மேலே இளம்பிறைகிடந்தாற்போலத் தங்கின முத்தாரமார்பினையுடைய சீவகன். எழுதரு, விகாரம்.

(இ - ள்.) சுதஞ்சணனும் தேவிமார்திரளிலேயிருக்கின்றவன் ஓரரம்பையைச் சேர்ந்து சீவகன்குணங்களைப் பாடக் கேட்டிருந்தானென்க. (௩௦௫)

வேறு.

1156. வயிரம்வேய்ந்தமணிநீண்முடிவாலொளிவானவன்
செயிரிற்றீர்ந்தசெழுந்தாமரைக்கண்ணிடனாடலு

முயிரனுணநினைந்தானுற்றதோதியினோக்கினன்
மயிலனூர்க்குப்படிவைத்தவன்மால்விசும்பேறினான்.

(இ - ள்.) வயிரமணிவேய்ந்த முடியினையும், வெள்ளைநிறத்தினையுமுடைய தேவனது குற்றத்தைநீங்கினகண் இடனுடினவளவிலே, இதனல் எனக்குத் தீங்குவருமோவென்று நோக்காதே முதற் சீவகனைநினைந்தான்; நினைந்து அவனுற்றதுன்பத்தை அறிந்தான்; அறிந்து தேவிமார்க்குத் தன்னுருவை நிருமித்துவைத்துத் தன்னூர்தியாகிய மேகத்திலேயேறினனென்க.

ஓதி - அவதிஞானம். ஓலக்கங்குலையாமற் படிவம்வைத்தானென்க; படிவம், விகாரம். (௩௦௬)

1157. இடியுமின்னும்முழக்கும்மிவற்றுலகங்நிறைந்
தொடியுமூழியிவணின்றுறுகால்வரைகீழ்ந்தென
நடலேநோக்கிக்கதிர்நாணுவதொப்பமறைந்தபின்
கடலையேந்திநிலத்திட்டெனமாரிகலந்ததே.

நிறைந்து - நிறைய. கீழ்ந்து - கிழ.

(இ - ள்.) அவ்வூர்தி, உறுகால் வரையைப்பிளக்க, இடியும் மின்னும் முழக்குமென்கின்றவற்றாலே தானிறைதலின், இந்கடலையைநோக்கி நம்மையொழிய ஊழிநிகழ்ந்ததென்று நாணுந்தன்மையையொப்பக் கதிர் மறைந்த பின்பு, உலகமுடியும் ஊழி இன்று இப்பொழுதென்னும்படி கடலையெடுத்து நிலத்தேபோகட்டாற்போலே பின்பு மழை கலந்ததென்க. (௩௦௭)

1158. விண்ணுமண்ணும்மறியாதுவிலங்கொடுமாந்தர்தங்
கண்ணும்வாயும்மிழந்தாங்கடல்கொண்டதுகாண்கெனப்
பெண்ணுமாணும்மிரங்கப்பெருமான்மகன்சாமியை
யண்ணலேந்தியகலம்புலிக்கொண்டெழுந்தேகினான்.

இழந்து-இழப்ப. ஆம் கடல்-மேல் ஊழிக்காலத்துவரும் கடல். விலங்குகள் மேயாமையின், வாயிழந்தன; "மாமேயன்மறப்ப" (நெடுநல். ௯) என்றார்பிறரும். பெருமான் - சச்சந்தன்.

(இ-ள்.) அம்மழையாலே, விலங்கும் மக்களும், விண்ணுமண்ணும் அறியாதே கண்ணும்வாயுமிழக்கும்படி ஆம்கடல்கொண்டதனைக் காண்பிராகவெனக்கூறிப் பெண்ணும் ஆணுமிரங்கச் சுதஞ்சணன்வந்து சாமியையெடுத்து மார்பிலேதழுவிக்கொண்டு மேனோக்கிப் போனானென்க. (௩௦௮)

1159. குன்றுண்டோங்குதிரடோளவற்கொண்டெழுந்தேகலு
நன்றுண்டாகவெனநன்னுதல்வாழ்த்தினள்வாழ்த்தலு
மொன்றுண்டாயிற்றவளுள்ளழிநோயுறுகாளையை
யென்றுண்டாங்கொல்லினிக்கட்படுநாளெனுஞ்சிந்தையே.

(இ-ள்.) சீவகனை அவன் கொண்டுபோகின்றவளவிலே, தத்தை நன்றுண்டாகவென்று வாழ்த்தினாள்; வாழ்த்தினவளவிலே, அவளுக்கு இவனைக்

காணுங்காலம் என்னாளிலே உண்டாங்கொலென்னும் நினைவாகிய உள்ளழி நோயொன்று உண்டாயிற்றென்க.

உண்டு, உவமவாசகம். நாளென்றது, காலத்தையுணர்த்தும். (௩௦௯)

1160. சந்தமாலைத் தொகைதாழ்ந்துசாந்தங்கமழ்பூமியுள்
வந்தவிண்ணோர்களைவாழ்த்தியேத்திம்மலர்மாலைதூ
யெந்தைமார்களெழுகென்னவேகவிடுத்தாள்குரல்
சிந்தைசெய்யுஞ்சிறகர்க்கிளிதோற்குமந்தீஞ்சொலாள்.

சந்தம் - நிறம். தான்வழிபட்டதேவர்கள் செய்துமுடிக்கின்ற காரியம் பிறரான்முடிதலின், அவரைப் போகவென்றாள். குரலென்றுநரம்பு தான் இத்தன்மைபெறவேண்டுமென்றுகருதும் சொல்லாள்.

(இ-ள்.) தான் வழிபட்டபூமியிலே அவ்வழிபாட்டிற்குவந்த தேவர்களை மாலையைத்தூவி வாழ்த்தித் தோத்திரங்களைக்கூறி, எந்தைமார்களே! போவீராகவென்று போகவிட்டாளென்க. (௩௧௦)

வேறு.

1161.(க)மலைத்தொகையானை மன்னன் மைத்துனன் மதனனென்பான்
கொலைத்தொகைவேலினானைக்கொல்லியகொண்டுபோந்தா
னலத்தகையவனைக்காணனஞ்சுயிர்த்தஞ்சிநோக்கிச்
சிலைத்தொழிற்றடக்கைமன்னற்கிற்றெனச்செப்புகின்றான்.

1162.(உ)மன்னனாற்சிறப்பட்டமைந்தனைக்கொல்லப்போந்தா
மென்னினிச்சொல்லிச்சேறுமென்செய்தும்யாங்களெல்லா
மின்னதுபட்டதென்றாலெரிவிளக்குறுக்குநம்மைத்
துன்னுபுசூழ்ந்துதோன்றச்சொல்லுமின்செய்வதென்றான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(இ-ள்.) மன்னன் மைத்துனனாகிய மதனனென்பான், சீவகனை அரசன் கொல்லுகைக்குத் தான் கைக்கொண்டுபோந்தவன், அவனைக்காணனாய் அஞ்சி நோக்கி மன்னற்கு இத்தன்மைத்தெனக் கூறுகின்றவன், அரசனாற் சிறப்பட்டசீவகனை அவன்கொல்லும்படி கைக்கொண்டுபோந்தநாம் சென்று யாங்கள்பட்ட துன்பமெல்லாம் இத்தன்மைத்தென்றுகூறின், நம்மை நடைவிளக்கு எரிக்கும்; இனி என்சொல்லிச் செல்வேம்? மேல் என்செய்யக்கடவேம்? செய்யுங்காரியத்தை எல்லாரும் நெஞ்சிலேவிசாரித்துத் தோன்றச் சொல்லுங்கோளென்றானென்க. (௩௧௧-௨)

1163. வாழ்வதோருபாயநாடிமதியுடம்பட்டுவல்லே
சூழ்வினையாளராங்கணொருவனைத்தொடர்ந்துபற்றிப்
போழ்படப்பிளந்துவாளிற்புரட்டியிட்டரியக்கண்டே
யாழ்கலமாந்தர்போலவணிநகரமுங்கிற்றன்றே.

(இ - ள்.) சூழ்வினையாளர் தாம் உயிர்வாழ்வதோருபாயத்தைநாடி மதி யொருப்பட்டு அவ்விடத்தே ஒருவனைத் தொடர்ந்துபற்றி வகிர்படப்பிளந்து வடிவுதெரியாதபடி புரட்டியிட்டுவைத்து வாளாலரிய அதனைக்கண்டு ஆழ்ந்து படும் மரக்கலத்தின்மாந்தரைப்போல நகர் அழுங்கிற்றென்க. (ருகங)

1164. காய்சினவெகுளிவேந்தேகளிற்றொடும்பொருதகாளை
மாசனம்பெரிதுமொய்த்துமழையினோடிருளுங்காற்றும்
பேசிற்றன்பெரிதுந்தோன்றப்பிழைத்துய்யப்போதலஞ்சி
வாசங்கொடாரினனைமார்புபோழ்ந்துருட்டியிட்டேம்.

மொய்த்து - மொய்ப்ப.

(இ - ள்.) அவர் அங்ஙனஞ்செய்து அரசனிடத்தேசென்று, வேந்தே! யாங்கள் செய்திகூறின், சீவகன்சுற்றம் பெரிதுமொய்த்தவளவிலே, மழை யோடே இருளும் காற்றும் மிகத்தோன்றுதலாலே எங்களைத்தப்பி அவன் உய்யப்போதற்கு அஞ்சி, நீ யானைக்கிடும்படி கொணராதே அவன்மார்பைப் பிளந்துதள்ளிப்போகட்டேமென்றாரென்க. (ருகச)

1165. அருள்வலியாண்மைகல்வியழகறிவிளமையூக்கந்
திருமலியீகைபோகந்திண்புகழ்நண்புசுற்ற
மொருவரிவ்வுலகில்யாரேசீவகனொக்குநீரார்
பெரிதரிதிவனைக்கொன்றாய்பெறுகெனச்சிறப்புச்செய்தான்.

வலி - மெய்வலி. ஆண்மை - ஆளுந்தன்மை. அறிவு - இயல்பானவறிவு. திருமலியீகை - செல்வமிகுகின்றகொடை. போகம் - எல்லாவற்றினும் நுகர வல்லனாதல். யாரே: ஏகாரம், எதிர்மறை.

(இ - ள்.) அருள்முதலியவற்றிற்குச் சீவகனையொக்குநீரார் ஒருவரு மில்லை; இவ்வுலகின்கண்ணே இவனைக்கொல்லுதல் மிகவுமரிது; இத்தன் மையானைக்கொன்ற நீ இவற்றைப் பெறுவாயாகவென்று மதனனுக்குச் சிறப் புச் செய்தானென்க. (ருகரு)

## ௪.—குணமாலையாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, ககசரு.

---

ஐந்தாவது

# பதுமையாரிலம்பகம்.

---

1166. வீட்டருஞ்சிறையிற்றேவன் விடுத்துயக்கொள்ளப்பட்ட
கோட்டமில்குணத்திஞன் போயென்செய்கின்முன்கொலென்னிற்
கூட்டரக்கெறிந்தபஞ்சிற்கூடியபளிங்கிற்றேன்முந்
தீட்டரும்படிவமன்னன்றிறங்கிளந்துரைத்துமன்றே.

வீட்டருஞ்சிறை - எல்லாவழியாலும் போக்குதலரியசிறை. இங்கியேயி லும் ஆசிரியனுக்குநேர்ந்தமொழிதப்பாமையின், 'கோட்டமில்குணத்திஞன்' என்றார். கூட்டரக்கெறிந்தபஞ்சு - செவ்வரக்கு ஊட்டின பஞ்சு; பளிங் கைக்கூடியபஞ்சாலே அப்பளிங்கிடத்தேதோன்றும் படிவத்தையொப்பான்- சீவகன்.

(இ - ள்.) தன்னை உய்யக்கொண்ட குணத்திஞனைச் சிறையினின்றும் விடுவித்துக்கொண்டு போய்த் தேவன் என்செய்கின்றுனென்று கேட்பீ ராயின், அவன்செய்கின்றநிலைமைதன்னை முற்படக்கிளந்து, பின்னர்ப் படிவ மன்னன்றிறத்தை உரைக்கக்கடவேமென்று தேவர்கூறினரென்க.

"வண்டளிர்" (சீவக. கஉஉ௫) என்னுங்கவியளவும் தேவன்செய்தி கூறினர். (க)

1167. விலங்கிவில்லுமிழும்பூணன் விழுச்சிறைப்பட்டபோழ்து
மலங்கலந்தாரினன்வந்தருஞ்சிறைவிடுத்தபோழ்தும்
புலம்பலுமகிழ்வுநெஞ்சிற்பொலிதலுமின்றிப்பொன்னூர்ந்
துலங்கலந்துயர்ந்ததோளானூழ்வினையென்றுவிட்டான்.

(இ - ள்.) தோளான், கட்டியங்காரன்சிறையில் அகப்பட்டபொழுதும் தேவன்விடுவித்தபொழுதும் புலம்பலும் மகிழ்வும் நெஞ்சிற்றேன்றுதலின்றி இரண்டையும் ஊழ்வினையென்றே கருதிவிட்டானென்க.

விழுச்சிறை-அன்னத்தைச் சிறைசெய்ததிற் சிரியசிறை. பொலிதலும்: உம்மை, சிறப்பு. சிறைப்பட்டகாலத்தும் அவன் கொண்டுபோனகாலத்தும் இவன்மனமிருந்தபடிகூறினர். இதனுனே சாரணரும், "சிறைப்பட்டனை போலும்" (சீவக. உ௯கo) என்றார். (உ)

1168. வானரமுகளநாகமலர்துதைந்தொழுகவஞ்சித்
தேனிரைத்தெழுந்துதிங்களிருலெனச்சென்றுமொய்க்குங்
கானமருவிக்குன்றிற்காய்கதிர்சுமந்தோர்திங்கண்
மேனிமிர்ந்தேறியாங்குத்தேவன்வெற்பேறினுனே.

நாகமலர் தம்மிலே நெருங்கித் தேனொழுகும்படி வானரம்பாய்தலின் அவ்விடத்திருந்த தேனினம் அஞ்சிப்போய்த் திங்களை இறாலென்றுகருதி மொய்க்கும் வெற்பு - சந்திரோதயம்.

(இ-ள்.) திங்கள் இளஞாயிற்றைச்சுமந்து ஒருவெள்ளிக்குன்றிலே ஏறி னாற்போலே தேவன் சீவகனைக்கொண்டு தன்வெற்பிலே ஏறினானென்க. (ங)

1169. திங்களைத்தெளித்திட்டன்னபாற்கடற்றிரைசெய்தெண்ணீர்
வெங்கள்விட்டலர்ந்தகண்ணிவிண்ணவனுரிமைதன்னான்
மங்கலவகையினாட்டிமணியணிகலங்கள்சேர்த்திப்
பங்கயநெடுங்கணானைப்பவித்திரகுமரனென்றான்.

நீரென்றமையின், திரைகூறினார்.

(இ - ள்.) விண்ணவன் தாமரைக்கண்ணானைத் தெண்ணீராலே உரிமை யோடேகூடநின்று ஆட்டி மங்கலவகையின் மணிக்கலங்களையுஞ்சேர்த்திப் பவித்தகுமரனென்று கூறினானென்க. (ச)

சிறைப்பாவம் நீங்கினமைபற்றி, 'பவித்திரகுமரன்' என்றான்.

1170. பொன்னணிகாம்புசெய்தபொழிகதிர்த்திங்கள்போலும்
பின்னியமுத்தமாலைப்பிணையரும்குடையினீழற்
கன்னியர்கவரிவீசக்கனமணிக்குழைவில்வீச
வின்னிசைக்கூத்துநோக்கியிருந்தனன்றிலகமன்னன்.

பொற்காம்பு செறித்ததொரு திங்கள், இல்பொருளுவமை.

(இ - ள்.) திலகமொத்தவன், சல்லியும் தூக்குமாகவிட்ட முத்தமாலை யையுடைய திங்கள்போலும் குடைநிழலிலே, கவரிவீச அதனெதிரே குழை ஒளியைவீச இசையோடுகூடியகூத்தைத் தான்பார்த்து இருத்தற்குத்தக்க இருப்பிலே இருந்தானென்க. (ரு)

1171. இருமலர்க்குவளையுண்கணிமைப்பிலாப்பயத்தைப்பெற்ற
வரிமலர்த்தாரினான்றனழகுகண்டளியவென்னாத்
திருமலர்க்கோதையைம்பாற்றேவியர்தொடர்புகேட்ப
வெரிமணிப்பூணினானுமின்னணமியம்பினானே.

(இ - ள்.) தேவியர், எம் கண்கள் அளிக்கத்தக்க தாரினான் தன் அழகைக் கண்டு இமையாதிருந்தபயனை இன்றுபெற்றனவென்று முகமன்கூறி, இவ னுடன் நட்பு எங்ஙனமுண்டாயிற்றென்று தேவனைக்கேட்ப, அவனும் இப் படிக் கூறினானென்க.

இருமை - கருமை. ஞமலியாகியபிறப்பை மறையாமற்கூறலின், 'இன் னணம்' என்றார். (சு)

வேறு.

1172. பிணிக்குலத்தகவயிற்பிறந்தநோய்கெடுத்
தணித்தகையுடம்பெனக்கருளிநோக்கினான்

கணிப்பருங்குணத்தொகைக்காளையென்றனன்
மணிக்கலத்தகத்தமிர்தனையமாண்பினான்.

பிணிக்குலம் - நோய்த்திரள்; எனவே விலங்காயிற்று. அந்நோய்க்கெல்லாம் அகமென்றது நாய்; "எரிநீரவேநரகமந்நரகத்துன்பத், தொருநீரவேவிலங்குதானுடைய துன்பம்" (சீவக. உஎஎஎ) என்பர் மேலும். அணித்தகை - அழகைத் தகைக்கின்ற. கணிப்பு - அளவு. மணிக்கலத்தமிர்தென்றார், வடிவிற்குத்தக்க கலங்காதகுணம் உண்டாதலின்.

(இ - ள்.) அமிர்தனையமாண்பினான், விலங்குகளில் நாயாகிய பிறவியிடத்தே பிறந்த நோயைக்கெடுத்து இவ்வுடம்பினையெனக்கருளி இங்ஙனம்பார்த்தான், இக்காளைகாணுங்கோனென்றானென்க. (எ)

1173. கடற்சுறவுயரியகாளையன்னவ
னடற்கரும்பகைகெடுத்தகன்றநீணில
மடத்தகையவளொடும்வதுவைநாட்டிநாங்
கொடுக்குவமெனத்தெய்வமகளிர்கூறினார்.

(இ - ள்.) காமனையொத்தவன்பகையைக்கெடுத்து அவற்கு நிலமாகிய மடத்தகையவளைக் கலியாணஞ்செய்து கொடுக்குவமென்று தெய்வமகளிர் கூறினாரென்க.

ஒடு, உருபுமயக்கம்; உம்மை, அசை. நிலமகளொடு திருமகளுமாம்.()

1174. செருநிலத்தவனுயிர்செகுத்துமற்றெனக்
கிருநிலமியைவதற்கெண்ணல்வேண்டுமோ
திருநிலக்கிழமையுந்தேவர்தேயமுந்
தருநிலத்தெமக்கெனிற்றருகுந்தன்மையீர்.

(இ - ள்.) போர்நிலத்தே யானே அவனுயிரைப்போக்குவேன். எனக்கு நிலங்கூடுகின்ற இவ்வெளியகாரியத்திற்குப் போகபூமியையும் தேவர்தேயத்தையும் எமக்கு நிலத்தே தாருமென்றால் அங்ஙனம் தரவல்ல தன்மையீர், எண்ணல்வேண்டுமோவெனச் சீவகன்கூறினானென்க.

தரும், தருகும் இரண்டும் விகாரம்; தருமிடத்து எமக்கே உரித்தாக வென்றுமாம். (சு)

1175.(க) மண்மிசைக்கிடந்தனமலையுங்கானமு
நண்ணுதற்கரியனநாடும்பொய்கையுங்
கண்மனங்குளிர்ப்பனவாறுங்காண்பதற்
கெண்ணமொன்றுளதெனக்கிலங்குபூணினாய்.

1176.(உ) ஊற்றுநீர்க்கூவலுள்ளுறையுமீனனார்
வேற்றுநாடதன்சுவைவிடுத்தன்மேயினார்

போற்றுநீபோவல்யானென்றுகூறினாற்
காற்றினதமைதியங்கறியக்கூறினான்.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க) அரியனவாகிய குளிர்ப்பனவாகியவென்க.

(உ) அது - நுகர்ச்சி ; சுவையுடதனையென்றமாம். இவன் கூட வாராத படி, 'போற்று' என்றான்.

(இ - ள்.) பூணினாய் ! நிலத்திடத்தே மலைமுதலியனவெல்லாம் கிடந்தன ; அவற்றைச் சென்றுகாண்டற்கு எனக்கு ஒரெண்ணமுண்டு ; அவை காணாதே கூவலில் உறையும்மீன்போலே தாம்பிறந்தவூரிலே திரிந்தேவிடு கின்றவர்கள் வேற்றுநாட்டு நுகர்ச்சியினுடைய இன்பத்தைக் கைவிடுதலைப் பொருந்தினாராதலின், யான் அவற்றைக்காண்டற்குப்போவேன். நீ இவ்விடத்தே பேணிக்கொண்டிருவென்று கூறினவனுக்கு வழியினதுசெய்தியை அவ்விடத்தே தெரியும்படி கூறினானென்க. (௧0 - ௧௧)

வேறு.

177. இம்மலைக்கிரண்டுகாதமிறந்தபினிருண்டுதோன்று
மம்மலையரணபாதமென்பதன்றுள்வாய்த்தோன்றுந்
தம்வினைகழுவுகின்றார்சாரணர்தரணிகாவல்
வெம்மையினகன்றுபோந்துவிழைவறத்துறந்துவிட்டார்.

(இ - ள்.) இம்மலைக்கு இருகாதம் இறந்தபின் இருண்டுதோன்றும் அம்மலையை அரணபாதமென்று பெயர்கூறுவர் ; அதன்றுள்வரையிலேவந்திருந்து, தோன்றுகின்ற இருவினையையும் கழுவுகின்றாராகிய சாரணர், வீட்டை விரும்புதலின், தரணிகாவலைத்துறந்துபோந்து பின் பற்றறத் துறந்து விட்டவர்களென்க.

அரணபாதம் - ஸ்ரீகோயிலுள்ளமலை. (௧௨)

1178. சிந்தையிற்பருதியன்னார்சேவடியிறைஞ்சலோடும்
வெந்திறலியக்கிதோன்றிவிருந்தெதிர்கொண்டுபேணித்
தந்தவளமிர்தமூட்டவுண்டவட்பிரிந்தகாலைச்
சந்துடைச்சாரல்சேறிதரணிமேற்றிலகமன்னாய்.

(இ - ள்.) தரணிக்குத்திலகமன்னாய் ! மலங்களைக்கெடுக்கின்ற சிந்தையாலே இருளகற்றும் பருதிபோல்வாரடியை இறைஞ்சினவளவிலே, இயக்கிதோன்றி எதிர்கொண்டு அமிர்தத்தைத்தந்து பேணி அவள்விருந்தூட்ட உண்டு, அவளைப் பிரிந்தகாலத்தே அவ்வரணபாதத்தின் சாரலிலே செல்வாயாகவென்க.

அமிர்தம் - நுகரப்படுவன. (௧௩)

வேறு.

1179. அங்குநின்றகன்றபினையங்காவதம்
வெங்களிவிடுமதவேழப்பேரினங்

தங்கியகாட்டதுதனிச்செல்வாரிலை
கங்கையின்கரையதுகடலிற்றேன்றுமே.

(இ - ள்.) அங்குநின்றும்போனபின்பு, இருபத்தைங்காதவழி, வேழத்திரள்தங்கிய, கடல்போற்றோன்றுங்காடு கங்கையின் கரையிடத்தது ; அதனைத் தனியே போவாரில்லையென்க.

இங்கேயானைகூறிற்று, அவன் அறஞ்செய்ததனேக்கி ; 'பஞ்சவர் போல நின்ற பகட்டினைப் பரிவு தீர்த்தான்'' (சிவக. கஉருஎ) என்பர். (கச)

1180. புனலெரிதவழ்ந்தெனப்பூத்ததாமரை
வனமதுவாளெனவாளைபாய்வன
மனமகிழ்பெருந்தடம்வலத்திட்டேகுதி
யினமலர்த்தாரினுயிரண்டுகாதமே.

(இ-ள்.) தாரினுய் ! தாமரையையுடைய, வாளைபாய்வனவாகிய தடங்களை வலத்திட்டு அவ்வியானைதிரியும்வனத்தே இருகாதமேகுவாயாகவென்க.(

1181. காந்தியமணியொடுவயிரம்பொன்கலந்
தேந்தனின்றேளென விரண்டுகுன்றுமேபாய்ப்
பூந்துகின்மகளிரிற்பொலிந்துபோர்த்ததோர்
பேந்தருபேய்வனம்பெரியகாண்டியே.

ஏந்தல், தொழிற்பெயர். பெரிய அச்சந்தரும் பேய்.

(இ - ள்.) அவ்வனம் இருகாதம்போய், மணிமுதலியவற்றைக் கலந்து ஏந்துதலையுடைய நின்றேளென்னும்படி இரண்டுகுன்றுவாரப்பட்டுப் பேய்கள் மகளிரைப் போலே பொலிவுபெற்று மனத்தை மறைத்ததொருகாட்டைக் காண்பையென்க. (கரு)

1182. இளவெயின்மணிவரையெறித்திட்டன்னதோ
ரளவருகுங்குமத்தகன்றமார்பினுய்
களவினினணிநலங்கவர்ந்தகள்வவென்
றுளர்மணிக்கொம்பனாருருகிநைபவே.

உளர்தல் - அசைதல்.

(இ - ள்.) வெயில் வரையிலேயெறித்த தன்மையைப்போல்வதொரு மார்பினுய் ! நின்னை அவர்கள்கண்டு, கள்வனேயென்றுகூறி உருகி நைவார்களென்க. (க

1183. பழங்குழைந்தனையதோர்மெலிவிற்பையென
முழங்கழல்வேட்கையின்முழுகியூர்தரத்
தழும்பதமிதுவெனச்சார்ந்துபுல்லலும்
மிழிந்துயிருண்டிடும்பேய்களாபவே.

(இ-ள்.) வேட்கையினாலே, நெகிழ்ந்த பழங்குழைந்தனையதொரு மேனி மெலிவோடே மிக்கனுகுதலின், முயக்குங்காலையிதுவென்று புல்லினவளவிலே பேய்களாவர்; அவரைப் புல்லற்கவென்க. (கஅ)

வே று.

1184. கண்டபேய்நகரினீங்கிக்காவதங்கடந்துதோன்றும்
வெண்டலைப்புணரிவீசிக்கிடந்தபொற்றீவிற்றாகிக்
கொண்டலைப்பரியசெந்நெல்கொடிக்கரும்புடுத்தவேலி
நுண்டுகினுழைந்தவல்குற்பவளமொத்தினியதொன்றே.

(இ - ள்.) கண்ட பேய்நகரினின்றும்போய்க் காதங்கடந்தவளவிலே, இனியதொருநாடு தோன்றுமென்க.

கடந்து - கடப்ப. தீவிற்றாகி - தீவின் றன்மைத்தாய். ஒழுங்கினையுடைய கரும்புசூழ்ந்த வேலியிடத்து, அறுத்துத் தொலைத்தற்கரிய செந்நெல், அல்குலில் துகிலுக்குள்ளே நுழைந்துகிடந்த பவளமேகலையையுமொத்து, திரைசூழ்ந்துகிடந்ததொரு பொற்றீவினையுமொத்துத் தோன்றுமென்க. (கசு)

1185. படுமழைபருவம்பொய்யாப்பல்லவதேயமென்னுந்
தடமலர்க்குவளைப்பட்டந்தழுவியயாணர்நன்னாட்
டிடைநெறியசைவுதீரவிருந்தவணேகலுற்றாற்
கடநெறிநடத்தற்கின்னாக்கல்லதரத்தமுண்டே.

(இ-ள்.) பல்லவதேயமென்னும் நாட்டிடை நகரியிலே வழிவருத்தந்தீர இருதிங்களிருந்து, அவ்விடத்தினின்றும் போதலுற்றகாலத்துக் காட்டுவழி கடந்துபோதற்குப் பொல்லாததொரு கல்வழியுண்டு ; அதன்றன்மையைக் கேளென்க.

இதனால், பதுமையைக்கோடலும் கூறினான். (உ0)

வே று.

1186. (க) நுதிகொண்டனவெட்பரனுண்ணிலைவேல்
பதிகொண்டுபரந்தனபோன்றுளவால்
விதிகண்டவரல்லதுமீதுசெலார்
வதிகொண்டதொர்வெவ்வழல்வாய்சொலின்வேம்.

1187. (உ) குழவிப்பிடிகுஞ்சரமாழ்குமெனத்
தழுவிச்சுடுவெவ்வழலூங்குவன
கெழுவிப்பெடையைக்கிளர்சேவறழீஇத்
தொழுதிச்சிறகிற்றுயராற்றுவன.

1188. (ந) கலையின்பிணைகன்றிடுமென்முகசிந்
திலையின்னிழலவ்வயினின்மையினா

னிலையின்னிழலுன துவின்றுகொடுத்
துலையும்வெயினின்றுருகும்முரவோய்.

1189. (௪) கடநாகமதங்கலந்துக்கநிலத்
துடைநாமெனமின்னெனவொண்மணியம்
படநாகமழன்றுபதைத்துவரு
மடனுமயலார்மனம்வைப்பதுவே.

இவைநான்கும் ஒருதொடர்.

(௩) இன்பிணை - இனியபிணை.

(௪) 'மதங்கள்கலந்தநிலத்து' என்றும் பாடம்.

(இ - ள்.) உரவோய்! அந்தவழியில் வேல்பதிதல்கொண்டு பரந்தன வர்றையொத்து நுதிகொண்டனவாகிய பரல் உளவாயிருக்கும்; அது தன் னிடத்திற்கொண்டதொரு வெம்மையைச் சொல்லின், வாய்தான் வேம்; ஆயினும் சிறிது கூறுவேன். குஞ்சரம் குழவியையுடைய பிடி மயங் மென்றுகருதி அழலைத் தாங்குவனவும், சேவல் பெடையைப்பொருந்தித்தழு வித் தம் பிரட்சியையுடைய சிறகாற்காத்துத் துயராற்றுவனவுமாய் வெயி லிலேநின்று உலையாநிற்கும். கலை, பிணை நிழலின்மையின் உருகுமென்று கசிந்து அக்கலை தானின்று தன்னிலையிற்பிறந்தநிழலை அதற்குக்கொடுத்துத் தான் உருகாநிற்கும்; படநாகம் ஈரமாகநினைத்து யானையின்மதம் வெம்மை மிகுதியாலே நீரல்லாதநீருடனேகலந்து கோசத்தாலேயுக்க நிலத்தில் வந்து விழ்ந்து அதன்வெம்மைபொறுதே முறுக்குவிட்ட கயிறெனை மின்னெனப் பதைத்துப் போகாநிற்கும். இந்தவழியைப்போய் இறக்கவென்று விதியா லே விதித்துவிடப்பட்டவர்களல்லது மேற்போகாராதலான், அவ்விடத்திற் குப் புதியரானவர் போகவென்று கருதுதல் அறியாமையாம். நீயும் அவ் வழியில் மனம்வையாதேகொள்ளென்க. (உக - ௪)

(௧) வதி - வழி. விதியைப் புறங்கண்ட தபோதனர் மேலேயெழும் பறந்து போவதல்லது வேறுபோகாரென்றுமாம்.

1190. நெறியிற்றளர்வார்தமநெஞ்சுருகிப்
பொறியிற்றளர்வார்புரிவார்சடையா
ரறிமற்றவர்தாபதரவ்வழியார்
கறைமுற்றியகாமருவேலவனே.

(இ - ள்.) வேலவனே! சிலதாபதர், சன்மார்க்கநெறியைத் தப்பியிருப் பாருமாய்த் தந்நெஞ்சுருகி இந்திரியங்களிற் றளர்வாருமாய்ச் சடையாருமாய் அவ்விடத்தேயிருப்பார்; அவர்களைக்கண்டு அவர்தன்மையை அறிந்துபோக வென்க. (உ௫)

1191. (௧) குலைவாழைப்பழுத்தகொழும்பழனு
நிலைமாத்தனதேமுறுதீங்கனியும்

பலவீன்றனமுள்ளுடையள்ளமிர்து
மலையாற்றயல்யாவுமடுத்துளவே.

1192. (உ) வளர்பைம்பொனும்வாளொளிநீண்மணியு
மொளிர்கின்றனவோசனைநீணிலமுந்
தளர்வொன்றிலர்தாபதர்தாம்விழையுங்
குளிர்கொண்டதொர்சித்திரகூடமதே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(க.) குலைவாழை, பெயர். அள்ளுடை - செறிதலையுடைய. யாவும் - மரம் ஏனையவும்.

(உ.) வாளொளி - பெரியவொளி. நிலமும்: உம்மை, முற்றும்மை. 'தாம் வலாயும்' என்பதூஉம் பாடம்.

(இ - ள்.) மலைக்கும் யாற்றிற்கும் அயலே வாழைபழுத்தபழமும், மாவிடத்தனவாகிய இலைமையானகனிகளும், பலவீன்றனவாகிய தேமுறுபழமும், ஏனையவும் செருங்கியுளவாதலால், தாபதர்தாம் உணவிற்றளர்வொன்றிலராய்விழையும் ஒளிர்கின்றனவாகிய பொன்னுமணியுநீண்ட ஓரோசனையெல்லையாகிய நிலமும் குளிர்ச்சிகொள்ளப்பட்டது ; அம்மலைதான் சித்திரகூடமென்னும் பெயரையுடைத்தென்க. (உகு - எ)

1193. முழவின்னிசைமூரிமுழங்கருவி
கழையின்றுணிசந்தொடுகல்லெனவீர்த்
திழியும்வயிரத்தொடினம்மணிகொண்
டழியும்புனலஞ்சனமாநதியே.

(இ-ள்.) கழையின்றுணியைச் சந்தோடேயீர்த்து வயிரத்தோடே மணியையுங்கொண்டு அச்சித்திரகூடத்தினின்று இழியும் அருவியானது மிகப் பெருகும்யாறு, அஞ்சனமாநதியென்னும் பெயரையுடைத்தென்க.

அழியும் - பெருகும். (உஅ)

1194. இதுபள்ளியிடம்பனிமால்வரைதா
னதுதெள்ளறல்யாறுவைதேமரமாக்
கதிதள்ளியிராதுகடைப்பிடிநீ
மதிதள்ளியிடும்வழைசூழ்பொழிலே.

அவ்விடத்தேயிருந்து, இதுபள்ளியென்று ஓரிடத்தைக்காட்டிக்கூறி, அதுமுதலாக முன்கூறியவற்றைக் கூறிட்டுச் சுட்டிக்காட்டினான். உவையென்றது, ஒழிந்தவிரண்டுபக்கத்தையும்.

(இ - ள்.) இஃது அந்தப்பள்ளி ; இதற்கு இடப்பக்கம் அந்தமலைதான் ; வலப்பக்கம் அந்தயாறு ; முன்னும்பின்னும் தேமாமரமும் வழைசூழ் பொழிலும். இவ்விடம் இன்பத்தால் அறிவைக்கெடுக்கும்; நீ போக்கைத் தவிர்ந்திராதே காரியத்தைக் கடைப்பிடித்துப் போவென்றானென்க. (உகூ)

வேறு.

1195. வருந்துநீர்மையம்மாதவர்பள்ளியுட்
குருந்தமேறியகூரரும்பார்முல்லை
பொருந்துகேள்வரைப்புல்லியபொன்னனார்
மருங்குபோன்றணிமாக்கவின்கொண்டதே.

அணிமருங்கு - ஒப்பித்தவடிவு. மாக்கவின் - மிக்க அழகு.

(இ - ள்.) பயனின்றித் தவத்தால் வருந்துந்தன்மையையுடைய அத் தாபதர்பள்ளியிற் குருந்தத்தையேறிய அரும்பார்ந்தமுல்லை தம்மனம்பொருந்திய கணவரைத்தழுவிய மகளிர்வடிவுபோலே மிக்க அழகினைக்கொண்டதென்க.

இது நின்னைக் கடைப்பிடித்துப் போகவிடுமென்பது கருத்து. (௯௦)

1196. குரவநீடியகொன்றையங்கானின்வாய்
வரகுவாளிற்றெலைச்சுனர்பாடலி
னரவவண்டொடுதேனினம்யாழ்செயும்
பரவைமாநிலம்பன்னிருகாதமே.

(இ - ள்.) அம்மலையை விட்டு இழிந்தாற் கொன்றைக்காட்டிடத்திற் பரப்பையுடைய விளைநிலம் பன்னிருகாதவழியாயிருக்குமென்க.

வரகை அரிவாளால் அறுப்பார்பாடுதலின், அம்மிடற்றுப்பாடலுக்கேற்ப வண்டும் தேனும் யாழைக்காட்டுநிலமென்க. (௯க)

1197. ஆங்கவெல்லையிகந்தடுதேறலும்
பூங்கட்பொற்குடமுந்நிறைத்தீண்டிய
வேங்குகம்பலத்தின்னிசைசூழ்வயற்
ருங்குசீர்த்தக்கநாட்டணிகாண்டியே.

(இ - ள்.) அந்தக் கடத்தின் எல்லையைக் கடந்துபோய்ப் பின்பு தக்க நாட்டினழகைக் காண்பாயென்க.

அடுநறவும் பூவாலாக்கினமதுவும் பொற்குடங்களிலே நிறைத்தலாலே அதனையுண்டு பாடுகின்ற இன்னிசையீண்டிய கம்பலத்தைச்சூழ்ந்த வயலினையும் சீரினையுமுடையநாடென்க; "ஏங்கியமிடறு" (சிலப். ௩ : ௫௧) என்றார். கம்பலை, உரிச்சொல்; ஈறுதிரிந்தது. (௯௨)

வேறு.

1198. பாளைவாய்க்கமுகினெற்றிப்படுபழமுதிரவிண்டு
நீள்கழைக்கரும்பினெற்றிநெய்ம்முதிர்தொடையல்கீறி
வாளைவாயுறைப்பநக்கிவராலொடுமெறலுமென்ப
காளைநீகடந்துசெல்லுங்காமருகவின்கொணாடே.

(இ-ள்.) காளாய்! நீ காட்டைக்கடந்துசெல்லுமந்நாடு, கமுகின்நெற்றியிலுண்டாகியபழம் விண்டு உதிர்தலின், இருல்கிழிந்து அதிற்றேன் தம்

லே துளிப்ப அதனை வானை வராலோடேகூடாக்கித் தம்மில் மாறுபடாநிற்கு மென்க.

நெய் - தேன். என்ப, அசை. (௬௩)

வேறு.

1169. அங்கதன்றனநிடங்கடந்துபோம்வழிப்
பொங்குபூஞ்சண்பகப்போதுபோர்த்துரா
யங்கநாட்டரிவையர்கூந்தனுறித்தே
னெங்குமொய்த்திழிவதோர்யாறுதோன்றுமே.

(இ - ள்.) அவ்விடத்தில் அங்கநாட்டினுடைய இடத்தைக் கடந்து போங்காலத்து ஓர்யாறு அங்குத்தோன்றுமென்க.

போதுபோர்த்துப் பரந்து அங்கநாட்டின்மகளிர் கூந்தல்போலேநாறித் தேன்மொய்க்கப்பட்டு இழிவதோர் யாறென்க. 'கடந்து' எனவே கேம சரியைக் கொள்கின்றதும் கூறினனும். (௬௪)

1200. (க) மின்னுடைமணிபலவரன்றிமேதகு
தன்னுடைநலம்பகிர்ந்துலகமூட்டலிற்
பொன்னுடைக்கலையல்குற்கணிகைப்பூம்புனன்
மன்னுடைவேலினுய்வல்லைநீந்தினல்.

1201. (உ) யானைவெண்மருப்பினுலியற்றியாவது
மானமாக்கவரிவெண்மயிரின்வேய்ந்தன
தேனெயூன்கிழங்குகாய்பழங்கள்செற்றிய
கானவர்குரம்பைசூழ்காடுதோன்றுமே.

இவையிரண்டும் ஒருதொடர்.

(உ) யாவதும் - எல்லாம். தேன்முதலியன செற்றியகுரம்பை.

(இ - ள்.) அரசர்கெடுதற்குக் காரணமாகியவேலினாய்! மணிகளையரித்துத் தன்னுடையநலத்தைக்கூறுபடுத்தி உலகத்தையூட்டலிற் கணிகையாகிய புனலை விரையநீந்தினல், யானைக்கொம்பாலே கால்வளை முதலியவெல்லாமியற்றி மானமாவாகிய கவரியின்மயிராலே வேய்ந்தனவாகிய குரம்பைகள் சூழ்ந்த காடு தோன்றுமென்க. (௬௫-௬)

1202. கடுந்துடிக்குரலொடுகடையுங்கட்குர
னெடுங்கைமான்குரன்மணியருவிநீள்குர
லடும்புலிக்குரலொடுமயங்கியஞ்சிய
விடும்பைமான்குரல்விளியெங்குமிக்கவே.

(இ - ள்.) அக்காடெங்கும் மிக்கவாகிய ஓசை துடிக்குரலும், கள் அரிக்குங்குரலும், யானையின்குரலும், அருவிவீழ்குரலும், புலிக்குரலாலஞ்சி நவ்விமான்குரலும், சீழ்க்கையுமென்க. (௬௭)

1203. பொன்னணிதிகிரியஞ்செல்வன்பொற்புடைக்
கன்னியமகளிரிற்காண்டற்கரியன
நன்மணிபுரித்தனவாவிநான்குள
கன்னவிருேளிஞய்காட்டுவாயவே.

அ, அசை. பூரித்தன, விகாரம். காட்டிடத்தனவாகிய வாவி.

(இ - ள்.) தோளிஞய்! சக்கரவர்த்தியுடைய கன்னியராகிய மகளிரைப்போலே காண்டற்கரியனவாகிய வாவிகள் நான்குள; அவற்றின்வேறுபாடு கேளென்க. (நஅ)

1204. அருங்கலச்சேயிதழார்ந்தவாவியொன்
றிரும்பெரிபொன்செயுமிரதநீரதொன்
றெருங்குநோய்தீர்ப்பதொன்றமிர்தமல்லதொன்
றரும்பவிழ்குவளைநீர்வாவியாகுமே.

(இ - ள்.) அந்த வாவிகளில், பொற்றாமரைநிறைந்ததொன்று; இரதமாகிய நீரதொன்று; எல்லாநோயையுந் தீர்ப்பதொன்று; அமிர்தமல்லதொன்று. ஆதலிற் குவளைநீர்வாவியல்லது நமக்கு நுகர்தற்காகாவென்க.

ஏகாரம், எதிர்மறை. இனி, நோய்தீர்ப்பதாகிய அமிர்தமொன்று. அல்லதொன்று என்றது நஞ்சினை; நீர்வாவி அமிர்தமல்லாததொன்றென்றது நச்சுப்பொய்கையென்றுமாம். (நகூ)

1205. கையடுசிலையினர்காட்டுள்வாழ்பவர்
பையுடையாக்கையர்பாவமூர்த்திய
ரையெனத்தோன்றுவர்தோன்றியாளழித்
துய்வகையரிதெனவுடலங்கொள்பவே.

(இ - ள்.) அவற்றைக்காத்துக் காட்டுள்வாழ்வார், சிலையினராய்த் தோற்பையணிந்தயாக்கையராய் விரையத்தோன்றுவர்; அங்ஙனந்தோன்றி அவற்றைக் கோடற்குச்சென்ற பாவமூர்த்தியரைப் பிழைத்தலரிதெனக்கூறி ஆளழித்து உடலைக்கொள்வரென்க.

பையுள், விகாரமுமாம். (௪௦)

1206. அண்ணன்மேலரிவையர்கண்ணின்மொய்த்தவண்
மண்ணின்மேன்மாந்தர்கண்மொய்க்கும்வாவியை
யெண்ணமொன்றின்றியேயிடத்திட்டேகினுற்
றுண்ணெனச்சிலையவர்தொழுதுகாண்பவே.

(இ - ள்.) நின்னிடத்து மகளிர்கண் மொய்க்குமாறுபோல மாந்தர்கள் அவ்விடத்தை மொய்க்கும்வாவியை இடத்திட்டுஅவற்றைக்கொள்ளவேண்டுமென்னுநினைவு சிறிதுமின்றியேபோனல் அச்சிலையவர் இவன் நல்வினையுடையவனென்று துணுக்கென மொய்த்துத் தொழுதுகாண்பரென்க.

இதனுல், அவற்றிற்கு இடமேபோவென்றான்.

(இ-ள்.) மண்காவலனாகியவேந்தன், பாவையாகியதன்மகளை நினக்குத் தந்து இவ்விடத்தேயுறைகவென்றுகூற, நீயும் அங்ஙனம்நடக்குமாளிலே, இருந்திநின்ற நந்தட்டனும் நின்றோழரும் எல்லாம் அவ்விடத்தேவந்து நின்னைச் சேர்வரென்றானென்க. (ருo)

வேறு.

1216. நெட்டிடைநெறிகளுநிகரில்கானமு
முட்டுடைமுடுக்கருமொய்கொள்குன்றமு
நட்புடையிடங்களுநாடும்பொய்கையு
முட்படவுரைத்தனனுறுதிநோக்கினன்.

(இ-ள்.) தூரிய இடத்தையுடையவழிகளும், கானமும், போக்கில்லாத அருவழிகளும், குன்றமும், உறவுகொள்ளுமிடங்களும், நாடும், பொய்கையும் முன்னே தோன்றக்கூறினனாய், பின்பு, அவனுக்கு மந்திரங்களைக் கூற நினைந்தானென்க. (ருக)

1217. செல்கதிமந்திரஞ்செவியிற்செப்பிய
மல்லலங்குமரனைவாழநாட்டவே
வல்லவன்மந்திரமூன்றுங்கொள்கெனச்
சொல்லினனவற்றதுதொழிலுந்தோன்றவே.

(இ - ள்.) நற்கதியிற்சேரு மந்திரத்தைத் தனக்குச்செப்பிய குமரனை வாழநாட்டவே வல்லவன், அஃது அவன் கருத்தன்மையின் அதனைத்தவிர்த்து, இம்மந்திரமூன்றையும் குறிக்கொள்கவென்று அவற்றினுடைய தந்திரமும் தோன்றக் கூறினனென்க. (ருஉ)

1218. கடுந்தொடைக்கவர்கணைக்காமன்காமுறப்
படுங்குரறருமிதுபாம்புமல்லவுங்
கடுந்திறனோய்களுங்கெடுக்கும்வேண்டிய
வுடம்பிதுதருமெனவுணரக்கூறினன்.

(இ - ள்.) இது, காமன்விரும்பப்படும் சாரீரத்தைத்தரும்; இது பாம்பின்விடத்தையும், ஒழிந்த மண்டலிமுதலியவற்றின் விடங்களையும், கடுந்தொல்களையும், நோய்களையுங்கெடுக்கும்; இது வேண்டிய உடம்பைத்தருமென்று அவற்றின் வேறுபாடறியக் கூறினனென்க.

காற்று நெருப்பு நீர் முதலியவற்றை, 'கடுந்திறல்' என்றான். (ருங)

வேறு.

1219. கந்தடுகளிறுகொல்லுங்கருவரையுழுவையன்னான்
மந்திரமூன்றுமோதிவானவிற்புரையும்பைந்தா
ரிந்திரன்றன்னைநோக்கியியக்கியர்குழாத்தைநோக்கிச்
சிந்தையிற்செல்வலென்றான்றேவனுஞ்செலவுநேர்ந்தான்.

(இ-ள்.) இந்நால்வரும் மனைவியராக இவன் மகனாகவுடையார் சுவர்க்கத்தேபோய் இந்திரராய் அவ்விடத்தையாண்டு பின்புசக்கரவர்த்தியாய்ப் பூமிமுழுவதையும்ஆண்டு வாமனுக்குப் பூசனைகளைநடத்தி 1அநீதாவத்தையை விளைவித்துப்பின்புவீடுபெறுதல்உண்மையென்றேகூறலாமென்றுனென்க. ()

1549. மட்டார்பூம்பிண்டிவளங்கெழுமுக்குடைக்கீழ்மாலேகண்டீர், முட்டாதவின்பப்புதாத்திறக்குந்தாளுடையமூர்த்திபாத, மெட்டானும்பத்தானுமில்லாதார்க்கிவ்வுலகிலின்பமேபோ, லொட்டாவே கண்டீர்வினையவனைத்தேறாதார்க்குணர்ந்தீரன்றே.

பாதம் - அடி.

(இ-ள்.)இன்பக்கதிக்குச் செல்லும் கதவைத்திறக்குந் தாளாகியபாதத்தையுடைய மூர்த்தி, முக்குடைக்கீழ் மாலேகாண் ; அவனைத்தேறாதார்க்கு, பொருள்பத்தெட்டுக்கூட இல்லாதார்க்கு இவ்வுலகத்தின்பம் கிட்டாதவாறுபோல நல்வினைகூடா ; இத்தன்மையையுணர்ந்தீரல்லவோவென்றுனென்க.

ஆனும், உம்மும் அசைகள். உணர்ந்தீர், ஒருவரைக்கூறும்பன்மை. ()

1550. வேற்றுவரில்லாநுமரூர்க்கேசெல்லினும்வெகுண்டீர்போல, வாற்றுணக்கொள்ளாதடிபுறத்துவைப்பீரேயல்லிர்போலுங், கூற்றங்கொண்டோடத்தமியேகொடுநெறிக்கட்செல்லும்போழ்தி, னாற்றுணக்கொள்ளீரழகலாலறிவொன்றுமிலிரேபோலும்.

ஏகாரம், போலும் அசைகள். இன், ஏழனுருபாதல் புறனடையாற்கொள்க.

(இ - ள்.) அயலாரில்லாத சுற்றத்தாரூர்க்கே போயினும் அவருடனே வெகுண்டு ஆண்டுச் செல்லாதீர்போலப் பொதிசோறு கைக்கொள்ளாமற் புறத்து ஓரடியிட்டிடீர் ; இத்தன்மையீர்! கூற்றம் நும்மைக்கட்டிக்கொண்டோட நுமரில்லாதவூர்க்குத் தனியேபோம்பொழுது உண்ணுமுணக்குப் பொதிசோறு இப்பொழுதே தேடிக் கொள்கின்றிலீர் ; ஆதலின், அழகன்றி அறிவொன்றுமுடையீரல்லிர்போலேயிருந்தீரென்றுனென்க. (௧௩௯)

1551. அளைவதுகாமமதுநறவுநெய்யொழுகுமூனும்பின்னா, விளைவதுதீவினையேகண்டீரிவைமூன்றும்விடுமினென்றாற், றளையவிழ்கோதையார்தாமஞ்சேர்வெம்முலைபோல்வீங்கிக்கண்சேந், துளையவுறுதியுரைப்பாரையோவர்பாவமுணராரேகாண்.

(இ - ள்.) அருந்தவதாகிய காமத்தாலும் கள்ளாலும் ஊனாலும் பின்பு விளைவது தீவினையேகாணுங்கோள் ; இவைமூன்றையும் கைவிடுங்கோளென்று பிறர்க்குக் கூறினால், இங்ஙனம் தாம்வருந்தக் காரியங்கூறவாரை முலைபோற் பொருமிக்கோபித்து உணராரகாண் ; ஓ ! இஃதொருபாவமிருந்தபடி என்னென்றுனென்க. (௧௪௦)

(பி - ம்.)—1 'அருகந்தாவித்தையை'

1552. இழுதன்னவெண்ணிணத்தசெந்தடிக்கேயேட்டைப்பட்டிரும்பிற்போர்த்த, பழுதெண்ணும்வன்மனத்தாரோட்டைமரச்செவியர்கேளார்பால்போன்,றெழுகியமுதூறுநல்லறத்தையோர்கிலருன்செய்கோட்டக்குக், கழுகுண்ணவள்ளூரமேசுமந்துபுள்ளிற்கேபுறஞ்செய்கின்றார்.

ஓட்டையென்றார், உட்கொள்ளாமையின். ஊன்செய்கோட்டக்கு-ஊனுற்செய்தவுடம்பிற்கு. வள்ளூரம் - ஊன்.

(இ - ள்.) நிணைத்தவாகிய தசையைப் பெறவேண்டுமென்றே யினைத்து அவ்வள்ளூரமேசுமந்து கோட்டத்துக்குப்புறஞ்செய்கின்றார், ஓர்கிலராய்க் கழுகுண்ணும்படி அக்கழுகிற்கே புறஞ்செய்கின்றார்; இதனை இங்ஙனம் பழுதெண்ணும் இரும்பாற் போர்த்த வன்மனத்தார் ஓட்டைமரச்செவியராய் அறத்தைக் கேளாரென்றுனென்க. (௧௫௪௧)

1553. கையாற்பொதித்துணையேகாட்டக்கயற்கண்ணாளதனைக்காட்டா, ஊயாவிளாம்பழமேயென்கின்றீராங்கதற்குப்பருவமன்றென்,செய்கோவெனச்சிறந்தாள்போற்சிறவாக்கட்டுரையாற்குறித்தவெல்லாம், பொய்யேபொருளுரையாமுன்னேகொடுத்துண்டல்புரிமின்கண்டீர்.

(இ-ள்.) மொழியின்றிக் கையாலே பொருட்டிரளினளவைக் காட்டினுனாக, கண்ணாளாகிய மனைவி அதனைக்காட்டாளாய் அவற்குச் சிறந்தாள் போலே, ஐயனே ! விளாம்பழமே வேண்டுமென்னுநின்றீர் ; அதுதருதற்கு விக்குள்வர்தடுத்தலிற் பருவமன்று ; என்செய்வேனென்றுகூறி, ஆங்கவன் முற்றக்காட்டியவெல்லாவற்றிற்கும் அவள் கட்டுரையாலே பொய்ப்பொருள் கூறுவதற்குமுன்னே பிறர்க்குக் கொடுத்துண்டலை விரும்புவீராகவென்றுனென்க.

பன்மை, சாதிப்பன்மை. (௧௫௪௨)

வேறு.

1554. பனி[1]மதியின்கதிர்பருகுமாம்பல்போன்
முனிமதிமுகத்தியர்முறுவனம்பினார்
துனிவளர்கதிகளுட்டோன்றிநாட்கக்
கனியநின்றுடுவர்கடையில்காலமே.

(இ - ள்.) மதியைமுனிகின்ற முகத்தியருடைய அம்மதியின்கதிரை உள்ளடக்குவதோர் ஆம்பல்போலும் முறுவலையுடைய வாயை நச்சினார், முடிவில்லாதகாலமெல்லாம், நிக்கதிகளிலேதோன்றி வெவ்வேறியாக்கைகொண்டு முற்றத்திரிவரென்றுனென்க. (௧௫௪௩)

---

(பி . ம்.)—1 'மதிபொழிகதிர்'

1555. நிழனிமிர்நெடுமதிநிகரிறீங்கதிர்ப்
பழனவெண்டாமரைபனிக்குமாறுபோற்
குழனிமிர்கிளவியார்கோலமஞ்சினர்
தொழநிமிர்தேமராய்த்துறக்கமாள்வரே.

(இ - ள்.) ஒளிமிக்க பெரிய மதியின்கதிருக்குத் தாமரை அஞ்சுமாறு போலே கிளவியார்கோலத்திற்கு அஞ்சினர் பலருந்தொழும்படி மிக்குத் தேவராய்ச் சுவர்க்கத்தை ஆளுவரென்றானென்க. (கசச)

வேறு.

1556. இன்னவாறுறுதிகூறியெரிமணிவயிரமார்ந்த
பொன்னவிர்கலங்களெல்லாம்பொலிவொடுபுகன்றுநீட்டிச்
சென்மினீரென்றுகூறவலங்கொண்டுதொழுதுசென்றான்
வின்மரீஇநீண்டதோளான்வெயிற்கடநீந்தலுற்றான்.

(இ - ள்.) அங்ஙனம் அணிகலம்அருளலுற்றவன், இங்ஙனம் அவனுக்கு உறுதியைக்கூறிக் கலன்களை விரும்பிக்கொடுத்து நீர்போமென்றுகூற, அவனும் வலங்கொண்டு தொழுதுபோயினான் ; போயினபின்பு, தோளான் கடத்தைப்போகலுற்றானென்க. (கசரு)

சூ.—கேமசரியாரிலம்பகம் முற்றிற்று.

ஆகக்கவி, கருருசு.

---

ஏழாவது

# கனகமாலையாரிலம்பகம்.

---

1557. இரங்குமேகலையல்குலின்கனித்தொண்டையந்துவர்வா
யரங்கக்கூத்திகணன்பின்மனையவட்டுறந்துசெல்பவர்போற்
பரந்ததீம்புனன்மருதம்பற்றுவிட்டினமயிலகவு
மரங்கொல்யானையின்மதநாறருஞ்சுரமவன்செலற்கெழுந்தான்.

(இ - ள்.) அல்குலையும் வாயையுமுடைய பரத்தைமேலன்பாலே மனையாளைத் துறந்துசெல்வாரைப்போலே மருதநிலத்தைவிட்டு, அகவும் நாறும் சுரத்தைப் போதற்கு அவனெழுந்தானென்க.

பயின்று பாம்பையும் பாகனையுங்கோறலின், பரத்தையர்க்கு மயிலையும் ஆனையையுமுடையசுர்டு உவமிக்கும்பொருளாயிற்று. சுரம் - அவன் கூறிய * கானவர்குரம்பைசூழ்காடு. (க)

1558. கலவமாமயிலெருத்திற்கடிமலரவிழ்ந்தனகாயா
வுலகமன்னவன்றிருநாளொளிமுடியணிந்துநின்றவர்போற்
பலவும்பூத்தனகோங்கம்பைந்துகின்முடியணிந்தவர்பின்
னுலவுகாஞ்சுகியவர்போற்பூத்தனமரவமங்கொருங்கே.

(இ - ள்.) காயா, மயிலின்கழுத்தைப்போலே மலர்விரிந்தன; கோங்கம் பலவும், சக்கரவர்த்தி முடிசூடுநாளிலே முடிசூடிச்சேவிக்கும் அரசரைப்போலேபூத்தன; மரவம், மயிர்க்கட்டுக்கட்டி அவ்வரசர்பின்னே திரியும் சட்டையையுடைய மிலேச்சரைப்போலே சேரப்பூத்தனவென்க. (உ)

1559. ஓங்குமால்வரைவரையாடுழக்கலினுடைந்துகுபெருந்தேன்
றூங்குசந்தனந்தளரத்தழுவிவீழ்வனதகைசா
லாங்கண்மாவுலகளப்பானுழிசங்கமொடேந்தி
தேங்கொண்மார்பிடத்1திளைக்குஞ்செம்பொனாரமொத்துளவே.

(இ - ள்.) வரையாடு உழக்குதலின், இறாலுடைந்து வரையினின்றொழுகும் பெருந்தேன் விழுகின்றபொழுது, தம்மைத்தாங்கின சந்தனம் தளரும்படி அம்மலையைத்தழுவி வீழ்வன, மால், உலகை எப்பொழுதும் அளப்பான், ஆழியைச் சங்குடனேயேந்தி, அவன் மார்பிடத்தே அசையுமாரமொத்தனவென்க.

தேன்வீழ்வன ஒத்தன. அங்கண், விகாரம். தேம் - கட்டினிமை. வரைதாங்கின சந்தனமுமாம். (ங)

---

* சீவக. ௧௨௦௧.

(பி - ம்.)—1 'ததும்பும்'

1560. வீழ்ந்துவெண்மழைதவழும்விண்ணுறுபெருவரைபெரும்பாம்
பூழ்ந்துதோலுரிப்பனபோலொர்த்தமற்றவற்றருவி
தாழ்ந்துவீழ்ந்தவைமுழவிற்றதும்பினமதுகரம்பாடச்
சூழ்ந்துமாமயிலாடிநாடகந்துளக்குறுத்தனவே.

(இ-ள்.) மஞ்சுபடிந்துதவழுமலை, பெரும்பாம்பு 1 ஊழ்ந்து தோலுரிப்பனபோலேயாய், அம்மஞ்சுபோனபின்பு அப்பாம்பையொத்தன; அம்மலையில் அருவிவிழ்ந்தவை முழவுபோலேமுழங்கின; அதுகேட்டு, மயில்கள், வண்டுகள்பாட வளைந்தாடிப் பிறராடுநாடகங்களை வருத்தமுறுத்தினவென்க.

1561. கருவிதேனெனத்தூங்குங்கதிரணியிறுங்கொடுதினைசூழ்
பொருவில்யானையின்பழுப்போற்பொங்குகாய்க்குலையவரை
யருவியையவனங்கரும்புமடக்கருங்கவைக்கதிர்வரகு
முருவவெட்பயறுழுந்துமல்லவுமெல்லையின்றுளவே.

(இ - ள்.) கைத்தளமும், தேனிறாலுமென்னும்படி தூங்கும் கதிரணிந்த இறுங்கையும், தினையையுஞ்சூழ்ந்த யானையின் விலாவெலும்புபோலும் காயையுடைத்தாகிய குலையையுடைய அவரையும், அருவியால்விளைந்த ஐவனநெல்லும், கரும்பும், கடாவிட்டுக்குவித்தற்கரிய வரகும், எள்ளும், பயறும், உழுந்தும், ஒழிந்தவுணவுகளும் எல்லையின்றியுளவென்க.

கருவித்தேன் பாடமாயின், தொகுதித்தேனென்க. (ரு)

1562. யானைவெண்மருப்புலக்கையறையுரலைவனமிடித்த
தேனெய்வாசவற்குவவித்திங்கனிவாழையின்பழனு
மூனையுண்டவருருகும்பசுந்தினைப்பிண்டியுமொருங்கே
மானிஞேக்கியர்நோக்கிவழிதொறுமீவதவ்வழியே.

கனிவாழை, ஒருபெயர். ஊனை : ஐ, அசை.

(இ - ள்.) அவ்வொருப்பட்ட அத்தன்மையையுடைய அவ்விடம், மானேக்கியர், ஐவனநெல்லை மருப்புலக்கையாலே பாறையாகிய உரலிலே யிடித்த அவலையும், தேனையும், பழத்தையும், உண்டவர் ஊனுருகும் பிண்டியையும் ஒருங்கேகுவித்து இளைத்தவரைநோக்கி வழிகடோறும் ஈயுந்தன்மையையுடைத்தென்க.

பாசவல், விகாரம். (சு)

1563. (க) குறிஞ்சியெல்லையினிங்கிக்கொடிமுல்லைமகண்மொழிந்தாடச், செறிந்தபொன்னிதழ்ப்பைந்தார்க்கொன்றையஞ்செல்வற்குக்குரவ, மறிந்துபாவையைக்கொடுப்பத்தோன்றியஞ்சுடரேந்த, நிறைந்தபூங்குருந்துதேனீர்பெய்தார்த்தனசுரும்பே..

1564.(உ) அரக்குண்பஞ்சிகடிரட்டியருமணிமரகதப்பலகைப்
பரப்பியிட்டனபோலக்கோபங்கள்பயிர்மிசைப்பரவ

(பி - ம்.)—1 'ஊழ்த்துத்'

வுரைத்தமென்றயிர்பயித்தைக்கோவலர்தீங்குழலுலவ ।
நிரைக்கண்மாமணிகறங்கநீணிலங்கடந்தனனெடியோன்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(இ-ள்.) முல்லைக்கொடி மகட்பேசிச்செல்லுதலின், அதனையறிந்து குரவம் தன்பாவையைப் பொன்னிதழாகிய தாரையுடைய கொன்றையாகிய செல்வனுக்குக் கொடாநிற்க, தோன்றி விளக்கெடுக்க, சுரும்புகள் குருந்தினின்று உகும் தேனுகியநீரைவார்த்து ஆரவாரித்தன; அவை ஆரவாரித்தவளவிலே, செம்பஞ்சையுருட்டி மரகதப்பலகையிலே பரப்பினாற்போலே கோபங்கள் பயிர்மேலே பரவாநிற்க, தயிரைவார்த்த மயிரினையுடைய கோவலரும் குழலோசை பரக்க, ஆனிரைக்கண்பூண்ட மணிகறங்க நெடியோன், குறிஞ்சிநிலத்தெல்லையினின்றுநீங்கி முல்லைநிலத்தைக் கடந்தானென்க.

முல்லைக்கொடி இரண்டிலும்படர்ந்தது. நடுவேநின்ற குருந்திற் சுரும்பெழ, அஃது அசைந்து தேனைச்சொரிந்ததனாற் சுரும்பைப் பாவைக்குத் தந்தையாக்கினார். கோபங்கள்பரவவெனவே கார்காலமாம். (எ - அ)

1565. வள்ளிவாரியகுழியின்வளர்பொன்னும்வயிரமுமிமைக்குஞ்
சுள்ளிவேலியினீங்கித்துறக்கம்புக்கிடுமெனச்சூழ்ந்து
வெள்ளிவெண்டிரள்விசித்துநிலத்தொடுதறிபுடைத்தவைபோற்
றுள்ளிவீழுயரருவிவனகிரிதோன்றியதவணே.

(இ-ள்.) பக்கத்திற்போகாதபடி வேலியாகவிட்ட மராமரத்தின் வேலியினின்றுந்தப்பி மேலே துறக்கத்தே போமென்றுநினைத்து வெள்ளிக்கம்பிகளைத் தலையிலேபூட்டிவலித்து நிலத்தோடே தறியைப்புடைத்துக்கட்டினாற்போலே எண்டிசையும்விழும் அருவியையுடைய வனகிரி அவ்விடத்தே தோன்றிற்றென்க.

வள்ளிக்கிழங்குஅகழ்ந்தகுழியிலேபொன்னும்வயிரமுமிமைக்கும்வனகிரியென்க. (௯)

1566. அண்ணருன்செலுமுன்னாலணிமலர்ப்பூம்பொழிலதனுள்
வண்ணமாச்சுனைமாநீர்மணிதெளித்தனையதுததும்பித்
தண்ணென்றுமரைகழுநீர்நிலந்தாதவிழாம்ப
லெண்ணில்பன்மலர்களுவியினவண்டுபாண்முரன்றுளதே.

ஆல், அசை.

(இ - ள்.) அவ்வனகிரிக்குமுன்னே, தலைவன்செல்லுகின்ற பொழிலுக்குள்ளே பளிங்கைக் கரைத்தனையதாகிய நீர்நிறைந்து அதிலே தாமரைமுதலிய பூவும் பிறவும்நெருங்கி வண்டு பாண்சாதிபோலே பாடப்பட்டு ஒரு சுனை உளதாயிற்றென்க. (௰)

வேறு.

1567. கானத்தினேகுகின்றான்கடிபொழிற்கவின்கண்டெய்தித்
தானத்திலிருத்தலோடுந்தையலாளொருத்திதானே

வானத்தினிழிந்துவந்தவானவர்மகளுமொப்பா
ணுனமும்பூவுஞ்சாந்துநாறவந்தருகுநின்றாள்.

'கானத்தினேகுகின்றான்' என்று பெயர்கூறவே, 'வனசரிதன்' என்னும் வடமொழிப்பெயரையும், 'தானம்' எனவே இருடிகளுறைவிடமென் பதனையுமுணர்த்தின.

(இ - ள்.) சீவகன் கடிபொழிலிலே சென்றிருந்தவளவிலே, வானவர் மகளுமொப்பாளாகியதையலாளொருத்தி, அத்தானத்திலுறைவானொரு வன சரிதன்கவினைக்கண்டு, ஊனமுதலியனநாறத் தானேவந்து அருகேநின்றா ளென்க.

இங்ஙனங்கூறாது சீவகன்கவினைக்கண்டு அவள் எய்தினாளென்றுகூறின், மேல் இவற்கு இவள் வேட்கைவிளைத்தலின், இவன் நெஞ்சு தன் தன்மை திரிந்ததனை இவன்தேற்றினனென்றுகூறவர்; அங்ஙனங்கூறவே மனம்வாக் குக்காயமென்னும் மூன்றினுற்செய்துகொள்ளும் பாவங்களிற் சிறந்த மனத் தாற்செய்துகொள்ளும்பாவமும் சீவகற்கு எய்திற்றுமாதலானும், உழுவலன் போடுதோன்றிய மகளிரிடத்தல்லது இவற்கு வேட்கைநிகழாதென்பது இத் தொடர்நிலைச்செய்யுட்குக் கருத்தாதலானும் அது மாறுபடக்கூறிற்றுமென் றுணர்க. (௧௧)

1568. குறிஞ்சிப்பூங்கோதைபோலுங்குங்குமமுலையினுட
னிறைந்தபொற்கலாபந்தோன்றநெடுந்துகில்விளிம்பொன்றேந்திச்
செறிந்ததோர்மலரைக்கிள்ளித்தெறித்திடாச்சிறியநோக்கா
நறும்புகைத்தூதுவிட்டுநகைமுகங்கோட்டிநின்றாள்.

குறிஞ்சிப்பூ, குங்குமத்திற்குவமை. தோன்ற - சிறிதே உடைநெகிழ்த லாலே. ஒன்று - ஒருகை. ஒருகையாலே அத்துகிலின்விளிம்பைத்தாங்கி மறைக்கையாலே விஞ்சைதர் தோன்றத்தெறித்து. சிறியநோக்கா - கடைக் கணித்துப்பார்த்து. காற்றுவாக்கிலேநின்று புகையைத்தூதுவிட்டு. கோட்டி - சாய்த்து.

(இ - ள்.) முலையினாள், ஏந்தித் தெறித்து நோக்கி விட்டுக் கோட்டி நின்றாளென்க. (௧௨)

1569. அணிகலவரவத்தாலுமமிழ்துறழ்நாற்றத்தாலும்
பணிவருஞ்சிங்கநோக்கிற்பணையெருத்துறழநோக்கி
மணிமலர்நாகஞ்சார்ந்துவழையொடுமரவநிழற்
றுணிவருஞ்சாயனின்றூடோன்றறன்கண்ணிற்கண்டான்.

(இ - ள்.) தோன்றல், அரவத்தாலும் நாற்றத்தாலும் அத்திசையைச் சிங்கநோக்குப்போலே கழுத்துமாறுபடப்பார்த்து வழையோடுகூடிய மர வத்தினிழலிலே நாகத்தைச்சார்ந்துநின்றாள்; அங்ஙனநின்றாளாகிய அச்சாய லைக் கண்ணாலேகண்டானென்க.

நெஞ்சால் நோக்கிற்றிலன். துணிவருஞ்சாயல் - தெய்வமோ அல்லளோ வென்று துணிவரிய சாயல். (கங)

1570. கண்டவன்கண்ணிஞேக்கநடுங்கித்தன்காதிற்றாழ்ந்த
குண்டலஞ்சுடரவொல்கிக்கொடிநுடங்குற்றதொப்ப
நுண்டுகிற்போர்வைசோரநுழைமழைமின்னினிற்ப
வெண்டிசைமருங்குநோக்கியியக்கிகொலிவண்மற்றென்றான்.

(இ - ள்.) அங்ஙனங்கண்டவன், நெஞ்சானன்றிப் பொருயாஞேக்குத லின், வேட்கையின்மைகண்டு, கொடிநடுக்குற்றதொப்பநடுங்கி ஒல்கி மஞ் சிலேநுழையுமின்போலே போர்வைசோர அதனுள்ளே மறைந்துநிற்ப, இவ ளுடன் கூடவந்தாருளரோவென்று எண்டிசையிடத்தையுநோக்கி, இங் ஙனம் தனியேவருதலின், இவள் ஓர் இயக்கிபோலேயிருந்தாளென்று கரு தினனென்க. (கச)

1571. எண்ணத்திலியக்கியென்றேயிருப்பமற்றெழுதலாகா
வண்ணப்பூங்கண்களம்பாவாணுதற்புருவம்வில்லா
வுண்ணிறையுடையவெய்வானுருவச்சாதகத்துக்கேற்பப்
பெண்ணலங்கிடந்தபேதைபெண்ணலங்கனியநின்றாள்.

வடிவுகூறுமிலக்கணத்திற்கு இசையப் பெண்ணலங்கிடந்தபேதை.

(இ-ள்.) அவன்தன்கருத்திலே இயக்கியென்றேயிருப்ப, பேதை, பின் னர் இவன்நிறைகெடும்படி கண்கள் அம்பாக நுதலிற்புருவம் வில்லாகக் கொண்டுஎய்யவேண்டித் தன்பெண்ணலம் முற்றுப்பெறநின்றாளென்க. (கரு)

1572. முறுவன்முன்சிறியதோற்றுமுகைநெறித்தனையவுண்கட்
குறுநெறிபயின்றகூந்தல்குழும்பல்காலாவிக்கொள்ளாச்
சிறுநுதற்புருவமேற்றுச்சேர்துகிற்றானைசோர
வறியுநராவிபோழுமாங்கணைங்கணையுமெய்தாள்.

(இ - ள்.) அரும்பை அலர்த்திஞலொத்த கண்ணினையுடைய கூந்தல், அறுகிப் பல்கால் ஆவிக்கொண்டு மேற்போர்த்த துகிலோடே உடுத்ததானை யும் நெகிழாநிற்க, அக்காமன்றானெய்வதற்கு முன்னுகச் சிறியவாக முறுவலை யும் தோற்றுவித்துப் புருவமாகிய வில்லை வலித்து, காமனெய்யும் ஐந்தம்பை யும் தானெய்தாளென்க.

'அறியுநராவிபோழுமம்பு' எனவே இவனெஞ்சு தன்தன்மைசிறிதுதிரி கின்றமை பெற்றும். (கசு)

1573. வடிப்பிளவனையகண்ணாள்வல்லவனெழுதப்பட்ட
படத்திடைப்பாவைபோன்றோர்நோக்கினளாகிநிற்ப
வடிப்பொலிந்தார்க்குஞ்செம்பொன்மணிமணிக்கழலினுனம்
மடத்தகைகுறிப்புநோக்கிமனத்திதுசிந்திக்கின்றான்.

பவதத்தனை, 'கழலினான்' என்று ஒருபெயரால் தேவர்கூறினர்.

(இ - ள்.) பாவை அழியுமளவும் ஒருகருத்தாய்நின்று அழியுமாறுபோலே கண்ணாள் இவனைக்கூடுவதொரு கருத்தினளாய்நிற்ப, பவதத்தனுடைய அம்மடத்தகைகருத்தை அவ்வளைசரிதன்றானறிந்து மனத்தே இதனை நினையாநின்றானென்க.

என்றது, தன்றன்மைதிரிந்தநெஞ்சினைத் தேற்றாநின்றானென்றவாறு. அது மேற்கூறுகின்றார். (கஎ)

வேறு.

1574. கடிமாலைசூடிக்கருப்பூரமுக்கித்
தொடைமாலைமென்முலையார்தோடோய்ந்தமைந்தர்
கடைமாலைமற்றவரேகண்புதைப்பச்செல்லு
நடைமாலைத்திவ்வுலகநன்றரோநெஞ்சே.

(இ - ள்.) நெஞ்சே! சூடி மூக்கி முலையாரைக்கூடினமைந்தர் பின்பு சிலநாளிலே அவர்கண்புதைத்துக்கொள்ளும்படி செல்கின்ற ஒழுக்கத்தை இவ்வுலகம் இயல்பாகவுடைத்து; இவ்வியல்பு நன்றாயிருந்ததென்றானென்க.

அவரென்றது, சாதிபத்தி. (கஅ)

1575. நாவியகலமெழுதிநறுநுதலா
ராவிதளிர்ப்பவவர்தோண்மேற்றுஞ்சினர்
தூவியொழிபுள்ளிற்றேன்றித்துயருழப்பக்
காவிநெடுங்கண்புதைத்தாங்ககல்வர்நெஞ்சே.

(இ - ள்.) நெஞ்சே! புழுகை அகலத்தேபூசி நுதலார் ஆவிதழைக்கும்படி அவர்தோண்மேலே தங்கினவர், இளமைசென்றபின்பு கடைமயிர் கழிந்த பறவைபோலேதோன்றி வருந்துதலாலே, அவர்கண்ணைப்புதைத்து அவ்விடத்தினின்றும் அகலுவரென்றானென்க.

இதனால், இருதலையுமொத்த அன்பின்திறங்கூறினர். (கக)

1576. இன்புகையார்ந்தவிழுதார்மென்பள்ளிமே
லன்புருகுநல்லாரவர்தோண்மேற்றுஞ்சினர்
தம்புலன்கள்குன்றித்தளரத்தங்காதலா
ரன்புருகுகண்புதைத்தாங்ககல்வர்நெஞ்சே.

இழுதார்மென்பள்ளி - இழுதுபோலே மென்மைநிறைந்த பள்ளி; "வெண்ணெய்போனூறினியள்" (சீவக. சஅ0) என்றார் முன்பும்; இழுதார் இன்புகையுமாம்.

(இ-ள்.) நெஞ்சே! பள்ளிமேலே அன்பாலுருகும் நல்லாராகிய அவர் தோண்மேலேதங்கினர், மூப்பால் தம்புலன்கள் குறைந்துதளர்தலாலே, அம்மகளிர் தம்கண்ணைப் புதைத்து அகல்வரென்றானென்க.

இதனாற் புலன்குறையுமென்றார். இவள் விரும்பப்பெற்றேமேயென்று புணர்ந்தார்க்குப் பின்வருவது இதுகாணென்றான். (உ0)

வேறு.

1577. என்பினை நரம்பிற்பின்னி யுதிரந்தோய்த் திறைச்சிமெத்திப்
புன்புறந்தோலைப்போர்த்து மயிர்புறம் பொலியவேய்ந்திட்
டொன்பது வாயிலாக்கி யூன்பயில் குரம்பைசெய்தான்
மன்பெருந்தச்சனல்லன் மயங்கினார் மருளவென்றான்.

(இ - ள்.) நெஞ்சே! தச்சன், உதிரத்தைத்தோய்த்து நரம்பாலே என்பினைக்கட்டித் தசையை அப்பிப் புன்புறமதையைத் தோலைப்போர்த்து அப்புறம்பொலிவுபெறும்படி மயிராலேவேய்ந்து ஒன்பது வாயிலாக்கினன்றென்று மயக்கினார் மருளக் குரம்பைசெய்தான்; ஆதலால், மிகவும் நல்லனாயிருந்தானென்றானென்க. (உக)

1578. வினைப்பெருந்தச்சனல்லன் மெய்ம்மைநா நோக்கலுற்றா
லெனக்குற்றுக்கிடந்த தென்றாங்கிருகணும் புதைத்துவைக்கு
நினைப்பினாற் பெரியரென்றானீந்தினார் கலைகளென்றான்
மனத்தையுங் குழையச்செத்து மாண்பினன் மாதோவென்றான்.

(இ-ள்.) நெஞ்சே! படைக்குந்தொழிலையுடைய தச்சன், உடம்பினுண்மையை நாம் பார்க்கத்தேடினால் அப்பொழுது எனக்கு உறுகோளாய்க்கிடந்த தென்று பார்க்கும்படி ஞானக்கண்ணையும் ஊனக்கண்ணையும் மறைத்துவை யாசிற்கும்; அதுவுமன்றி, இயல்பான அறிவுமிக்காரென்றாய்க் கல்வி மிக்காரென்றாய் எல்லாருள்ளங்களையும் தளரும்படி செத்தும் மாண்பினனாதலால், நல்லனாயிருந்தானென்றானென்க. (உஉ)

1579. (க) என்றவனிருப்ப மாதரென்வரவிசைப்பினல்லா
லொன்றுமற்றுருகல்செல்லானென்றெடுத்தோதுகின்றாண்
மன்றலந்தோழிமாருள் வனத்திடைப்பண்ணையாடக்
குன்றிடைக்குளிர்க்கு மின்போற்குழாமழைமுகட்டிற்செல்வான்.

1580. (உ) மயிலினமிரியவாங்கோர் மடமயிறழுவிக்கொண்ட
வெயிலிளஞ்செல்வன்போல விஞ்சையனெற்கொண்டேகத்
துயிலியகற்பினுடன்றுணைவிகண்டிடுவித்திட்டா
ளயிலியல்காட்டுள் வீழ்ந்தேனநங்கமா வீணையென்பேன்.

1581. (ங) தாயிலாக்குழவிபோலச் சாதுயரெய்துகின்றேன்
வேயுலாந்தோளினார் தம் விழுத்துணைக்கேள்வநிற்கண்
டாயினேன்றுறக்கம்பெற்றேனளித்தருளாதுவிட்டாற்
றீயினுளமிர்தம்பெய்தாங்கென்னுயிர்செகுப்பலென்றாள்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) என்று நெஞ்சினைத்தேற்றி அவனிருந்தவளவிலே, மாதர் யான்வந்தபடிகூறினல்லது சிறிதும் அருளானென்றுகருதிக் கேட்கக் கூறு

நின்றவள், தோளினூர்க்குத் துணையாகியகேள்வனே ! மலையிடத்தே தங்கும் மின்போல் மழைமேலேசெல்வானாகியவிஞ்சையன், வனத்திடையிலே மனத்தையுடைய என்தோழிமாருள்ளே யான்விளையாடாநிற்க, மயிற்றிரள்கெட அதற்குள்ளே ஒரு மயிலையெடுத்துக்கொண்ட இளஞாயிறுபோலே என்னைக் கொண்டுபோனானாக, தங்கிய கற்பினளாகிய அவன் துணைவி என்னைக்கண்டு போகடுவித்தாள் ; இக்கொடியகாட்டிலே வீழ்ந்தேன் ; யான் அநங்கமாவீணையென்று பெயர்கூறப்படுவேன் ; நின்னைக்காண்பதற்குமுன் தாயிலாக் குழவிபோலத் துயரெய்துகின்றயான் நின்னைக்கண்டு உறக்கம்பெற்றேனாயினேன்; இனி என்னை அருள்பண்ணிநோக்கி அருளாதேவிட்டால் தீயினுள்ளே அமிர்தத்தைப் பெய்தாற்போலே என்னுயிரைக் காமத்தீயினுள்ளே பெய்து கெடுப்பேனென்றாளென்க.

மயிலுவமை, தோழிமாரஞ்சியோடியதற்கு. உலாம், உவமைச்சொல். சந்நியாசியன்மையின், தோளினூர்துணைவவென்றாள். (உ௫ - ரு)

1582. மணியெழுவனையதோளும்வரையெனவகன்றமார்புந்
தணிவருங்கயத்துப்பூத்ததாமரையனையகண்ணும்
பணிவரும்பருதியன்னமுகமுமென்றயர்ந்துகாமப்
பிணியெழுந்தவலிக்கின்றபேதைநீகேளிதென்றான்.

தணிவு - வற்றுதல். பணிவு - தாழ்வு.

(இ- ள்.) தோளும், மார்பும், கண்ணும்,முகமும்வருத்துமென்று மயக்கிக் காமநோய்தோன்றி வருந்துகின்றபேதாய்! நீ இங்ஙனங்கருதின இவ்வுடம்பின் தன்மையைக்கேளென்றானென்க. (உ௬)

1583. போதொடுநானமூழ்கிப்பூம்புகைதவழ்ந்துமுல்லைக்
கோதைகண்படுக்குங்கூந்தல்குரைவளிபித்தோடையே
யேதஞ்செய்மலங்கணெய்த்தோரிறைச்சியென்பீருண்மூளை
கோதஞ்செய்குடர்கள்புன்றோனரம்பொடுவழும்பிதென்றான்.

(இ - ள்.) நானத்தேமூழ்கிப் புகைதவழப்பட்டுப் போதோடே கோதைதுயில் கொள்ளுங் கூந்தால்! இவ்வுடம்பு, ஏதஞ்செய்கின்றவளியையும் பித்தையும் ஐயையும் பொருந்தினமலங்களும், குருதியும், தசையும், என்பும், ஈரலும், மூளையும், பொல்லாங்குசெய்யும் குடர்களும், தோலும், நரம்பும், வழும்புமாயிருக்குமென்று கூறினானென்க.

பூமுதலியவற்றாற் கூந்தல் நன்றாயிற்றென்றான். (உ௭)

1584. விழுக்கொடு *1வெண்ணஞ்சல்லாவுகிர்மயிருமிழ்கட்பீளைப் புழுப்பயில்குரம்பைபொல்லாத்தடிதடிக்கீழ்ந்தபோழ்தில், விழித்தியார்நோக்குகிற்பார்பிள்ளையார்கண்ணுட்காக்கை, கொழிப்பரும்பொன்னிற்றோன்றுங்கொள்கைத்தாற்கொடியேயென்றான்.

* (பி - ம்.)—1 'வெண்ணெஞ்சு'

விழுக்கும் வெண்ணஞ்சும் ஊன்விசேடம்; வெண்ணஞ்சு - நிணமுமாம். அல்லா - இவையொழிந்த. கண்ணுமிழ்பிளை. பிள்ளையார்- கரிக்குருவியார்; கரிக்குருவியார் கண்ணுக்குக் காக்கையார் பொன்னொத்துத்தோன்றுமென்பது ஒருபழமொழி.

(இ - ள்.) கொடியே! விழுக்குமுதலியவற்றையுடையபுழுப்பயில்கின்ற இவ்வுடம்பு வேறுவேறுபட்டுக் கிடந்தபொழுது விழித்துப்பார்ப்பார் ஒருவருமில்லை; இஃது அங்ஙனம் வேறுபடாமையின், விளைகின்றகாமத்தாலே காக்கை கரிக்குருவிக்குப் பொன்போற்றோன்றும் கொள்கையையுடைத்தாயிற்றுக்காணென்றானென்க. (உஅ)

1585. உருவமென்றுரைத்தியாயினிறைந்ததோற்றுருத்திதன்னைப்
புருவமுங்கண்ணுமுக்கும்புலப்படவெழுதிவைத்தாற்
கருதுவதங்கொன்றுண்டோகாப்பியக்கவிகள்காம
வெரியெழவிகற்பித்திட்டாரிறைச்சிப்போரிதனையென்றான்.

(இ - ள்.) உள்ளொழியப் புறத்தின்வடிவு நன்றென்றுரைத்தியாயின், முற்கூறியவெல்லாம் நிறைந்ததொரு தோற்றுருத்தியைப் புருவமுதலியன நன்றாக எழுதிவைத்தால் நன்றென்றுகருதுவதொரு பொருளில்லையே; ஆதலின், இறைச்சித்திரளாகிய இதனைக் காப்பியஞ்செய்யுங்கவிகள் மக்கட்குக் காமத்தீயெழும்படி வேறுபடுத்தினார்கள்காணென்றானென்க.

இவை இவட்குத்தெளிவுநிகழுமென்று கூறினான். இவர்களிங்ஙனநிற்பப் பவதத்தன் கூறிவருந்துகின்றமை மேற்கூறுகின்றார். (உக)

வேறு.

1586. (க) காதன்மாமன்மடமகளேகருங்குழன்மேல்வண்டிருப்பினு
மேதமுற்றுமுரியுநுசுப்பென்றுன்னியல்பேத்துவே
னேதம்போலவுடன்றுடன்றுநையநீயொண்டாமரைக்
கோதைபோல்வாயொளித்தொழிதல்கொம்பேகுணனுகுமே.

1587. (உ) வண்ணத்திங்கண்மதிமுகத்தவாளோகருங்கயல்களோ
வுண்ணுங்கூற்றேவொளிவேலோபோதோவுணர்கலேனாற்
பண்ணின்றீஞ்சொலாய்படாமுலைப்[1]பாவாய்கொடியேபாங்கி
னுண்ணுந்தேனே[2]யமிர்தேயென்னின்னுயிரேயெங்கணாயோ.

1588. (ங) இலவம்போதேரெழிற்றகையசீறடிகளஞ்சியொல்கிப்
புலவன்சித்திரித்தபொற்சிலம்புநகப்பூநிலத்துமே
லுலவும்போழ்துமென்றூவிமலர்மேன்மிதித்தொதுங்குவாய்
கலவமஞ்ஞையனையாய்கட்காதலொழிகல்லேனால்.

இவைமூன்றும் ஒருதொடர்.

(உ) ஓ, வியப்பு.

(பி - ம்.)—1 'பாவாய்பாங்கின்' 2 'ஆரமிர்தேயின்னுயிரே'

(௩) ஏர்-ஒப்பு. புலவன்-பொன்செய்கொல்லன். என்னென்பதுவினா.

(இ - ள்.) காதலையுடைய என்மாமன்மகளே ! திருவையொப்பாய் ! கொம்பே ! தீஞ்சொல்லாய் ! பாவாய் ! கொடியே ! தேனே ! அமிர்தே ! இனியவுயிரே ! சீறடியொல்கிச் சிலம்பொலிப்பப் பூநிலத்துலவும்பொழுதும் அந்நிலத்திலன்றி என்மனமாகிய மலர்மேலேநடப்பாய் ! நினது திங்கள் மதித்த முகத்திலுள்ளன வாளோ, கயலோ, கூற்றோ, வேலோ, போதோவென்றும், வண்டிருப்பினும் இடைமுரியுமென்றும் நின்னியல்பையேத்துவேன் ; அந்தப்பூவிலே மிதித்துத்திரிகின்றநீ யான் கடல்போல் மறுகி நையும்படி மறைந்துநீங்குதல் நினக்குக் குணமாமோ ? இதற்குக் காரணமென் ? அஃதுணர்கிலேன் ; நின்னிடத்துக் காதலையுநீக்கமாட்டேன் ; இனி நீ எவ்விடத்தாய் ? கூறென்றானென்க. (௩௦ - ௩௨)

1589. பணிசெயாயத்துப்பந்தாடுகின்றாயைக்கண்டுமாழ்கிப்
பிணிசெய்நோயேன்யான்கிடப்பப்பிறர்வாயதுகேட்டலுந்
துணிகபோதுமென[1]விடுத்தாய்போந்தேன்றுயருழப்பநீ
மணிசெய்மேகலையாய்மாற்றந்தாராய்மறைந்தொழிதியோ.

(இ - ள்.) ஆயத்தே பந்தாடுகின்ற நின்னைக்கண்டு மயங்கிப் பிணித்தலைச்செய்யுநோயேனாய்க்கிடக்க, அந்நோயைப் பிறர்கூறக்கேட்டவளவிலே, யாமுடன்போகக் கடவேம்; அதனைத்தான்றுணிகவென்று கூறிவரவிட்டாய்; அக்கூற்றாலேபோந்தயான் வருந்தும்படி, மேகலையாய் ! மறுமாற்றஞ்சொல்லாயாய் மறைந்துபோகின்றாயோ என்றானென்க. (௩௩)

1590. இயக்கிநின்னேடிணையொக்குமென்றுநலஞ்செருப்பான்
மயக்கிக்கொண்டுபோய்வைத்தாயென்மாதரைத்தந்தருளுநீ
நயப்பவெல்லாந்தருவலெனத்தொழுதுநல்லியானைதன்
வயப்பிடிகெடுத்துமாழாந்ததொப்பமதிமயங்கினான்.

இயக்கி, விளி.

(இ - ள்.) அங்ஙனங்கூறி, இயக்கி ! என்மாதரை நின்னேடிணைத்தற்கண் ஒப்பளென்றுகருதி அவணலத்தைக்கெடுத்தற்கு அறிவைக் கலக்கிக் கொண்டுபோய் மறைத்துவைத்தாய்; நீ அவளைத்தந்தருளுவாயாக; தந்தால் நீவிரும்பினவெல்லாம் தருவேனென்று வணங்கி, யானை தன் வலியபிடியைக் கெடுத்து மயங்கினாற்போல மயங்கினானென்க. (௩௪)

1591. மல்லற்றொல்வளத்துமத்திமநன்னாட்டுவண்டாமரை
புல்லும்பேரூர்ப்புகழ்த்தத்தன்காதற்சினதத்தைக்குஞ்
செல்வநாமற்றுஞ்சித்திரமாமாலைக்குஞ்சுற்றத்தார்க்கு
மல்லல்செய்தேனவட்சென்றுலென்றுரைக்கேனென்செய்கேனே.

(இ - ள்.) வளப்பத்தையுடைய செல்வத்தையுடைத்தாகிய மத்திமதேசத்திற் பதுமபுரத்தில், என்தந்தை கீர்த்திதத்தனுக்கும், என்தாய் சினதத்தைக்கும், என்மாமன் ஸ்ரீமானுக்கும், என்மாமி சித்திரமாமாலைக்கும், ஒழிந்த

---

(பி - ம்.)—1 'உரைத்தாய்'

சுற்றத்தார்க்கும் வருத்தஞ்செய்தேன் ; யான் அவ்விடத்தேசென்றால் என்னுரைப்பேன் ! இனி இவ்விடத்து யான் என்செய்வேனென்றானென்க. (௬௫)

1592. உண்ணுநீர்வேட்டனைசந்தேனெனவுரைப்பக்காட்டுளுடி
நண்ணிப்பொய்கைதலைப்பட்டுநற்றாமரையிலையினுட்.
பண்ணிநீர்கொண்டுவந்தேன்படாமுலைப்பாவாயென்
றண்ணலாற்றாதழுதழுதுவெந்துருகினைகின்றானே.

(இ - ள்.) தலைவன், பாவாய் ! நீ தண்ணீர்வேட்டு இளைத்தேனெனக் கூறுதலாலே, காட்டிலே பொய்கையைநாடிக் கிடைத்து அதனைநண்ணித் தாமரையிலையைக்கோலி அதனுள்ளே தண்ணீர்கொண்டுவந்தேன் ; நின்னைக் கண்டிலேனென்றுகூறி அழுது அழுது உருகி நையாநின்றானென்க. (௬௬)

1593. குழைகொள்வாண்முகத்துக்கோல்வளையைக்காணான்
குழைந்தழுகின்ற, வழகன்சொல்லுமணிசெய்கோதைகாமமுங்கண்
டுங்கேட்டு, முழவுத்தோளான்முறுவலித்தீங்கேயிருநீயென், றிழை
பச்சொல்லியிளையானிளையானையெய்தினானே.

தோளான் - இவர்கள்செய்தியைக் கண்டிருந்தசீவகன். இழையச் சொல்லியென்றது தாமுறைவிடத்தேவந்தார்க்குத் தாம்நுகர்வனவற்றைக் கொடுத்துப் பேணிவிடுத்தல் வனசரிதர்க்கியல்பாதலின், சீவகன் போக்கொருப்பட்டமைகண்டு,அவ் வனசரிதனும் யானுகர்வனவற்றை நீயுநுகர்ந்து வழிவரல்வருத்தந் தீர்ந்து ஏகுவாயாகவென்றாற்கு, அவனும் தனக்கு அவ் வருத்தமின்மையை அவன்மனம்பொருந்தச் சொல்லியென்றவாறு. ஈங்கேயிருவென்றது - எப்பொழுதும் இப்படியே மனத்தைச் சென்றவிடத்தாற் செல்லவிடாதே (குறள். சஉ௨) விலக்கியிருக்கவென்றவாறு. ஆங்கு, உவமவுருபாயினமையின், ஈங்கும் உவமவுருபாம் புறனடையால் ; இவ்விடத்தே [1] இருவென்று உபசாரமுமாம். சீவகன் அவனை இங்கேயிருவென்று பொருந்தக் கூறல் அவற்கு இயையாமையுணர்க.

(இ - ள்.) சீவகன், கோல்வளையைக்காணாது அழுகின்ற பவதத்தன் கூற்றைக் கேட்டும், அநங்கமாவீணை வனசரிதன்மேல் நிகழ்த்தின காமத்தைக்கண்டும் நக்கு, வனசரிதனுபசாரத்திற்கு இழையச்சொல்லி, அவனை இப்படியே நீ எக்காலமுமிருவென்றுகூறி, அவன் பவதத்தனைச் சேர்ந்தானென்க. (௬எ)

1594. என்னைகேளீரென்னுற்றீரென்னபெயரீரென்றாற்குப்
பொன்னனங்குன்றிற்பொலிந்ததோணம்பியொருபொற்பூங்கொடி
யென்னுநீராளையிங்கேகெடுத்தேனென்பாவத்தாற்
பன்னூற்கேள்வியுடையேன்யான்பவதத்தனென்பேனென்றான்.

இர் ஈறு, ஓகாரம்பெறுதலேயன்றி, ஈர்பெறுதலும், "ஏனைப் புள்ளியீறுவிளி கொள்ளா" (தொல். விளிமரபு, சூ. ௯௨) என்பதனாற்கொள்க.

(பி - ம்.)—1 'இருவெனவிகாரமுமாம்'

(இ-ள்.) கேளிர்! நீர் என்னவருத்தமுற்றீர்? அதற்குக்காரணமென்னை? என்ன பெயரையுடையீர்? என்று கேட்டசீவகற்கு, நம்பி! இவ்விடத்தே என்பாவத்தாலே வல்லிபோல்வாளைக் கெடுத்தேன்; யான் நூற்கேள்வியுடையேன்; பவதத்தனென்று பெயர்கூறப்படுவேனென்றானென்க. (நூஅ)

வேறு.

1595. கைப்பொருள்கொடுத்துங்கற்றல்கற்றபின்கண்ணுமாகு
மெய்ப்பொருள்விளக்குநெஞ்சின்மெலிவிற்கோர்துணையுமாகும்
பொய்ப்பொருள்பிறகள்பொன்னும்புகழுமாந்துணைவியாக்கு
மிப்பொருளெய்திநின்றீரிரங்குவதென்னையென்றான்.

கற்றல், அல்லீற்றுவியங்கோள்; "இற்றெனக் கிளத்தல்" (தொல். கிளவி. சூ. கக) போல.

(இ - ள்.) தனக்கு இடுக்கண்வந்தால் உதவும் பொருளைக் கொடுத்தும் கற்க; கற்றபின்பு ஞானக்கண்ணுமுண்டாகும்; அது தத்துவத்தினைவிளக்கும்; வருத்தத்திற்கு உதவியுமாம்; ஆதலின், இதனையொழிந்தபொருள்கள் பொருளல்ல; இதனால் மீண்டும் பொருள்களுண்டாம்; கீர்த்திமகளையுமுண்டாக்கும்; இப்பொருளைப் பெற்றுநின்றநீர் அறியாமல் வருந்துதற்குக் காரணமென்னென்றானென்க.

புகழும் துணைவியுமென்றுமாம். (நூகூ)

1596. அன்புநூலாகவின்சொலலர்தொடுத்தமைந்தகாத
லின்பஞ்செய்காமச்சாந்திற்கைபுனைந்தேற்றமாலை
நன்பகற்சூட்டிவிள்ளாதொழுகினுநங்கைமார்க்குப்
பின்செலும்பிறர்கணுள்ளம்பிணையனார்க்கடியதன்றே.

(இ - ள்.) அன்பு நூலாக இன்சொலலாகிய பூவைவைத்துக் கட்டிக் காதலாகிய சாந்தாலே கைபுனைந்து ஏற்றவின்பஞ்செய்கின்ற காமமாலையை நங்கைமார்க்குப் பகற்பொழுதுஞ்சூட்டி நீங்காதிருப்பினும் அவர்க்குக் கண்ணுமனமும் பிறர்பின்செல்லும்; அஃது அடியிலேயுள்ளதன்றோவென்றானென்க.

பகல் - வெளியுமாம். (சய)

1597. பெண்ணெனப்படுவகேண்மோபீடிலபிறப்புநோக்கா
வுண்ணிறையுடையவல்லவோராயிரமனத்தவாகு
மெண்ணிப்பத்தங்கையிட்டாலிந்திரன்மகளுமாங்கே
வெண்ணெய்க்குன்றெரியுற்றாற்போன்மெலிந்துபின்னிற்குமன்றே.

(இ - ள்.) பெண்ணென்றுகூறப்படுவனவற்றினியல்பைக் கேட்பாயாக மனவலியுடையவல்ல; குடிப்பிறப்புக்கெடுமென்று பாரா; நிறையுடையவல்ல; ஆயிரமுகமாகவெழும் மனத்தவாம்; பத்துப்பொருளை அகங்கையிலே யிட்டாற் பொருட்குறைபாடில்லா இந்திரன்மகளேயாயினும் உருகி அவன் பின்னேநிற்குமென்றானென்க. (சக)

1598. சாமெனிற்சாதஞேதுறன்லவன்றணந்தகாலைப்
பூமனும்புனைதலின்றிப்பொற்புடன்புலம்பவைகிக்
காமனேயென்றுஞ்சொல்லார்கணவற்கைதொழுதுவாழ்வார்
தேமலர்த்திருவோடொப்பார்சேர்ந்தவன்செல்லதீர்ப்பார்.

(இ-ள்.) கணவன் சாகிற்சாக ; நோவின்நோக ; அவன் நீங்கினால், இத னாற்பயன் என்னையென்று மிகவும் பூவும் புனைதலின்றி அழகுடனே தனிப்பத் தங்கிக் காமனென்றுபெயருங்கூறாராய்க் கணவனையேவணங்கிவாழ்வார், அவனுக்குத் திருவோடொப்பார் ; அவன் செல்லறிர்ப்பாரென்றுனெனக.

வாழ்வாரென்னுமெழுவாய்க்கு ஒப்பார் தீர்ப்பாரென்னுமிரண்டுபெயரும், "பெயர்கொள வருதல்" (தொல். வேற்றுமை. ௬. ௫) என்பதனாற் பயனிலையாயின. ஐ, அசை. இதனாற் கற்புடைமகளிரியல்பு கூறினான். (௪௨)

1599. அன்னணின்றோழியையாவவளென்னைக்கண்டகண்ணாற்
பின்னைத்தான்பிறரைநோக்காப்பெருமடமாதுதன்னை
யென்னையானிழந்துவாழுமாறெனவிரங்கினானுக்
கன்னளோவென்றுநக்கானணிமணிமுழவுத்தோளான்.

(இ-ள்.) ஐயா! நின்தோழி, கணவற் கைதொழுது வாழ்வாரோடொப்பவள்; அவள்தான் என்னைப்பார்த்தகண்ணாற் பிறரைப்பாராதமாது ; அவளையிழந்தும் யான் வாழுமாறு எங்ஙனேயென்று வருந்தினவனுக்குத் தோளான் அன்னளோவென்று நக்கானெனக.

அன்னளோவென்றது யான்கூறியவற்றாலும் தெளிவுபிறவாமல் இவனை வருத்துந்தன்மையளோவென்றவாறு. நகை, பேதைமைபற்றிநிகழ்ந்தது; இனி, யாம்இவன் இடுக்கணுக்குஉதவியானேமென்று மனமகிழ்ந்தானென்றுமாம். (௪௩)

வேறு.

1600. இனையல்வேண்டாவிம்மந்திரத்தையோதிநீயொருவில்லேவள
வனையவெல்லைசென்றுவியக்கிகொணர்ந்தருளுநீ
புனைசெய்[1]கோல்வளையைக்கைப்படுதியென்றுங்கவன்போதலு
மனையமாதரைக்கண்டாங்கடிபுல்லிவீழ்ந்தரற்றினான்.

மந்திரம் - மகளிரை வசீகரிப்பதொருமந்திரம்.

(இ-ள்.) நீவருந்தல்வேண்டா ; இம்மந்திரத்தையோதி ஒருவில்லினது அம்புசென்றவளவையொத்த எல்லையப்போனால், அவ்விடத்தே இயக்கி கொண்டுவந்துதரும் ; அவளைக்காண்பையென்றுகூற இவன்போன அளவிலே, அவனுஞ்சென்று அங்ஙனம்மெலிந்து பின்னிற்கும் (சீவக. ௧௬௬௭) தன்மையையுடைய மாதரை அவ்விடத்தேகண்டு வீழ்ந்து அடியைப்புல்லி அரற்றினானெனக.

தான்கண்டமை கூறிற்றிலன், இவன்றான் நம்மையும் நீங்குகருதுவனென்று. (௪௪)

(பி - ம்.)—1 'மேகலைய'

(இ-ள்.) கேளிர்! நீர் என்னவருத்தமுற்றீர்? அதற்குக்காரணமென்னோ? என்ன பெயரையுடையீர்? என்று கேட்டசீவகற்கு, நம்பி! இவ்விடத்தே என்பாவத்தாலே வல்லிபோல்வாளைக் கெடுத்தேன்; யான் நூற்கேள்வியுடையேன்; பவதத்தனென்று பெயர்கூறப்படுவேனென்றானென்க. (கூஅ)

வேறு.

1595. கைப்பொருள்கொடுத்துங்கற்றல்கற்றபின்கண்ணுமாகு
மெய்ப்பொருள்விளக்குநெஞ்சின்மெலிவிற்கோர்துணையுமாகும்
பொய்ப்பொருள்பிறகள்பொன்னும்புகழுமாந்துணைவியாக்கு
மிப்பொருளெய்திநின்றீரிரங்குவதென்னையென்றான்.

கற்றல், அல்லீற்றுவியங்கோள்; "இற்றெனக் கிளத்தல்" (தொல். கிளவி. ஞ. கக) போல.

(இ-ள்.) தனக்கு இடுக்கண்வந்தால் உதவும் பொருளைக் கொடுத்தும் கற்க; கற்றபின்பு ஞானக்கண்ணுமுண்டாகும்; அது தத்துவத்தினை விளக்கும்; வருத்தத்திற்கு உதவியுமாம்; ஆதலின், இதனையொழிந்தபொருள்கள் பொருளல்ல; இதனால் மீண்டும் பொருள்களுண்டாம்; கீர்த்திமகளையுமுண்டாக்கும்; இப்பொருளைப் பெற்றுநின்றநீர் அறியாமல் வருந்துதற்குக் காரணமென்னென்றானென்க.

புகழும் துணைவியுமென்றுமாம். (கூகூ)

1596. அன்புநூலாகவின்சொலலர்தொடுத்தமைந்தகாத
லின்பஞ்செய்காமச்சாந்திற்கைபுனைந்தேற்றமாலை
நன்பகற்சூட்டிவிள்ளாதொழுகினுநங்கைமார்க்குப்
பின்செலும்பிறர்கணுள்ளம்பிணையனார்க்கடியதன்றே.

(இ-ள்.) அன்பு நூலாக இன்சொலலாகிய பூவைவைத்துக் கட்டிக் காதலாகிய சாந்தாலே கைபுனைந்து ஏற்றவின்பஞ்செய்கின்ற காமமாலையை நங்கைமார்க்குப் பகற்பொழுதுஞ்சூட்டி நீங்காதிருப்பினும் அவர்க்குக் கண்ணுமனமும் பிறர்பின்செல்லும்; அஃது அடியிலேயுள்ளதன்றோவென்றானென்க.

பகல் - வெளியுமாம். (சo)

1597. பெண்ணெனப்படுவகேண்மோபீடிலபிறப்புநோக்கா
வுண்ணிறையுடையவல்லவோராயிரமனத்தவாகு
மெண்ணிப்பத்தங்கையிட்டாலிந்திரன்மகளுமாங்கே
வெண்ணெய்க்குன்றெரியுற்றாற்போன்மெலிந்துபின்னிற்குமன்றே.

(இ-ள்.) பெண்ணென்றுகூறப்படுவனவற்றினியல்பைக் கேட்பாயாக மனவலியுடையவல்ல; குடிப்பிறப்புக்கெடுமென்று பாரா; நிறையுடையவல்ல; ஆயிரமுகமாகவெழும் மனத்தவாம்; பத்துப்பொருளை அகங்கையிலே யிட்டாற் பொருட்குறைபாடில்லா இந்திரன்மகளேயாயினும் உருகி அவன் பின்னேநிற்குமென்றானென்க. (சக)

1598. சாமெனிற்சாதனேதறன்னவன்றணந்தகாலைப்
பூமனும்புனைதலின்றிப்பொற்புடன்புலம்பவைகிக்
காமனையென்றுஞ்சொல்லார்கணவற்கைதொழுதுவாழ்வார்
தேமலர்த்திருவோடொப்பார்சேர்ந்தவன்செல்லதீர்ப்பார்.

(இ-ள்.) கணவன் சாகிற்சாக ; நோவின்நோக ; அவன் நீங்கினால், இத னாற்பயன் என்னையென்று மிகவும் பூவும் புனைதலின்றி அழகுடனே தனிப்பத் தங்கிக் காமனென்றபெயருங்கூறாராய்க் கணவனையேவணங்கிவாழ்வார், அவ னுக்குத் திருவோடொப்பார் ; அவன் செல்லதீர்ப்பாரென்றுனென்க.

வாழ்வாரென்னுமெழுவாய்க்கு ஒப்பார் தீர்ப்பாரென்னுமிரண்டுபெய ரும், "பெயர்கொள வருதல்" (தொல். வேற்றுமை. ௬. ௫) என்பதனாற் பய னிலையாயின. ஐ, அசை. இதனாற் கற்புடைமகளிரியல்பு கூறினான். (௪௨)

1599. அன்னணின்றோழியையாவவளென்னைக்கண்டகண்ணாற்
பின்னைத்தான்பிறரைநோக்காப்பெருமடமாதுதன்னை
யென்னையானிழந்துவாழுமாறெனவிரங்கினானுக்
கன்னளோவென்றுநக்கானணிமணிமுழவுத்தோளான்.

(இ-ள்.) ஐயா! நின்தோழி, கணவற் கைதொழுது வாழ்வாரோடொப் பவள் ; அவள் தான் என்னைப்பார்த்தகண்ணாற் பிறரைப்பாராதமாது ; அவளை யிழந்தும் யான் வாழுமாறு எங்ஙனேயென்று வருந்தினவனுக்குத் தோளான் அன்னளோவென்று நக்கானென்க.

அன்னளோவென்றது யான்கூறியவற்றாலும் தெளிவுசிகழாமல் இவனை வருத்துந்தன்மையளோவென்றவாறு. நகை, பிறரின்மைபற்றிநிகழ்ந்தது; இனி, யாம்இவன் இடுக்கணுக்குஉதவியாளேமென்று மனமகிழ்ந்தானென்று மாம். (௪௩)

வேறு.

1600. இனையல்வேண்டாவிம்மந்திரத்தையோதிநீயொருவில்லேவுள
வனையவெல்லைசென்றுலியக்கிகொணர்ந்தருளுநீ
புனைசெய்[1]கோல்வளையைக்கைப்படுதியென்றுக்கவன்போதலு
மனையமாதரைக்கண்டாங்கடிபுல்லிவீழ்ந்தரற்றினான்.

மந்திரம் - மகளிரை வசிகரிப்பதொருமந்திரம்.

(இ-ள்.) நீவருந்தல்வேண்டா ; இம்மந்திரத்தையோதி ஒருவில்லினது அம்புசென்றவளவையொத்த எல்லையைப்போனால், அவ்விடத்தே இயக்கி கொண்டுவந்துதரும் ; அவளைக்காண்பையென்று கூற இவன்போன அளவி லே,அவனுஞ்சென்று அங்ஙனம்மெலிந்து பின்னிற்கும் (சீவக. ௧௫௬௭) தன் மையையுடைய மாதரை அவ்விடத்தேகண்டு வீழ்ந்து அடியைப்புல்லி அரற் றினானென்க.

தான்கண்டமை கூறிற்றிலன், இவன்றன் கம்மையும் நீங்குகருதுவ னென்று. (௪௪)

---

(பி - ம்.)—1 'மேகலையை'

1601. பட்டவெல்லாம்பரியாதுரைத்தானவளுங்கேட்டாள்
விட்டாளசர்வமவன்கணிவன்மேன்மைந்துறவினுன்
மட்டார்கோதைமனைதுறந்தாண்மைந்தனுமங்கைமேலே
யொட்டிவிள்ளாவார்வத்தனுகி[1] யுருவமோதினுன்.

(இ - ள்.) அங்ஙனம்அரற்றினமைந்தனும் தானுற்றவெல்லாவற்றையும் வருந்தாதேகூறினான் ; கோதை, அடியிலே மனையைத்துறந்துபோந்தவள், அவளும், இவன் விள்ளாவார்வத்தனாய் இவளைப்பெறவேண்டுமென்று ஒட்டி அம்மந்திரத்தைப் பலவுருவையோதினானகையாலே, அவற்றைக்கேட்டாள் ; கேட்டு இவன்மேலன்பு வலியுற்றபடியாலே, அவ்வணசரிதன்மேற்சென்ற வேட்கையை விட்டாளென்க.

அவன்கணார்வமெனமாறுக. அம்மந்திரம் அவள்நெஞ்சை இங்ஙனம் பிணிப்பித்ததென்றுணர்க. (சரு)

வே று.

1602. மெழுகுசெய்படம்வீழ்முகின்மத்தகத்
தொழுகும்வெள்ளருவித்திரளோடைசூழ்ந்
திழுகுபொன்மதத்தின்வரைக்குஞ்சரந்
தொழுதுவேய்முதற்றூசங்கொண்டேறினுன்.

(இ - ள்.) படிந்தமுகிலாகிய மெழுகுசெய்படத்தையும், ஒழுகும் வெள்ளருவித்திரளாகிய மத்தகத்தோடையினையும், ஏறுவார்காலைச் சூழ்ந்துகிடந்து உரிஞ்சும் பொன்னாகிய மதத்தையுமுடைய வரையாகிய யானையைத் தொழுது மூங்கில்வேராகிய புரோசைக்கயிற்றைப்பிடித்து அம்மூங்கிற்கவையிலே அடியிட்டேறினானென்க.

ஸ்ரீகோயிலைத்தொழுதான். யானையேறுவாரும் தொழுதல் இயல்பு. ()

1603. நிரைத்ததீவினைநீங்கநெடுங்கணா
வரைக்கணேறலின்வாலரிப்பொற்சிலம்
புரைத்துமின்னிருண்மேற்கிடந்தாலுமொத்
தரைத்தலத்தகமார்ந்ததொர்பாலெலாம்.

(இ-ள்.) இடைவிடாத தீவினைபோம்படி தொழுதற்கு மகளிர் வரையிலேறுதலாலே, அவரடியிற்சிலம்பு உரைக்கப்பட்டு, ஒருபாலெல்லாம், மின் இருண்மேற்கிடந்த தன்மையையுமொத்து, அவரடி ஒக்கமிதிக்கப்பட்டு ஒரு பாலெல்லாம் செம்பஞ்சுமார்ந்ததென்க.

அரைத்த அலத்தகமென விகாரமுமாம். (சஎ)

1604. சாந்துங்கோதையுந்தண்ணறுஞ்சுண்ணமு
மாய்ந்தபூம்புகையும்மவியுஞ்சுமந்
தேந்துபொன்விளக்கேந்தியிடம்பெறு
மாந்தர்சும்மைமலிந்ததொர்பாலெலாம்.

(பி - ம்.)—1 'உருவோதினன்'

(இ - ள்.) சந்தனமுதலியவற்றைச்சுமந்து உயர்ந்த பொன்னாற்செய்த விளக்கையுமேந்தி இடம்பெறாத மக்களாரவாரம் ஒருபாலெல்லாம் மிக்க தென்க. (சஅ)

1605. துறந்த[1] மன்னவர் தூமுடிதேரள்வனை
நிறங்கொளாரம்பைம்பூணிழற்குண்டலம்
பிறங்குவெங்கதிர்மின்னொடுபின்னிவீழ்ந்
துறங்குகின்றனபோன்றவொர்பாலெலாம்.

(இ - ள்.) துறந்தவரசர் தம்முடைய முடிமுதலியனகிடந்தவொருபா லெல்லாம், கதிரும் மின்னும் பின்னிவீழ்ந்து உறங்குகின்றனபோன்றன வென்க.

ஈண்டுத் துறப்பதற்குமுன் உண்டான உடைமையாம். (சகூ)

1606. கருவித்தேன்கலைகையுறக்கீண்டுடன்
மருவிப்பைங்கறிவாரிப்பழந்தழீஇ
வெருவிநாகம்பிளிற்றவிரைந்துரா
யருவிநின்றதிரும்மொருபாலெலாம்.

(இ - ள்.) கைத்தளம்போலுந்தேனிறால், ஆண்முசுவின்கையுறுதலா லே சோக்கிழிந்து விரைந்துபரந்து மிளகைவாரிப் பழத்தைத்தழுவி நாகம் வெருவிக்கூப்பிடும்படி ஒருபாலெல்லாம் அருவியாய்நின்றதிருமென்க. (ருo)

1607. வெங்கதிர்க்கடவுள்வியன்றேர்வரைத்
தங்குசந்தனக்கோட்டிடைப்பட்டெனப்
பொங்குமான்குளம்பிற்குடைபொற்றுகண்
மங்குலாய்த்திசையாவையுமல்கின்றே.

(இ - ள்.) வரையிற்றங்கிய சந்தனக்கோட்டிடையிலே ஞாயிற்றின் தே ரகப்பட்டதாக, அத்தேரிற்பூண்டமான் தன்னடியையூன்றி அதனைக்கொண்டு போகின்றபொழுது, குளம்பாலேகுடைந்த துகள் திசைகளெல்லாம் இரு ளாகநிறைந்ததென்க.

ஆய் - ஆக. (ருக)

1608. சுனையநீலமுஞ்சுள்ளியுஞ்சூழ்மலர்
நனையநாகமுங்கோங்கமுநாறிணர்ச்
சினையசண்பகம்வேங்கையோடேற்றுபு
முனைவன்மேற்றுதிமுற்றெடுத்தோதினான்.

சுனையிடத்தனவாகியநீலம். சூழ்மலர்ச்சுள்ளி - மராமரம். நாறிணர்க் கோங்கம்.

(இ - ள்.) நீலப்பூமுதலியவற்றை வேங்கைப்பூவோடே திருவடிமேலே யேற்றி முனைவன்மேலுள்ளதுதிகளை முழுக்கவெடுத்துத் துதித்தானென்க.

மிடறுள்ளளவும் எடுத்தென்றுமாம். (ருஉ)

(பி - ம்.)—1 'மன்னதர்'

வேறு.

1609. முனிமைமுகடாயமூவாமுதல்வன்
றனிமைத்தலைமைதனதுதானென்ப
தனிமைத்தலைமைதனதுதானென்றூற்
பனிமலர்தூய்நின்றுபழிச்சாவாறென்னே.

முனிமை, குணப்பண்பு.

(இ - ள்.) முனித்தன்மைக்குமேலாகிய ஒப்பில்லாததலைமை முதல்வன் றனதேயென்பர்; அங்ஙனங்கூறுதலான், அவனை உலகம் பழிச்சாதிருக்கின்றது அறியாமையன்றேவென்றானென்க. (ருங)

1610. மலரேந்துசேவடியமாலென்பமாலா
லலரேந்தியஞ்சலிசெய்தஞ்சப்படுவா
னலரேந்தியஞ்சலிசெய்தஞ்சப்படுமே
லிலரேமலரெனினுமேத்தாவாறென்னே.

சேவடிய : அ, அசை ; சுட்டுமாம்.

(இ-ள்.) மலர்தானேந்தின அடியையுடைய மால், இந்திரனால்வணங்கி மதிக்கப்படுவானென்பர்; அங்ஙனமாயின், உலகத்தார் மலரிலரெனினும் ஏத்தாதிருக்கின்றது அறியாமையன்றேவென்றானென்க. (ருச)

1611. களிசேர்கணையுடையகாமனையுங்காய்ந்த
வளிசேரறவாழியண்ணலிவனென்ப
ரளிசேரறவாழியண்ணலிவனேல்
விளியாக்குணத்துநாம்வித்தாவாறென்னே.

(இ - ள்.) காமனைவென்ற அருள்பொருந்திய அறவாழியையுடைய தலைவன் இவனேயென்பர்; அங்ஙனங்கூறின், நாம் துதிகளைப்பரப்பாதிருத்தல் அறியாமையன்றேவென்றானென்க.

அயனும் அரியும் அரனும் இவனேயென்பதுகருத்து.

பா, முற்கூறியவற்றேடொக்கும். (ருரு)

வேறு.

1612. இன்னணமேத்தியிறைவனடிதொழு
தன்னமுறங்குமணிவரைமேனின்று
பொன்னங்கழலானிழிந்துபொழிமழை
மின்னினடந்துமிகுசுரஞ்சென்றான்.

(இ - ள்.) கழலான், இப்படியேத்தித் தொழுது வரையிடத்து நின்று இழிந்து நடந்துசுரத்தை மின்போலே கடிதுசென்றானென்க.

சுரம் - பாலை. இதனானும் தாரகமனம் வல்லனென்றார். (ருசு)

1613. மாலைக்கதிர்வேன்மலங்கமணிமலர்க்
கோலைவிடுகணுருகுகொடியிடை

யேலங்கமழ்குழலேழையவரன்ன
வாலேக்கரும்பின்காடணைந்தான்.

(இ - ள்.) வேல் கெடுதலின், தானும் போர்வேண்டின் வருகவென்று மலர்க்கு ஓலையிடும் கண்ணினையும் இடையினையும் குழலினையுமுடைய மக ளிரைப்போலே ஐம்புலனுக்கும் வேண்டும்பொருள்களையுடைய மத்திம தேசத்தைச் சேர்ந்தானென்க.

அகம் - மருதம்; "அகநாடு புக்கவ ரருப்பம் வௌவி" (மதுரை.கசக) என்றார். (ருஎ)

வேறு.

1614. வழைச்சறுசாடிமட்டயின்றுமள்ளர்தாங்
களைக்கரும்பெறிந்துகண்ணுடைக்குமெந்திர
மழைக்குரலெனமயிலகவவார்செந்நெற்
புழைக்கடைப்புனலலேத்தொழுகும்பொற்பிற்றே.

(இ - ள்.) மள்ளர், இளமையற்ற மட்டையுண்டு கரும்பைக்குறுகத் தறித்து மழைக்குரலென்றுமயிலகவச் சாறுகொள்ளும் ஆலையிற்சாறு செந் நெற்செறுவிற் கடைமடையாலே புனலை அலைத்தொழுகும் பொற்பினையுடைத்து அந்நாடென்க.

எந்திரமொழுகுமென்று இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்திற் கேற்றின ஆகுபெயர். (ருஅ)

1615. தாமரைமலர்தலேயடுத்துத்தண்கமழ்
தூமலர்க்குவளைகாலணைத்துத்தோலடிக்
காமருபெடைதழீஇயன்னங்கண்படுந்
தேமலர்த்தடந்தழீஇத்திசைகண்மல்கின்றே.

(இ - ள்.) அந்நாடு, அன்னம் தாமரைமலரைத் தலையணையாகச்சேர்த் துக் குவளையைக் காலணையாகச்சேர்த்து என்பில்லாத அடியையுடைய பெ டையைத்தழுவிக் கண்டுயில்கொள்ளுந் தடங்கள் திசைகளெல்லாந்தழுவி நீர் மல்காநின்றதென்க. (ருக)

1616. கண்பயிலிளங்கமுகெருத்திற்காய்[1]பரீஇக்
கொண்டிளமந்திகளெறியக்கோட்டிடைத்
திண்கனிமுசுக்கலேசிதறுந்தேம்பொழின்
மண்டமர்கடந்தவன்மகிழ்வொடேகினான்.

(இ - ள்.) அமரைக் கடந்தவன், கோட்டிடையிலே மந்திகளிருந்து கமு கின்காயைவாங்கிக்கொண்டு எறியக் கலை தோற்றுக் கனியைச்சிதறும் பொ ழிலை மகிழ்ச்சியோடே போனானென்க.

இஃது, அந்நாட்டின் நகரைச்சூழ்ந்த பொழில். (சுo)

(பி - ம்.)—1 'பறீஇ'

1617. களிறுமாய்கதிர்ச்செநெற்கழனிநாட்டிடை
யொளிறுவேனரபதிநகரமொய்யெனப்
பிளிறுவாரிடிமுரசார்ப்பப்பெய்கழல்
வெளிறிலர்க்கேள்வியான்விருப்பொடெய்தினன்.

(இ - ள்.) களிறுமறைகின்ற செங்நெற்கதிரையுடைத்தாகிய கழனியை யுடைய் நாட்டிடத்தில் நரபதிநகரைக் குற்றமற்றகேள்வியான் முரசார்க் கின்றகாலத்திலே விருப்பத்தோடே சேர்ந்தானென்க.

முரசார்த்தல், நன்னிமித்தம். (சுக)

1618. புறநகர்மணமகனொருவன்போதர்வா
னிறைமகன்வினவினனென்னை[1]பேரவே
துறைவளர்நாட்டொடுநகரஞ்சொல்லென
வறிகவென்றலரிவாய்கமழக்கூறினன்.

(இ - ள்.) இறைமகன், கலமிழியுந்துறைமிக்க நாடும் நகரமும் என்ன பெயரையுடையன, சொல்லென்று வாய்விட்டு அலரிப்பூக்கமழ வினவி னன் ; அதுகேட்டுப் புறநகரினின்றும் போதருவானுகிய மணமகனொருவன் அப்பெயர்களை அறிகவென்று கூறினனென்க. (சுஉ)

1619. (க) மத்திமதேசமாநாடுமேற்றிநாட்
டெத்திசைநிதியமுமிறைகொண்டில்லவர்க்
குய்த்துமூர்கொடுப்பவரேமமாபுர
மித்திசைக்கையநீபுதியைபோன்மெனை.

1620. (உ) அன்னதேயென்றலினடிசிற்காலமா
லென்னெடுபேசினய்தவிர்மற்றீங்கெனப்
பொன்னகர்ப்புக்கபினறிவல்போகென்றான்
மின்மரீஇவாங்கியவீங்குதோளினன்.

இவை இரண்டும் ஒருதொடர்.

(உ) அறிவல், மறுத்தற்பொருட்டாய இறைபயர்ந்தது. வில்லைப் பயி ன்று வளைத்த.

(இ-ள்.) நாடு மத்திமதேசமென்னும் பெயரையுடைத்தாம் ; இந்நாட் டில்எத்திசைநிதியமும் இறைகொள்ளுதலால் இல்லவர்க்கு உய்த்துங்கொடுப் பவரூர் ஏமமாபுரமென்னும் பெயரையுடைத்தாம் ; ஐயனே ! நீ இத்திசைக் குப் புதியைபோலுமென்று அவன்கூற, அங்ஙனம்புதியேனென்று சீவகன் கூறுதலின், அவன் என்னுடனே வார்த்தைகூறினய் ; அதனால், நட்பிற்குத் தாழ்வில்லை ; அடிசிற்காலமுமாயிருந்தது ; இவ்விடத்தே தங்கென்றுகூற, தோளினன், நகரிலேசென்றபின்பு பார்ப்பேன்; இப்பொழுது போகவென்று னென்க. (சுங - சுச)

(பி - ம்) 1 'பேர்த்தெனை'

1621. புணர்மருப்பியானையின்புயல்கொண்மூம்மத
மணமகள்கதுப்பெனநாறுமாநகர்த்
துணைமலர்க்கண்ணியுஞ்செம்பொன்மாலையு
மிணைமலர்த்தாரினானிடறியேகினான்.

(இ - ள்.) தாரினான், பிணையலையும் மாலையினையுமிடறி, யானையினது மழைபோலு மும்மதம் கதுப்பெனநாறுநகரிலே ஏகினானென்க.

இடறி, நிகழ்காலமுணர்த்திற்று. (சுரு)

1622. வண்டுகொப்புளித்துணுமாலைமார்பனைக்
கண்டுவப்பளித்தவர்கடைக்கணைக்கற
மண்டபப்பளிக்கறைமருங்கோர்மாநிழல்
கொண்டவற்களித்ததோர்குளிர்கொள்பொய்கையே.

(இ - ள்.) தம்கண்கள் மாலைமார்பனைப்பார்த்து மனத்துக்கு மகிழ்ச்சி கொடுக்கப்பட்ட மகளிருடைய அக்கடைக்கண்கள் பிளப்பு தன்னைக்காட்சி யின்றி ஏக்கறும்படி போய் மாநிழலை இருப்பிடமாகக்கொண்டவற்கு ஒரு பொய்கை வருத்தத்தைக்கொடுத்ததென்க.

ஏக்கற - இளைத்து இடைய. மண்டபம்போலும் பளிக்கறை. (சுசு)

வேறு.

1623. வண்சிறைப்பவளச்செவ்வாய்ப்பெடையன்னமடமைகூரத்
தண்கயநீருட்கண்டதன்னிழல்பிறிதென்றெண்ணிக்
கண்டனங்கள்வமற்றுன்காதலிதன்னைநீர்க்கீழ்ப்
பண்டையமல்லம்வேண்டாபடுக்கவென்றூடிற்றன்றே.

(இ - ள்.) சிறையினையும் வாயினையுமுடைய பெடையன்னம், அறி யாமைமிகுதலாலே நீரிலேகண்டதன்னிழலை வேறொருபெடையென்றுகருதி, கள்வனே ! நின்காதலிதன்னை நீரின்கீழேகண்டேம், இனி, முன்புபோல் தேற்றத்தேறேம்; அகப்படுக்கவேண்டாவென்று ஊடிற்றென்க. (சுஎ)

1624. செயிர்ப்பொடுசிவந்துநோக்கிச்சேவலினகலச்சேவ
லயிர்ப்பதெனின்னையல்லாலறியலேனன்றிமூக்கி
னுயிர்ப்பதுன்பணியினாலேயூடனீயென்றுபல்காற்
பயிர்ப்பறச்சிறகாற்புல்லிப்பணிந்துபாண்செய்ததன்றே.

(இ - ள்.) அன்னமூடிய பேடை குற்றத்தோடே கோபித்துநோக் கிச் சேவலினின்றுநீங்க, சேவல், யான் நின்னையன்றி வேறொன்றறியேன்; என்னை அயிர்ப்பதென் ? அதுவுமன்றி, யான் உயிர்தாங்கியிருப்பது நின் வலாலே; ஆதலின், நீ ஊடாதேகொள்ளென்று மனங்கொள்ளாதிருக்கின் மை நீங்கப் பல்காற்புல்லி வணங்கித் தாழ்ச்சிசெய்ததென்க. (சுஅ)

1625. கலையுணர்மகளிர்நெஞ்சிற்காமத்திற்கினிந்தவூட
னிலையுணர்மைந்தர்நீக்கிநெறியினாற்புணர்ந்ததொப்ப

வலர்மிசைப்பெடையினூடலன்புகொள்சேவனீக்கிக்
குலவியபுணர்ச்சிநோக்கிக்குன்றனுன்சிந்திக்கின்முன்.

கலை - மகளிர்க்குரியவாக மணிமேகலையிற்கூறிய * கலைகள்; கரணமுமாம். கனிந்த - பழுத்த.

(இ-ள்.) மகளிர்நெஞ்சில் ஊடலைத் தீர்க்குமுறையையறிந்த மைந்தர் தீர்த்துப் புணர்ந்ததன்மையையொப்ப, சேவல் பெடையினூடலைநீக்கித் தாழ்ந்த புணர்ச்சியைநோக்கி முன்பு சலியாதவன் இப்பொழுது நினையாநின்றுனென்க. (சுக)

1626. தன்னையான்முகத்தைநோக்கிற்முன்முலைமுகத்தைநோக்கும்
பின்னையான்பலவும்பேசிற்றுனென்றுமிழற்றும்பைம்பூட்
பொன்னவாஞ்சணங்குபோர்த்தபொங்கிளமுலையினுளென்
முன்னையாள்போன்றுதத்தைமுகத்துளேதோன்றுகின்முள்.

(இ - ள்.) அவளூடல்நீர்த்தற்கு யான் தன்னை முகத்தைப்பார்த்தால் தான் எதிர்நோக்கின் ஊடல்திருமென்றிறைஞ்சிசிற்கும்; பின்பு யான் ஊடல் தீரப்பலவுங்கூறின், அவற்றைக்கெடுத்துத்தான் ஒருமொழியை மெல்லக் கூறும்; இத்தன்மையையுடைய முலையினுளாகிய தத்தை முன்னையாள் போன்று என் முகத்துள்ளே தோன்றுநின்றுளென்றுனென்க.

அவாம்-விரும்பும்; ஈற்றுமிசையுகரம் மெய்யொடுங்கெட்டது. குணமாலையால் தத்தைக்குநிகழ்ந்த ஊடறீர்த்ததனை நினைந்தான்; ஒழிந்தோர்க்கு அங்ஙனம்நிகழ்ந்த ஊடலின்மையின். முன்னர் ஊடினமின்மையாகவே தோற்றுதலின், 'முன்னையாள்போன்று' என்முன். (எ0)

வேறு.

1627. (க) பரிவுற்றுற்பயனின்றியும்பாவைமார்
முரிவுற்றுர்களின்மூர்ச்சனைசெய்பவாற்
பிரிவிற்றேன்றியபேரன்பெனப்படு
மெரியின்மூழ்கியிறந்துபடுங்கொலோ.

இதுமுதல், மூன்றுகவியும் ஒருதொடர்.

(க)பாவைமார், அன்புற்றால் ஒருபயனின்றியும் வருத்தமுற்றுர்போல நெட்டுயிர்ப்புக்கொள்வார்கள்; ஈண்டு அதுவன்றிப் பிரிவாதலின், அப்பிரிவாற் றேன்றிய அன்பென்னுநெருப்பிலேயழுந்தி இறந்துபடுமோவென்க. இவ்வாறு அருள் பிறர்க்காகுமென்றுற்போலக் கருதுதல் பரிவு.

1628. (உ) வாளியம்பனவாட்டடங்கண்ணிதன்
றேளுமென்முலைப்பாரமுந்தொன்னல
நாளுநாளினுநைந்துநைந்துள்சுடப்
பூளைமெல்லணைமேற்புரளுங்கொலோ.

---

* இவற்றை, மணிமேகலை, உ - ஆம் காதையிற்காண்க.

(உ) வாளியம்பு-அலகம்பு. 'பூணிமெல்லணை' என்றான், பூணிமுதலியவற்றாற் சமைத்தலின். தடங்கண்ணனி உள்சுடுதலாலே தோளும் முலையும் தம் தொன்னலம் நாடோறும் நாடோறுங்கெட்டுப் புரளுமோவென்க. முன்பு என்றோளாகிய அணைமேற்றுயின்றாள், இப்பொழுது நீயாகிய அணையிலே புரளுமோவென்றானென்க.

1629.(ந) உருகிவாடியென்னுற்றதுகொல்லெனக்
கருகிவாடியகாமருகோதைத
னிருகணீருமிடைமுலைபாய்ந்துகக்
குருகுபாய்தடமாகவழுங்கொலோ.

(ந)யான்போந்தபின்பு அவளுற்றதென்னென்றுநினைந்து உருகிவாடுதலாலே கருகிவாடியதொருகோதைபோல்வாள், தன்முலையிடை தடமாம்படி தன் னிருகண்ணினீரும் வடிந்துவிழ அழுமோவென்க; "கருங்கால் வெண் குருகு மேயும், பெருங்குள மாயிற்றென் னிடைமுலை நிறைந்தே" (குறுந். நஉரு) என்றார்பிறரும்.

(இ - ள்.) இங்ஙனந்தோன்றின இவள் இறந்துபடுமோ! புரளுமோ! அழுமோ! என்செய்கின்றாளென்றானென்க. (எக-ந)

1630. வண்டுவாழ்பயில்கோதைமணமுதற்
கண்டஞான்றுதன்கண்ணெனுங்கைகளா
னெண்டுகொண்டுபருகியநோக்கமொன்
றுண்டெனாவியுருக்கியிடுவதே.

(இ - ள்.) யான்பயின்றகோதை கூட்டத்திற்குமுன்னே கண்டவன்று தன்கண்ணென்னுங்கைகளாலே முகந்துகொண்டுபருகிய, என்னுவியையுருக் குவதொரு நோக்கமுண்டு; அஃது இப்பொழுதும் அங்ஙனம் உருக்காநின்ற தென்றானென்க.

(பருகியநோக்கமென்க.) இஃது, அவளோடுஉடனுறைந்ததேயன்றித் தன்னாட்டோன்றியவாறும் தோன்றின்மை கூறிற்று. (எச)

1631. காதலாளுடலுள்ளுயிர்கைவிடி
னேதமென்னுயிரெய்திறக்குமற்
றுதலாலழிவொன்றிலளல்லதூஉ
மாதர்விஞ்சையும்வல்லளுமல்லளோ.

(இ-ள்.) யாம் * இருதலைப்புள்ளின் ஒருயிரேமாதலின், காதலாள் உயிர் நீங்கின் என்னுயிரும் ஏதமெய்திநீங்கும்; இதநீங்காமையின், அவளும் இறந்து பட்டிலள்; இதுவும் அழிதற்கு ஒருபாயம்; அல்லதிலும், விஞ்சை யும்வல்லளல்லளோ? அதனாற் பன்னிருமதியினென்று தேவர்கூறியவதனை யும் பிற பான்மைகளையுமுணர்ந்து ஆற்றுவளென்றானென்க.

* பரி. அ; கலி. அக; அகநா. கஉ.

அல்லதிலுமென ஏழனுருபுவிரிக்க; அல்லதூஉமென்றது, முன்வருந்துவளோவென்றதனையுமுணர்த்திற்று. அவட்கு மிக்கவருத்தமின்மை மேல்வரவிடும் ஓலையானும், இவன்சென்றகாலத்துக் குணமாலையிடத்தேபோமென்றதனானுமுணர்க. (எரு)

1632. காதன்மிக்குழிக்கற்றவுங்கைகொடா
வாதல்கண்ணகத்தஞ்சனம்போலுமாற்
றுதுநூற்றுபுதங்கியவண்டனூர்க்
கேதமிற்றெனவெண்ணுமென்னெஞ்சரோ.

(இ - ள்.) தாதை உண்ணுகின்ற அதிலேதங்கிய வண்டையொக்கும் தலைவராயினூர்க்குக் காதலான்வருமேதம் இவ்வாறுபெருகுமாயிருந்ததென்று அறிவுடையோர் என்னையிகழ்ந்துகூறும்படி நெஞ்சு எண்ணுகின்றது; இங்ஙனமெண்ணும்படி காதல் மிக்கவிடத்துத் துன்பத்திற்குத் துணையென்று கற்றகல்வியும் பிறர்குற்றநீக்குதற்கு உதவுதலன்றி என்குற்றநீக்குதற்குஉதவாதொழிதல் கண்ணினுட்கிடந்த அஞ்சனத்தை ஒக்குமாயிருந்தது ; இங்ஙனம் இஃது உதவாதொழிதற்குச்செய்த தீவினை யாதென்றுனென்க.

பவதத்தன்வருத்தத்திற்குயானுரைத்தாங்குஎன்வருத்தத்திற்கும்உணர்வுடையோர் இவ்வாறுகூறுவரென்று அவர்கூறுமொழியைத் தான்கொண்டு கூறினான். எண்ணுமென்றது, இறந்துபடுமோவென்பது முதலியவற்றை. நெஞ்செனவே எனதுநெஞ்சென்பதுபடும்; என், "என்னெனப் படுங்கொ றோழி" (அகநா. உ0ங; குறுந். கஙச) போல்கின்றது. கண்ணிடத்துக்கிடந்த அஞ்சனம் அதற்குப்பயன்கொடாததுபோலக் கல்வி நெஞ்சிற்கிடந்தும் பயன் தந்ததில்லையென்றான். சச்சந்தனை நந்தகோன்முதலாயினுரும் இழித்துக் கூறினமைகண்டு நமக்கு இதுதகாதென்றான். இனி இற்றென என்னெஞ் செண்ணும்; இது வண்டனூர்க்கு ஏதமென்றுமாம்; 'இற்று' என்றது முற்கூறியவருத்தத்தை; வண்டன்னூர் - உத்தமர். இனி, வண்டன்னூர் - தபோதனர்; பிரமராசனராதலின், அப்பெயராயிற்று. அவர்க்கேவருத்தமில்லாததென்று எண்ணுமென்றுமாம்; இன்று, இற்றெனவிகாரம். (எசு)

1633. நறவெங்கோதையர்நன்னலங்காதலான்
மறவெங்காமத்துவந்துற்றதீவினைப்
பறவைத்தேர்நரகத்துப்பதைக்குங்கா
லறிவனல்லதங்கார்சரணுகுவார்.

(இ - ள்.) மகளிர் நலத்திலுள்ள காதலானும், அவரைப்புணர்தலானும் வந்துசேர்ந்த தீவினையாகிய பறத்தற்றொழிலையுடைய தேரிலேபோய் நரகத்தே பதைக்குங்கால் அவ்விடத்தே அறிவனல்லது வேறு சரணுவாரில்லையே; ஆதலின், ஈண்டு அவனேயன்றே சரணென்றுனென்க. (எஎ)

1634. வேட்கையூர்தரவிம்முறவெய்திய
மாட்சியுள்ளத்தைமாற்றிமலர்மிடை

காட்சிக்கின்பொய்கைக்காமர்நலனுண்டு
மீட்டுமங்கிருந்தான்விடையேறனான்.

(இ - ள்.) ஏறனான், வேட்கை மேலிடுதலாலே வருத்தமுற்ற மாய்தலையுடைய உள்ளத்தைக்கெடுத்து அப்பொய்கையினலத்தைநுகர்ந்து மீட்டும் அவ்விடத்தேயிருந்தானென்க.

வருத்தத்திற்குக் காரணமாகின்றவிடத்து இருத்தலருமைதோன்ற 'மீட்டும்' என்றார். (எஅ)

வே று.

1635. (க)நேரார்நேருநீணிதிதுஞ்சுங்கிறைகோயி
லாராவெம்போராய்தடமித்தனரசற்கு
நாரார்கற்பின்னாகிளவேய்த்தோணளினைக்குஞ்
சீராற்றோன்றிச்செல்வமொடெல்லாந்திருத்தக்கான்.

1636. (உ)விண்டார்த்தேய்க்கும்வெம்பரிமான்றேர்விசயன்னென்
றுண்டாநின்றான்றன்புகழூழியுலகேத்த
வண்டார்சோலைவார்மணநாறப்புகுகின்றான்
கண்டான்சேர்ந்தான்காளையைக்கல்விக்கடலானே.

இவைஇரண்டும் ஒருதொடர்.

(இ - ள்.) அரசனாகிய தடமித்தனுக்கும், நசையார்ந்தகற்பினையும் தோளினையுமுடைய நளினைக்கும் தலைமையோடேபிறந்து, செல்வத்தோடே கல்விமுதலியனவெல்லாம் அழகுதக்கவன், விசயனென்று பெயர்கூறப்பட்டு உலகமெல்லாம் தன்புகழ் ஊழிக்காலமுண்டாக ஏத்தநின்றவன், பகைவர் தரு நிதிதங்குங் கோயிலிற்சோலையிலே தன் மணநாறச்செல்கின்றவன், கல்விக்கடலானாகிய காளையைக் கண்டான் ; கண்டு சேர்ந்தானென்க.

மணநாறுதலாற் கண்டானென்றுமாம். (எகூ - அ0)

1637. இந்நாட்டிவ்வூரிவ்விடமெய்தாரிவண்வாழ்வா
ரெந்நாட்டெவ்வூரெப்பெயராய்நீயுரையென்றாற்
கந்நாட்டவ்வூரப்பெயரல்லாப்பெயர்சொன்னான்
பொய்ந்நாட்டேனும்பொய்யலவாற்றாற்புகழ்வெய்யோன்.

இவண் - இவ்வுலகில். என்றது, தனக்குநடக்குமிடத்தை.

(இ - ள்.) அங்ஙனஞ்சேர்ந்தவன், இவ்வுலகில் இந்நாட்டில் இவ்வூரில் வாழ்வார் இவ்விடத்தைச்சேரார் ; ஆதலின், இவன் இவ்விடத்தானல்லனென்று உட்கொண்டு, நீ எந்நாட்டில் எவ்வூரில் எப்பெயரையுடையாய் ? உரையென்றுவினாவினாற்கு, புகழ்வெய்யோனான், சொல்லாற் பொய்யாக நாட்டிக்கொள்ளப்பட்டதாயினும் பொருளாற் பொய்யல்லாததொரு வழி

யாலே ஏமாங்கதமென்னுநாட்டில் இராசமாபுரத்திற் சீவகனென்னும்பெயரை யன்றிப் 1 பொருளால் அப்பெயரேயாகக் கூறினானென்க.

எனவே மறைந்தொழுகுகின்றமை பெற்றும். (அக)

1638. 'வாமான்றிண்டேர்வள்ளலுமுள்ளம்மிகைகொண்டெங்
கோமாற்குய்ப்பன்கொள்பயன்மிக்கான்கொலைவேலா
னேமாறில்லாவிந்திரனேயும்மிவனெவ்வான்
போமாறுய்வென்பொற்பொடுகூடும்வகையென்றான்.

வாமான் - தாவுமான். கோமாற்கு, உருபுமயக்கம். இந்திரனேயும் : உம்மை, சிறப்பு; ஏகாரம், பிரிநிலை.

(இ - ள்.) ஏத்தொழிலில் நிகரில்லாதவிந்திரனும் இவனையொவ்வானாதலின், இக்கொலைவேலான் யாம்கொள்ளும் பயன்மிக்கவனென்று வள்ளலும் தன்னறிவின்மிகையாலே குறிக்கொண்டு எங்கோமானிடத்தே இவன் நெஞ்சாலே சென்றுகூடுங்கூற்றாலே செலுத்துவேன் ; அங்ஙனஞ்செலுத்துதற்கு இவனெஞ்சுபோம்வழியை ஆராய்ந்துபார்ப்பேனென்று கருதினானென்க. ()

1639. பூங்கழலானைப்புண்ணியநம்பிமுகநோக்கி
யீங்கிதுநின்னாடிப்பதிநின்னூரிதுநின்னில்
வீங்கியதிண்டோள்வெல்புகழாய்நின்கிளையென்றாற்
காங்கதுவெல்லாமண்ணலுநேர்ந்தாங்கமைகென்றான்.

இவனையெதிர்ப்படுதலின், விசயனை, 'புண்ணியநம்பி' என்றார்.

(இ-ள்.) விசயன் சீவகன்முகத்தைப்பார்த்து, வெல்புகழாய்! இங்ஙனம் நட்புக்கொண்டவிடத்து, இந்நாடு நின்னுடையநாடு ; இவ்வூர் நின்னுடைய வூர் ; இந்த இல் நின்னுடைய இல் ; யாங்களெல்லாம் நின்னுடையசுற்றமென்று உறவுகூறினாற்கு, அவ்விடத்துக்கூறிய உபசாரத்தினது பன்மையெல்லாவற்றையும் அண்ணலும் அப்பொழுது உடன்பட்டு இனி இவை மொழியற்கவென்றானென்க. (அ௫)

வேறு.

1640. மன்னவன்சிறுவனாங்கோர்மாங்கனியுண்ணலுற்று
மின்னவிர்கணையிற்பல்காற்பிழைப்பெய்துமீண்டுநிற்பப்
பொன்னவிர்கழலினானைப்பொருசிலைகணையின்வாங்கி
யின்னமிர்தூறுகின்றவிருங்கனியறவெய்திட்டான்.

(இ - ள்.) விசயன் அவ்விடத்தே ஒருமாங்கனியையுண்ணக்கருதி அது வருதற்குக் கணையாலேபிழைப்பவெய்து அக்கருத்துமீண்டுநின்றானாக, சீவகன் வில்லை அம்புடனேவாங்கி அக்கனியையறும்படியெய்தானென்க. (அச)

1641. எய்தவக்கணையுமாவினிருங்கனியதுவும்பூமிக்
கெய்தவச்சிலைபினெல்லையணுகனுமேந்தனேக்கி

(பி - ம்.)—1 'பொருளான் மெய்யாகக்'

யெய்தவவ்விடத்துநின்றேயெய்தவத்தடக்கைகொண்டாற்
கெய்தச்சென்றையனுரத்தழுவிக்கொண்டிதனைச்சொன்னான்.

(இ-ள்.) தானெய்த அவ்வம்பும், மாவினது கனியாகியவதுவும் தானெ ய்த அவ்வில்லினதுயரத்திலே பூமிக்கண் அணுகின அளவிலே, எய்தல்பார் த்து எய்தஅவ்விடத்தேநின்று எய்த அக்கையிலேவாங்கிக்கொண்டவனுக்கு விசயன் அணுகச்சென்று தழுவிக்கொண்டு இதனைக் கூறினானென்க. (அரு)

1642. வண்சிலைகொண்டவாறும்வார்கணைதொடுத்தவாறுங்
கண்கணைவைத்தவாறுங்கற்செய்தோளிருந்தவாறுந்
திண்சரம்விட்டவாறுஞ்சென்றகோல்போந்தவாறுங்
கண்டெலாம்வியந்துநோக்கிவில்லுடைக்கடவுளென்றான்.

(இ-ள்.) முட்டிவிசேடமானபடியையும், நிலைவிசேடமாகநின்று கணை யைத்தொடுத்தபடியையும், இலக்கடைந்தபடியையும், தோள்பிறழாமற் கிடந்தபடியையும், அம்புவிட்ட நொய்ம்மையையும், கோல் காம்பையறுத் துக் கூடவந்தபடியையும் எல்லாங்கண்டு அதிசயித்து அவனைப்பார்த்து நீ வில்லைப்படைத்த கடவுளென்றானென்க. (அசு)

1643. மராமரமேழுமெய்தவாங்குவிற்றடக்கைவல்வி
லிராமனைவல்லனென்பதிசையலாற்கண்டதில்லை
யுராமனமிவன்கணின்றியுவக்குமாசெய்வலென்று
குராமலர்க்காவினீங்கிக்கோயிலேகொண்டுபுக்கான்.

(இ - ள்.) வில்லைத் தேவிபொருட்டுவளைத்த கையினையுடைய இரா மனை மராமரமேழும் உருவவெய்த வலிய விற்றொழிலைவல்லனென்பது வார்த்தையன்றிக் கண்ணாற்கண்டதில்லை; இதுகண்டேன்; இனி நீங்கிப்போ முள்ளம் இவனிடத்தின்றாக இவன் உவக்குமாறு செய்வேனென்று உட் கொண்டு, தான் காவினின்றுநீங்கி அவனைக் கோயிலிலே கொண்டு புக்கா னென்க. (அஎ)

1644. வழிவரல்வருத்தமோம்பிவயிரப்பூணணிந்தமார்ப
னழிகவுள்யானைவேந்தற்கவன்றிறமறியச்சொன்னான்
மொழிபெதிர்விரும்பிமன்னன்மூரிவிற்றடக்கையாற்குக்
கழிபெருமுகமன்கூறிக்காதலங்காளையென்றான்.

(இ-ள்.) விசயன், வழிவருதலாலுண்டான வருத்தத்தை உணவுமுதலிய வற்றாலே தீர்த்துத் தடமித்தனுக்கு அவன்கூறுபாடெல்லாமறியக்கூறினான்; அவனும் அக்கூற்றை எதிரேவிரும்பிச் சீவகனுக்கு மிகப்பெரிய உபசாரங் களைக்கூறி, காளாய்! நின்மேற் காதலையுடையேமென்றானென்க. (அஅ)

1645. கிளுத்தங்கூர்ப்பரங்களென்னுமிரண்டினுட்கிளுத்தஞ்சார்ந்து
நலத்தகுவிரல்களைந்தினிம்பர்மூவிரலினிளஞ்

சிலைத்தழும்பியானைத்தோலினூற்றுரைசிறு[1]மீனொத்த
விலக்கணக்கிடக்கைகண்டேயேவினுக்[2]கரசனென்றான்.

இறுத்தம் - முன்கைச்சந்து. கூர்ப்பரம் - முழங்கைக்குமுன். யானைத்தோல் சாழ்ப்பேறினபடிக்கும், அதிலே நூற்றையுரைத்தது வெண்மைக்கும், சிறுமீன் தழும்பின்வடிவிற்குமுவமை.

(இ-ள்.) அவன் பின்னும் இறுத்தம் கூர்ப்பரமென்றவிரண்டிலும் முன்கைச்சந்தைச்சேர்ந்து, உத்தமவிலக்கணத்தையுடைய விரல்களோர்திற்கருகே யானைத்தோலின் நூற்றுரையையும் சிறுமீனையுமொத்த மூவிரலினிளத்தையுடைய சிலைத்தழும்பாகிய இலக்கணத்தினது கிடக்கையைக்கண்டு விற்றொழிலுக்கு அரசனென்றானென்க. (அ௯)

1646. அண்ணலஞ்சிலைவலாருளமோகமாவாசானிற்பின்
விண்ணகுவெள்ளிவெற்பின்விஞ்சையருலகினல்லான்
மண்ணகத்தில்லையென்பார்வாயினைமடங்கவந்தான்
புண்ணகத்துறையும்வேலானெனப்புகழ்ந்தரசன்சொன்னான்.

அமோகமாவாசான் - தப்பாத பெரிய ஆசிரியன்; அமோகம் - தப்பாமை; மாஆசான் - பெரியஆசிரியன்; இன், உருபுமயக்கம். இன்னும், ஐயும் அசை.

(இ - ள்.) பின்னும் தலைமையையுடைய வில்வல்லாரில் துரோணாசாரியனுக்குப் பின்பு விஞ்சையருலகினல்லது மண்ணிடத்து வில்வல்லாரில்லையென்பார் வாய்மடங்கும்படி வேலான் தோன்றினுனென்றுபுகழ்ந்து, அரசன் பின்னும் ஒருமொழிகூறினானென்க.

அது மேற்கூறுகின்றார். (௯0)

1647. விற்றிறனம்பிதேற்றான்விருந்தினனிவனுமன்றி
மற்றுமோர்நால்வருள்ளார்மாண்பினால்வளர்ந்ததில்லை
கொற்றநீகொடுக்கல்வேண்டுங்குறையெனக்குருசினேர்ந்தா
னற்றைநாளாதியாகவவர்களும்பயிற்றுகின்றார்.

(இ-ள்.) விசயன் விற்றிறலையுடையான்; அதற்குப்புதியன்; இவனுமன்றி வேறும் ஒருநால்வருளர்; அவரும் கல்விமாட்சியோடு வளர்ந்ததில்லை; இவர்களுக்குக் கல்வி நீ கொடுக்கல்வேண்டும்; இஃது எனக்குக் காரியமெனச் சொன்னாக, அதற்குச் சீவகனும்நேர்ந்தான்; நேர்ந்தபின்பு அற்றைநாள் முதலாக அவர்களும் அக்கல்வியைப் பயிலாநின்றாரென்க. (௯௧)

வேறு.

1648. கழலிற்செந்தாமரையடிகள்புல்லித்தங்காதல்கூர
நிழலினீங்கார்நினைத்தனநினைப்பினமைவாணுக்கி
யழலிற்சாராதகலாதொழுகவொருநாளவன்போகிப்
பொழிலின்மிக்கதனிற்புக்கான்மணமகளிர்போற்பொலிந்த(௪

(இ-ள்.) அங்ஙனம் பயிற்றுகின்றவர்கள், செருப்புப்போலே அடிகளைப் பொருந்திக் காதல்மிகுதலாலே நிழல்போல் நீங்காராய், அவனினைத்தனவ

(பி - ம்.)—1 'மீன்போன்ற' 2 'ஆசானென்றான்'

றை ஒருகணத்தின்முடித்துத் தீப்போலே அணுகாது அகலாதொழுகாநிற்க, அவன் ஒருநாளிலேபோய்ப் பொழில்களில் நன்மையிக்கதொன்றைச்சேர்ந் தான்; அதுவும் பலமணத்தால் மணமகளிரைப்போலப் பொலிந்ததென்க.

"ஒண்ணுதன் மகளிர் கழலொடு மறுகும், விண்ணுயர்ந் தோங்கிய கடந்ரவும்" (பதிற். ௫௦) என்றார் பிறரும். (௬௨)

**1649.** பாசிப்பாசத்துப்பைம்பொனிரைத்தாலிபூத்தவேங்கை
மாசில்[1]வெண்டுகிலைநீர்தோய்த்துமேற்போர்த்தவண்ணமேபோற்
காசின்மட்டொழுகப்பூத்தவழிஞ்சில்கண்ணார்கவின்கொண்டன
பேசிற்செந்தலையவெண்கறையபுன்கம்பொரியணிந்தவே.

(இ - ள்.) வேங்கை பச்சைக்கயிற்றிலே நிரைத்தலையுடைய பொற்றாலி போலேபூத்தன; அழிஞ்சில் வெண்டுகிலை நீரைத்தோய்த்து மேலேபோர்த் தாற்போலே தேனொழுகும்படிபூத்தன; புன்கு செந்தலைய வெண்கறைய வாகிய பொரிபோலேபூத்தன; இவற்றைக்கூறின் இவைதாம் கண்ணிற்கார் ந்ததொரு கவின்கொண்டனவென்க.

வெள்ளைமறுவையுடையவென்க. (௬௩)

**1650.** கோடுதையாக்குழிசியோடாரங்கொளக்குயிற்றிய
வோடுதேர்க்கான்மலர்ந்தனவகுளமுயர்சண்பகங்
கூடுகோழிக்கொழுமுள்ளரும்பினவங்கோசிக
வாடைபூத்தனபாதிரிவெண்கடம்புபந்தணிந்தவே.

குறட்டோடே ஆர்களமுந்தத் தைத்துச்செய்த தேருருளை; மேற்குட்டு வையாத தேருருளை.

(இ-ள்.) மகிழ் தேருருளைபோலேபூத்தன; சண்பகம் கோழியிடத்தே கூடின முள்ளுப்போலே அரும்பின; பாதிரி கோசிகவாடைபோலே பூத்தன; வெண்கடம்பு பந்தணிந்தனவென்க. (௬௪)

**1651.** வெருகுவேட்பச்சிரிப்பனபோன்முகைத்தமுல்லைவெய்யவா
ளரவுபைத்தாவித்தன்னவங்காந்தளவிழ்ந்தலர்ந்தன
குரவங்கொண்டகுறும்பூழ்போற்கொழுங்கான்முகைசுமந்தன
குருதிக்கூரெயிறுகூத்தியர்கட்கொண்டகொடித்தளவமே.

(இ-ள்.) முல்லை வெருகுவிரும்பச்சிரிப்பனபோலே அரும்பின; குருதிக் காந்தள் பாம்பு படத்தையவித்துக் கொட்டாவிகொண்டாலன்னவாக முகை நெகிழ்ந்து பின்பு அலர்ந்தன; குரவம் கையிலேபிடித்த குறும்பூழின் கால்போலே கொழுவிய முகையைச்சுமந்தன; தளவம் கூத்தியரிடத்துக் கூரெயிறுபோலே அரும்பினவென்க. (௬௫)

**1652.** சொன்னநன்மலருமல்லனவும்வீழ்பலவின்சூழ்சுளைகளு
நன்மைநூலினயந்தோன்றநன்பொன்விரலினுதியினறு

---

(பி - ம்.)—1 'பூந்துகில்'

பன்மணியுமுத்தும்பவளமும்பைம்பொன்னுங்கோத்தாலொப்ப
வென்னவிம்மாருமருளத்தொடுத்தானினமாலையே.

(இ - ள்.) மாலைகட்டுமாறுகூறிய நூலின்பயன்தோன்றத் தேவருமருள மணிமுதலியவற்றைக்கோத்தாற்போலே முற்கூறியமலர்களையும் ஒழிந்தவற்றையும் சுனைகளையுங்கொண்டு விரைவுதியாலே ஒருவகை மாலையைக் கட்டினனென்க. (கசு)

1653. ஊனுண்சிங்கக்குழவியெயிற்றேரொளியெயிற்றினான்
றேனுண்போதிற்பிணையலும்பந்தும்புனைந்துதேமார்ந்த
நானந்தோய்த்துநனைகலவைநாறுமதந்தெளித்தபின்
பானுண்டீஞ்சொல்லாளோர்பட்டிவண்டார்ப்பவந்திறைஞ்சினாள்.

(இ - ள்.) சிங்கக்குழவியின் எயிற்றையொக்குமெயிற்றினான், அவ்வகை மாலையொழியப் போதாலே ஒருமாலையையும் பந்தையும் பின்னுங்கட்டி, இவற்றை இனிமைமிகுநந்தபுழுகைத்தோய்த்து அவற்றினரும்புகளுக்குச்சந்தனத்தோடுகூடிய பனிநீரையும் புழுகையுந்தெளித்தபின்பு, பாலைப்போலத் தீவிதாகிய கூரியசொல்லையுடையாள் ஒருதொழில்செய்யுங்குறளி வந்து வணங்கினாளென்க.

ஒலைப்பாசுரமான மாலையைப் பிறர் அயிராதபடி இவையுங்கூடக்கட்டினான். "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை" (தொல். மரபு. சூ. கூ) என்றதனுள், 'கொடை' என்றதனாற் சிங்கக் குழவியுங்கொண்டவாறுகாண்க. (கள)

1654. நெடியவாட்கண்கள்வாயாவிமைப்பெனுஞ்சொல்லின்மற்றெங்
கொடியிற்கொத்தவிவையென்றுணம்பியுங்கொள்கவென்றான்
வடுவும்வேலுமலருங்கயலும்வனப்பழித்தகண்
ணடியஞ்சிலம்பினாட்குய்த்திறைஞ்சிக்காட்டவவள்கொண்டாள்.

(இ - ள்.) அப்பட்டி, தன்கண்கள்வாயாக இமைப்பென்னுஞ்சொல்லாலே இம்மாலைகளும் பந்தும் கனகமாலைக்குப்பொருந்தினவென்றாள்; சீவகனும் கொள்கவென்று கொடுத்தான்; கொடுத்தபின்பு, அவனை வணங்கி அவற்றைக்கொண்டுபோய், வடுமுதலியவற்றைக்கெடுத்த கண்ணினையும் அடியிலே சிலம்பையுமுடையாளுக்குக் காட்ட, அவளும் வாங்கிக்கொண்டாளென்க.

படிவிகுறிப்பறிந்து கொடுத்தான். (கஅ)

1655. (க) கொண்டுகோதைமலரெழுத்துமெல்விரலின்மேற்குங்கிக்கோக்கும்
வண்டுசேர்ந்தகுழலாள்வருமுலைகள்பாயவண்டார்
விண்டுதேன்துளிப்பவேற்றடங்கண்டாமாகொட்டகங்
கண்டுவாழாதவர்வாழ்க்கையெல்லாஞ்சவரார்வாழ்க்கையே.

1656. (உ) ஆம்பலாருமரக்கார்பவளவாயாரமுதன்னார்
பாம்புடைபத்தாங்கனையபவழப்படவரவல்குலார்

தாம்பலருமருட்டவகிறவழூந்தண்பூவணைக்
காம்பின்மென்றோள்கவின்வளரவைகல்கலப்பென்பவே.

1657. (ந) ஆகந்தானேர்மணிப்பலகையாகமுலைகளுயாகப்
போகக்கேற்றபுனைபவழவல்குல்கழ்கமாக
வேகவின்பக்காமக்கவறுடலியைவநன்றே
லாகநோற்றிட்டடங்கலாண்மைக்கழகென்பவே.

இவைமூன்றும் ஒருதொடர்.

(இ - ள்.) அம்மாலையைவாங்கிக்கொண்டு வீரன்மேலேதாங்கி மலராகிய எழுத்தைவாசிக்குங்குழலாள், அரக்காம்பல்போல நாறும்பவளவாயார், அமுதன்னூர், பாம்பின்படமன்ன அல்குலாராகிய மகளிர்தாம் பலரும்ஆடுநாடகங் களைக்கண்டு வாழாதவர் வாழும்வாழ்வெல்லாம் மக்கட்பிறப்பிற்பிறந்தும் நன்குறுகராத வேடாதுவாழ்வாயிருக்கும்; அதுவேயன்றி, அவரைக்கலக்குமிடத்து வேற்றடங்கண்தாம் பாம்புபைத்தாங்கு மருட்ட வளவியதார் தேன் றுளிக்கும்படி வருமுலைகள்பாய அவர்தோள் கவின்வளர அணையிலேதங்குதல் கலப்பென்றுகூறுவர்; அங்ஙனங்கலந்து தனதாகம் பலகையாக அவர் முலைகள் நாயாக அல்குல் சூதுபொருமிடமாக இணையில்லாத இன்பத்தையுடைய காமமாகியகவறுடல் கூடாதாயின், இவையெல்லாம் மேலுண்டாம்படி தவஞ்செய்தடங்குதல் ஆண்மைக்கு அழகென்றுகூறுவாரென்று வாசித்தாளென்க.

குழலாள் வாசித்தாளென்க. விடமேறினற்போலே மருட்ட. நாடகம் - அவர்வசிகரிக்கிறநிலைமை. (கக - சoக)

## வேறு.

1658. பின்னிவிட்டபிடித்தடக்கையிரண்டுபோன்றுதிரண்டழகார், கன்னிக்கலிங்கமகிலார்ந்துகவவிக்கிடந்தகுறங்கிணுண், மின்னுக்குழையும்பொற்றோடுமிளிரவெருத்தமிடங்கோட்டி, யென்னுமிமையாணினைத்திருந்தாளியக்கியிருந்தவெழிலொத்தாள்.

(இ - ள்.) முறைமைப்படநோக்கி இடைவெளியின்றியிருத்தலிற் பிடியினுடைய சேர்த்துவிட்ட கையிரண்டையொத்துத் தாம்திரள்வதுஞ்செய்து கணவன் நீண்டாத கலிங்கம் விரும்பிக்கிடந்த குறங்கிணுள், அங்ஙனம்வாசித்து, குழையும்தோடுபிறழக் கழுத்தை இடத்தேசாய்த்துச் சிறிதுமிமையாளாய் அவனிடத்துப் புணர்ச்சியை நினைந்திருந்தவள் இயக்கியிருந்த அழகையொத்தாளென்க.

இயக்கியும் தனக்குமேலாய இறைவனைத்தியானித்து இமையாதிருப்பாளென்றுணர்க. (சoஉ)

1659. கொடுவெஞ்சிலையைக்கோளமைத்துக்கொதிநீர்ப்பகழிகொளவாங்கிக், கடுவெங்குறவனெய்ப்பட்டகன்னிப்பிணையினிலைகல

ங்கித், தொடிதோணடப்பத்தோடேம்பத்துணைவெம்முலைகள்பசப்பூர, நெடுமாத்தோகைமென்சாயனெஞ்சிற்கிவ்வாறுரைக்கின்றாள்.

(இ - ள்.) அம்மனைமிருந்த சுரியமயில்போலும் சாயலையுடையாள் வில்லோனைத் ஏறிட்டு அம்பை நிரம்பவலித்துக் குறவனெய்யப்பட்ட கன்னிப் பிணையினிலையைத் தப்பித் தொடி தோளில் நின்றும் விழும்படி தோள் மெலியாநிற்க, முலைகள் பசப்பூராநிற்க நெஞ்சிற்கு இப்படிக் கூறுநின்றாளென்க.

நிலையைத்தப்புதல் - இறந்துபாடுநீங்குதல். மாலைதைத் தன்சேடி கொண்டுவருதலின், அவற்கு நிகழ்ந்தவேட்கை தன்னிடத்தேயென்றுகருதி இறந்துபாடுநீக்கினாள். பிணைபோலென்றால் மேல்வருத்தமின்றி இறந்துபாடுதோன்றுமாம். (கஎங)

1660. ஒன்றேயெயிற்றதொருபெரும்பேயுலகம்விழுங்கவங்காந்து
நின்றாற்போலநிழலுமிழ்ந்துநெடுவெண்டிங்களெயிறிலங்க
வின்றேகுருதிவானவாயங்காந்தென்னைவிழுங்குவா
னன்றேவந்ததிம்மாலையனியேனுவியாதாங்கொல்.

(இ - ள்.) ஒரெயிற்றையுடையதொரு பெரும்பேய் உலகத்தை விழுங்கும்படி வாயை அங்காந்துநின்றாற்போலே இம்மாலை திங்களாகியஎயிறு நிழலுமிழ்ந்திலங்கச் செக்கர்வானாகியவாயை அங்காந்து என்னை இன்றே விழுங்குதற்கு வந்ததல்லவோ, இனி என்னுயிர் இதன்கண்ணதோ? என் கண்ணதோ? அறிகிலேனென்றாளென்க.

ஏ, அசை. 'வந்தது' என விரைவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலத் தாற் கூறினாள். (கஎச)

1661. வருந்தியீன்றாண்மறந்தொழிந்தாள்வளர்த்தாள்சொற்கேட்டில்கடிந்தாண், முருந்தின்காறுங்கூழையைமுனிவார்நின்னையென்முனிவார், பொருந்திற்றன்றாலிதுவென்னாய்பொன்றுமளித்திவ்வுயிரென்னாய், திருந்துசோலைக்கருங்குயிலேசிலம்பவிருந்துகூவுதியால்.

(இ - ள்.) நல்ல சோலையிற்குயிலே! நீ அருள்செய்து, மாலைவருகின்ற காலத்தே யாங்கூவுதல் பிரிந்த இவர்க்குப் பொருந்திற்றன்றென்றுங் கருதாயாய் இவருயிர்தான் போமென்றுங் கருதாயாய் முழங்கவிருந்து கூவாநின்றாய்; இத்தன்மையையுடைய நின்னை வருந்திப்பெற்றவள் அவ்வருத்தத்தையுமறந்து உறவைக்கைவிட்டாள்; எடுத்து வளர்த்தவளும் நின்சொல்லின் கடுமையால் இல்லினின்றும் கடிந்தாள்; நீதான் எப்பளவுஞ்செல்லும் மயிர்ப்பாடுமுடையை; ஆதலின், இனி நின்னைவெறுப்பார் நின்பிறப்பையோ, வளர்ப்பையோ, வடிவையோ வெறுப்பாரென்றாளென்க.

'கருங்குயிலே' என்றது சோலைக்கு மறுவேயென்ற தன்மைத்து; இது, செறலின்கட்டிணைமயக்கம். (கஎரு)

1662. பெருவெண்டிங்கண்மாலகப்பூமலேந்துபெட்பநகுகின்ற
தூருவுகொண்டகுரலின்றிவுயிர்மேலாம்பலுலாய்ந்திரு
மொருபெண்பாலேன்யாலுகவுலகமெல்லாம்பகையாகி
யெரிகொன்றீன்றவிலேப்பலிபோலிருத்தியாலென்னின்னுயிரே.

(இ - ள்.) அன்றில்கள் தம்குரலாலே வடிவைக் கொண்டன ; திங்கள் அகப்பூவோடே மலர்ந்து அதன்கேடுகண்டு மிகவும் நகாநின்றது ; ஆம்பலென்னும்பண் சுற்றிலேயுலாவி இவ்வுயிரின்கேடுகண்டு இதன்மேலே நடவாநின்றது ; இங்ஙனம் உலகிலுள்ள பொருளெல்லாம் பகையாதற்குப் பற்றுதே யானொரு பெண்பாலேனுயிருந்தேனென்றாட்கொண்டு யானிங்ஙனமாகவும், கொடியவுயிரே ! நீ நீமேய்ந்த வேறொரு வடிவாகவீன்ற இலேச்சாம்பல் போலே இராநின்றாய் ; இஃது நீயிருக்குமளவன்றால் ; நினக்கு நினைவு என்னென்றாளென்க.

அகப்பூ - இதயகமலம். உலகம், ஆகுபெயர். ஆகி-ஆக. பின்னும் இலே போறலின், 'ஈன்ற' என்றார். இது தொழிலுவமம். ஏகாரம், எதிர்மறை. ()

1663. வேமென்னெஞ்சமெய்வெதும்பும்விடுக்குமாவிவெய்துயிர்க்கும்
பூமென்குழலார்புறநோக்கிநகுவார்நகுவதாயினேன்
றூமமார்பன்றன்புனைந்ததண்ணென்மாலேபுணையாக
யாமக்கடலேநீந்துவேன்யாருமில்லாத்தமியேனே.

ஏகாரம், எதிர்மறை.

(இ-ள்.) காமத்தீயால் நெஞ்சுவேம் ; ஆகலின், மெய் வெதும்பாநின்றது ; உடம்பைக் கைவிடுகின்ற ஆவியும் போகாதேநின்று நெட்டுயிர்ப்புக் கொள்ளாநின்றது ; யானும் மகளிருடைய பொல்லாங்கைப்பார்த்து நகுவார் நகப்படும் பொல்லாங்கின் வடிவாயினேன் ; இங்ஙனமாகியதமியேனே மாலே புணையாக யாமமாகிய கடலேநீந்துவேன் ; நீந்துதலரிதென்றாளென்க.

அவன்கையாற் புனேதலின், அதுகொண்டு நீந்தலாமோவென நினேத்து அதனே மறுத்தாள். (கoஎ)

1664. செம்பொற்கடம்பன்செவ்வேலுங்காமன்சிலேயிற்றொடுத் தலர்ந்த, [1]வம்பும்வென்றவரிநெடுங்கணம்மாமதிவாண்முகத்தினுள், வம்புபூத்துமுருகுலாய்த்தேன்கொப்புளித்துநின்றதோர், கொம்பு வெந்தீயிடைப்பட்டதொத்தாள்விரைசெய்கோதையே.

(இ-ள்.) முருகன்வேலேயும் காமனம்பையும்வென்ற கண்ணினேயுடைய முகத்தினுளாகிய கோதை, பூத்தலால் மணந்தங்கித் தேனேக்கொப்புளித்து நின்றதொரு கொம்பு தீயிடைப்பட்டதொத்தாளென்க. (கoஅ)

வேறு.

1665. மணிநிறமாமைசாயல்வளேயொடுவண்டுமூசு
மணிநிறப்போர்வையாயவரும்பெறனுணும்விற்றுப்

---

(பி - ம்.)—[1] 'வம்புபூத்த'

பணிநலம்புதியதுண்டான்பன்மலர்மாலைகொண்டேன்
பிணிதிறட்புறஞ்சொலென்னும்பெருமிஞிறூர்ப்பவென்றாள்.

(இ - ள்.) நீலமணிபோலும் மாமையினையும், மென்மையையும், வளை யையும், மகளிர்க்குப் போர்வையாகிய நாணையுங்கொடுத்து எல்லாருந்தாழ் கின்ற என்னலத்தைப் புதுமையையுண்டானது வண்டுமூசமாலையை, நோ யைநிறமாகவுடைய புறஞ்சொலென்னும் மிஞிறூர்ப்பக் கொண்டேனென்றா ளென்க. (க0௬)

1666. காதலான்காதல்போலவகன்றுநீண்டலர்ந்தவாட்கட்
போதுலாங்கோதைமாதர்புனைந்தலர்தொடுத்தமாலை
யாதலாலலராகாதொழியுமேயமுங்கலென்று
மாதுலாமழலைச்செவ்வாய்மடக்கிளிமொழிந்ததன்றே.

(இ - ள்.) நின்கணவனது காதல்போலே அகன்று நீண்டு அலர்ந்த கண்ணையும் கோதையையுமுடைய மாதரே ! இஃது அலராநப்புனைந்து தொ டுத்தமாலையாதலின், அலரிடத்ததாகாதேபோமோ ; இனி வருந்தாதொழி யென்று கிளி ஆற்றுவித்ததென்க. (ககO)

வேறு.

1667. என்னையுள்ளம்பிணித்தென்னலங்கவர்ந்த[1]வீர்ந்தாரினான்
றன்னையானும்பிணிப்பேனெனத்தன்மணிச்செப்பினுண்
மன்னுமாலைகொடுத்தவனுக்குய்த்தியெனத்தொழுதுகொண்
டன்னமென்னவொதுங்கிச்சிலம்பரற்றச்சென்றணுகினாள்.

(இ - ள்.) என்மனத்தை இறுகப்பிணித்து என்னலத்தையுங்கொண்ட தாரினான்றன்னை யானும் அம்மனம் பிணிப்பேனென்று கருதி, மற்றைநாள் தன்செப்பின்மாலையை அநங்கவிலாசினியின் கையிலேகொடுத்து, கொண்டு போய் அவனுக்குக்கொடுவென, அவளும் தொழுது வாங்கிக்கொண்டு சென்று அவனையணுகினாளென்க. (கககு)

1668. அணுகிமுன்னின்றவநங்கவிலாசினியங்கைகூப்பிப்
பிணையனீட்டப்பெருந்தகையஃதேலான்முகநோக்கலுந்
துணையிறோகையென்னங்கைக்குத்தொங்கறொடுப்பாயுநீ
மணிசெய்மென்றோண்மருந்துநீயாருயிருநீயேலென்றாள்.

(இ - ள்.) அம்மமணுகி முன்னேநின்ற அநங்கவிலாசினி தொழுது மாலையைக்கொடுக்க, அதனை அவன்வாங்காதே அவனைப்பார்த்தவளவிலே, அவளும் ஒப்பில்லாத மயிலாகிய என்னங்கைக்குத் தொங்கல் தொடுப்பாயு நீயே ; தோண்மெலிவுக்கு மருந்தும் நீயே; உயிருநீயே ; ஆதலின், இதனை வாங்கிக்கொள்ளென்றாளென்க. (ககஉ)

வேறு.

1669. மன்னர்கோயிலுறைவார்பொறிசெறித்தமாண்பினரே
யென்னவஞ்சிறுயென்றவனைநக்காட்கஃதன்றுகோதா

(பி - ம்.)—[1] 'ஈர்மலர்த்'

யின்னகொள்கையேற்கேலாதென்னவிலங்கெயிற்றினு
ளன்னமன்னநடையினுடான் வருந்துமெனநேர்ந்தான்.

(இ - ள்.) அதுகேட்டவன், அரசர்கோயிலிற் றங்குவார் ஐம்பொறியையு மடக்குவாரே ; இது தகாதுகாணென்றுனாக, நீ அஞ்சினையென்று . அவனை இகழ்ந்தவளுக்கு, அவன் பின்னும், கோதாய் ! அதுவன்று; ஆசிரியனாய் நிற்கின்றதன்மையேனுக்கு இது பொருந்தாதுகாணென்றுனாக, அவளும், கனகமாலை இறந்துபடும், இதுவாய்காதொழியினென்றுகூற, அதற்கஞ்சி நேர்ந்தானென்க. (ககங)

1670. குலிகமார்ந்தகொழுந்தாமரையன்னவண்கைநீட்டி
யொலியலேற்றுணிஃதூழ்வினையாலுள்ளஞ்சுடுமாலென்ன
விலைகொள்பைம்பூணிளமுலையாள்போகிக்கனகமாலை
மெலியவெம்பிணைகின்றாளுய்யும்வகைதொடங்கினாள்.

(இ - ள்.) அங்ஙனநேர்ந்து தாமரையன்ன கையைநீட்டி மாலையைவாங்கினான்; வாங்கி உழுவலன்பாலே இதுதான் என்னுள்ளத்தைச் சுடாநின்றதென்றுனாக, அது கேட்டபின் அநங்கவிலாசினிபோய், கனகமாலை வருந்துகின்றவள் பிழைக்குமுபாயத்தைச் செய்யத்தொடங்கினாளென்க. (ககச)

1671. நீர்செய்காந்தமணிகூந்தளம்பாவைநீண்டழகிய
வேர்செய்சாந்திற்கழுநீர்விரைகமழும்பூக்கள்கோத்த
வார்செய்தண்டாமரைவளையமைவரையின்வெள்ளருவிநீர்
சீர்செய்கோமகனைச்சேர்த்தினாள்சீதஞ்செய்யாதொழிந்தனவே.

(இ - ள்.) சாந்தோடே சந்திரகாந்தக்கல்லையும், நீண்டு அழகிய கூந்தளம்பாவையையும், கழுநீரையும், ஒழிந்தபூக்களையும், கோத்த நெடிய தாமரை வளையத்தையும், அருவிநீரையும் கோமகனை அணிவித்தாள்; அவைகுளிர்ச்சிசெய்யாதே கொதித்தனவென்க.

கூந்தளம்பாவை - பூவிசேடம். (ககரு)

1672. பவ்வத்தங்கட்பிறந்துபனிபெயர்க்குந்தண்ணூற்றதாகி
யெவ்வமன்னர்படவுலகம்விற்குமருமணியினைச்
செவ்வனூலிற்சித்திரிக்கப்பட்டதனைச்சேர்த்திப்பின்னு
மவ்வனூறுங்குழலாட்குமற்றுமிவைகணாடினாள்.

ஊறு - பரிசம்.

(இ - ள்.) கடலிலேபிறந்து பனியைக்கெடுக்கும் குளிர்ந்த ஊற்றையுடையதாய் மன்னர் வருத்தமுறும்படி உலகைவிற்கும் முத்தை நூலிற்கோக்கப்பட்டதனைப் பின்னுமணிந்து குழலாட்கு வேறும் இப்பரிகாரங்களை நாடினாளென்க. (ககசு)

1673. களிசெய்கோசிகநீர்விழக்கடிமாலைமேற்றொடர்ந்துகீழ்
நளிசெய்நண்பூஞ்சலஞ்சயனமாக்கிநன்னீர்பிலிற்றும்வாய்க்
குளிர்கொள்சாந்தாற்றிபொன்னாலவட்டங்கொண்டேந்திவீசச்
களிகொள்[1]சந்தின்கொழுஞ்சாந்தமாகமுழுதுமெழுகினுள்.

(இ-ள்.) மேலேகட்டி நீரைத்தாங்கிநின்ற கஞ்சிதோய்த்த கோசிகப்பட்டின்நீர் மாலையாலே வந்துவிழும்படி மாலையைச் சூழக்கட்டிக் கீழேசெறிவு செய்த பூவையுடைய நீரிலே படுக்கையைஆக்கி நீரைப்பிலிற்றும்வாயையுடைய சாந்தாற்றி ஆலவட்டமென்கின்றவற்றை ஏந்திக்கொண்டு வீசாநிற்க, குளிர்கொண்ட சந்தனக்குழம்பைப் பூசினுளென்க. (௧௧௭)

1674. கொம்மைவெம்முலையிற்சாந்தங்குளிர்செயாதாவிவாட்ட
வம்மென்மாலைமுகங்கரியகீர்துளும்பநின்றுநீடி
வெம்மைமிக்கதுவீரன்றொடுத்தவிளங்குமாலை
பொம்மிமேலோதிக்குத்தானே துணையாம்[2]புணையாயிற்றே.

(இ-ள்.) இளையமுலையிற் சந்தனம் கொதித்து உயிரைக்கெடுக்க, சுற்றினமாலை கருக, கீழ்நின்றநீர் வெம்மையாற்கொதித்தெழ நீட்டித்துநின்று வெம்மைமிக்கது; அப்பொழுது வீரன்கட்டினமாலைதானே ஓதிக்குத் துணையாவதொரு தெப்பமாயிற்றென்க. (௧௧அ)

1675. வாசநிலங்கழுநீர்குவளைபடைசாற்றிவர்
தோசனைக்கணுடையுநெடுங்கட்கனகமாலை
தாசிதூதாகத்தாமம்புணையாகச்செல்லுநாளுட்
காசில்கல்விக்கடலைக்கரைகண்டார்காளைமாரே.

(இ-ள்.) நிலப்பூமுதலியன போர்கூறிவந்து ஒரோசனைநீளத்தே உடையும் நெடுங்கண்ணையுடைய கனகமாலை, தனக்கு அநங்கவிலாசினி தூதாக, மாலை தெப்பமாக நடக்கின்றநாளிலே, விசயன்முதலாயினர் கல்விக்கடலைக் கரைகண்டாரென்க. (௧௧௯)

வேறு.

1676. பொருசரஞ்சலாகைவெய்யபுகன்றனர்துரக்குமாறும்
வருகணைவிலக்குமாறும்வாளமர்நீந்துமாறுங்
கருவியுட்கரக்குமாறுங்கணைபுறங்காணுமாறும்
விரியமற்றவர்க்குக்காட்டவீற்றிருந்தவுருங்கற்றுர்.

(இ - ள்.) வெய்யசரத்தையும் இருப்புநாராசத்தையும் விரும்பி எய்யுமாறும், தம்மேல்வருமம்பை அம்பாலேவிலக்குமாறும், அமரிலே கொள்ளுநிலமறிந்துகொள்ளுமாறும், எய்தாற் கருவியாலேமறைத்துச் சேமஞ்செய்யுமாறும், சேர்ந்தாற் பகைவர்கணை புறமாக்கித் தம்கணைசெலுத்துமாறும் அவர்க்கு விரியக்காட்ட, அவரும் வருத்தமின்றிக் கற்றாரென்க.

---

(பி-ம்.)—1 'சாந்திற்கொழுஞ்சாந்தமாகமுலைமேலெழுதினுள்' 2 'புணையாயிற்றன்றே'

எனவே, "தொடையும் விலக்குஞ் செலவுஞ் சேமமுந், தவிர்த்தவினை செயலு மெனவை வினையாம்." இவற்றை வடநூலார்[1]பஞ்சகிருத்தியமென் பர்; இவை தலைமைபற்றி வில்லியேகூறினவேனும் படைக்கலங்கட்கெல் லாம்பொது. (கஉ0)

1677. வேலுடைத்தடக்கையார்கள்வேழமேற்சென்றபோழ்திற்
காலிடைக்கரக்குமாறுங்கையிடைத்திரியுமாறும்
வாலிடைமறியுமாறு[2]மருப்பிடைக்குளிக்குமாறு
நூலிடைக்கிடந்தவாறேநுனித்தவன்கொடுப்பக்கொண்டார்.

(இ - ள்.) தம்மேலே வேழஞ்சென்றபொழுது அதன்காலிடையிலே புகுந்து மறையும்படியையும், அது கையாலேவளைத்தபொழுது அதன்கைக்கு நடுவே உடம்பு பிறழும்படியையும், அது தாலவட்டத்தாலே விசினால் அது படாதபடி போய் அதன்காலிடையிற் புகுதும்படியையும், அது கோறற்கு இறங்கினாற் கொம்பிரண்டிற்கும் நடுவே ஆம்படியையும் கூரிதாகக்கற்றவன், அத்தொழிலை நூலிற்கிடந்தபடியே கற்பிக்க, அத்தடக்கையார்களும் கற்றா ரென்க.

இது, தனித்து யானையுடன் போர்செய்யுமாறுகூறிற்று. (கஉக)

1678. கொடிநெடுந்தேரின்போருங்குஞ்சரக்குழித்தபோருங்
கடுநடைப்புரவிப்போருங்கரப்பறக்கற்றுமுற்றி
யிடனறிந்திலங்கும்வைவாளிருஞ்சிலைகுந்தமூன்று
முடனறிந்தும்பரார்க்குமுரைப்பருந்தகையரானார்.

(இ - ள்.) தேராற் பொரக்கருதினபோரையும், குஞ்சரத்தாற் பொரக் கருதினபோரையும், புரவியாற் பொரக்கருதின போரையும் வெளியாகக்கற் றுத் தழும்பியிருந்து, இவ்வூர்திகளிலிருந்தால் ஒன்றற்கொன்று உதவுதலறி ந்தவினைசெய்யுமிடமறிந்து, செலுத்தும்பொழுது வாளும், இலங்கும்வில் லும், எறிகோலுமென்கின்ற மூன்றையும் சேர அறிந்து, மேலாயநிலத்திற் றேவர்க்கும் புகழ்தற்கரிய தகையராயினரென்க. (கஉஉ)

1679. தானையுளன்றிநின்றதனியிடமொற்றிமன்னர்
தானைமேற்சென்றபோழ்தும்வென்றியிற்றளர்தலின்றித்
தானையையுடைக்கும்வெம்போர்த்தருக்கினார்மைந்தரென்று
தானைசூழ்மன்னற்குய்த்தார்மன்னனுந்தருகவென்றான்.

(இ - ள்.) தாம்படையிலுளன்றித் தனியேநின்றவிடத்தை ஒற்றிப்பார்த் துப் பகைவர்படை மேற்சென்றகாலத்தும் வெற்றியிற்றளருந்தன்மையின்றி அப்படையைக்கெடுக்கும் போர்த்தொழிலிலே பிள்ளைகள் மிகுத்தாரென்று நடமித்தனுக்குச்சொன்னார்; அவனும் யாம் காணும்படி அவரைக் கொணர்க வென்றானென்க. (கஉங)

(பி - ம்.)—1 'பஞ்சாங்கம்' 2 'மருப்பிடையொளிக்குமாறும்'

1680. மழையொடுசூழ்ந்துகொண்டவான்றுகள்சிலைபினீக்கிக்
குழைமுகநெற்றிநக்கக்கோலவிற்பகழிவாங்கி
யிழைபகவிமைப்பினெய்திட்டெறிந்துமின்றிரிவவேபோல்
விழைவுறுகுமரர்புக்குச்சாரியைவியத்தரானார்.

சூழ்ந்துகொண்ட மழையையும் தூளியையும் வில்லாலேநீக்குதல் - சரகூடங்கட்டி அதனால் விலக்கிக்காட்டுதல். அத்திரங்கற்றதன்மையையும், பயன்கொண்டதன்மையையும் இத்தொடர்நிலைச்செய்யுள் கூறுமையின், நெருப்புநீருமாகிய அத்திரங்களைவிட்டானென்றல் பொருந்ாது; விசயன் காண்டவவனமெரித்ததும் சரகூடங்கட்டியென்றுணர்க.

(இ - ள்.) குமரர், சரகூடங்கட்டி, பின்பு குழையைநக்கும்படி அவ்வில்லைவலித்துப் பகழியாலே நூல்பிளக்கவெய்து வாளாலே நூல்பிளக்க வெட்டி வேலாலே நூல்பிளக்கவெறிந்து பின்னும் மின் றிரியுமாறுபோலச் சாரியை திரியுந்தொழிலிலேபுக்கு வியக்கத்தக்காராயினாரென்க.

மழைகூறவே புயமுட்டியும், துகள்கூறவே சிரோமுட்டியும், குழை நெற்றிநக்க வாங்கியெனவே கந்தரமுட்டியுங்கூறினார்; மேனோக்கியும் கீழ்நோக்கியும் நேருமேயெய்தலாம். (௧௨௪)

1681. விசயனேவிசயன்விற்போர்க்கதம்பனேமுருகன்வேற்போர்த்
திசையெலாம்வணக்கும்வாட்போர்க்கந்தணன்செம்பொனும
னசைவிலான்யானைத்தேர்ப்போர்க்கசலனேயசலகீர்த்தி
வசையிலான்புரவிச்சேனனென்றியாவரும்புகழப்பட்டார்.

(இ - ள்.) விற்போருக்கு விசயன் அருச்சுனனே, வேற்போருக்குக் கதம்பன் முருகனே, வாட்போருக்குத் திசையெல்லாம்வணக்கும் கனகன் பரசுராமனே, யானைப்போருக்கும் தேர்ப்போருக்கும் அசலகீர்த்தி அசைவிலனாகிய அசலனென்னும் வீரனே, புரவிக்குச் சேனன் வசையில்லாதவனே யென்று இவ்வைவரும் எல்லாராலும் புகழப்பட்டாரென்க.

வசையிலானென்றது நகுலனை. (௧௨௫)

1682. காவலன்மக்களாக்கங்கண்டுகண்குளிர்ந்துநோக்கி
யேவலானரசனென்றேவிருபிறப்பாளரல்லார்க்
காவதன்றின்னமாட்சியவனையானிகளம்பெய்து
காவல்செய்திடுவல்வல்லேகாளையைக்கொணர்மினென்றான்.

(இ - ள்.) அரசன், மக்கள்கல்வியைக்கண்டு மகிழ்ந்துநோக்கி, அந்த ஏவலான் ஒன்று அரசனாதல், ஒன்று அந்தணனாதலாம்; இரண்டுமொழிந்த சாதியிலுள்ளார்க்கு இக்கல்வியுண்டாகாது; ஆதலால், அவனை யான் நீங்காததொரு தளையையிட்டுச் சிறைசெய்வேன்; இப்பொழுதே அவனைக் கொணர்மி னென்றானென்க.

நிகளம் - மகட்கொடுத்தல். (௧௨௬)

1683. கல்வியுங்கொடிதுபோலுங்காவலன்காளை தன்னை
யொல்லலன்சிறைசெய்கின்றானென்றவன்கருதிற்றோரார்
பல்சனம்பரிந்துநிற்பப்பார்த்திபகுமரன்சேர்ந்தான்
வில்வலாற்கொண்டுவேந்தன் வேறிருந்திதனைச்சொன்னான்.

(இ-ள்.) அரசன் இக்கல்வியுடைய காளைதன்னைப் பொறானாய்ச் சிறை செய்யாநின்றானாதலாற் கல்வியும் கொடிதுபோலேயிருந்ததென்றுகருதி, அவனினைத்தறியாராய்ப் பலரும் வருந்திநிற்கின்றவளவிலே, சீவகன் சென்றான்; அங்ஙனஞ்சென்றவனை அவ்வரசன் வேறேகொண்டிருந்து இவ்வார்த்தையைக் கூறினானென்க. (கஉஎ)

1684. புண்முழுதிறைஞ்சுங்கோட்டுப்பொருகளிறனையதோன்றன்
மண்முழுதன்றிவானும்வந்துகைகூடத்தந்தாய்
கண்முழுதுடம்பிற்பெற்றேன்காளைகைம்மாறுகாணேன்
பண்முழுதுடற்றுந்தீஞ்சொற்பாவைநின்பாலளென்றான்.

பறவைகளெல்லாம்படியும் கோட்டையுடைய களிறு. இவர்க்குநீசொற்றங்கொடுத்தலின், மண்முழுதும்வந்து கைகூடுதலன்றி மறுமையில் வானும் வந்து கைகூடும்படி ஞானநெறியையுந்தந்தாய்; நல்வினைசெய்தாருடம்பிற் கண்முழுதும் யான் பெற்றேனென்றது, இவர் போர்த்தொழில் காணப் பெறுதலின் ஊனக்கண்ணும், இவரை நன்னெறியைச் சேர்வித்தலின் ஞானக்கண்ணும் பெற்றேனென்றவாறு.

(இ-ள்.) தோன்றல்! தந்தாய்; யானும்பெற்றேன்; ஆதலிற் காளாய்! கைம்மாறுகாணேன்; என்பாவை நின்பாலளாகின்ற இவ்வளவே கைம்மாறென்றானென்க.

இனி வியந்துகூறுகின்றவன் மண்ணும் விண்ணும் கைகூடத்தந்தாய்; யானும் உடம்பெல்லாம் கண்பெற்றேனென்றுமாம்; இந்திரனானேனென்றுமாம். (கஉஅ)

1685. முடிகெழுமன்னன்சொல்லமொய்கொள்வேற்குருசிறேற்றான்
வடிவமைமனனென்றாகவாக்கொன்றுமறுத்தலோடுந்
தடிசுவைத்தொளிறும்வேலான்றன்கையான்முன்கைபற்றி
யிடிமுரசனையசொல்லாலிற்றெனவிளம்புகின்றான்.

(இ-ள்.) அங்ஙனமரசன்கூற, குருசில், தன்கருத்தைத் தெளிவியானாய் அவள்வடிவு பொறித்தக்கிடக்கின்றமனம் வேட்கைசெல்லாநிற்க வார்த்தை வேட்கையின்றாக மறுத்தவளவிலே, அவ்வரசன் தன்கையாலே அவன் கையைப்பிடித்து இத்தன்மைத்தென்று ஒருமொழிகூறுகின்றானென்க.

வடியமை பாடமாயின், ஆராய்ச்சியமைந்தவென்க. (கஉகூ)

1686. பூவியல்கோயில்கொண்டபொன்னனாளனையநங்கை
காவியங்கண்ணிவந்துபிறத்தலுங்கணிகளீண்டி

மூவியமிரிதலின் றிச்சாதகமுறைமையிற்செய்தா
ரேவியல்சிலையினுய்க்கேயுரியளென்றுரைப்பநேர்ந்தான்.

(இ - ள்.) அவ்வரசன் திருவையொத்த நங்கையாகிய கன்னி பிறந்த வளவிலே, கனிகளின்படி உதயாருடக்கவிப்புக்களில் தப்பின்றாகச் சாதகத்தை நினக்கேயுரியமுறைமையாற் செய்தாராதலின், நினக்கே இவளுரியளென்றுகூற, அவனும் நேர்ந்தானென்க.

கலைகளும் வடிவுமுதலியனவும் உடையவனென்றுகொள்ளுதலின், இவனேயாயிற்று. (கஙo)

1687. வாருலாமுலையினுட்கும்வரிசிலைத்தடக்கையாற்குஞ்
சீருலாங்கோலஞ்செய்தார்செப்பினர்வதுவைநன்னாட்
பாரெலாமறியநின்றுபடாமுரசார்ப்பத்தீவேட்
டேருலாங்கோதையின்பத்திளநலம்பருகுகின்றான்.

(இ-ள்.) முலையினுட்கும் தடக்கையாற்கும் மணஞ்செய்யுநாட் செப்பினர்; செப்பி மணக்கோலஞ்செய்தார்; செய்தபின்பு ஒலியவியா முரசார்ப்பத் தீயிலே ஆகுதிபண்ணி அவன் அக்கோதைநலத்தைப் பருகாநின்றானென்க. (கஙக)

1688. மோட்டிளங்குரும்பையன்னமுலைக்கடாக்களிறுமுத்தஞ்
சூட்டியவோடைபொங்கநாணெனுந்தோட்டிமாற்றி
யாட்டியசாந்தமென்னுமுகபடாமழித்துவெம்போ
ரோட்டறவோட்டிப்பைந்தாருழக்கியிட்டுவந்தவன்றே.

பெரிய இளங்குரும்பை, வடிவிற்குவமை.

(இ - ள்.) அவன் பருகுகின்றபொழுது அவள்முலையாகியயானைகள் சூட்டிய முத்தமாலையாகிய பட்டமசையாநிற்க நாணென்னுந் தோட்டியைக் கெடுத்துச் சாந்தமென்னும் முகபடாத்தையழித்து விரும்பினமுயக்கத்தில் உறுதவிடமில்லையென்னும்படி மார்பிடமெங்குமுறவித்து மாலையையுழக்கிப் போகட்டு மகிழ்ந்தனவென்க.

கொடியபோரை இனிக்கேடில்லையென்னும்படி கெடுத்துத் தூசியையுழக்கியென்றும் கொள்க. (கஙஉ)

1689. ஒண்மணிக்குழைவில்வீசவொளிர்ந்துபொன்னோலைமின்ன
வண்ணமேகலைகளார்ப்பவான்சிலம்பொலிப்பமுத்துங்
கண்ணியும்பசும்பொனாணுங்கதிர்முலைபுடைப்பக்காம
ரண்ணலங்குமரன்றன்னொடாயிழையாடினாளே.

குமரனொடு ஆயிழையாடினாளெனவே, * ஒருவினையொடுச்சொல்லுயர் பின்வழித்தாய் இருவருமாடினரென்பதுபடநின்றது. எனவே அவன்வண்ண

---

* "ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே" (தொல். வேற்றுமையயங்கு. கூ. அ); இச்செய்யுளுக்கு வினைமுடிவாகிய உரை, பிரதிகளிற் காணப்பட்டிலது.

மேகலையார்ப்பச் சிலம்பொலிப்ப ஆடினுனென்றும், அவள் வீச மின்னப் புடைப்ப ஆடினுளென்றுங்கொள்க; இவன்காட்டக் கண்டாளெனவேண் டுதலின். (கஅ௩)

1690. மூசுதேன்வாரியல்குற்பட்டபின்மூலைகளென்னு
மாசறுகந்தின்மென்ருேண்மணித்தொடர்க்கொளுத்திவாட்க
ணூசறுவயிரத்தோட்டிநுதலணிந்தமுதச்செவ்வாய்
காசறுகவளமாகக்களிறுகோட்பட்டதன்றே.

போகாமல்வளைத்தலிற் கண் தோட்டியாயிற்று. அதற்கேற்ப நுத லணிந்தென்ருர்; கூடசிமிராமைக்கு வயிரமென்ருர்.

(இ-ள்.) சீவகனாகியகளிறு, செவ்வாய் கவளமாக அல்குலாகியகூடத்தே அகப்பட்டபின்பு, தன்மூலைகளென்னுங் கம்பத்திலே தோளாகியசங்கிலியா லேபூட்டிக் கண்ணாகிய தோட்டியை நுதலிலேயணிந்து இங்ஙனம் தப்பாமற் பிணிக்கப்பட்டதென்க. (கஅ௪)

1691. ஒப்பிணைதனக்கிலாதானுறுவரையகலமூழ்கிச்
செப்பிணையனையசெங்கேழ்வனமுலைபொருதுசேப்பக்
கற்பகமரத்தைப்புல்லிக்கைவிடாதொழிந்துகாமத்
துப்புரவுமிழுங்காமவல்லியின்ருேற்றமொத்தாள்.

(இ - ள்.) தனக்கு இணைக்குமொப்பிலாதான் அகலத்தே தன்முலைகள் சிவக்கும்படி பொருதழுழ்கப்பட்டுத் தான் வல்லியின்ருேற்றத்தை ஒத்தா ளென்க.

கற்பகத்தைக் கைவிடாதேபுல்லித் தங்கி அதற்குத் துப்புரவைக்கொடு ப்பதொரு வல்லி, இல்பொருளுவமை. (கஅரு)

1692. காய்வுறுவேட்கைதன்னுற்கங்குலும்பகலும்விள்ளான்
வேய்வெறுத்தமைந்ததோளாள்விழுத்திரையமுதமென்று
சேய்நலங்கடந்தசெல்வன்றிருநலந்தெளித்திட்டாற்ற
வாய்விடாள்பருகியிட்டாண்மடக்கிள்ளை மருட்டுஞ்சொல்லாள்.

வேய்தான் ஒவ்வாமையான், வெறுத்து [1] மாறினதோள்.

(இ - ள்.) செல்வன் எரிகின்றகாமத்தாலே விள்ளானுய்த் தோளாளை அமுதமென்றுகருதி அவள் ஊடலாற் கலங்காதபடி நலத்தைத்தேற்றி ஆற்றுவித்தலாலே அவள் நீங்காமற் பருகினுனென்க. (கஅசு)

1693. திரையிடைக்கொண்டவின்னீரமுதுயிர்பெற்றதென்னு
முரையுடைக்கோதைமாதரொளிநலநுகர்ந்துநாளும்
[1]வரையுடைமார்பனங்கண்வைகினனென்பமாதோ
கரைகடலனையதானைக்காவலன்காதலானே.

உயிர் - சீவகன்.

(பி - ம்.)—1 'மாற்றின' 2 'வரையகன்மார்பனங்கு'

(இ-ள்.) வரை தோற்கின்றமார்பன், அமிர்து தனக்கோருயிரைப்பெற்ற தென்று உலகங்கூறுமுறையை இப்பொழுதுடைய மாதரது நலத்தை நாளு நுகர்ந்து அரசனதுகாதலாலே அவ்விடத்தே சிலநாள் தங்கினனென்க. ()

1694. வாளினன் மிடைந்தகண்ணாள் வருமுலைத்தடத்துள் வைகித்
தோளினன் மிடைந்துபுல்லித்தொண்டைவாயமுதமாந்திக்
காளைசெல்கின்றநாளுட்கட்டியங்காரன்மூதூர்
மீளிவேற்குருசிற்குற்றார்க்குற்றதுவிளம்பலுற்றேன்.

மிடைந்து - மிடைய.

(இ-ள்.) காளை முற்கூறியவாறே வாளாலேபோர்செய்யப்பட்ட கண்ணாளது முலைத்தடத்தேவைகிப் புல்லி மாந்தி நடக்கின்றநாளிலே, இராசமாபுரத்திலிருக்கின்ற அக்காளைக்குற்றார்க்கு உற்றகாரியத்தைக் கூறலுற்றேனென்றாரென்க. (௧௬௮)

1695. வெண்மதியிழந்தமீன்போல்விடலைக்குத்தம்பிமாழாந்
தொண்மதிச்சூழ்ச்சிமிக்கானுள்ளுழியுணர்தல்[1]செல்லான்
புண்மதித்துடைந்தபோதுபொழிந்துமட்டொழுகுநன்னாட்
டுண்மதிவருந்தநாடியொளிநகரெய்தினனே.

(இ-ள்.) சீவகற்கிளையான் மதியையிழந்த உரோகிணிபோலேமயங்கி மதியாற்சூழ்ச்சிமிக்கானிருப்பிடமறியானாய் நாட்டின்கண்ணே அறிவுவருந்தத்தேடிப் பின்பு குணமாலையகத்தைச் சேர்ந்தானென்க. (௧௬௯)

1696. வெள்ளிவெண்மலைக்குவேந்தனொருமகள்வேற்கட்பாவை
யொள்ளிழையவளைக்கேட்பானுறுவலிசெல்லுமாங்கண்
வள்ளிதழ்க்கோதைதானேயிட்டதோர்வண்ணந்தன்னைக்
கொள்ளத்தான்முரலலுற்றுக்கோலமைவீணைகொண்டாள்.

(இ-ள்.) ஆண்டுக்காண்டே, கலுழவேகன்மகள், பாவை, ஒள்ளிழையவளைக்கேட்டற்கு அவன்செல்கின்ற அளவிலே, அக்கோதை தானேபுணர்த்ததொரு புணர்ப்புவிசேடத்தைத் தானேமனங்கொள்ளப்பாடலுற்று வீணையைக் கைக்கொண்டாளென்க. (௧௭௦)

1697. ஆடகச்செம்பொனாணியானெய்வார்ந்தனையதிண்கோன்
மாடகநொண்டுகொண்டுமாத்திரைநிறைபவீக்கிச்
சூடகமணிந்தமுன்கைத்தொகுவிரல்[2]சேப்பவெற்றித்
தோடலர்கோதைகீதந்துணிவினிற்பாடுகின்றாள்.

மாடகம் - பாலிகைவடிவான விசிக்குங்கருவி.

(இ-ள்.) கோதை பொன்னாணியிற்கட்டின நெய்யொழுகினாற்போன்ற நரம்பினை மாடகத்தாலேமுறுக்கிக்கொண்டு நிறைபவீக்கிக் குவிந்தவிரல் சிவக்கும்படி தெறித்துப்பார்த்துக் கீதத்தைத் தெளிவோடேபாடாநின்றாளென்க.

---

(பி - ம்.)—1 'தேற்றான்' 2 'சிவப்பவொற்றி'

வேறு.

1698.(க) இறுமருங்குல்போதணியினென்றிணைத்துகையி
னறுமலர்கள்சிந்துவார்நண்ணார்துறந்தார்
நண்ணார்துறப்பநனிவளையுந்தோடுறப்பக்
கண்ணேவாழுத்துறைப்பத்தோழிகழிவேனே.

இக்கவிமுதல் நான்கும் ஒருதொடர்.

(க) தோழி! அவர்துறப்ப, வளையும் துறப்ப, கண் மாறாதேயுழ, இக் கனம் கழிவேனோ? கழியாததொருநாளும் வருமோவென்றாளென்க. ஒகாரம், வினா. ஒழிந்தவற்றிற்கும் இவ்வாறுகூறுக.

1699.(உ) பூமாலைசூடிற்பொறையாற்றாநுண்மருங்கு
லேமாராதென்றினைவாரெண்ணார்துறந்தா
ரெண்ணார்துறப்பவினைவளையுந்தோடுறப்ப
மண்ணார்வேற்கண்டுயிலாதோழிமருள்வேனே.

(உ) முலைப்பாரத்தைச் சுமத்தலாற்றாதமருங்குல் மாலைசூடின் முறியும். மண்ணுதல் - மஞ்சனமாடுதல்; கடைதலுமாம். துயிலாவாமென்க.

1700.(ங) வண்டுதவம்மருங்குனேமென்றுபூமாலை
கொண்டோச்சுங்காதலார்கூடார்துறந்தார்
கூடாரவர்துறப்பக்கோல்வளையுந்தோடுறப்பத்
தோடார்பூங்கண்டுயிலாதோழிதுயர்வேனே.

(ங) வண்டுத - வண்டு இயல்பான மணத்தையூத. ஒப்பனைக்குப் பூவும் மாலையும் வந்த அளவிலே, பூவை அவள்கையினின்றுஞ்சிந்தி, மாலையை அவள் சூடாதபடி தன்கைக்கொண்டு, இஃதெடுத்திலேனாயின் மருங்குன்முறியு மென்றுகூறி, படிந்தவண்டை அதனாலோட்டினாரென்றுணர்க.

பா முற்கூறிற்றேயாம்.

வேறு.

1701.(ச) ஊன்றகர்த்தனையபோன்றுமூடெரிமுளைப்பபோன்றுந்
தோன்றுபூவிலவத்தங்கட்டொகையணிலனையபைங்காய்
கான்றமென்பஞ்சியார்ந்தமெல்லணையாழ்கைநீக்கித்
தேன்றயங்கிணர்பெய்கோதைசிந்தையினீட்டினாளே.

(ச) தகர்க்கப்பட்ட ஊன்போன்றும், எரி பலவாய்முளைப்பனபோன்றுந் தோன்றும் பூவையுடைய இலவத்திடத்து அணிலனைய காய்கான்ற பஞ் சென்க.

(இ-ள்.) அவ்வனம்பாடுகின்றவள், கழிவேனோ? மருள்வேனோ? துயர் வேனோ? என்று பாடி யாழைவைத்து அணையிலே சாய்ந்து வருத்தத்திலே நீட்டித்தாளென்க. (கசஉ - ரு)

வேறு.

1702. நுண்ணியவரியொடுதிரண்டுநோக்குநர்
கண்மனங்கவற்றியகாமர்தொண்டைவா
யண்ணலைநினைந்துவெய்துயிர்ப்பவாய்நலம்
வண்ணத்தின்மழுங்கிவாட்கண்ணிவாடினாள்.

நுண்ணியவரியோடேதிரண்டு விருப்பமருவினவாய்.

(இ-ள்.) வாட்கண்ணி நோக்குநர் கண்மனங்கவற்றிய அண்ணலை அங்ஙனநினைந்து வெய்துயிர்த்தலாலே வாயினது ஆய்நலம் பழையவண்ணத்தினின்றுநீங்கப்பட்டு மேனியும் வாடினாளென்க. (கசசு)

1703. மின்றவழ்மணிவரைமாலைமார்பனைப்
பொன்றவழிளமுலைபொருதுபுல்லுநா
ளென்றுகொலெனநினைந்திருந்தசெவ்வியுட்
சென்றனன்சீவகற்கிளையசெல்வனே.

பொருது - பொர.

(இ-ள்.) அங்ஙனம்வாடினவள் வரைபோலுமார்பனை இப்பசலைபரந்தமுலைகள் புல்லுநாள் என்றுதானென்று சென்றநாள் ஒழிந்தநாளைத் தன் ஞானத்தால் நினைந்திருந்தகாலத்திலே நந்தட்டன் சென்றானென்க. (கசஎ)

வேறு.

1704. ஐவிலினகலநின்றாங்கடிதொழுதிறைஞ்சினாற்கு
மைவிலைபெற்றகண்ணாண்மைந்தனைமருண்டுநோக்கிக்
கைவிலுங்கணையுமில்லாக்காமன்போந்திருக்கவென்ன
மொய்வெல்லுங்குருதிவேலான்மூவிற்கணிறைஞ்சிநின்றான்.

(இ-ள்.) ஐந்துவிற்கிடைநீளத்தேநின்று அவ்விடத்தேவணங்கிக் கவிழ்ந்துநின்றவனுக்கு மை விலைபெறுதற்குக் காரணமானகண்ணாள் அவனை மருண்டுபார்த்து, வேலான் ! இங்ஙனேபோந்திருக்கவென்றுகூற, அக்காமனும் பின்னை மூன்றுவிற்கிடை நீளத்தேவந்து வணங்கிநின்றானென்க.

மொய் - பகை. இறைஞ்சினாற்குக்கூறவென்க. அவன்கேட்டதற்கு மருண்டாள். வேலான்போந்திருக்கவென்று அவள்கூறக் காமன் இறைஞ்சிநின்றானென்று தேவர் கூற்றாக்குக. இனிப் பிள்ளையை உவந்துகூறுமாறே கூறினாளென்று அவள்கூறலுமாம். (கசஅ)

1705. திங்கள்வாண்முகமுநோக்கான்றிருமுலைத்தடமுநோக்கா
னங்கதிர்க்கலாபமின்னுமணியல்குற்பரப்புநோக்கான்
செங்கயற்கண்ணினாடன்சீறடிச்சிலம்புநோக்கி
யெங்குளாரடிகளென்னாவின்னணமியம்பினானே.

(இ-ள்.) கயற்கண்ணினாளுடைய,முன்பு திங்களையொக்குமுகத்தில்இப்பொழுதுகெழ்கின்ற வாட்டத்தையுநோக்கானாய், முன்புநன்றாகியமுலை இ

பொழுது பசந்தபசப்பையுநோக்கானாய், முன்பு கலாபமின்றுமல்குலில் ஆடைமாசுண்டதன்மையையுநோக்கானாய்த் தானிறைஞ்சிசிற்றலின் அடியிற்சிலம்பொன்றையுமேநோக்கி, எங்குளாரடிகளொன்று இப்படி ஒருவார்த்தை கூறினனென்க.

உம்மைகள் வருத்தத்தின்சிறப்புணர்த்தின. அவள்வாடியிருந்த வருத்தமிகுதியைத் தானுணராதே அவட்குப் பொருந்தாததொருமொழி மேற்கூறுகின்றானென்பார், இன்னணமியம்பினனென்றார். (கசக)

1706. பொறிகுலாய்க்கிடந்தமார்பிற்புண்ணியன்பொன்றினனேல்
வெறிகுலாய்க்கிடந்தமாலைவெள்வளைமுத்தநீக்கி
நெறியினாேற்றலொன்றேநீளெரிபுகுதலொன்றே
வறியலென்கொழுநன்மாய்ந்தாலணிசுமந்திருப்பதென்றான்.

பொறி - மூன்றுவரி.

(இ - ள்.) புண்ணியன் பொன்றிவிட்டானாயின், நீ நோற்றலொருகாரியம் ; அஃதன்றி எரியிலேபுகுதலொருகாரியம் ; இவ்விரண்டுமன்றிக் கணவனிறந்தால் அணிசுமந்திருப்பது யான்கேட்டறியேனென்றானென்க. (கரு௦)

1707. காய்தழல்[1]கவரப்பட்டகற்பகமரத்திற்கன்றி
யாய்கழற்குருசில்வாடியற்புத்தீயழலுணிற்ப
வாய்மொழிந்துரைக்கலுற்றாள்வளைகுழற்கற்றைவண்டார்த்
தோய்பிழிதுளிக்குங்கண்ணிச்சுரும்புசூழ்கொம்பனாளே.

(இ - ள்.) அங்ஙனங்கூறிக் குருசில் தீமேய்ந்தகற்பகம்போலே அன்பாகிய தீயின்வெம்மையிலே வாடிக் கன்றிநின்றானாக, அதனைக்கண்டு பண்ணியகுழற்பற்றத்தையும், வளவியதாரினையும், செறிந்த மதுவைத்துளிக்குங் கண்ணியினையுமுடையதொரு கொம்பனாள், முற்பட அவன் மறைந்து வேற்றுருக்கொண்டிருக்கின்றபடியைக் கூறிவிட்டுப் பின் செய்திகூறதலுற்றாளென்க. (கருக)

1708. மதுமுகத்தலர்ந்தகோதைமாற்றமைந்தற்குரைப்பாள்
கொதிமுகக்குருதிவைவேற்குருசிலோநம்மையுள்ளான்
விதிமுகமணங்களெய்திவீற்றிருந்தின்பமுய்ப்ப
மதிமுகமறியுநாமேவாடுவதென்னையென்றாள்.

(இ - ள்.) கோதை நந்தட்டனுக்கு வார்த்தைகூறுகின்றவள், குருசிலோ நம்மை நினையானாய் ஊழின்முகத்தாலே உளவாய மணங்களைச்செய்து இன்பத்தைநிகழ்த்த, மதிமுகமென்னும் விஞ்சையையறிந்திருக்கின்ற நாமே இதற்குப்புலப்பதன்றி அவர்க்கு ஏதமுண்டாமென்றுவாடுவது என்னென்றாளென்க.

நாமெனத் தன்னையுயர்த்துக்கூறினாள். இதனால், அவன்செய்திகூறினாள். (கருஉ)

(பி - ம்.)—1 'கதுவப்பட்ட'

1709. வேண்டியதெமக்குநேரின்வில்வலாய்நுமையனாரைக்
காண்டியென்றுரைப்பக்காளையெழுமையுமடிமைநேர
மாண்டதோர்விஞ்சையோதிமதிமுகந்தைவந்திட்டா
னீண்டதுபெரிதுமன்றிநினைத்துழிவிளக்கிற்றன்றே.

(இ-ள்.) வில்வல்லாய்! யாம்வேண்டிய அடிமைத்தொழிலை நீயெமக்கு நேரின் நும்முடையதமையனாரைக் காண்பையென்று தத்தை அசதியாடிக் கூற, அவனும் இம்மையேயன்றியெழுமையும் அடிமையாகக்கடவேனென்று நேர்ந்தானாக, அவள் ஒருவிஞ்சையையோதித் தன்முகத்தைத் தடவினாள்; அவ்விஞ்சை அவனிருந்தவிடத்தை இவனுக்கு விளக்கிற்றென்க.

நீண்டதென்றது இவனுக்கு மிகவும் அரியகாட்சியை. அரிதன்றாக விளக்கிற்றென்றவாறு. பெருமை - அருமை. இனித் தூரியதூர் தூரிதன்றாகவென்றலுமாம். (௧௬௩)

1710. பொற்புடையமளியங்கட்பூவணைப்பள்ளிமேலாற்
கற்பகமாலைவேய்ந்துகருங்குழற்கைசெய்வானை
முற்படக்கண்டுநோக்கிமுறுவல்கொண்முகத்தனாகி
[1]விற்படைமிர்ந்ததோளான்றொழுதுமெய்குளிர்ந்துநின்றான்.

அழகிய கள்ளையுடைய பூவணைப்பள்ளியாகிய பொற்புடையமளியென விசேடித்துநின்ற இருபெயரொட்டு. கற்பகம்: அரசர் தமதாணையால் இவ் வுலகிற் கொணர்ந்தகற்பகம் தேவரதுசாபத்தால் தன்னிலையன்றிப் பூவளவே யுண்டாயிற்றென்க. மந்தாரமும் அவ்வாறும்; கவிரமும் அவ்வாறும். இனி உத்தரகுருவிலுள்ள கற்பகம் ஈண்டுக்கொணர்ந்தாரென்றுமாம். கனக மாலைக்குக் கற்பகமாலையென்று ஒருபெயருமாம்.

(இ-ள்.) அமளிமேலேயிருந்து வேய்ந்து கைசெய்வானை நந்தட்டன் எதிர்முகமாகக்கண்டு மகிழ்ந்தமுகத்தனாய்த் தொழுது குளிர்ந்துநின்றா னென்க.

நோக்கியென்றது, தத்தை அவன்வேற்றுருக்கொண்டிருப்பானென்று கூறியவதனை மனத்தால்நோக்கியென்றவாறு. (௧௬௪)

வேறு.

1711. செய்தவிஞ்சையைத்தேமொழிமாற்றலு
மையனெஞ்சொடுவெண்டிமிர்தாரினான்
பொய்யதன்மையிற்பூங்கழலானடிக்
கெய்துகேனருளாயென்றிறைஞ்சினான்.

அடிக்கு, உருபுமயக்கம்.

(இ-ள்.) தேமொழி தான்செய்தவிஞ்சையை மாற்றின அளவிலே, தாரினான், 'வீற்றிருந்தின்பமுய்ப்ப' (சீவக. ௧௭௦அ) என்றது பொய்யன்மையாலே, யான் சீவகனடியைச்சார்வேன்; அதற்கருளென்று மையல்நெஞ்சினோடு இறைஞ்சினானென்க. (௧௬௫)

---

(பி-ம்.)—[1] 'மற்படைத்திரண்ட'

1712. மதுக்கைமாலையும்வண்டிமிர்சாந்தமும்
புதுக்கச்சார்ந்தபொன்வாளுஞ்சுரிகையுங்
கதுப்பினனமுங்காமர்கலங்களும்
பதிக்கட்டம்மெனப்பாவையுமேவினள்.

கையையுடைய மதமாலை. மயிருக்கு இனிய புழுகு.

(இ - ள்.) பாவையும் மாலைமுதலியவற்றை யானிருக்கின் றவிடத்தேதா ருங்கோளென்று ஏவல்செய்வார்க்குக் கூறி அவர் கொண்டுவந்தவற்றை நீ அணியென்று இவனை ஏவினளென்க. (கரு௬)

1713. மணியின்மேற்புறம்போர்த்தன்னமாக்கதிர்
துணியவீசுந்துளங்கொளிமேனியன்
பணியிற்பல்கலந்தாங்குபுசென்றபி
ணணிசெய்கோதையங்காமினியோதினள்.

(இ-ள்.) பளிக்குமணியின்மேலே இளையகதிரைப் போர்த்தன்னவாகத் தத்தையதுபணியாலே தன் பழையவடிவிற்குப்புறத்தே இருடுணியவீசும்ஒளி மேனியையுடையனுக் கலங்களையும் ஒழிந்தவற்றையுந் தாங்கிச் சென்ற பின்பு, அவள் அழகிய ஆகாசகாமினியை ஓதினளென்க.

பல்கலமெனவே படைக்கலங்களுமடங்கின. பணியினென்றது, இப்பொழுது சீவகன் கொண்டுநிற்கிற நிறமும்வடிவும் அவனைக்காணுமளவும் இவனுக்குநிற்கவென்று நிருமித்ததனை. இங்ஙனநிருமித்தது, சுதஞ்சணன வடிவுடனே கொண்டுபோய் அரசன் கோயிலில் ஆடவர்குறுகா அருங்கடிவரைப்பினுள்ளோ (நெடுநல். கOஎ) வைத்தாற் சீவகனறிவதற்கு முன்னே நீங்குபிறக்குமென்று கருதியும், புறம்பேவிட்டாற் சீவகனென்னும்பெயர் வழங்காமல் அப்பொருடருவதொரு பெயர் ஆண்டு வழங்குகின்றமையின் இவற்குஅறிந்து கோயிலுட்சேறலரிதென்று கருதியுமென்றுணர்க. அஃது, "அந்நாட்டவ்வூரப் பெயரல்லாப் பெயர்சொன்னான்" (சீவக. கஎ௩எ) என்பதனானுணர்க. இதனானே சுதஞ்சணனைநீங்கிய பின்பு தன்னைமறைத்தற்கு வடிவும்பெயரும் வேறாகவே நிகழ்த்துகின்றானென்பதூஉம் பெற்றாம். வடிவுமறையாக்கால் இவை மறைத்ததனாற்பயனின்றாம். இவ்விலம்பகங்களிற்சீவகனென்றபெயர் தேவர்கூற்று. பொருளுரைக்குமிடத்து அப்பெயரேகூறிப் பொருளுரைக்க வேண்டுதலின் வந்தது. அந்நிலத்தார் அப்பெயரறியாரென்றுணர்க. இனி இவ்வாறன்றிஅரசர்குலத்திலும் வணிகர்குலத்திலும்பிறந்தவர்கட்குச் சிறிது வடிவொப்பன்றி ஒருவடிவேயென்றுமேற்கூறுதல்பொருந்தாது. அதுதேவர்க்குக் கருத்தாயின், சண்டன்றிப் பிறண்டும் இருவர்க்குமொருவடிவென்றே கூறுவர்; அது கூறாமையானும் இதுவே தேவர்க்குக்கருத்தென்றுணர்க. ()

1714. சாந்தினான்மெழுகித்தடமாமல
ராய்ந்ததாமங்கணாற்றியகிற்புகை

[1]யேந்தியிட்டிளையாரொடுநீங்கினுள்
காந்திவண்டுணுங்கற்பகக்கோதையே.

(இ - ள்.) கோதை, அதனையோதி இவன்கிடக்கின்றஇடத்தைமெழுகி நாற்றிப் புகைத்து ஆயத்தோடே போந்தாளென்க.

காந்தி - பசித்து. (கருஅ)

1715. தூமம்மார்ந்ததுகிலணைப்பள்ளிமேற்
காமன்றம்பியிற்காளைகிடந்தபி
னேமமாபுரத்திட்டதொர்மாதெய்வ
நாமநல்லொளிநந்தனையென்பவே.

(இ - ள்.) நந்தட்டன் சாமனைப்போலே அப்பள்ளிமேலேகிடந்தபின்பு ஒருதெய்வம் அவனைக்கொண்டுபோய் ஏமமாபுரத்தே அரசன்கோயிலுக்குள்ளே இட்டுவைத்ததென்க.

நாமம் - அச்சம்; உரிச்சொல் ஈறுதிரிந்தது. அச்சங்கூர்தலாலும்நீருமித்தவடிவாயிற்று. (கருக)

1716. மின்னும்பூணும்மிளிர்கதிராரமும்
பொன்னும்பூத்ததொர்கற்பகப்[2]பூமர
மன்னகாளையமர்துயிறேறினன்
மன்னும்வெஞ்சுடர்மாக்கலிவர்ந்ததே.

(இ - ள்.) விளங்கும் பூண்முதலியவற்றைப் பூத்ததொரு கற்பகமரத்தையொத்த காளை துயிலுணர்ந்தான்; அவ்வளவிலே, ஞாயிறும் உதயகிரியிலே வந்து பரந்ததென்க. (கசுo)

வேறு.

1717. செய்யவாய்நெடியகண்ணாள்செல்கென[3]விடுக்கப்பட்ட
வெய்யவாட்டடக்கைவீரனிருத்தலும்விசயனென்பான்
கையவாஞ்சிலையினானைக்கண்டுவந்தருகுசேர்ந்தான்
பையவாய்ப்பரந்தவல்குற்பாவையர்க்கமிர்தமன்னான்.

கையில்அவாவுதற்குக் காரணமானசிலையினானெனவே காமனும்.

(இ-ள்.) தத்தையாலே போவென்று விடப்பட்ட நந்தட்டனிருந்தஅளவிலே, அமிர்தமன்னனாகிய விசயனென்பான், அவனைக்கண்டு மகிழ்ந்து அருகே சேர்ந்தானென்க. (கசுக)

1718. தெய்வமேகமழுமேனித்திருவொளிகலந்தமார்பி
னையநீயாரையென்றற்கவனுரைகொடாதுவிட்டான்
பையவேபெயர்ந்துபோகிப்பனிமலர்க்கோதைமார்பின்
மையலங்களிறுபோலுமைத்துனற்கிதனைச்சொன்னான்.

---

(பி - ம்.)—1 'ஏந்துவித்து' 2 'பொன்மரம்' 3 'பணிக்கப்பட்ட'

சீவகன்கொண்டவடிவுகொண்டு நின்றதொரு தெய்வமாதலின், தெய்வமே கமழுமேனியாய் அவற்குத்தோன்றிற்று. வடிவொன்றேயாகவும் தெய்வத்தன்மையைத் தன்னுணர்வுமிகுதியானுணர்தலின், இவற்குச் சிறிது வேறுபாடுமுண்டென்றறிந்து நீயாரையென்றான். யாரை: ஐ, அசை.

(இ - ள்.) மேனியையும் மார்பினையுமுடைய ஐய! நீயாரென்று வினவினற்கு அவன் மறுமொழி கொடாதேவிட்டான்; அதனாலே அவன்மீண்டு போய்க் கோதைமார்பினையுடைய மைத்துனனுக்கு இச்செய்தியைக் கூறினனென்க.

வசுந்தரி அவற்குக்கூற,அவன்கண்டசெய்தியை இதனையென்றார். இவ்விடத்திருந்து உரைகொடாதிருந்ததும், அவன்வெருதபடிகாத்ததும் இவன்மேற்றங்கிய தெய்வமென்றுணர்க. (கசுஉ)

1719.(க)சந்தனக்களியும்பூவுந்தமனியக்குடத்துணீருங்
கெந்தநாறகிலுமுத்துங்கிளரொளிவிளக்குமேந்தி
யந்தில்விற்பயிற்றுந்தானம்வழிபடவாங்குச்சென்றாண்
மந்திரமடந்தையன்னாள்வசுந்தரிவந்துசொன்னாள்.

1720.(உ)ஆரகிற்சேக்கைநீங்கிவெறுநிலத்தடிகடாமே
நீரிதிற்கிடந்ததென்கொலென்றியானினைந்துபோகிச்
சேர்துணைகழறச்சென்றேன்செல்வியோடாங்குக்கண்டேன்
போர்பலகடந்தவேலோய்மாயங்கொல்போற்றியென்றாள்.

1721.(ங)கணைகடிகண்ணிசொல்லக்காணியயானுஞ்சென்றேன்
மணியிலங்கொண்பொன்வைவாள்கேடகமருங்குவைத்த
விணைகடிசீயமன்னானிளமையும்வனப்புமேருந்
துணையமைவடிவுஞ்சொல்லினிற்பொறியொற்றிக்கொண்டான்.

1722.(ச)நீண்டதோணெடியசெங்கணீலமாய்ச்சுரிந்தகுஞ்சிப்
பூண்டதோராரமேனிப்பொன்னுரைத்திட்டதொக்குங்
காண்டகுகாதிற்றாழ்ந்தகுண்டலங்குவளைப்பைந்தா
ராண்டகையழகன்யார்கொலறியலனவனையென்றான்.

இவைநான்கும் ஒருதொடர்.

(க) அந்தில், அசை.

(இ - ள்.) மந்திரமாகிய மடந்தையை ஒப்பாளாகிய வசுந்தரி விற்பயிற்றுந்தானத்தை வழிபடுதற்குச் சந்தனக்குழம்புமுதலியவற்றையேந்தி அவ்விடத்தேசென்றவள் வந்து எனக்கு ஒருவார்த்தைகூறினாள்; அவள் கூறினபடி: அடிகடாம் சேக்கையைநீங்கி வெறுநிலத்தே நீர்மையோடே கிடந்தகாரணமென்னென்று நினைத்துப்போய்க் கனகமாலையைக் கோபித்தற்குச்சென்றேன்; சென்றநான் அவளுடனே அவ்விடத்தேகண்டேன்; ஆதலின், வேலோய்! அவர்செய்தி மாயம்போலேயிருந்தது; அங்கிலமை

யைப் பாதுகாத்துக்கொள்ளென்று கூறினுள்; அவள் அங்ஙனங்கூறுதலின், யானும் அச்செய்தியைக் காண்டற்குச்சென்றேன் ; சென்றயான்கண்டஒப் பில்லாத மியமன்னன் றன்னுடைய இளமையையும், வகுப்பழகையும், தோற் றப்பொலிவையும், ஒப்பில்லாதவடிவையுங்கூறின், நின்உத்தம இலக்கணத் தை யொர்த்திக்கொண்டேயிருந்தான் ; அங்ஙனமிருந்த தோளையும் கண் ணையும் குஞ்சியையும் கல்லிலே பொன்னுரைத்ததொக்கும் ஆரமேனியை யும் குண்டலத்தையுமுடைய அழகன் யார்? அவனை யானறிகின்றிலே னென்றனென்க.

வசுந்தரி, அடிகள்வெறுநிலத்தேகிடந்தாரென்று கழறச்சென்றே னென்றமையானும், விசயன் நிற்போறியொற்றிக் கொண்டானென்றமையா னும், உவமைகூறுதலின்றி இருவரும் இருவர்க்குமொருவடிவென்றே கூறி ஞர். உவமையாவது சிறிதொத்து இரண்டிற்கும்வேறுபாடுணர்த்துவது ; இஃது அஃதன்மையுணர்க. பொறியும் ஒன்றிலழுத்தினுல் ஒப்பன்றியதுவே யாயிருக்குமென்றுணர்க. இவ்வாற்றானும் நிருமித்தமையேகூறிற்றும். வசுந் தரி மகடூஉவாதலிற் றெய்வத்தன்மையுணர்ந்திலள். (௧௬௩ - ௬)

1723. இனத்திடையேறுபோலுமெறுழ்வலியுரைத்தமாற்ற
மனத்திடைமகிழ்ந்துகேட்டுமைந்தனந்தட்டனேயாம்
புனத்திடைமயிலனுளாற்பொருளுரைபெற்றுவந்தா
னெனத்தவிராதுசென்றுங்கெய்தினனென்பவன்றே.

'யாம்' என்றேபாடம் ; மைந்தன்யாமென்பவெனக் கூட்டுக. பொரு ளுரை - மந்திரம்.

(இ-ள்.) விசயன்கூறியகூற்றை இவன்கேட்டு உட்கொண்டு தாங்கண்ட மைந்தனை நாமென்பர்கள் ; அதற்குக்காரணம் தத்தைபொருளுரையாலே யான்கொண்ட இவ்வடிவைப்பெற்று நந்தட்டனேவந்தானென்று கருதி மனத்திடைமகிழ்ந்து தங்காதே அப்பொழுதே அவ்விடத்தேசென்றணுகினு னென்க.

என்பவெனப் பன்மையாற்கூறிற்று, வசுந்தரிகூற்றையுங்கருதி. அன் றே - அப்பொழுதே. (௧௬௭)

1724. கருமுகிற்பொடித்தவெய்யோன்கடலிடைநடப்பதேபோற்
றிருமுகஞ்சுடரநோக்கிச்சீவகன்சென்றுசேர்ந்தான்
றருமனையரிதிற்கண்டதனஞ்சயன்போலத்தம்பி
திருமலர்த்தடக்கைகூப்பிச்சேவடிதொழுதுவீழ்ந்தான்.

கடலிடைத்தோற்றின இளங்கதிர் கருமுகிலிடத்தே விடாதுநடப்பதே போலுமுகம். முகில் குழலிற்கும், வெய்யோன் முகத்திற்குமுவமை; "கடற், றோற்றுஞ் செஞ்சுடர்போலச்சுடர்ந்ததே" (சீவக. ௨௪௬௭) என்பர்பின்னும்.

(இ - ள்.) சீவகன் தன்முகஞ்சுடரநோக்கிச் சென்றுசேர்ந்தான்; அப்பொழுது தருமனை அரிதாயக்கண்ட விசயனைப்போலே தம்பி தொழுது வீழ்ந்தானென்க. (கசுஅ)

**1725.** தாமரைத்தடக்கைகூப்பித்தாண்முதற்கிடந்ததம்பி
தாமரைத்தடத்தையொத்தான்றமையனும்பருதியொத்தான்
றாமரைக்குணத்தினானைமும்முறைதழுவிக்கொண்டு
தாமரைச்செங்கணானுந்தன்னுறுபரிவுதீர்ந்தான்.

(இ - ள்.) அங்ஙனந்தொழுதுகிடந்ததம்பி தாமரைத்தடத்தையொத்தான்; தமையனும் அவன்முகமுதலியவற்றையலர்த்தலிற் பருதியையொத்தான்; அவ்வழிபாட்டின் பின்பு தாமரையென்னுமெண்ணையுடையகுணத்தினானை அன்பின்மிகுதியால் முக்காற்றழுவிக்கொண்டு பின்பு சீவகனும் தனக்குற்றவருத்தமெல்லாந்தீர்ந்தானென்க.

என்றது, யான்போந்தபின்பு இருமுதுகுரவருற்றதென்னென்று தனக்குற்றுக்கிடந்தபரிவும் இவன்வாய்க்கேட்டுத்தீர்ந்தானென்க. (கசுகூ)

**1726.** என்னுறுநிலைமையோராதெரியுறுதளிரின்வாடிப்
பொன்னுறுமேனிகன்றிப்போயினீர்பொறியிலாதேன்
முன்னுறவினையோரேன்மூரிப்பேரொக்கலெல்லாம்
பின்னுறுபரிவுசெய்தேன்பேதையேன்கவலலென்றான்.

எனக்குற்றநிலைமையை ஓராதென்றது தேவன் கொண்டுபோந்தநிலைமையையறிந்தும், உண்மையென்றுணராதேயென்றவாறு; “கொண்டுபோமியக்கன்” (சீவக. ககஅக) என்று இருடிகூறியகூற்றைக் கந்துகன் கூறக்கேட்டும் இவர்வருந்துவரென்று இங்ஙனங்கூறினான். பொறியிலாதேனென்றது இருமுதுகுரவரையும் வழிபட்டிருக்கும் நல்வினையில்லாதேனென்றவாறு.

(இ - ள்.) பொறியிலாதேன் கட்டியங்காரனாற் சிறைசெய்வித்துப் பிரிவிப்பதொரு தீவினைவந்து முன்னிற்றலாற் குணமாலையது ஒருயிர்க்காகப் பல்லுயிர்க்குத் தீங்குவருகின்றவிதனை ஓரேனாய்ப் பேதையேனாகிய யான் மதனன்மேல் ஏவாமையின், மேனிகன்றிப்போனநீங்களும் ஒக்கலும் எல்லாம் என்னுறுநிலைமையோராதே வாடிப் பின்பு முடியஅநுபவிக்குந்துன்பத்தைச் செய்தேன்; இனி நீ வருந்தாதேகொள்ளென்றானென்க.

இதனையென்றது, களிற்றிடையுதவியதனை. முன்னும், “ஊழ்வினையென்றுவிட்டான்” (சீவக.கககூஎ) என்றார். இனி,முன்னுறவென்றதனை அச்சணந்தியாசாரியர்க்கு நேருகின்ற பொழுதென்னின், அதுபொருந்தாது; என்னை? தான்மேல் வருகின்றதறியானாதலானும், ஆசிரியன்கூற்றாலே ஓர் யாண்டு அவனிருப்பனென்றுணர்ந்து, “இன்னுயிரவனையுண்ணுமெல்லைநாள் வந்ததில்லை” (ஷை ககு௫௪) என்று தான்கூறினமையானுமென்பது. (கஎ௦)

1727. ஆக்கமுங்கேடுமுற்றீரடிகளேயல்லிர்மேலைப்
பூக்குலாமலங்கன்மாலைப்புட்கொடியாற்குமுண்டே
வீச்குவார்முலையினார்போல்வெய்துயிர்த்துருகிநைய
நோக்கினீரென்னையென்றானுதியழற்குட்டமொப்பான்.

(இ - ள்.) நந்தட்டன், ஆக்கமுங்கேடுமுற்றீர் நீரேயல்லிர்; முன்னுள்ள இராமனுக்குமுண்டு; அவன் இங்ஙனஞ்செய்யாதே கேட்டிற்குத் தம்பியையு முதவியாகக்கொண்டான்; நீர் உடன்பிறந்தமகளிரைப்போலே உதவாதே யிருந்து வருந்தும்படி என்னைப் பார்த்தீரென்றானென்க.

நோக்கினீரென்றது, தேர்பண்ணிவர்துகண்டவனே மதனன்மேலே செல்லென்னாதே நில்லென்று நோக்கியதனை. (௧௭௧)

1728. குரவரைப்பேணலின்றிக்குறிப்பிகந்தாயபாவந்
தரவந்தபயத்தினாலித்தாமரைப்பாதநீங்கிப்
பருவருந்துன்பமுற்றேன்பாவியேனென்றுசென்னி
திருவடிமிசையின்வைத்துச்சிலம்பனொந்தழுதிட்டானே.

(இ-ள்.) அவன், முற்பிறப்பிற் குரவரைப்பேணலின்றி அவர்கருத்தைக் கடத்தலானுண்டாய பாவந்தருதலான் வந்தபயனாலே, பாவியேன் இப்பாதத்தைநீங்கி மிக்கவருத்தமுற்றேனென்று சென்னிமிசையிலே அடியைவைத்து நொந்து அழுதானென்க. (௧௭௨)

1729. பரிந்தழுகின்றதம்பிபங்கயமனையசெங்கண்
பொருந்துபுதுடைத்துவேண்டாபுலம்புதல்காளையென்று
மருந்தனானுறையுங்கோயின்மடுத்துடன்கொண்டுபுக்கா
னருந்ததிக்கற்பினாளையடிபணிந்தவனுங்கண்டான்.

(இ - ள்.) காளை! வருந்துதல்வேண்டாவென்றுகூறித் தம்பிகண்ணைத் துடைத்து அமுதனானிருக்குங்கோயிலிலே வலிதிற் கொண்டுபுக்கான்; அவனும் அவளை வணங்கிக் கண்டானென்க. (௧௭௩)

1730. கொழுநனைக்குறிப்பினாலேகுமரன்யாரென்றுநோக்கக்
கழுமியகற்பினாய்நின்மைத்துனனையனென்ன
வெழுமையும்பெறுகவின்னவிளங்கிளைச்சுற்றமென்றாள்
கொழுமலர்த்தடங்கட்செவ்வாய்க்குவிமுலைக்கொம்பனாளே.

(இ-ள்.) கொம்பனாள், தன்கணவனைக் குறிப்பினாலே இவன்யாரென்று கேட்ப, கற்பினாய்! ஐயன் நின்மைத்துனனென்றானாக, அவளும் இத்தன்மைத்தான இளங்கிளையாயசுற்றம் எழுபிறப்பும் பெறுவேனாகவென்றாளென்க. (௧௭௪)

1731. குடவரையனையமார்பிற்குங்குமமெழுதிக்கோல
வடவரைவைரச்சாதிவாலொளிகலந்தபைம்பூண்

டடவரைமார்பின்மின்னத்தம்பியோடமிர்தமுண்டான்
படவரவல்குலாளும்பான்மையால்விருந்துசெய்தாள்.

(இ - ள்.) குங்குமமெழுதலாலே அத்தகிரியையொத்த நந்தட்டன்மார்பிலேயணிந்த சாதிவைரத்தின் ஒளிகலந்த பூண் சீவகனது வரைபோலுமார்பிலே மின்னும்படி எதிரேயிருந்து கூடவுண்டான்; அல்குலாளும் விருந்திடு கூற்றாலே விருந்துசெய்தாளென்க. (களரு)

1732. விருந்தவள்செய்தபின்றைத்தம்பியுந்தானும்வேறா
விருந்துழியென்னைக்காணாதுற்றதையெவன்கொலென்று
பொருந்தினார்செய்ததெல்லாம்புரைவிடுத்துரைமோவென்னக்
கருங்கழற்செங்கட்பைந்தார்க்காளையீதுரைக்கின்றானே.

(இ - ள்.) அவள்விருந்து செய்தபின்பு தம்பியுந்தானும் தனித்திருந்தவிடத்து, என்னைக் காணாமையினாற் குரவர் முதலாயினார் உற்ற வருத்தமென்னென்று அதனை முதற்கேட்டுப் பின்பு தோழன்மார் செய்த கூறுபாடெல்லாம் வேறுபடுத்திச்சொல்லாயென்று சீவகன்கூற, நந்தட்டனும் இதனைக் கூறுகின்றானென்க.

உரைக்கின்றவன், இடுவித்திட்டாளென்றுரைத்தானென, "சொல்லிய" (சீவக. களசஎ) என்னுங்கவியோடு முடிக்க. புரை - கூறுபாடு. கருங்கழல் - கொடியகழல். சீவகன், தான் முன்பு அவர் செய்திகண்டு போந்தபின்பு அவர் செய்தபடி கேட்கின்றான், குணமாலையாரிலம்பகத்தில் நந்தட்டனுடன் றோழன்மார் கூடுதற்குமுன்பு அவர் தம்மிற்கூறியவாறு இவனறியானாதலின், தானும் அவரும் கூடினபின்பு பிறந்தசெய்தி இவன் கூறுகின்றான். இதனால் அதற்கிது வேறுபாடாயிற்று. (களசு)

1733. புண்ணுமிழ்குருதிப்போர்த்தபொருகளம்போன்றுதோன்றி
யண்ணலங்கதிருமத்தமடைந்துசெவ்வான்கொளந்தித்
துண்ணெனக்களத்தினீங்கித்தொன்னகர்ப்புறத்துத்தொக்கே
யெண்ணுமின்செய்வதென்றான்பதுமுகனெரியும்வேலான்.

(இ-ள்.) கதிரும் அத்தகிரியையடைதலாலே குருதிபோர்த்த களம் போலேதோன்றிச் செக்கர்வான்கொண்ட அந்தியிலே, எல்லாரும் மழையின் மிகுதியாற் சென்றஅளவிலே, பின்பு நின்னைக் காணாமையின், அவ்விடத்து நின்றுநீங்கி நகரிடத்தேகுவிந்து யாம் மேற்செய்யுங் காரியத்தை எண்ணுமினென்றான், வேலானாகிய பதுமுகனென்க. (களஎ)

1734. மின்னெனமிளிரும்பைம்பூட்புத்திசேன்வெகுண்டுவெய்ய
கன்வாவிரோளிருனேக்ாண்கலேமாயினின்னே
மன்னனைவாளினானேவானகங்காட்டிமூதூர்
தன்னையுஞ்சவட்டிப்போகிச்சாமியைச்சார்துமென்றான்.

(இ-ள்.) அப்பொழுது, புத்திசேனன் வெகுண்டு, தோழனுனேக்காணே மாயின் இப்பொழுதே, கட்டியங்காரனைக் கொன்று ஊரையுமழித்துப் போய்ச் சீவகனைச் சேர்வேமென்றானென்க. (கஎஅ)

1735. சிலையொடுதிரண்டதிண்டோட்டேவமாதத்தனென்பான்
மலையுடையுருமிற்சீறிமாற்றலனுயிரையுண்ட
விலையுடைக்கண்ணியீர்க்கிஃதெளிதுநங்குருசிலுண்மை
யுலைவினோடின்மையாராய்ந்தொறுப்பதேதுணிமினென்றான்.

தேவமாதத்தன், 'உலோகமாபாலன்' போற்கொள்க.

(இ-ள்.) உலக்கல்லாலே திரண்ட தோளையுடைய தேவதத்தன், மலையை யுடைக்கின்ற உருமுப்போலே சீறிப் பகைவனுயிரையுண்டலாகிய இத்தொழில் உமக்கெளிதாதலின், நங்குருசிலுண்மையும் இன்மையும் வருத்தத்தோடே நின்று ஆராய்ந்து பின் பகையைக் கோறலைத் துணிமினென்றானென்க.

அவன் சிறையாயிருக்கின், இஃது ஆகாதென்றான். (கஎக)

1736. பவ்வத்துப்பிறந்தவெய்யபருதிபோற்றிறலினாற்குத்
தெவ்வரைக்கிழக்கினோடுந்தின்றுநீசொன்னவாறே
யெவ்வத்தைத்தணித்துமென்றான்சீதத்தனென்னலோடு
மவ்வலமணந்ததண்டார்ப்பதுமுகனிதனைச்சொன்னான்.

பருதி இருளை அகற்றுமாறுபோலே தன்னைச் சூழ்ந்த பகையை நீக்குதற் குரியனாதலின், அவற்குத் தீங்குவாராதென்றான். திறலினாற்கு: கு, பகைப் பொருட்கண்வந்த நான்காமுருபு. மக்கள் நூற்றுவரையும் சேரக்கோறற் குக் கிழக்கினோடுமென்றான்.

(இ-ள்.) சீதத்தன், புத்திசேனன் கூறியவாறே திறலினாற்குப் பகைவரைக் கொன்று எவ்வத்தைத் தீர்ப்பேமென்றான்; என்றஅளவிலே பதுமுகன் இதனைக் கூறினானென்க.

அம், அசை. (கஅ௦)

1737. நம்பிநந்தட்டன்கேட்கநங்கட்குக்குரவருள்ளார்
தம்பரிவகற்றியோம்பிநீர்க்கடன்மரபுதாங்கிக்
கம்பஞ்செய்பரிவுநீங்கிக்கற்பிப்பார்க்குவர்த்துச்சொல்லா
ரிம்பரிவ்வுலகமொப்பாய்க்கென்னையானுரைப்பதென்றான்.

(இ-ள்.) தம்மைக்கற்பித்தற்குரியார்க்குத் தாம்உவர்த்துச்சொல்லார்; ஆதலான், இவ்விடத்து இவ்வுலகொழுக்கந்தன்னையொக்குநினக்கு இனி யான் கூறுவதெவன்? ஆயினும் கூறுகின்றேன்; நந்தட்டன்! இதனைக் கேட்பாயாக; இந்நடுக்கஞ்செய்கின்ற வருத்தத்தினின்றும் நீ நீங்கி நமக்குக்குரவராயுள்ளார் வருத்தத்தையுநீக்கி அவரிருக்குமளவும் அவரைப்பேணி அவரிறந்தால் நீர்க்கடனாகிய முறைமையைச்செய்வாயாகவென்று கூறினானென்க.

நீர்க்கடன் - 1 உதகக்கிரியை. எவன், என்னெனநின்றது; ஐ, அசை. ()

(பி - ம்.)—1 'பலிகன்மம்'

1738. ஓம்படைசாற்றற்பாலதிள்ளவர்க்காகுமன்றே
யாம்புடையென்கணில்லையங்கையென்கண்களாகத்
தேம்படுதாரினீர்க்குஞ்செல்வற்குஞ்செய்வசெய்தேன்
காம்படுகாட்டுத்தீயிற்கனன்றுடனெழுகவென்றேன்.

(இ-ள்.) உயிருடனேயிருப்பார்க்கன்றே இவரைப் பாதுகாத்துக்கொள்ளென்றுகூறுவது; உயிர்வாழும்பக்கம் என்னிடத்தில்லை; ஆதலின், இது கூறவேண்டா; என்கண்கள் கையாக அவற்றினீராலே நுமக்கும் செல்வனுக்குஞ்செய்யும் நீர்க்கடன் மரபெல்லாம் செய்துவிட்டேன்; இனிக் காட்டுத்தீப்போலே சேரவெழுகவென்றேனென்றானென்க.

அழுதது, இழவென்னுமெய்ப்பாடு. 'தாரினீர்க்கு' எனவே சுற்றமெல்லாமடங்கும். (கஅஉ)

1739. கோட்டிளங்குழவித்திங்களிரண்டன்னவெயிற்றுக்கோளே
வேட்டவோர்சிங்கஞ்சூழ்ந்தவேங்கையினினத்தின்வெய்ய
வாட்படையெழுந்துவாழ்கசீவகனென்னுமாங்கட்
பாட்டினையொருவனெங்கள்பரிவறப்பாடினானே.

கோடு - வளைவு.

(இ-ள்.) முன்பு சிங்கத்தைச்சூழ்ந்த புலித்திரள்போலே வெய்யவாகிய நமது வாட்படை அச்சிங்கத்தின் ஏதந்தீர்த்தற்கு யான் அங்ஙனங்கூறக் கேட்டு எழுந்திருந்து சீவகன் வாழ்கவென்ற அளவிலே, எங்கள் வருத்தந்தீர ஒருத்தன் பாட்டினைப்பாடினானென்க.

நீயும் யாங்களும் சிங்கமும் புலியும்போலிருப்போமென்றான். (கஅங)

1740. வருவர்நங்கேள்வரின்னேவாணுதற்பசலைதீர
வுருகிநைந்துடன்றுமுன்கைவளையுகமெலியவேண்டா
வருவிழும்மதத்தயானையதிர்ந்துழிக்காரென்றெண்ணித்
தெரிவிலபேதைமுல்லைபூத்தனதெளியிதென்றான்.

(இ-ள்.) யானை மதத்தவாய் அதிர்ந்துழி அவற்றைக்காரென்றெண்ணி ஆராயாதே முல்லை பூத்தன; இதனைப் பருவமன்றென்று தெளிநீ; இன்னே மெலியவேண்டா; யான் அவரிடத்தேசென்றுற் குறித்தபருவத்தே நீட்டித்தாராயின் மெலியவுமமையும்; யான்சென்றபொழுதே நின்பசலைநீரக் கேள்வர் வருவாரென்றுபாடினானென்க.

இது, பருவமன்றென்று தலைவியையாற்றுவித்துத் தூதுசெல்கின்ற பாணன்கூற்று; "நிலம்பெயர்ந் துறைதல் வரைநிலை யுரைத்தல், கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை யுரிய" (தொல். கற்பு. உஅ) என்னும் கற்பியற் சூத்திரத்தானும், "அரக்கத்தன்ன * * * தேரே" என்னும் (கச) அகப்பாட்டில், "யாங்கா குவங்கொல் பாண வென்ற, மனையோள் சொல்லெதிர் சொல்லல் செல்லேன், செவ்வழி கல்லியா ழிசையினொன் பையெனக், கட

வுள் வாழ்த்திப் பையுண் மெய்ந்நிறத், தவர்திறஞ் செல்வேன் கண்டனென் யானே" என்பதனுனுங்கொள்க. எனவே சீவகன் இப்பொழுதுவாரானென் பதூஉம், யாம்சென்று பின்புகொண்டுவருவேமென்பதூஉம், இதற்குக்கருத் தென்று தேறிப் போர்த்தொழில்தவிர்தல் பயனும். இனி, என்றுளென்று பாடமோதித் தோழி ஆற்றுவித்தாளென்றல் ஈண்டைக்குப் பொருந்தாது. இன்னேவருவரெனக்கூட்டி இப்பொழுதே வருவரென்றால், இவனும் இப் பொழுதே வருவனென்பது கருத்தாமாதலிற் பொருந்தாது. (கஅச)

1741. பாட்டினைக்கேட்டலோடும்பழம்பகைநட்புமாமே
போட்டியுங்கோறுமன்றேநம்பிதானுண்மைபெற்று
நட்டிடம்பரந்துபோகிநாடுதுநாங்களென்னு
வீட்டமும்வேறுமாகிவிலைப்புரைகிளைத்திட்டேமே.

ஆமே: ஏகாரம், எதிர்மறை.

(இ-ள்.) பாட்டினைக்கேட்டஅளவிலே, அதன் பொருளைக்கருதிச் சீவ கன் பிழைத்தபடியையறிந்தாற் பின்பு சிலநாள்கழித்தும் அவனைக் கொல்வே மன்றே! அஃதென்னெனின், * "பழம்பகை நட்பாதலில்" என்னும் பழமொழியுமுளதன்றே; இனி யாம் பரந்துபோய் நாட்டிடமெல்லாம் நாடுதுமென்றுகருதித் தனித்தும் திரண்டும் எவ்விடமுந்தேடினேமென்று ளென்க.

நாடு - நானிலத்திற்கும் பொதுப்பெயர். 'இலைப்புரைகிளைத்தல்' ஒரு பழமொழி. (கஅரு)

1742. (க) மணிபொதிதுகிலிற்றேன்றுமஞ்சுசூழ்வரைகணுடி
யணிநகர்யான்சென்றெய்திமாலைதன்மனையைச்சேர்ந்தேன்
றுணைமலர்க்காந்தளுழ்த்துச்சொரிவபோற்றேன்றிமுன்கை
யணிவளை நலத்தோடேங்கவங்ஙனமிருந்துளைவாள்.

1743. (உ) என்னைக்கண்டடிசிலாக்கவையர்க்கென்றவலநீங்கப்
பொன்னைக்கண்டனையசாயலவர்புரிந்தடிசிலேந்தத்
துன்னிநோயுற்றமஞ்ஞைத்தோற்றம்போலிருந்தநங்கை
பின்னைநாட்குவளைநீர்வீழ்பெற்றியகண்ணளாகி.

1744. (ங) அடிகளையின்றிநீரேயுண்ணவும்வல்லீரானீர்
கடியிர்நீரையனீரேயெனக்கசிந்துருகிக்காய்பொற்
கொடிதுகளார்ந்தவண்ணங்குழைந்துமாநிலத்துவீழ்ந்த
பெடைமயிற்சாயலாடன்பேதுகண்டாங்குமீண்டேன்.

இவைமூன்றும் ஒருதொடர்.

* பழமொழி, கள.

